MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES No. 34




# சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும்

# ŚIVAGAṄGAI-C-CARITTIRA-K-KUMMI
AND
# AMMĀṈAI

EDITED BY
T. CHANDRASEKHARAN, M.A., L.T.
*Curator, Government Oriental Manuscripts Library, Madras*
AND
THE STAFF OF THE LIBRARY

(*Prepared under the orders of the Government of Madras*)

PRINTED BY THE SUPERINTENDENT
GOVERNMENT PRESS
MADRAS
1954

[PRICE, RE. 6-14-0

MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES No. 34.




# சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும்

# SIVAGANGAI-C-CARITTIRA-K-KUMMI

AND

# AMMĀNAI

EDITED BY

T. CHANDRASEKHARAN, M.A., L.T.

*Curator, Government Oriental Manuscripts Library, Madras*

AND

THE STAFF OF THE LIBRARY

*(Prepared under the orders of the Government of Madras)*

PRINTED BY THE SUPERINTENDENT
GOVERNMENT PRESS
MADRAS
1954

# பொருளடக்கம்.

# INTRODUCTION

This work which is published under the name of "Śivagaṅgai Caritira Kummyium Ammāṉayium" consists of two parts; the one in the form of Kummi and the other in the form of Ammāṉai, both bearing on the history of Śivagaṅgai. They deal with the greatness of the capital town of Śivagaṅgai, the kings who reigned over those regions, and their relations with the Nawab who was their overlord at Madras.

The story of the infiltration of the European merchants in the soil of India and how they changed from commercial to political activities are dealt with in a simple and lucid style.

Though the author refers at the beginning to some supernatural elements in the origin of the royal family of Śivagaṅga, his later narrations are more truly historical and valuable in their nature. The ability and courage with which the two brothers, popularly known as Maruthiruvar, reigned over the country and fought against all odds are dealt with by the author with the penetrating eye of a chronicler. More details about the work can be had from the Tamil introduction that follows.

Both these works are based on two paper manuscripts bearing Nos. R. 3436 and R. 3437 deposited in this Library and these in turn are transcriptions made of the palm-leaf manuscripts that were brought on loan in the year 1951-52 from Madurai Tamil Sangam, to whom my thanks are due for their hearty co-operation by way of lending the original with them for a second time for the collation of the press copy.

In the publication of this work, my thanks are due to the Tamil Pandits of this Library who have helped in preparing the press copy and correcting the proofs.

GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS,
*dated 10th March 1954.*

T. CHANDRASEKHARAN.

# முன்னுரை

"சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும்" என்ற இத்தொகுப்பினுள் இரண்டு நூல்கள் அடங்கியுள்ளன. அவை (1) சிவகங்கைச் சரித்திரக்கும்மி. (2) சிவகங்கைச் சரித்திர அம்மானை என்பன. இந் நூல்களிரண்டும் சிவகங்கை நகர்ச் சிறப்பு, அதனைத் தலைநகராகக்கொண்டு சுற்றியுள்ள பிரதேசங்களை ஆண்டோர் வரலாறு, நவாபு படையெடுப்பு, ஆங்கிலேயர் வருகை அவர்கள் மருது சகோதரர்கள் இருவரையும் வென்று, கவுரிவல்லவராசனுக்குச் சிவகங்கைச் சீமையை ஆளும் உரிமை அளித்தமை ஆகிய செய்திகளைக் கூறுகின்றன. இதனை;

"சீர்புகழுஞ் சேதுநக ரரசைச் சேர்ந்த
சிவகங்கை நகரை முன்னாள்
பேர்புகழுங் கவுரிவல்ல வேந்திர ராசன்
பிரபல னரசாட்சி செய்ததுவும்
போர்புகழுங் கும்பினி யார்கள்வந்து
பொல்லாத மருதிருவரைச் செயித்ததுவும்
பாருலகில் கும்மிப்பாட் டுரைக்கப் பார்வதி
மைந்தன் கணபதி பதம்போற்றிச்
சூரனைச் செற்றமார் சிறைமீட் குஞ்சிவ
சுப்பிர மணியர்பதம் போற்றிசெய்து."

[சிவகங்கை: கும்மி: தொடக்கம்.]

"பாருலகில் . . . வெள்ளைக் காரர் வந்ததுவும்
பார்த்திபன் நவாபுபடைச் சீமையெடுத்ததும்
போரில் எதிர்த்த வரைவென்றதும்
பூபன் கவுரிக் கரசீந்ததும்
சீராகப் பாடிய கும்மிதன்னை."

[சிவகங்கை: கும்மி: இறுதி.]

"மன்னர்கள் தாமும் வந்து வணங்குங்கும் பினியார் தாமும்
தென்னகர் தன்னில் மேன்மைச் சிவகங்கைப் புவிகைக் கொண்டு
மன்னவன் மருது தன்னை வகையுடன் செயித்தே பூமி
தன்னையே கவுரிக் கீந்த சரித்ரவம் மானை யீதே."

[சிவகங்கை: அம்மானை. செ. 5.]

என்பவற்றால் உணரமுடிகின்றது. இனி ஒவ்வொரு நூலிலும் கூறப்பட்டுள்ள வரலாற்றினைச் சுருக்கமாகக் கீழே தருகின்றேன்.

## 1. சிவகங்கைச் சரித்திரக் கும்மி

ஆதிகாலத்தில், இராமபிரான் அரக்கர்களை வென்று, அயோத்திக்கு வந்து முடிசூடிக்கொண்டார். தனது அடியவனும் வேடர் தலைவனுமாகிய குகனை சேதுவுக்கு அரசனாக முடிசூட்டுவித்தார். அந்தக் காலத்தில் நாற்பத்தெட்டு பாளையக்காரர்களும் குகனை அடிபணிந்து போற்றினர்.

இவ்வாறு நாளடைவில் சேதுபதிகள் பலர் அரசாண்டிருந்தனர். அவர்களில், நாலுகோட்டை என்னுமிடத்தில் சுவர்ன துரை என்ற அரசன் ஒருசமயம் காட்டுக்கு வேட்டையாடப் போனான். பல மிருகங்களைக்கொன்று, நீர்வேட்கையால் ஒரு குளக்கரையை நாடிவந்தான். குளத்தில் நீர் அருந்திவிட்டுக் கரையோரமாகச் செல்லும்பொழுது தவசி யொருவர் சுவர்னதுரை யெதிரில் வந்தார். அவரை வணங்கினான் அரசன். ஆனால் அவர், ஒரு வேங்கைப் புலியைப்போல் உருவங்கொண்டு அரசனை நோக்கிப் பாய்ந்தார். வேங்கை பாய்வதைக்கண்டு அரசனும் அதனை எதிர்த்தான். உடனே வேங்கைப்புலியாகிய தவசி வெகுதூரம் சுற்றிவந்து, பின்பு முன்போன்ற தவசிவேடத்தில் அரசனெதிரில் தோன்றினார். அரசன் நெற்றியில் தன்கையால் திருநீறு அணிந்து, பிரம்பொன்றுகொடுத்து, விபூதி உருத்திராக்கமும் அளித்துக் கழுத்தில் மாலையொன்றையும் அணிவித்தார். பிறகு அரசனைப் பார்த்து, "எங்குச் செல்லும் பொழுதும் நீ இவற்றையணிந்து என்னைப் பூசித்துச் சென்றால் எத்திசையிலும் வெற்றிகொண்டு புகழுடைவாய். எதிர்த்தவர்கள் நிற்க மாட்டார்கள். பக்தியுடன் நீ சிவபூசை செய்தால் இவ்வுலகை ஆள்வாய். இந்த இடத்தில் ஒரு குளம் வெட்டி படித்துறைகளுங் கட்டி "சிவகங்கை" என்று பெயர் வைத்து, குளத்துக்குக் கன்னி மூலையில் அரண்மனை, கோட்டை முதலியன அமைப்பாய். அக்கினி மூலையில் ஈசுவரனுக்குக் கோவில் கட்டுவாய், என்று கூறியருளினார். பின்பு, சுவர்ன துரையும் அங்ஙனமே செய்து ஆறுயிரம் பொன் பூமியை அரசாண்டிருந்தான். பல சிற்றரசர்களை வென்றான். சேதுபதி மகள் அகிலாண்ட ஈசுவரி என்பவளை மணம் செய்துகொண்டு மிக்க சிறப்புடன் சிவகங்கைமாநகரில் வீற்றிருந்தான். இவனுக்கு முத்துவடுக நாதேந்திர துரை என்ற புதல்வன் ஒருவன் உண்டு. அவனுக்குப் பட்டத்து ராணியாக விளங்கியவள் வேலுலக மாது என்பவள். இவனும் மிக்க சிறப்புடன் ஆட்சிபுரிந்தான். மைந்தனின் நன்னிலையைப் பார்த்து மகிழ்ந்த சுவர்ன துரை வைகுண்ட பதவியடைந்தான். முத்துவடுக நாதேந்திர துரையின் பிரதானியாகிய தாண்டவராயன் என்பானுக்கு வயது சென்றது. அதனால், அவன் புதல்வர்களான பெரியமருது, சின்னமருது என்பாரிருவரும் பதவிக்கு வந்தனர். அவர்கள் மிக்க அறிவாளிகள். வீரர்கள். இவர்கள் அரசனும் இராணியும் மனமகிழ ஆட்சிபுரிந்து வந்தனர். இந்தப் பகுதியெல்லாம் அக்காலத்தில் நவாபு அரசரின் மேற்பார்வையிலிருந்தது. மருதேந்திரர்களின் வீரத்துக்குப் பயந்து நவாபு, தனக்குச் சேர வேண்டிய பகுதிப் பணத்தைக் கேட்கவில்லை. இவர்கள் அரசாட்சியில் குறையொன்றுமில்லை. சிறிதளவு குறை எவரேனுஞ் செய்தாலும் அவரை, கைவாளினால் இரண்டு துண்டாக்குவார்கள். கோயில்கள், அன்ன சத்திரங்கள் முதலியவற்றை அமைத்தார்கள். இங்ஙனம் மருதிருவர் துணையுடன் முத்துவடுக நாதேந்திர துரை மேன்மையுடன் அரசாட்சி செய்துகொண்டிருந்தான்.

இங்ஙனமிருக்கும்பொழுது சென்னைப் பட்டணத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த நவாபு துரை தன் மந்திரியைப் பார்த்து "நமக்குப் பகுதிப் பணங் கொடுக்காதவர்கள் யாவர்? என வினவினான். சேது சமஸ்

தானாதிபதி யொருவனும், அந்தச் சமஸ்தானத்தைச் சேர்ந்த சிவகங்கைச் சீமையரசனும், பாஞ்சாலங் குறிச்சிப் பகுதியையாளும் கட்டபொம்மனும் பணஞ்செலுத்தவில்லை" என்று மந்திரி கூறினான். பகுதிப் பணஞ் செலுத்தாதவர்களை நம் வாளுக் கிரையாக்க வேண்டுமென்றான் நவாபு. இங்ஙனம், நவாபு அரசர்கள் மீது கோபமாய் இருக்கும்பொழுது, ஆங்கிலேயர்கள் நவாபு முன் வந்து வியாபாரிகள்போல் நின்றார்கள். நீங்கள் யாவர்? என நவாபு கேட்க, நாங்கள் வியாபாரஞ் செய்ய வந்தவர்கள். ஆங்கிலேயர்கள். எங்களிடமுள்ள பொருள்கள் துப்பாக்கி, பீரங்கி, வெடிமருந்து, குண்டுகள் முதலியன. என்ன வேண்டுமானாலும் வருவித்துத் தருவோம். வியாபாரஞ் செய்வதற்கு ஒரு ஆட்டுத்தோல் அளவு இடந் தந்தால் போதும் என்றனர். நவாபு அங்ஙனமே இசைய, கம்பிபோல் சுருட்டி வைத்திருந்த ஆட்டுத்தோலை நீட்டிப் பிடித்தார்கள். இரண்டு மைல் தூரம் சென்றது. கிழக்கும் மேற்கும், தெற்கு வடக்குமாக இரண்டிரண்டு மைல் தூரம் இடத்தை வளைத்துக் கோட்டை கட்டி, தம் கொடியை நாட்டினர். நாளடைவில் சீமையிலிருந்து பலரை வரவழைத்தனர். கோட்டை, பங்களா முதலியன கட்டிக்கொண்டு ஆடம்பரமாக வாழ்ந்தார்கள்.

நவாபு, பகுதிப் பணம் கொடாத அரசர்களின்மீது படையெடுத்துச் சென்று போர்புரிந்தான். மருதிருவரும் வெகு தீரமாகத் தலைமை வகித்துப்போரை நடத்தினர். அப்போரில் "முத்து வடுக நாதேந்திரதுரை" கொல்லப்பட்டார். மருதிருவரும் வேலுலக மாதாவும் மிகவருந்தினர். பின்பு, வேலுலக மாதாவுக்குப் பட்டங்கட்டி அவள் கட்டளைப்படி மருதிருவரும் ஆட்சி நடத்தி வந்தனர். நவாபுவினால், இவர்களையுங் கட்ட பொம்மன் முதலாயினோரையும் வெற்றிகொள்ள முடியவில்லை. பின்பு, ஆங்கிலேயருடைய உதவியையும் நாடி, பல படைகளைப் போருக்கு அனுப்பினான். அப்படியும் வெற்றியேற்படவில்லை. போர்க்களத்திலிருந்து ஓடி வந்த ஆங்கிலேயர் சிலர் நவாபிடம் நடந்தவற்றையெல்லாஞ் சொல்லி, இனி அவர்களை அடக்கியாள முடியாது. எங்களிடம் அந்த அரசாட்சியை ஒப்படைத்தால் ஒருவாறு எங்கள் படைகள் உதவியுடன் அவர்களை அடக்குவோம் என்று கூறினர். உடனே நவாபு வருடமொன்றுக்கு இலட்சம் பொன் நமக்குக்கொடுத்தால் நீங்கள் ஆளலாம் என்றான். அப்படியே சம்மதித்து ஆங்கிலேயர் அரசைப் பெற்றனர். இங்கிருந்த ஆங்கிலேயர்கள் சீமைக்கு இச் செய்தியைத் தெரிவித்தனர். அங்கிருந்து துரைகளெல்லோரும் கப்பலேறிச் சென்னை வந்தனர். தொண்ணூற்றுறு வருஷம் இந்த ஆட்சி நம்முடையது என்றும், கவர்னர் அதிகாரத் தலைவரென்றும் கூறி, ரெவினியூபோர்டு, நியாயவிசாரணை சபை முதலியவற்றை அமைத்தனர். சென்னைப் பட்டினம், பம்பாய், வங்காளம், கொளும்பு, என நான்கு பிரிவாக ராஜதானியமைத்தார்கள். பின்பு, ராஜதானியில் ஜில்லா, தாலூகா, எனப் பிரிவேற்படுத்தினர். இவற்றிற்கு அதிகாரிகளையும் நியமித்தனர்.

இவ்வாறுக அதிகாரங்களைப் பிரித்து அரசாட்சி செய்தனர் ஆங்கிலேயர்கள். பின்பு, பகுதி செலுத்தாத அரசர்களுக்கு இராமநாதபுரத்தில்

தங்களை வந்து காணும்படி ஓலையனுப்பி விட்டு, கர்னல் மார்ட்டின்துரை என்பவன் இராமநாதபுரம் பங்களாவில் வந்து இறங்கினான். சேது சமஸ்தானப் பகுதிப் பணம் வந்தது. எல்லா அரசர்களும் வந்தார்கள். மருதிருவரும் கட்டபொம்மனும் வரவில்லை. மீண்டும் அவர்களுக்கு ஆள் விடுத்தனர். மருதேந்திரர் இருவரும் நன்கு யோசனை செய்து, பல விருதுகள் புடைசூழ வந்து மார்ட்டின்துரையைப் பேட்டி கண்டனர். துரை மனமகிழ்ந்து நீங்கள் எங்களுக்கு எப்பொழுதுஞ் சகாயமாயிருந்தால் உங்களுக்குத் துன்பமே வராது என்று கூறி மகிழ்ந்து விடைகொடுத்தனுப்பினான். பின்பு மருதிருவரும் சென்னை நகரஞ் சென்று கவர்னரைப் பேட்டி கண்டனர். கவர்னர் சபையில் மருதிருவருக்கும் நன்முறையில் மரியாதைகள் கிடைத்தன. நம்மரசாட்சி உள்ளளவும் நீங்கள் வரிப்பணஞ் செலுத்த வேண்டியதில்லை. நீங்களிருவரும் நம் பிள்ளைகள் போன்றவர்கள் என்று கூறிப் பல சிறப்புக்களையுஞ் செய்து அனுப்பினார்கள் ஆங்கிலேயர்கள். மருதிருவரும் வழியில் பலதலங்களைத் தரிசித்துக் கொண்டு சிவகங்கைக்கு வந்து இராணியிடம் கவர்னர் பேட்டியைப் பற்றிக் கூறினர். பின்பு, இவர்கள் கவர்னர் துரையிடம் விசுவாசமுடன் அரசாண்டு வந்தனர்.

இவர்களிடம் விரோதங்கொண்ட கவுரிவல்லவ ராசன் என்பவன், ஆங்கிலேயர்களிடம் இவர்களைப் பற்றிக் கோள் சொல்லி, இவர்கள் மனம் வைத்தால் கட்டபொம்மன், ஊமையன் இவர்களைப் பிடித்து விடலாம் எனக் கூறினன். அவர்களும் அங்ஙனமே, ஊமையனை உடனே எங்களிடம் ஒப்புவித்தால் உங்களுக்கு எல்லாச் சிறப்புக்களுஞ் செய்வோம். இல்லையேல் படையெடுப்போம் என்று எச்சரிக்கை விடுத்தனர். இதற்கிடையில் கட்டபொம்மனை வஞ்சனையால் வரவழைத்துத் தூக்கில் மாட்டினர். ஊமையன் என்ற கட்ட பொம்மனின் சகோதரன் புதுக்கோட்டை யரசனிடந் தஞ்சம் புகுந்தான். அவ்வரசன் நண்பன் போன்று நடித்து ஊமையன் அங்கிருப்பதனைத் தெரிவித்து விட்டான் ஆங்கிலேயர்க்கு. இது தெரிந்து, ஊமையன் தப்பியோடினான். மருதிருவர் அவனுக்கு அடைக்கலங் கொடுத்தனர். மந்திரி பிரதானி முதலியவர்கள் அடைக்கலந் தரக்கூடாதென்றனர். மருது சகோதரர்கள் " நம்மிடம் வந்தவரைக் காப்பது நம் கடமை " என உறுதியுடன் கூறினர். போர் மூண்டது. ஆங்கிலேயப் படைகளும், மருதிருவர் படைகளும் மிக உக்கிரத்துடன் போர் புரிந்தன. பெரிய மருத பாண்டியன் காட்டுக்குள் ஓடி விட்டார். இளைய மருதுவை, கருத்தான் என்ற அவர்கள் அந்தரங்கக் காவலனே பிடித்துக் கொடுத்துவிட்டான். சின்ன மருதுவைக் காவலில் வைத்தனர். உணவின்றியிருந்தார். பெரிய மருது காட்டில் பல இடங்களில் அலைந்து திரிந்தார். பசி, இளைப்பு முதலியவற்றால் வருந்தினார். முடிவில் மேஜர் அக்கினீஸ் என்பவர் படையுடன் வந்து அவரைக் கைது செய்து அழைத்துப் போனார். இளைய மருதுவைககண்ட மூத்த மருதேந்திரர் கதறியழுதார். அக்கினீசு துரையால் நம்மிருவருக்கும் தவசு செய்யும் பாக்கியம் கிடைத்தது என்று கூறினார். இவர்கள் படுந் துன்பத்தைக் கண்டு " கவுரிவல்லவராசர் " தூதுவனொருவனை யனுப்பி மருது சகோதரர்களிடஞ் சமாதானம பேசினான். மூத்த மருது இணங்கவில்லை. கவுரிவல்லவனும், தான் மருதுசகோதரர்களுக்கு இழைத்த தீங்கை நினைத்து

வருந்தினன். பின்பு, அக்னிசு துரை, திருப்பத்தூர்க் கோட்டைத் தென்மூலைக் கொத்தளத்தில் தென்னை மரங்கள் இரண்டு நாட்டி, அவற்றின் மீது குறுக்கு மரம் போட்டு, ஊஞ்சல்போல் கயிறு பூட்டினர். பின்பு மூத்த மருதேந்திரரை யழைத்துத் தூக்கில் மாட்டினர். அவரும் பாஞ்சாலங் குறிச்சி ஊமைத் துரையால் நமக்கு இந்தத் தவஞ்செய்யும் பாக்கியம் இடைத்தது என்று மனமகிழ்ச்சியுடன் காளையார்கோவில் ஈசனின் திருவடிகளை மனத்தில் தியானித்துத் தூக்கில் தொங்கினர். மற்ற அரசர்கள் பூமாரி பொழிந்தனர். இரும்பினால் கிளிக்கூடு போலச் செய்து, அதனுள் இளையமருதுவை யடைத்துத் தூக்கினர். அவரும் இறைவனைத் தியானித்துக் கொண்டே உயிர் நீத்தார். பின்பு, மருது சகோதரர்களிடம் பழகி அவர்களுக்கே துரோகஞ் செய்த கருத்தா னென்பானையுந் தூக்கிலிட்டனர். பின்னர், மருதேந்திரர் உறவினர்கள் முதலாயினோரையும் கொல்வித்தனர். அவர்கள் புதல்வனான துரைசாமி என்பவனை மாத்திரம் கொல்லாது சென்னைக்கு அனுப்பினன். பிறகு கவுரிவல்லவராசன் சிவகங்கைச் சீமையரசனாக முடிசூட்டிக் கொண்டான். ஆங்கிலேயர்களுக்குக் கீழ்ப்படிந்து, அவர்கள் உதவியுடன் அரசாண்டான். இச்செய்தி நாட்டிலுள்ள பலருக்கும் தெரிவிக்கப்பட்டது. பாஞ்சாலங் குறிச்சி ஊமையனும் பிடித்து வரப்பட்டுத் தூக்கிலிடப் பட்டான். ஆங்கிலேயர் பெருமை எங்கும் பரவியது. இதுவே, இரு நூல்களிலும் கூறப்பட்டுள்ள வரலாற்றுச் சுருக்கம்.

## நூல்.

இவ்விரண்டு நூல்களில் "**சிவகங்கைச் சரித்திரக் கும்மி**" என்பது "**முத்துச்சாமி**" என்பவரால் இயற்றப்பட்டது. இதனை,

> " விஞ்சை நகர்திரு வாலங்கா டரசாண்ட
> தஞ்சமென வறிவிமலி காளிகீழ் மாகாளி
> தஞ்சமென் றனுதினம் போற்றி செய்யும்
> தாசன்**முத்து சாமி சொன்ன கும்மி** "

என்பதனால் உணரலாம். கும்மிபோல் சந்தத்துடன் படிக்கும்படி யிருப்பதனால் இப்பெயர் வந்தது போலும். இந்த ஆசிரியரைப் பற்றி இதனுள் வேறொன்றுந் தெரியவில்லை. நடை சாதாரணமானது.

## சிவகங்கைச் சரித்திர அம்மானை.

இது, அம்மானை என்று இலக்கணத்தில் கூறப்பெறும் பிரபந்த வகையைச் சேர்ந்ததன்று. நூலின் இடையிடையே **அம்மானை** என்ற சொல் வருவதால் இப்பெயர் அமைந்ததுபோலும். நடை சாமானியமானது. ஆங்கிலச் சொற்கள் திரிந்து மிகுதியாக இந்நூலுள் பயின்றுள்ளன. இந்துஸ்தானிச் சொற்களும் ஒன்றிரண்டுள்ளன. இதன் மூலப் பிரதியில் இடையில் பல ஏடுகள் இல்லை. தொடர்பு மிகவும் அறுபட்டுள்ளது. இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் **முருகேசன் அல்லது முருகய்யன்** என்பதாக இருக்கலாம். சார்வரி ஆண்டு வைகாசித் திங்கள் 30-ஆம் நாள் இந்நூல் இயற்றப்பட்டதாகத் தெரிகிறது இஃது

" வீறுபுகழ் சாருவரி வருடந் தன்னில்
விளங்கியதோர் வைகாசி மாதந் தன்னில்
சீருடைய வாறஞ்சாந் தேதி திங்கள்
தினஞ்சோம வாரமதில் சிறந்த வாத்யம்
மாறைவளர் செல்முருகு குரைத்தே னிந்த
மகராசர் கும்பினியார் கதையைத் தானே "

[சிவ. அம் : செய்யுள் 119]

என்று கூறப்படுவதால் புலனும். இதன் பின்னர் சித்திரபானு ஆண்டு ஆவணித் திங்கள், வியாழக்கிழமை அத்த நட்சத்திரங் கூடிய நன்னாளில் இந்த அம்மானைக்கு, பாஞ்சாலங்குறிச்சி முத்துவீரப்பன் மகன் முத்துச்சாமி என்பவர் பிரதி செய்து முடித்ததாக ஒரு பாடலுளது. அவரே இதனை இயற்றியிருத்தலுங் கூடும். சிவகங்கைச் சரித்திரக் கும்மி இயற்றிய " முத்துச்சாமி " என்பவர் இவராக இருக்கலாம். அப்பாடல்,

சீர்சிறந்த சித்திரபானு வருடஞ் சிறந்த
சிங்கமாச மாறஞ்சோ ராந்தேதி
போர்புகழுங் குருவார மத்தநட் சத்திரம்
துதியைதிதி தனுசுலக் கினத்தில்
பார்புகழும் பாஞ்சைநகர் முத்துவீ ரப்பன்மகன்
முத்துச் சாமி பண்புடைய
போர்புகழுங் கும்பினியா ரம்மானைக்குப்
பிரதியொன் றெழுதி முகிந்ததுவே.

[சிவ. அம் : செய்யுள் : 120]

இதற்குக் கும்பினியார் அம்மானை என்றும் வேறு பெயர் உண்டென்று தெரிகின்றது.

இவ்விரு நூல்களும் அச்சிட்டு முடியுந் தருவாயில் சிவகங்கைச் சரித்திர அம்மானைக்குத் தொடர்புடைய இரண்டு பகுதிகள் கிடைத்தன. அவற்றைப் பிற்சேர்க்கைகளாகச் சேர்த்துள்ளேன். மூலப்பிரதிகள் மிகப் பிழைபட விருந்ததால் புரிந்து கொள்வது மிக்க கடினமாயிற்று. இயன்றவரை தெளிவாக்கி வெளியிட்டுள்ளேன்.

இவை, இந்நூல் நிலையத்திலுள்ள R. 3436 (அம்மானை) R. 3437 (கும்மி) என்ற எண்களைக் கொண்ட இரண்டு காகிதக் கையெழுத்துப் பிரதிகளை ஆதாரமாகக் கொண்டு வெளியிடப்படுகின்றன. அவை 1951–52-ஆம் ஆண்டு, மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து வந்த ஓலைப் பிரதிகளைப் பார்த்துப் பிரதி செய்யப்பட்டனவாம்.

இந்நூல்களை மூலப் பிரதியிலிருந்து பிரதிசெய்து, அச்சிடுவதற்குரிய வகையில் அமைத்துக் கொடுத்த இந்நூல் நிலையத் தமிழ்ப் பண்டிதர்களுக்கு என் நன்றி உரித்தாகும்.

இந் நூல்களைப் பதிப்பிக்கும்பொழுது, தோன்றிய ஐயங்களை அப்பொழுதப்பொழுது ஒப்பிட்டுப் பார்க்கத் தங்களிடமுள்ள ஓலைப் பிரதிகளைக் கொடுத்துதவிய மதுரைத் தமிழ்ச் சங்க நிருவாகிகட்கு எனது நன்றியைச் செலுத்துகின்றேன்.

சென்னை,
10—3—54.

தி. சந்திரசேகரன்.

# சிவகங்கை சரித்திரக் கும்மி

சீர்புகழுஞ் சேதுநகர் அரசைச் சேர்ந்த
சிவகங்கை நகரை முன்னாள்
பேர்புகழுங் கௌரிவல்ல வேந்திர ராசன்
பிரபல னரசாட்சி செய்ததுவும்
போர்புகழுங் கும்பினி யார்கள் வந்து
பொல்லாத மருதிருவரைச் செயித்ததுவும்
பாருலகில் கும்மிப் பாட்டு உரைக்கப்
பார்வதி மைந்தன் கணபதி பதம்போற்றி
சூரனை வென்றமரர் சிறைமீட் டுஞ்சிவ
சுப்பிர மணியர்பதம் போற்றி செய்து
கையயனு ரானகல் தீருடையவர்
மெய்யனுஞ் சரத்தா ருடையவரும்
தையலர் பூரண புன்கலை பாதத்தை
ஐய்யனே எந்நாளும் போற்றி செய்தேன்
தேசம் புகழ்ராசர் பணிநேசன் அரிசேஷன்
துரைசிங்க மகராசன் ராச்சியத்தில்
வாசம் புகழ்விஞ்சை நேச மூர்வளர்
அழகிய நாயகி யம்மன் பதம்போற்றி
ஆதிரெகு ராமர் சேதுபந்தனஞ் செய்து
அற்புதன் குகனுக்கருள் புரிந்தகதை
மேதினியில் கும்மிப் பாட்டு உரைக்கச்
சரஸ்வதி என்னாவில் குடியிருப்பாய்
முப்பத்து முக்கோடி தேவர்கள்
முனிவோர்கள் சத்தரிஷி பதம்போற்றி
கெப்பத்தி லண்டம் புவன மடக்கிய
எந்தன் கிருஷ்டன் நாராயணர் பதம்போற்றி
அன்னமதி லேறிவிண்ணுலகந் தாண்டும்
அற்புதன் பிரமதேவர் பதம்போற்றி
மன்னன் நளராசன் பூர்வச் சக்கிரவர்த்தி
மகாராசன் சுரமந்நன் பதம்போற்றி
பார்புகழும் விஞ்சை பாருல கில்வளர்
பாண்டியன் மகள்மகிழ் மகாளி பதம்போற்றி
தேர்புக முஞ்சோழ சிகாமணி நல்லூர்வளர்
திருவாலங் காடரசர் நாயகி பதம்போற்றி
உத்த மனூர்வளர் தம்பிராட்டி யம்மன்
உகந்தய்யனூர் விநாயகன் முனியப்ப சுவாமியை
சித்தத்தி லனுதினம் போற்றி செய்து
சிவகங்கை நகர்க்கும்மிப் பாட்டு உரைத்தேன்

அந்தி மதியணி சொக்கலிங் கேசரும்
மந்திர ரூபிமீ னாட்சிபதம்
எந்தன் குருசாமி யுந்தன் பதத்தையுஞ்
சிந்தையி லெந்நாளு போற்றி செய்தேன்
பாவலர் கள்கவி வாணர்தன் பாதத்தை
நாவினால்தோத்திரம் செய்து கொண்டு
ஆவலுடன் கும்மிப் பாட்டுரைத் தேனதை
நாவலர் மகிழ்ந்து பொறுத்தருள்வீர்
காரிகை நன்னூல் உரிச்சொல் பயன்களும்
தேரி யறியாதா னுகையினால்
பாரில் புலவர் பெரியோர்கள் பாலன்
மதலை மொழியென் றருள்புரிவீர்
கான மயிலுக் கிணையதாய் வான்கோழித்
தானே சிறகு விரித்தது போல
வானத்தில் பிரகாசிக் குஞ்சந்திரர்க் குநிகர்
வளர்நட் சத்திர முதித்தாப் போல
நாக மெழுந்தாடக் கண்டதோர் நாங்குழு (நாங்கூழ்ப்பு(
நாக முடனாடும் பாவனைப் போல
தோகைக் குறவள்ளி தெய்வானை பாதத்தை
ஆக மகிழ்ந்தடி போற்றி செய்தேன்
எங்கள் குலதெய்வம் ஆதி நாகநாதர்
எடுத்த பெண்வழி அங்காள வீஸ்பரி
மங்கள மாக நானெடுத்த பெண்வழி
தெய்வ மன்னன் பாத்திபனூர்ப் பொன்னரியான்
ராசரா சேஸ்பரி வாசன் சேதுபதி
ராசன் சமூகத்தில் அட்டவணை
நேசன் ஆருமுகம் பிள்ளை பேரன்விஞ்சை
நெட்டூர் முத்து வீரப்பனீ னயநாடன்
விஞ்சைநகர் திருவாலங் காடரச ராண்ட
தஞ்சமென் யரிவிமலி காளிகீழ் மாகாளி
தஞ்சமென் றனுதினம் போற்றி செய்யும்
தாசன் முத்துசாமி சொன்ன கும்மி
கங்கை குலம்வளர் சிவகங்கை நகரரசு
கர்த்தன் துரைசிங்க ராச னீன்ற
சிங்கமெனும் உடையண தீரன்தர்ம ராசன்
சிலேஷ்டன் மூத்தவர் ராசாங்கம்
வீரம் பொருந்தியவர்க் கிளைய வீமன்
முத்து வடுகனா தேந்திர துரை
தீரன் தேவாலயம் சத்திரம் பரிபாலிக்கும்
செயச்சு வான்துரை அர்ச்சுனனும்
பாரில் பரிக்கு நகுலனென்ன விளங்கும்
பார்த்திபன் தில்லி பாச்சா துரை

தேரி யறிந்த சாஸ்த்திர சகாதேவன்
தீரனும் வேங்கிட சாமித்துரை
சுந்தரஞ் சேர்முத்து வடுகனு தேந்திரன்
தீரன் பயின்றிடு மாமனைச் சாமித்தேவரை
சிந்தை மகிழ்ந்திடு ராஜலட்சு மிதேவி
நாயகன் குழந்தைச் சாமித் தேவர்
ஆதி கெவுரி வல்ல பேந்திரன்
அவர்மாப் பிள்ளைச்சாமி சமையமுத்துத் தேவர்
மேதினியி லவர்தம்பி உடையண சாமி
விரும்பி யீன்றிடுங் குழந்தைச் சாமிமைந்தர்
தேசம் புகழ்சிவ சாமி மன்னனீன்ற
செல்வர் பெரியசாமி சின்ன சாமி
வாசம் புகழ்வீமன் சின்னச் சாமி
மைந்தன் மன்னவன் சேது ராசன்
சோதிபுகழ் வேலலகு ராணி துங்கன்
மாப்பிள்ளை வேலுச் சாமித் தேவர்
மேதினி யிலவர்க் இளையதுரைப் பாண்டியன்
விளங்கு மிளையதுரைச் சாமி மன்னன்
செம்பனூர் சாமி ஐய்யர் பயின்றிடும்
தீரன் வெள்ளைய சாமி மைந்தன்
வம்பர் குறும்பர் திருடர்தனை ஒடுக்கும்
மன்னவன் செல்லச் சாமித்துரை
சபை நிறைந்திடுங் கோட்டை நாச்சியார் தன்கணவன்
சக்கந்தி மாப்பிள்ளைச் சாமி துரைச்சாமி
சிவகங்கை நகர்க்காதி குழந்தா புரிச் சாமி
தீரன் பயின்றிடும் புத்திர ரைந்து பேர்கள்
நாகரா ரிளம்பேத்தி செல்வ முத்து
நாகரீகச் சாந்து நாக முத்து
தோகைசி பாலகு முத்துவிஷயம்
சுந்தரி சாந்து லட்சுமி சின்னச்சாந்து
சத்த மாதர்கள் எழுபேரும் கங்கை
சுத்த சலத்தினிற் றீர்த்த மாடி
சுத்தவெள் ளைசல்லா சித்துகம்பிச் சேலைகட்டி
சொர்ண மயமாய் நகைபூட்டி
சாந்தங் கெந்தம் சவ்வாது புனுகுடன்
விந்தைய தாக மலர்முடித்து
வந்திடு மாதர்கள் கொந்தள மாகவே
முந்தியே மூன்று குலவை செய்து
தந்தனத் தானு தனதன தானனை
திந்தோம் திமிதிமி யென்றேதான்
செங்கையி லோர்பந்து கொங்கை யிருபந்து
மங்கை குதிங்காலி லிரண்டு பந்து

தங்கமுத் தாளிந்து ஆய்ந்து பாடிட (பந்தாடிட)
சிவகங்கை நகர்க்கும்மி இங்கே சொல்வேன்
ஆதியில் தீச்சுரன் மைந்தன் ரகுராமன்
அரக்கரைச் சம்மாரஞ் செய்து வந்து
மேதினியில் சேது காவலவ னென்று
விளங்குங் குகனுக்கு முடிசூட்டி வைத்தார்
(அ)டப்பைநா லுபத்தெட்டுப் பாளையக் காரரும்
ஒப்புர வாய்வந் தடிபணிய
அப்படி யாக அநேகம் சேதுபதி
அரசாட்சி செலுத்திடும் நாளையிலே
பாளையப் பட்டு எழுபத்தி ரெண்டில்
பார்த்திப நாலுகோட்டை சலு(கை)குடையா னின்ற
காளை யார்பதம் பணிந்த நேஷன்
கர்த்தனும் சுவானத் துரைராசன்
கயிலாச பதிபோல் முகவை நகராளும்
கர்த்தனும் விசைய சேது பதிமகள்
அயிலாண்ட யீஸ்வரியை விவாகஞ் செய்தவ
ளாறுயிரம் பொன்பூமி சீதனம் பெத்து
நாலுகோட் டையுடன் சேர்த்து
நங்கையும் துரையும் ஆண்டிருந்தார்
மாலுக் கிளையவன் படமாத்தூர் சீமை
மன்னன் ஒய்யத்தேவ ராண்டிருந்தார்
வெங்கண பெரிய உடையாத் தேவர்
விளங்கவே சக்கந்தி யாணடிருந்தார்
கங்கை குலத்தினி லெங்கள் முன்னோர்களும்
கரைவாச லதிகாரம் பார்த்து வந்தார்
கோட்டை குடிக்காட்டில் வேட்டைக்கு வந்ததில்
கொடும்புலி மானைக் கொன்றுழக்கி
கட்டழகன் அச்சுவான் துரைகடும்
வேட்டையால் தண்ணீர் தவிக்கி தென்று
ஊரணியைத் தேடி ஓடி வந்து
ஊரணியைக் கண்டு நீரருந்தி
தீரன் கரையில் வருகையிலே அங்கே
சித்த னொருத்தன் தவசி வந்தார்
சித்தனைக் கண்டு சுவான்துரை
தெரிசித்து எதிராக நிற்கையிலே
அத்தனும் விழித்துப் பார்த்தப் பாலே
வெகுதூரஞ் சென்றோடி வந்து
வேங்கையைப் போலவே துரைமுன் வந்து
வீரமாய் எழும்பிப் பாய்ந்திடவே
வேங்கை பாய்வதைக் கண்டு துரைமகன்
வீறுடன் எதிர்த்து நின்றிடவே

பாய்ந்திடும் வேங்கை விலகிக் கொண்டு
பக்கம் வெகுதொலை சுற்றி வந்து
சாய்ந்து ரிஷபனை சித்த னுகச்
சுவான்துரை தன்னிடத்தில் வந்து
நெற்றியில் கையால் நீறணிந்து நிறைந்த
விபூதி ருத்திராட்சம் பிரம்பீய்ந்து
சத்தியாய்ச் சிவமாலைக் கழுத்தி லிட்டு
தருணத்தில் பூசை செய்து சென்ருல்
எத்தி சையும்புகழ் வெற்றி யுண்டாம்
எதிர்த்த வர்களெதிர் நிற்க மாட்டார்
பத்தியுடன் நீசிவ பூசைசெய் தாலிந்தப்
பாருல கரசாள் வாய்போ
இந்தக் குளம்வெட்டி கல்லுக் கட்டி
யீசன் சிவகங்கை யென்று பேரும் வைத்து
அந்தக் குளத்துக் கன்னி மூலையில்
அரண்மனை ஆஸ்தானம் கோட்டை கட்டும்
சந்தேக மில்லாம லக்கினி மூலையில்
அச்சுவர னீஸ்பரன் கோவில் செய்வாய்
என்றந்தச் சித்தன் வரங்கொடுத்து
யேகினு ரவர்க்கிச்சை யானவிடம்
அன்று முதலாகச் சுவான்துரை
ஆறுயிரம் பொன்பூமி ஆண்டிருந்தார்
இப்படி யாகஅரசு யாற்றும் நாளில்
இராம நாதபுரஞ் சேதி சொல்வேன்
வைப்பாட்டி ரசபுத்திர ராட்சியீன்ற மைந்தன்
பவானு சங்கர சேதுபதி
விசையன் சேது பதியை விரட்டி
விளங்கும் பதியை எடுத்துக் கொண்டான்
அசைவில் லாமலே சேதுபதி ராசன்மகள்
அயிலாண் டவளிடம் வந்து சேர்ந்தார்
மாமன் சீமையைப் பரிகொடுத்து வந்ததை
மருகனச் சுவான்துரை யறிந்து
வீமனைப் போலவே கோபங் கொண்டு
வேலலகு ஈட்டிவா ளெடுக்கும் போது
கொஞ்சமா யவனை எண்ண வேண்டாம்
கோடி தளஞ்சேனை திரண்டிருக்கு
தஞ்சை நகர்ச்சீமை தன்னில் சென்று
தகுந்த படைசேனை திரட்டி வந்து
அஞ்சாமல் வந்து எதுக்க வேணும்
அமத்தாஷ்த் தானம்நாம் எடுக்க வேணும்
தண்டிகை மீதினில் சேது பதிவரச்
சுவான்துரை பரியி லேறிவர

அண்டியே அடப்பம் குடைகுஞ்சக் காளர்
அன்புடன் வேகமாய்த் தானடைந்து
தஞ்சை நகர்க்கோட்டைக் கருகாக
தனி மடத்தில் விடுதி செய்துகொண்டு
சஞ்சல மில்லாமல் சுவான்துரை
தஞ்சை நகரெங்கு ரவுனி வந்தார்
அந்தி சந்திரெண்டு நேச காலம்துரை
அச்சு மட்டத்தில் ஆவுன் சவாரிவந்தார்
சந்திரர் சூரியர் ஒளிபோல வேதுரை
சவாரி ரவுனி வருவதுவை
பட்டணந் தன்னி லிருக்குஞ்சில
பைங்கொடி கன்னிமார் தான்பார்த்து
கிருட்டி னன்மகன் மன்மத னேயிவன்
கெசவா கனமேறிய விந்திரனோ
அஷ்டத் திக்குப் பாலக னேயிவன்
அளகை மாநக ராள்கு வேனனோ
கன்னிமார் சென்று அரண் மனையில்
கட்டழகு கன்னிகை செப்பிடவே
உன்னிய மேல்வீடு தன்னி லேறிதுரை
உல்லாசத்தை இராச கன்னி பார்த்து
அந்தப் புரத்திலே இராசனிடம் சொல்ல
ஆளனுப்பி யவரழைக்கச் சொன்னார்
சிந்தை பரிவுந்தொரு தானுபதி வந்து
சீக்கிரம் சமூகம் அழைத்திடவே
வந்தத் துரைசேது பதியிரு வருக்கு
மகிழ்ந்துசரி யிருப்பிடந் தான்கொடுத்து
எந்தவூர் எத்தேசம் இராசாக்க ளிங்கே
வந்தவகை செப்பு மென்றார்
இராம நாதபுரம் சேது பதிநாம்
எந்தமருகன் நாலுகோட்டைச் சுவான்துரை
மராட்டிச்சி மகன்பவான் சிங்குமா ருட்டமாய்
சீமையை எடுத்துக் கொண்டான்
ஆனதினால் நமக்குப் பெரிய வரசன்
சமூகத்தி லறிக்கை செய்ய வந்தோம்
தானே அவனைச் செயித்திடுவோம்
தப்பாமல் வேங்கையைக் குத்து மென்றார்
எண்ணி எட்டு நாளையில் குத்துகிறோம்
அதற்கேத்த கறிதீனி போடு மென்றார்
மன்னர்கள் சொன்ன மொழிகேட் டுமகா
ராசனும் வேங்கைக்குத் தீனி போடவில்லை
அந்நேரஞ் சேதுபதி தண்டியலில் அச்சு
மட்டத்தில் துரை ரவுனி வந்தார்

கன்னிய ரெல்லோருங் கண்டவர்கள்
கர்த்தனை புலிகொல்லு மென்றழுதார்
இந்நிலந் தன்னில் புலியைக்குத்தி ரவுனி
எல்லோரும் காண நான்வாரே னென்றார்
தெற்கு மடத்தினில் வீற்றிருந்தார்
திரர் இருவரும் வாரேம் என்று
மன்னன் சபைதனில் சொன்ன சபதம்
வாயிதா நாளன்று ராத்திரியில்
அன்னம் எடுக்காமல் தானிருந்து
அன்புடன் ஸ்நானம் சிவபூஜை செய்து
முன்னமே சித்த னருளிய மந்திரம்
மூர்க்கமாய்த் தியானஞ் செய்து கொண்டு
வாலா வேலல கீட்டி சமுதாடு
வல்லயம் நேரிஷம் துப்பாக் கியுடன்
கோலா கலமாய்க் குதிரை யேறிக்
கும்பிட்டு மாமனைத் தண்டி யிலேத்தி
பட்டண மெங்கு ரவுனி வந்துதஞ்சைப்
பட்டணத்து ராசன் சமூகஞ் செல்ல
கொட்டடி தன்னி லடைத்திடும் வேங்கையை
இறுப்புக் கட்டாப்பில் திறந்து விட்டார்
எட்டுநாள் பட்டினி யான வேங்கை
ஏகமாய் கெர்ச்சித்துத் தான்குதிக்க
கட்டழ கனச்சு வான்துரை யந்தக்
கன்னக் கடவுக்குள் தான்குதிக்க
துட்ட னெனும் ரெட்டடி வேங்கை
தூக்கிய நகத்தால் வந்து தாக்கிடவே
கஷ்டப் படாமல் அச்சு வான்துரை
கைவாளால் வாயைக் கிழித்து விட்டு
எட்டிய நகத்தைச் சமுதாட் டாலிரு
கூறாக வெட்டி நறுக்கித் தள்ளி
ஈட்டியால் விலாவிலே குத்தி இருத்தியே
வேங்கை யைவிழுத் தாட்டி
கச்சித மாகவே சிங்கமும் முனிவாலும்
கைச் சூரியால் அறுத்துக் கொண்டு
அச்சுதன் துளசி மகராசன் முன்வைத்து
அன்பாக வந்து வணங்கு கின்றார்
கண்டு மகிழ்ந்து அரசனுந்தான்
கர்த்தன் சேதுபதிச் சுவான்துரைக்கும்
வேண்டும் வரிசைகள் தான்கொடுத்து
வேண்டிய தென்ன உமக்கென்றார்
பவான்சிங் குவைத்தான் செயிக்க
பன்னீ ராயிரந் துருப்பு வேணுமென்றார்

ஆவான மாகவே அவுல்தார் சீமையதார்க்கு
அன்புட னுத்தர வாச்சு தங்கே
ஆனைப்படைக் குதிரைப்படை ஆன காலாள்
ஒட்டகை பன்னீ ராயிரமுடன்
சேனை திரட்டி சேது பதிதுரை
சென்றார்கள் தொண்டைமான் சீமையிலே
மன்னர் சேதுபதி துரைவார சேதியைத்
தொண்டைமான் தானறிந்து
இந்நிலந் தன்னி லெதிரே சென்று
இராசனைப் பணிந்து அழைத்து வந்து
தன்னுடை சீமைதளம் ரானுவத்தை
சகலமுங் கூட்டியே ஒன்று சேர்த்து
ஏகப் பெரும்படை யாய்த்திரண்டு
எங்கும் கிடுகிடென் றதிர்ந்திடவே
காக முடன்வெகு கோபங் கொண்டு
சமுத்திரங் கரைபுரண் டால்போல
ஆறுமுகக் கோட்டை வந்திறங்கி
அடித்துக் கூடாரம் பாளையந் தானிறங்கி
மேரு நடுங்கிடப் பூமி யதிர்ந்திட
விட்டா ரனேகம் பீரங்கி சப்தங்கள்
தம்பூருச் சத்தம் பீரங்கிச் சப்தம்
தளத்தோசை கேட்டுப் பவான்சிங்கு
வம்புசெய்து இனியெதிர்த் தோமென்றால்
மாண்டிடச் செய்வா ரரச னென்று
காளிகா தேவியைத் தான்துதித்துக்
கால்நடை யாயொன்றி யாக வேதான்
வீளிமார் தூண்குடி சேர்ந்து
வெளியேறு மலங்கே யொளித்திருந்தார்
மன்னன் சேதுபதிச் சுவான்துரை
தொண்டை மண்டலத்துரை மூவருடன்
செந்நெல் விளைமுகவை நகர்க்கோட்டை
சென்றங்கே சுற்றிப் பார்ப்பளவில்
வைப்பாட்டி மகன்பவான் சிங்கு
மயங்கியே ஓடி ஒளித்ததினால்
எப்படிச் சீமையை ஆள்வோ மென்று
எண்ணியே சேது பதிதானும்
மங்கை அகிலாண்ட ஈஸ்வரியாள்
மாப்பிள்ளைச் சுவான் துரையை
சங்கை யுடனேநீர் பட்டங் கட்டி
சாங்கமாய்ச் சீமையை ஆளு மென்றார்
மன்னச் சுவான்துரை மாமன்
சேதுபதிக்கே பட்டங் கட்டு மென்றார்

என்ன மொழிசொன்னீர் துரையே
என்னாலே யானது ஒன்று மில்லை
மண்ணையும் பெண்ணையும் தான்வெறுத்தும்
சகம தாகவே உயிரை யெண்ண
நிண்ணய மாகவே வேங்கை குத்தி
நீரல்லோ சீமையைத் திருப்பி வந்தீர்
ஆனதி னாலே நீர் இராசா ரெண்டு எனக்கு
ஆடையுஞ் சோறுந் தாருமென்றார்
கர்த்த னுரைத்திடச் சுவான்துரை
கர்த்தனைப் பார்த்தொரு வார்த்தை சொல்வார்
சித்தம் மகிழ்ந்து திசைபாலன் சேது
வலவன் சேது பதியென்று
இராமனாதபுரம் இராமலிங்க விலாசம்
இராமலிங்க சேது பருவத வர்த்தினி யென்றும்
இராமசாமி னுள்முத லநேகநாள்
இராசரக்க ளாண்டிடுஞ் சீமையை
நாலு கோட்டைச் சுவான்துரை
நானொன்றாய் ஆள்வது நியாயமில்லை
பாலுடன் சர்க்கரை கலந்தாற்போல்
பாருல கெல்லாம் எடுத்தெழுதி
அஞ்சி ரெண்டஞ்சு மூன்றென்று
அன்புடன் சீமையைப் பிரித்தெழுதி
தஞ்சமென் றோரைக் காக்கும் சேது
சமஸ்தானம் மூன்று பங்குசேர்த்து
கங்கை குலம்வளர் சிவகங்கை
நகரெண்டு பங்கென்று கணக்கெழுதிச்
சங்கையுடன் சேது அரசுநிலை யிட்டச்
சுவான்பெரி யுடையா ரென்பேர் விளங்க
எண்ணும்படி அவுதாகுட மேல்சல்லி
இராச விருதுகள் மானம்பு முதல்
மண்ணும் விண்ணும் உள்ளமட்டும்
மகராசப் பட்டமும் விருதும் விளங்க
எந்தனுக் குத்தரவு தான்கொடுத் தெப்போதும்
பெரிய சீமை யென்றிருப் பீரென்றார்
சிந்தை மகிழ்ந்து விசையன் சேதுபதி
செய்ய மருமகன் மனதுப்படி
சொந்தக் கணக்கர் சேவுகர் சேருவை
துய்ந்த சகல சிப்பந்தி களுடன்
ஆனை பரிசேனை கால்தளம் அன்பான
தானுபதி அட்டவணை தாதி மார்களையும்
மானபரன் பிரம சத்திரிய வைசிய
சூத்திரர் நாலு வருணத் தாரும்

இரண்டு பங்குக்கு உள்ள கிராம
மெங்கும் சராசரி பார்த்தெடுத் தெழுதி
இரண்டா யிரமொரு நூறு யேழஞ்சு
யேழரைக் காலரை வீசம் கிராமங்களும்
இராம னாதபுரஞ் சீமை ஒன்பது
லெட்சமென் றெல்லோர்க்குந் தெரிய
சிவகங்கைச் சீமை யாறு லெட்சம்
பொன் சீமையென்றே பிரித்து
தவத்தில் மிகுத்த சுவன் பெரியுடையான்
தன்னுட சீமைக்கு வந்துசேர்ந்து
சித்த னுரைத்த படியே சிவகங்கைத்
தெப்பக் குளமும் வெட்டிக் கட்டி
சத்தியாய் உள்குளந் தானுங் கட்டியதில்
சாலை கிராமங் கன்னி மூலைவைத்து
கன்னி மூலையில் அரண்மனை ஆஸ்தானம்
கல்கோட்டை கவுரிவிலாசம் ஆசார வாசல்விட்டு
தன்னிமையாய் சித்த னுரைப்படி அக்கினி
மூலையில் அச்சுவர னீஸ்வரன் கோவில்கட்டி
பஞ்சவர்க ளஞ்சு பேர்களுமுன்
பாரத முடித்துப் பாராண் டதுபோல்
தஞ்சமென் றோர்களை யாதரித்து சிவகங்கை
தானரசாண்டிருக் கையிலே
மங்கை அயிலாண்ட வீஸ்வரி மைந்தன்
முத்து வடுக னாதத்துரை
சிங்கம் போலவே வளர்ந்து யீன்ற
செகமுழு தாளுந் திறம்பார்த்து
பட்டத்துத் தேவி வேலுலகு ராணி
பாரி யிரண்டுபெண் கலியாணஞ் செய்து
பட்டாபி ஷேகமும் செங்கோலுங் கொடுத்து
பார்த்திபன் சீமை யாளுகையில்
சட்டஞ் செலுத்தியச் சுவரன்பெரி யுடையான்
துரைசாமி வைகுண்ட பதவி சேர்ந்தார்
இட்டமுட னவர்க்குச் செய்யுங் கிரிகைகள்
எல்லாம் முடித்தனேகந் தானஞ் செய்து
எட்டுத் திசையும் புகழ்ந்திடவே இராசன்
திட்டமுடன் சீமை ஆளுகையிலே
கட்டழகன் பிரதானி தாண்டவ ராயன்
எட்டியே வயது சென்றதினால்
அடப்ப பிடிவெள்ளைக் காலுடை யாரீன்ற
அண்ணன் தம்பி யிருமருதும்
திடத்துடன் சுத்த வீரன் பெரியமருது
தீரன் சின்னமருது புத்தி சாலியுமாய்

துரைமகன் ராணிகள் மனத்துக் கேற்பச்
சீமை யதிகாரஞ் செலுத்தி வந்தார்
வரையா வாகவே நபாபு சாயபுக்கு
வரியொரு காசுங் கொடாமல்
அஷ்ட திசையெட்டும் நடுங்கிடவே
அதிகாரத்தில் சீமை யடங்கிடவே
துஷ்டன் மருது இருவர்களால்
துரைநவாபு பகுதி கேட்கவில்லை
கள்ளன் திருடர் மறியல் கடந்து நடந்தவரை
கால்மாறு கைமாறு துணித்திடுவார்
எள்ளளவு குறைசெய்த வரைஇரு
துண்டாய் வாளுக்கு இரையிடுவார்
தேவாலயம் பிரம்மாலயம் சிவபூசை
சிறந்த சத்திரம் அன்ன தானம்
தாழ்வில் லாமல் நடத்தித் தான
தருமங்கள் அநேகம் செய்து வந்தார்
இப்படித் துரையும் மருதிருவரும் யேகச்
சக்கிராதி பதியாய் இருக்கையிலே
செப்பமுடன் சென்னை மாநகரில்
தீரன் நவாபுதுரை சேதி சொல்வேன்
வாசமுடன் நவாபு துரைசென்னை
மாநக ரரசாட்சி செய்கையிலே
தேச மெல்லாம் ஒருகுடைக்குள்
செங்கோல் செலுத்திப் பகுதி வாங்கி
நேசமுடன் சீமை ஆளுகையில்
நிருபன் பகுதி செலுத்தாதவர்கள்
ஆரென்று மந்திரி தன்னைக் கேட்க
அன்பாக காருபன் பிள்ளை சொல்வான்
தீரன் சேது சமஸ்தான மொன்றுமதில்
சேர்ந்த சிவகெங்கைச் சீமையொன்று
பாஞ்சைப் பதிவளர் கட்டபொம்மு
பார்த்திபன் மூவர்பகுதி பாக்கியென்றான்
வாஞ்சையாய்ப் பகுதி கொடுக்கா விட்டால் பாகி
வாளுக் கிரையிட வேணுமென்றான்
அம்புவி யாளும் நவாப்பு சாயபு
அரசர்மேல் வெகுண்டு இருக்கும்போது
நம்பி வியாபாரிகள்போல் கும்பினியார்
நவாப்பு முன்வந்து நின்றிடவே
எந்த ஊரிருப்பு நீங்க ளென்ன
காரியமா என்முன்னே வந்துநின்றீர்
விந்தை யேதெனவே கேட்க
வேந்தனே நாங்கள் வியாபாரி என்றார்

உந்தன் பால் விடைகொண் டிப்பா லிந்த
ஊரினில் வியாபாரஞ் செய்ய வென்று
வந்தோமென் றுரைத்தே நவாப்பு
மதிமுகம் பார்த்தொரு வார்த்தை சொல்வார்
தென்னவ னேயிங்கி லீசுதேசம்
இருப்பது நாங்க ளென்ருர்
இந்த நகர்தன்னில் வியாபாரஞ்செய்ய
எண்ணியே உன்முன் வந்தோ மென்ருர்
சந்தோஷ மாக நவாப்பு சாயபுக்கு
சலாங் கொடுத்து இருந்துகொண்டு
கொண்டு வந்த சாமான்கள் குறிப்பை
இனிநாங்கள் சொல்லக் கேளும்
குண்டு துப்பாக்கி வெடிமருந்து
குளோப்புக்கள் பிஸ்தூல் வெடியுடனே
நப்பான் பீங்கான் சுருட்டுக்கத்தி
நல்ல சூரியெரி யீட்டிகளும்
எப்போதுங் கையிலிருக்குஞ் சுரிகைவாள்
ஈரல் பிடிங்கிடுங் வாங்கருவாள்
என்னென்ன வஸ்துக்கள் வேணுமோவதை
எல்லாந் தருவிச்சு தருவோ மென்ருர்
என்ன வுமக்கினித் தேவை யென்று
ரிருக்க விடங்கொஞ்சம் வேணுமென்ருர்
எந்த விடத்தினில் தேவையதில்
எவ்வளவு இடம் வேணுமென்ருர்
சிந்தை மகிழ்ந்து தலைவாய்க்கரை தன்னில்
சேர்ந்த ஆட்டுத்தோ விடம்வேணு மென்ருர்
சொன்னபடி ஆட்டுத்தோ லெடுமென் ருரதை
சுருட்டுக் கம்பியாய் வகுத்திருந்தார்
திண்ணமுடன் கம்பி நீளம்பார்த்து
தீர்க்கமுடன் மயிலிரண் டாச்சு
தெற்கு வடக்கிலே ரெண்டாச் சுவதில்
திறமுடன் கிழக்குமேற் கிரண்டாச்சு
தெற்கும் கிழக்கும் பெருக்கிடவே
திறமாகச் சத்திரம் நாலாச்சு
இப்படி யாக இடம்வாங்கி
இங்கிலீசுக் கொடியிட்டுக் கோட்டைசெய்தார்
அப்படியே கோட்டைக் கட்டிக் கொண்டு
கோட்டைக்குள் நால்புறமும் சேர்த்துக் கொண்டார்
நாலு பக்கமும் வாசல்விட்டு நாலுபக்கமுங்
கொத்தளம் பங்களாச் செய்து கொண்டார்
நாளுக்கு நாளாய் துரைமார்கள்
நல்ல சிப்பாய்கள் சோல்சர்களும்

கோட்டையுங் கொத்தளங் கொம்மைகளும்
குளிர்ந்த பங்களா மேல்வீடும்
தாட்டீக மாகவே கட்டிக்கொண்டு
தந்திர மாக இருந்து கொண்டு
வாச்சு தென்றே சீமைக் கெழுதிவிட
மன்னர் துரைமார்கள் தான்மகிழ்ந்து
சாச்சுது சென்னை நகர்தன்னி லேதனிக்
கோட்டையும் பங்களா யென்றெண்ணி
கப்பல் வழியாய்த் துரைமார்க ளும்மகன்
கும்பினி மேஸ்தர் புல்தார்களும்
செப்பமுடன் வந்து சேர்ந்தார் களந்த
சீமை வெள்ளக் காரரெல் லாரும்
வர்த்தகமாய் வந்த துரைமார்க ளெல்லாம்
பங்களாவைப் பார்த்து சந்தோஷமுடன்
சேர்ந்து ஒருமுகமாய்ச் சென்னைநகர்
நவாப்பு தன்னிடத்தில்
வந்துசலாங் கொடுத்து மன்னர்
மகிழ்ந்து இருக்கும் சபைதன்னிலே
சிந்தை மகிழ்ந்து சேது சிவகங்கை
சிறுகுரிச்சி மூவருந்தான்
எந்த வலுவால் பகுதி கொடாமல்
இருக்கிறு னவர்களை நொறுக்க வேணும்
அத்தேரி பாணுச்சேர் மாதரிச்சேர்
அடியிடா மறவன் மேல்தூளி
உத்தரவு செய்யப் பிள்ளைமகன்
ஒருமித்துப் படையைத் திரட்ட லுற்றான்
இப்படி யாக நவாபு துரைமார்
மறவர்பேரில் (யேகக்) கோபமாக இருக்கையிலே
அப்போது கூடயிருந்த கும்பினியார்
பகுதி புறகத்துச் செய்தவன் யாரென்றார்
மன்னன் நவாபு துரைசாயபு
வந்த கும்பினியார் முகம்நோக்கி
என்னவிதஞ் சொல்வேன் நாமிவ் வுலகை
யாண்டேற் படுத்துந் தீர்வைதனை
துன்ப மணுகாமல் துரைத்தனஞ் செயவதுல
துஷ்டர் மூன்றுபேர் செலுத்தாமல்
வம்பு மிகுந்த இராமநாத புரம்வளர்
சிவகங்கை சிறுபாஞ் சாலங் குரிச்சி
தாட்சியாய் மூவருந் தீர்வை தராமல்
மாட்சிமை செய்கிறு ரிதுவரையும்
சாட்சிய தாக அனேகந்தரம் சேவுகர்தாம்
அனுப்பியும் பகுதி தாராததினல்

ஏது வகையதற் கென்று
எண்ணுகிறேன் பலபல யோசனைகள்
வாது செய்துபடை சேகரித்து அந்த
மறவர் குறும்பை அடக்கிவிட
படைகூட்டி நாளையே பயணம் புறப்பட
பார்த்திப ரேமன மெண்ணுகிறேன்
அடவுடன் மனக்கிலேசம் வேண்டாம்
ஆதரவாய் நாமுதவி செய்வோம்
சாற்று மொழிகள் தவருமல்
சகாயமா யப்பதிமூன்றுந் தான்பிடிப்போம்
சேர்த்துத் துரைமார் நாலு பேருடன்
சேர்ந்த சோல்சர்பட் டாளமுடன்
ஆங்கழைத்துக் கூட்டிப் போவீ ரென்று
அரசனிடந் துரைமார் செப்பிடவே
ஈங்குவந்து கும்பினிப் பட்டாளம் சோல்சர்
எல்லோருங் கோட்டையில் தானிருந்தார்
அங்கே நவாபுதுரை தனது ஆனைபரி
சேனை யடங்கலும் ஒருமுகமாய்
புறப்பட்டார் மாட்டிய நீலன் பிரட்டன்
பூரி ராமசாமி வெள்ளை காரன்
உரப்புடனே சோல்சர் படையொன்பதி
னுயிரந் திரண்டொன் றுசேர்ந்து
தாமெழுந் திருவர் சேனை யொன்ருய்
இரண்டு சமுத்திரம் ஒன்ருகச் சேர்ந்ததுபோல்
வீமனைப் போலே விளங்குஞ் சோல்சர்படை
வீரர் நாலுபேர் வெள்ளைக் காரருடன்
தஞ்சை நகரத்தில் வந்திறங்க தஞ்சை
நகராளு மரசனெதிர் சென்றழைத்து
வஞ்சந்தனை நினையா மன்னன் படைக்கு
மானேசி அப்பாவு படிகொடுத்தான்
மன்னன் நவாபுதுரை சாயபு
மானேசியும் படையுங்கூட வாருமென்ருர்
சொன்ன படிகூட வாரேனென்று
சேர்ந்துதன் படையுந் திரட்டிக்கொண்டு
மூவர்படையு மோர்முகமாய்த் திரள
முப்பத்தா றுயிரம் பட்டாளம் சேர்ந்ததங்கே
தேவர்கள் கண்டு அதிசயிக்க தீரன்நவாப்பு
கும்பினியார் படைதென்முகமாய் நடக்க
அண்டங்க ளெங்குங் கிடுகிடென
ஆகாச முட்டக் கொடி விருதுமின்ன
தென்திசை யெங்கும் நடுநடுங்க தீரன்
நவாப்பு பீரங்கி சப்தமிட

கண்டிடும் நாடுகள் கிராமங்கள்
காலாட்கள் பயந்து ஓடிடவே
மண்டலந் தன்னை யழைப்பதற்கு
மகராசன் நவாபுதுரை வருகிரு ரென்று
தென்திசை வாழுங் குடிபடைகள்
தீரன் நவாப்புக்கு வழிகாட்ட
ஆறு மலைகாடு ஓடை கடந்துபடை
ஆடானைப் பட்டணந் தன்னில் வந்து
மீறும் படைகளுக்குத் தீனி கொடுத்து
மிகுகூடார மடித்தன் றிரவு விருந்து
இருந்தபின் கதிரோன் கிழக்குதிக்க
யெழும்பியே பட்டாள மோர்முகமாய்
திருந்தவே இராம ஞதபுரஞ் சேதுவை
முந்திச் செயித்திட வேணுமென்று
ஆறுமுகக் கோட்டை வந்திறங்கி
அடித்தார்கள் தம்பூரு பீரங்கிச் சப்தம்
பாரினில் நவாபுதுரைக் குதவியாய்
பாரரசன் கும்பினி பாளையம் வாரசேதி
பேரில் பெரிய இராம ஞதபுரம்
பிரபல ராணிக்குத் தான்தெரிந்து
காரியக் காரர் பிள்ளைமக்கள்
கருத்துள்ள சேருவை வீரர்களை
வீரிய மாக வரவழைத்து
விளம்புவாள் ராணி மகராசி
மன்னன் இறந்ததி ஞலே யல்லோ
மாத்தான் படையெடுத் தெதிர்த்துவந்தான்
இந்நிலந் தன்னில் அவனை வெல்ல
எதிர்க்கும் பேர்களைக் கொல்லு மென்ருள்
பிள்ளைமகன் முத்திருளப் பேந்திரன்
பிரதானி யாஞல் செயிப்பா ரென்ருர்
சள்ளை யில்லாமல் வரவழைத்து அவர்கையில்
சாத்திஞள் முத்திரை மோதிரத்தை
பிரதானி முத்திரை பெற்றுக் கொண்டு
பிள்ளைமகன் வந்து சதிர்பெருக்கி
வரத ஞும்படை பாளையக் காரர்க்கு
உறுதி கிளார்க்கு அனுப்பிவைத்து
கோதண்ட ராமர் கோவில் சென்று
கும்பிட்டு விழுந்து வருதி கேழ்க்க
தீதண்டாது வெற்றி கொள்வாயென்று
தட்சிண கெவுளி செப்பிடவே
கர்த்தன் வருதியும் பெற்றுக் கொண்டு
காரியக் காரரைத் தானழைத்து

சித்தன் மகிழ்ந்து தளகர்த் தர்களை
சீக்கிரம் பாளையந் திரட்டு மென்றார்
இளார்க்கைக் கண்டதே பாளையக் காரர்கள்
கெடிமுரசு விருது ஆயுதமுடன்
பிள்ளை மகனையுந் வந்துகண்டோண
பேரிகைச சத்த முழக்கஞ் செய்து
தெள்ளிமை யாக யானை பரிசேனை
திரண்டு நாற்பதி னாயிரம்பேர்
படைதி ரண்டது என்று சொல்லி
பிரதாணிக் கறிக்கைகள் செய்திடவே
கச்சை முதலான திறுக்கிக் கட்டிக்
கையினி லாயுதந் தானெடுத்து
கெச்சித மாகவே ராணி பதங்கீழ்ப்
பணிந்து வருதிபெற்றுக் கொண்டு
உச்சித மாகவே ஆனைமே லம்பாரி
உயர ஏறியே பிள்ளைமகன்
பாளையக் காரரை பார்த்த தொரு வருதி
பார்த்திபன் பிள்ளைமகன் சொல்லுகிறான்
கோழை மனசு நவாப்புதுரை கூடக்
கும்பினிப் பாளையஞ் சேர்ந்ததினால்
வந்த வழிபார்த் தோடும் படிக்கு
மாட்டிடவே மனதில் ரோசம் வைத்து
சிந்தை கலங்காம லுயிரைப் பாசி
திரணமாய் எண்ணி நடவு மென்றார்
பாளையத்தில் தம்பூரு பேரிகைச் சத்தம்
பாருல கெங்குங் கிடுகிடென
நாளைப் பொழுதைக்குள் நவாப்புபடையை
நாமே விரட்டி விடுவோ மென்று
சேது படைகள் எழும்பிடவே
செகமெங்குங் கிடுகிடென் றதிர்ந்திடவே
வாது கூறிப்படை கொக்கரித்து
வடக்கு முகமாக நடந்துவந்து
ஆறுமுகக் கோட்டைத் தென்புறத்தில்
அடித்தார்க ளநேகம் கூடாரம்
வீரு வீரென்று பீரங்கிச் சப்தம்
வெகுதுடி யாகக் கேட்டிடவே
கோட்டையின் மேலேறிப் பார்க்கலுற் றன்படை
கூட்டத்தை நவாபு துரையுங் கண்டு
சேட்டை செய்யுந் தாமோ தரம்பிள்ளை
செத்தானென் றிளப்பமாய் எண்ணிவிட்டோம்
நாட்டுப் படைகளைத் திரட்டிக்கொண்டு
நம்முடன் சரியாய் எதிர்த்ததினால்

தாட்டீகன் முத்திருளப் பிள்ளை
தாமோ தரனுக்கிவ னதிகமென்றே
போட்டிசெய் தவனோ டெதிர்க்கலாகாது
பின்னாலே பார்த்துக் கொள்வோமென்று
மாட்டியன் நீலன் பிரட்டன் துரை
மாரிடம் நவாபுதுரை யோசனை செய்து
சேது பதிவாசல் பிரதானி தீரன்
முத்திருளப் பேந்திரனிடம்
தூதா னனுப்பியுங்கள் தேசத்தில் நாம்
செல்லாமல் விலகிக் கொள்ளுகிறோம்
என்று நவாபுதுரை சொல்லி யனுப்பியே
யேகப் படையைத் திருப்பிக் கொண்டு
இன்றுநாம் மறவன் மங்கலத்தில் சென்று
படையிறங்கு மென்று வருதிசொன்னார்
கூடாரம் பிடுங்கித் தம்பூ றடித்து
கூவென்று படையெழும் பிடவே
காடாளன் முத்திருளப் பேந்திரன்
சதிசெய்வா னென்றங்கு காத்திருந்தான்
பட்டாள மும்படை சோல்சர்களும்
பார்த்திபன் வெள்ளைக் காரர்களும்
மட்டடங் காமலே கோபங் கொண்டு
மறவன் மங்கலத்தில் வந்திறங்கினவாம்
இப்படிப் பாளையம் வந்திறங்க
இனிமேல் சிவகங்கைச் சேதி சொல்வேன்
தப்பித மில்லாத முத்துவடுக நாதேந்திரன்
தளவாய் மருதிருவரைத் தானழைத்து
காளையார் கோவில் காட்டினி லேநாம்
கனமான புல்வாய் வேட்டை யாடவேணும்
பாளையக் காரரை வேட்டைக் காரரைப்
பண்புடன் சீக்கிரந் தருவி யென்றார்
வேட்டைக் கேத்த ஆயுதம் படைதிரட்டி
வெகுகச்சித மாகப் புறப்படுகையில்
வேட்டையின் வேடிக்கை பார்க்கவென்று
வேலிரு ராணிகள் வார மென்றார்
அப்படியே வாரு மென்று சொல்லி
அழகு தண்டியல் மீதேற்றி
செப்ப முடன்துரை ஆனையின் மேலேற
தீரன் மருதிருவர் பரிமே லேறிவர
ஈட்டி சமுதாடு வேலலகு
யெரியீட்டி கண்டு வில்லுவள தாடிகளும்
தாட்டீக மாகப் படைதிரண்டு
சமுத்திரஞ் சூழ்ந்தாப்போல் வருகையிலே

கொல்லங் குடிதன்னில் பெரிய ராணி
குணமுட னங்கே இருந்து கொண்டாள்
வல்லப மாக இளைய ராணிமகா
ராசாவுங் காளையார் கோவில் வந்தார்
சின்ன மருது பெரிய மருது
சேர்ந்தபடை வேட்டைக் காரரெல்லாம்
திண்ணமுடன் நாளைக் காட்டினில் வேட்டை
சென்றிட வேணுமென் றெண்ணினார்கள்
அந்தச் சமயத்தில் மங்கலத்தி லிருந்து
ஆளொருத்தன் மருதிடத்தில் வந்து
விந்தை யாக நவாபு பட்டாளம்
விளங்கும் வெள்ளைக்காரர் சோல்சருடன்
காளையார் கோவில் கொள்ளை விட்டு
கனத்த சிவகங்கை கொடிப்போட வென்று
நாளைக்குப் பாளையம் வருகு தென்று
நம்பிக்கை யாகவே வந்து சொன்னான்
சொன்ன வுடனே மருதிருவர்
துடிதுடித்துத் துரையிடம் வந்து சொல்வார்
சென்னைநகர் நவாப்பு துரையும்
சேர்ந்து வெள்ளைக்காரர் சோல்சர்களும்
நம்முட சீமைமேல் நவாபு பாளையம்
நடத்தி யேவந்தி ருப்பதனால்
சும்மா யிருந்திட லாகா தென்றுதுரை
ராணியைக் கோவில் கோட்டை சேர்த்து
பாளையக் காரர்க்குக் கிளார்க்கை
பார்த்திபன் மருதிருவர் ஓட விட்டு
காளையார் கோவிலித் துரைக்கும் ராணிக்கும்
காவலாய் இரண்டா யிரம்சனம் நிறுத்தி
தன்னுட பன்னீ ராயிரம் சனமும்
தளகர்த்த சேருவை நாய்க்க மாரும்
மண்ணுடன் விண்ணு மதிர்ந்திடவே
மட்டத்தி லேறி யிருமருதும்
காட்டை யடுத்து வெகுதளத்தைக்
கரையோர மாக நடத்திக் கொண்டு
ஈட்டி சமுதாடு வல்லயம் நேரிஷம்
யெரியீட்டி சுண்டுவில் லுண்டையினால்
பாளையத்தைக் கிட்டி நெருக்கிடவே
பார்த்து நவாப்பு பாளையத்தார்
வேளை யறிந்து பீரங்கிக் குண்டை
விருவிரென்று யேவி விட்டார்
பீரங்கிக் குண்டு பரிந்திடவே
புரண்டு உருண்டார்க ளாயிரம்பேர்

தீரன் மருது இருவர் கண்டு
சீறியே வளரி எறிந்திடவே
நீலன் துரையுந் தலையறுந்து நேரே
நின்ற சோல்சர்கள் பாடாச்சு
காலனைப் போலவே கர்நாடகப்படை
கைமிஞ்சி ஈட்டியால் குத்திடவே
மாட்டியன் பிரட்ட னிருபேரும்
மருதிருவ ரேவந்து எதிர்த்ததினால்
ஈட்டியால் நம்ம பாளையத்தைக் குத்தி
இறக்கடிப் பான்கள் தப்பாது
கள்ள வழியாக நாங்கள் சென்று
காளையார் கோவில் கொடிபோட்டு
உள்ளே யிருக்கிற துரைமகனை
ஒருமித் தங்கே பிடித்திடுவோம்
வெள்ளை மருதங்கே வாராமல்
விடிய மட்டுக்கும் போராடு மென்று
தெள்ளிமை யாக மாட்டியன் துரைதீரன்
பட்டாளம் இரண்டு சேர்த்துக்கொண்டு
காளையார் கோவில் சென்றேகிக்
கல்மதி லேறியே ஏணி வைத்து
துப்பாக்கி வார்பண்ணிச் சுட்டிடவே
தூங்கின துரையும் ராணியுந்தான்
இப்ப வெடிச்சத்த மேதெனவே
இருபேருங் கைகோர்த்து வெளியில் வந்தார்
கண்டந்த சிப்பாயி சுட்டிடவே
கர்த்தனும் ராணியும் பட்டிடவே
அண்டி நின்றபடை தா மறிந்து
அரசனும் ராணியும் பட்டா ரென்று
மாட்டியன் துரையதை யறிந்து
மண்டியே காளைநகர் கொடிபோட்டு
தாட்டீக ரிருவரும் செத்தா ரென்று
தளவா யிருவரும் தாமறிந்து
கையில் வளரியைத் தானெறிந்து
கன்னத்தி லறைந்து அழுதலறி
வையகத் திலினிச் சண்டை யென்ன
வந்தபடை எல்லாம் போங்க ளென்று
அண்ணனுந் தம்பியும் இருபேரும்
அரசனைக் கொடுத்தினி என்ன செய்வோம்
கன்னி ராணி கொல்லங் குடியில்
கணவனை யிழந்தவளுக் கென்ன செய்வோம்
கொல்லங் குடிக்கு இருபேரும் வந்து
ராணியைக் கூப்பிட்டு துரைசேதி சொல்லிடவே

வல்லவனுந் தங்கையும் போனதி னாலினி
மாண்டிடு வேனென் றழுதாள்
நல்ல திருக்கட்டுந் தாயே யினிநாங்கள்
இரண்டு பிள்ளை தானிருக்கோம்
ஒண்டியாய் நீங்க ளிருக்க வேண்டாம்
உங்களால் சீமையையுந் திருப்புகிறோம்
தண்டிகை தன்னி லேறு மென்று
இருபேருந் தானே சுமந்தெடுத்துக் கொண்டு
அவ்வழி யாகவே தானடந்து
இரவு விடியமுன் மேலூர் சென்றார்
அவ்வூரி லிறங்கி யிருக்கையிலே
அவ்வூ ரவர்கள் வந்து கண்டுகொண்டு
தங்களால் கூடிய உதவி செய்து
தண்டிகை சுமக்கவும் ஆள்கொடுத்து
திங்களில் ஓராறில் சீமை
செயித்து கைவச மாகு மென்றார்
ஆற்றங் கரையினில் ஓர்கரைப் பாதை
அன்புடன் சுல்த்தான் சாயபு சீமையிலே
பார்த்தங்கே நல்ல தாவளம் நீர்வளம்
பண்பான மேட்டுப் பட்டியிலே
மடமொன் றதிலே இருந்ததினால்
வந்திறங்கி விடுதி செய்தார்
திடமெனுந் திண்டுக்கல்லரசன்
தீரன் திப்புசுல்தான் சாயபு இடத்தில்
ஆசராய் எப்போதும் காத்திருக்கும்
அரிக்கார அண்ணவையன் அங்கேவந்து
வேசரு யிங்கே விடுதி செய்யும்
வீரர் இவர்க ளாரெனவே
நேசமதா யரிக்காரன் வந்து
நின்று ஆசீர்வாதம் செய்யலுற்றார்
வாசமாய் வந்த அரிக்கார வய்யனை
வணங்கி யங்கே இருக்கச் சொன்னார்
ஆரய்யா நீரென்று மருதிருவர் கேட்க
அரிக்கார அண்ண வையனென்றார்
தூர யிருந்து வந்ததுவும்
துரைராணி இருந்ததுஞ் செப்பலுற்றார்
இந்தச் சமாசாரந் தானறிந்து
யேகியே திப்புசுல்த் தானிடம் செப்பிடவே
வந்த வரிக்கார வண்ண வைய்யன்சொல்ல
மன்னனுஞ் சந்தோஷ மாகவேதான்
மாச மொன்றுக் கிறுநூறு பொன்படி
வாங்கிக் கொடுத்து வருவா யென்றார்

நேசம தாக மாசமிரு நூறுபொன்
நேமுக மாகவே கொடுத்து வந்தார்
அப்படி யாக அனுப்பும் பணத்தை
அவர்வாங்கி செலவு செய்திருந்தார்
இப்படி யாக இருக்கையி லேவொரு
இயல்பு வந்ததைச் சொல்லுகிறேன்
வத்தல குண்டு சீமையிலே
வாழைக் கரும்பை வேங்கை யழிக்குதென்று
கர்த்தன் திப்புசுல்த் தானிடத்தில்
காரியக் காரர்வந் தறிக்கை செய்ய
அரிக்கார அண்ணா வைய்யனைப் பார்த்து
அதிவீர ரிருவரை யழையு மென்றார்
பரிதனி லேறியே அண்ணா வைய்யன்
பார்த்திபன் மருதிரு வரிடம் வந்து
வேங்கை புலிபன்றி தனைவதைக்க
வீருடன் இராச னழைத்தா ரென்றார்
பாங்குடன் இராணி தனைப்பணிந்து
பார்த்திப னிருவரும் வருதி பெற்று
கச்சை யிறுக்கிச் சல்லடந் தொட்டுந்
காலில் துரும்புவார்ச் செருப்பணிந்து
அச்சமில் லாமலே ஆயுதங்கள்
அவரவர்க் கிசைந்தபடி தானெடுத்து
உச்சித மாக வெளியேறி
ஓடியே வத்தல் குண்டடுத்து
கெச்சித மாகவே காடடுத்து
கேள்புலி போலவே வேங்கை கண்டு
ஆளை யடித்துப் பயிரை யழித்து
அகோர மாக வருவதுவை
வெளியில் குத்தி வாயைக் கிழித்து
விழுத்தாட்டி வால்நுனி தானறுத்து
கொக்கரித்து மிகுசத்த மிட்டுகுலவை யிட்டு
கொள்ளை மிருகங்கள் தமைவதைத்து
அக்கரை யாக மருதி ருவரும்
அரசன் திப்புசுல்த்தான் சமூகம்
வாராரென் றரிக்காரன் ஓடி வந்து
மன்ன னிடத்தில் செப்பிடவே
தாராள மாகவே மருதிரு வருக்கும்
தகுந்த வரிசைக ளெடுத்துக் கொண்டு
நாகலா புரஞ்சதிர் மண்டபத்தில்
இராசனுங் கொலுவாக வீற்றிருந்தார்
ஏக மிருக மெல்லாம் வதைத்து
இருவீரர் வருவதைப் பார்த்திருந்தோர்

இப்படிப் பூமியில் மனிதருண்டோ
இவர்தேவ ஜென்மமென்று சொல்லுகிறார்
அப்படி யாக இருக்கையிலே
அதிவீர ரிருவரும் வந்து விட்டார்
மன்னர் வருவதைக் கண்டு சுல்தான்
சாயபு மனமகிழ்ந் தெதிர்சென் றழைத்து
தன்னுடன் கூடக் குரிச்சி போட்டு
சரியிருப் பிடமாக இருக்கச் செய்து
நன்னய மாயா பரணம் வஸ்திரம்
நலமான சோடு சாலுவைகள்
திண்ணமுடன் மருதிரு வருக்கும்
திருத்தி யாக வரிசை செய்திருந்து
என்ன வுமக்கினித் தேவை யென்று
திப்பு சுல்த்தானுஞ் செப்பிடவே
மன்னன் நவாப்பை செயித்திட
வலுத்தபடை பீரங்கி வேணு மென்றார்
அப்போ தபுல்தார் சீமையதார்
ஆகை மானுபீஷ் சயிலரை யழைத்து
இப்போ துருப்புப் பன்னீ ராயிரம்
யீராறு பீரங்கி மோர்சாவும்
ஒப்புர வாகவே தயார்செய்து
வுரசு வைத்துப் புறப்படுங்க ளென்றான்
கெப்புலி மருது சொல்தவ றுமல்
கிரமஞ் செய்தவர் சொல்மீ றுமல்
சென்று நவாப்பு படையைச் செயித்து
தீரன் மருதிருவர் வருதி பெற்று
மன்றில் அவர்செய் பிரசண்டு பெற்று
வருவீர் களென்று வாரமதில்
ஆனை பரிகொடி குடைவிருது
அடங்கலுடன் கொடுத்து அனுப்ப லுற்றார்
பாளையம் ஒருமிக்க வாராத தினால்
படிச்செலவுக்கு லட்சம் பொன்கொடுத்து
தாழை மலர்சூடு ராணி மகாராசிக்குத்
தங்க நகைச்சரிகைப் பட்டுடனே
வேண்டிய சாமா னெல்லாங் கொடுத்து
வெகுதூரம் வந்து வழியனுப்ப
பாண்டிய னிருவருந் திரும்பி பாச்சாவுக்கு
நமாங்க சலாங் கொடுத்து
ஆண்டவன் கிருபையால் சீமையைப் பிடித்து
அனுப்புகிறேன் காயித மென்றுசொல்லி
வேகம தாக படைகூட்டி மருதிருவர்
மேட்டுப் பட்டி வந்து சேர்ந்தார்கள்

மேகம் போல்படை திரண்டுவரும்
விநோதத்தை இராணி மகராசி கண்டு
மன்னனும் தங்கையும் இறந்தபழி
வாங்கு வோமென்று மனமகிழ்ந்து
கன்னியர் தாதிமா ரெதிரே சென்று
காளை யிருவருக்கும் ஆலாத்தி சுத்தி
தன்னி மையாய் மருதிருவர் வந்து
தாய்ராணி பாதத்தில் நமஸ்கரிக்க
என்றும் பதினாராய் இருப்பீ ரென்று
இராணி இருவருக்குந் திருநீ றணிந்தாள்
அன்றிரவு பாளைய மங்கிருந்து
ஆதித்த னுதித்த வுடனெழுந்து
பாட்டை மார்க்கத்தில் சாலை வழியாகப்
பாளையம் வருகிற வேக மென்ன
தாட்டீக மாகவே கோச்சடை கருப்பன்
சாமி முன்பாக இரங்க லுற்றார்
கோட்டை மதுரையி லத்தயனிருந்த
கொம்பன் மல்லாரி ராயனுந்தான்
மருது இருவர்படை வாரதினால்
மதுரைக்குக் கிழக்கே விடேனென்று
சுறுசுறுப் பாகப் படைகூட்டி
சூரனைப் போல்வந் தெதிர்த்திடவே
பெரிய மருது பரிவிட் டிறங்கி
பிடித்த வளரியை யேவிடவே
மருக்கொழுந்தைக் கிள்ளி னாற்போல்
மல்லாரி ராயர்தலை துள்ளிவிழ
கூட்டி வந்த படைக ளெல்லாம்
காட்டுவழி சென்று ஓடிடவே
தாட்டீக னான மருதிருவர் படையைத்
தானைய மிறங்கி நிறுத்தி வைத்து
மீனாட்சி சன்னிதி தன்னில் வந்து
மிகுந்த அபிஷேகம் பூஜை தெரிசனைசெய்து
தானாட்சி தன்பாதந் தான்வணங்கியவள்
தாளடி நெஞ்சில் துதித்துக் கொண்டு
பாளையந் தன்னை யெழுப்பிக் கொண்டு
மருதிருவர் பாட்டை மார்க்கம் வருகையிலே
காளை மருதிருவர் படைமீறி வருகிற
கருத்தை ரங்கராயர் தானறிந்து
திருப்பு வனத்துக்குக் கிழக்கே விட்டாலிச்
செல்வரை செயிக்க முடியாது
துருப்பு மட்டத்தி லேறிப் படையுடன்
சிலையு மானில்வந் தெதிர்த்திடவே

வந்து எதிர்த்ததை இருமரு தறிந்து
வலது கைவளரி யேவிடவே
பந்து போல சிரசறுந்து
பக்கத்தில் துண்டா யுருண்டிடவே
கூட்டி வந்த படைக ளெல்லாங்
கோவென் றலறி யோடிடவே
தாட்டீக மாக மருதுப்படை
பாட்டை மார்க்க முத்தனேந்தல் வந்திடவே
நாட்டவர்க ளெல்லா மொன்று கூடி
யதேஷ்டமாய் படைவந்து கூடிடவே
காளையார் கோவில் கொடிபோட்டு
காரீச னுயிருந்த நவாபுவெள்ளைக் காரர்கள்
பாளையந் திரட்டி மருது வந்தால்
படையெழும்பி எதிர்த்திட வேணு மென்று
தன்னுடைப் பாளையம் பீரங்கி மோரீசா
தப்பாம லோர்முக மாய்த்திரண்டு
முன்னணி மானு மதுரைத் திடல்வந்து
மூர்க்கமாய் கூடாரம் அடித்திறங்கி
மேற்கு முகமாகப் பீரங்கியைத்
திருப்பி மிகமருந்து குண்டுசேர்த்து
தீர்க்கமுடன் படைவரவு பார்த்துச்
சீறி எதிர்த்தவர் நிற்கையிலே
மன்னன் மருது படைதிரண்டு வைகை
ஆற்றினில் வந்து குதித்திடவே
தன்னை யறிந்து மருதிருவர் தங்கள்
பீரங்கியை வடக்கே விட்டு
தெற்கு முகமாக மோரீ சாவில்
திருப்பிக் குண்டு மருந்து செய்திருந்தார்
ஆற்றில் குதித்த படையறிந்து
அடுத்து நவாபு பீரங்கிச் சப்தமிட்டான்
எதிர்த்து எதிர்த்த படையி லாயிரம்
இறந்து மடிந்தது மருதுபடை
அத்தை யறிந்து மருதிருவர் அவர்கள்
பீரங்கியில் தீயை வைத்தார்கள்
குண்டு பரிந்து படைமுறிந்து
கூடாரம் வெந்து தகர்ந்திடவே
கண்டு துரைமார்கள் ஆலோசனை செய்து
கருத்துடன் தப்பிட வேணு மென்று
கூடாரம் பீரங்கி மோரீசா
கோல்படை களைக்கூட்டிக் கொண்டு
காட்டு வழியாய்ப் புறங்காட்டிக்
காளையார் கோவில் வந்து சேர்ந்தார்

மன்னன் மருதிருவர் மட்டத்தி லேறி
வாளா வளரி எடுத்துக் கொண்டு
நிண்ண படைகளுக் குரசு சொல்லி
நேர்ந்த படையைத் திரட்டிக் கொண்டு
காடுஞ் செடியுங் கடந்து தங்கள்
காளையார் கோவிலில் வந்திறங்கி
நாடும் படைதனில் சென்றெதிர்க்க
நவாபு படைதான் முறிந்து
ஓடும் வகைக்கு வழிதேடி
ஓட்டமு நடையுமாய்ச் சென்றார்கள்
இந்தப் படியாக மருதுப்படை
ரெக்கை கட்டி யேறி கொக்கரிக்க
சிந்தை கலங்கி நவாப்புபடை
சேர்ந்தொரு முகமாய்த் திரண்டு
மூர்த்தி நாயனார் கோவில் கடந்து
மூர்க்கமாய் பாளையம் ஒன்று சேர்ந்து
பார்த்திபன் தொண்டைப் பதிசேர்ந்து
பதறாமல் பாளைய மாயிருந்தார்
கண்டு மருதிருவர் படைபீரங்கிக்
கால்தளர்ந்து போமொன்று சேர்ந்து
லண்டன் மாது ராணி யுடன்கூடி
வந்து சேர்ந்தார் காளையார் கோவிலிலே
எல்லோரு மொன்று கூடி வந்து
யானை மடுவினில் ஸ்நானம் செய்து
வல்லவன்துரை ராசா வுக்கும்
மங்கை ராணியிரு பேர்களுக்கும்
செய்ய வேண்டிய கிரிகை செய்து
சேகரமாய் மாலை யீடு கட்டி
வையக மெல்லாம் புகழ்ந்திடவே
மருது இருவரும் ராணியுமாய்ப்
பிள்ளைமார் பிரதானி ராணுவம்
பிரபலப் பாளையக் காரர்களும்
சள்ளை எல்லாந் தீர்ந்ததென்று
சாமி சோமனாதர் பொன்னி நல்லவள்
தொல்லை யகற்றிடுஞ் சொக்கலிங்கம்
மீனாட்சி சுந்த ரேசருடன்
காளையார் அம்மன் சொர்ணவல்லி
கர்த்தருக்கு அபிஷேகம் பூஜை செய்து
வேளா வேளை பூஜை நைவேத்தியம்
விருப்பமாய் நடத்தி வரும்படிக்கு
காரியக் காரர் ஸ்தானிகர்
கரணிக்கர் நிருபர்க் குத்தரவு செய்து

வீரிய மாகவே சாமி யம்மனுக்கு
விசேட வஸ்த்திரம் பட்டுச் சாத்தி
சங்கை யில்லாத படையுடனே
சாமிகள் வருதி பெற்றுக் கொண்டு
மங்களமாகவே ஆனை குதிரை
வளர்படை பீரங்கி மோர்சாவுடன்
கங்கை குலம்வளர் சிவகங்கை நகர்வந்து
கர்த்தன் ராணிமக ராசியுடன்
ஆனைமேல் அம்பாரி யேத்தி வைத்து
அழகான கோட்டை வீதி சுத்திவந்து
சேனை காவலரை நிறுத்தி ராணிநல்ல
சுபதினத்தில் சேர்ந்தா ளரண்மனையில்
தங்கள் குலத்தரசர் தன்னை யெல்லாம்
தானே வரவழைத்து மருதிருவர்
மங்கள மாகவே ராணி மகராசிக்கு
மகுடாபி ஷேகமும் சூட்டி வைத்து
சின்னத் தளவாய் மருதுக்குச்
சேர்ந்த பிரதானி மோதிரமும்
மன்னன் பெரிய மருதுக்கு தளகர்த்த
வேலை மோதிரந் தான்தரித்தார்
அட்டவணைப் பிள்ளை மார்க ளவரவர்
வேலையைப் பார்க்கச் செய்தார்
திட்டப் படுத்தியே சீமையைச் செங்கோல்
வழுவாம லரசு செய்தார்
கட்டளைத் தப்பி நடந்தவரை
கால்மாறி கைமாறி வாங்குவிப்பரால்
துட்ட சம்மாரம் சிட்ட பரிபாலனம்
துரைத்தனம் தாழ்வுகள் வாராமல்
தேவா லயம் பிரமாலயம் சத்திரம்
சேர்ந்த மடவா லயங்களில்
தாழ்வில் லாமலே பூசைநை வேத்தியம்
தானம் எக்கியம் நடந்திடவே
இராமனாத புரம்சிவ கெங்கைஇளம்
பாஞ்சாலங் குரிச்சி மூன்று பேரும்
ஓர்மன தாக நவாபு சாயபுக்குப் பகுதி
ஒருகாசுங் கொடாம லாண்டிருந்தார்
இப்படி யாக இவரரசாண் டிருந்தார்கள்
செகமெங்கும் புகழ்ந்திடவே

---

## (நவாபு சீமையை கும்பினியாரிடம் விட்டது)

சொல்படி முறிந்தோ டினதுரை மார்துரை
நவாப்பிடம் நடந்ததைச் சொல்லிப்போட்டு
மாட்டியன் பூரி இராமசாமி வெள்ளக்கரான்
மனது நொந்துபோய் இருந்து கொண்டு
தாட்டீ கமாய்க் கும்பினியார்
தானே சீமைக்கு எழுதிவிட்டு
வாட்ட மில்லாமல் துரைமார்கள்
வந்தா லோசனை செய்து கொண்டு
நாட்டை நாம்கை வசஞ்செய்து கொண்டு
நடத்தியே அடக்கிட வேணு மென்று
நவாபுதுரை சமூகந் தன்னில் வந்து
நடந்த தெல்லாஞ் சொல்லிக் காண்பிவித்து
எவராலும் முடியாது அந்த
இரண்டொன்று சீமை பகுதி வாங்க
தவருமல் எங்கள் எண்ணப்படி நடத்தித்
தாழ்வன்றித் தீர்மானம் செய்தீ ரென்றல்
உங்கள் வசமிருக்கும் உலகர சாட்சியை
ஓர்மனதாய் ஈந்தீ ரென்றல்
எங்களா லான மட்டு மெதிர்த்தாரை
வென்றுவரி வாங்கிடுவோம்
நம்பி நவாபு துரைராசனுஞ்
சம்மதித் தேது சொல்வார்
அம்புவி முழுக்க நீங்க ளடக்கியே
அரசாள வேணு மென்றல்
ஆண்டு தொண்ணூற் ருறு வருஷமும்
அரசாட்சியைச் செய்து கொள்ளு மென்றர்
வேண்டிய படிநமக்கு லட்சம்பொன் விளங்கும்
வருட மொன்றுக்குச் செல்லு மென்றர்
இந்த விதமாக நவாபுதுரை சொல்ல
ஏக மனதாகக் கும்பினியார்
தந்தார் நமக்கு அரசையினித்
தாழ்வில் லாமலே செயிப்போ மென்றர்
எழுந்திருந்து துரைமார்க ளெல்லாம்
நவாபுக்கு நமாங்க சலாங்கொடுத்து
வாங்கியே சீமையைக் கும்பினியார்
மனமகிழ்ந்து ஆலோசனை செய்வார்
ஈங்கினி நடந்த சேதியைச் சீமைக்கு
எழுதினர் தபால்கா யிதத்தில்
அங்கே துரைகள் ஈதறிந்து
ஆலோசனை செய்து எழுதி விட்டார்

புறப்பட்டார் சோங்கில் துரைகளெல் லாம்
பின்புடனே வந்தார் சென்னைநகர்
துரைக ளெல்லாம் ஒன்று சேர்ந்து
தொண்ணூற் றுறு வருஷம்நம் பூமியென்று
கவர்மெண் டென்று உங்கள் பித்தே
கவுனரே அதிகாரம் பார்ப்ப தென்று
ரெவினியும் போரட்டு (கோர்ட்) நியமித்தார்
நியாயம் விசாரணை கர்த்தரென்றும்
சதிரக் கோர்ட்டார் என்றும்
சமைத்தா ரதுக்கது வாதரவாய்
கெவுன ருடவருதிக் கீழ்ரெவினியும்
கெவுன ருக்குமேல் சதிர்வரும்
தவருமல் சதிர்வருந் தானடக்கும்
அதிகார மென்றூர்
திட்டமுடன் இப்படிக்குச் செய்து
சென்னப் பட்டினம் ஒருகோறு? என்றூர்
அட்டான தேசம் பம்பாயி கொளும்பு
வங்காளமும் மூன்று கோறு என்றூர்
கோர்நாலு என்று குறிப்பிட்டார் அதிலக்
கோரிய பேர்கள் சீருடனே
கோரினூர் கோரதுக்குள்
குறிப்பிட்டார் சில்லா வதிகாரம்
மேலும் அதின்கீழாய் விசாரணைகள்
விளங்கிய தாலூகா வகுத்திட்டார்
தாலூகா வகுத்து மேசத் திரட்டுத் (மேஜிஸ்டேட்)
தனிமேசத் திரட்டுந் தானுக்கி
மேலப்பீயல் நடத்த வாதி பிரதி
வாதி விதித்தார் அவர்க்கதி காரம்
ரெவினியும் போலிசு ரெண்டையும்
சில்லா கலெக்ட ரதிகாரம்
கவன முடன்சில்லா கலெக்ட்ட ரதிகாரம்
கர்த்த னதிகாரத் துக்குமேல்
புகழ்சட்சிச் சிவில்போலீசு
புத்தி யாலோசனை சபையாச்சு
இகழா மலேநடத்த விரண்டதி
காரமும் தானளித்தார்
மூடர்கொலை களவு முரட்டடி
பிடிமூர்க்க மாய்ருசு ஒப்பிவிக்க
தேடி மூபுத்தி லுதிரமீனவரை
தெரிந்ததி காரம்தான் கொடுத்தார்
வைத்தே கொடுக்கல் வாங்கல்
வழக்கு நியாயம் அறிவதற்கு

மொத்த முனிசுபு முடித்தார் தாலூகாவுக்
கொன்று மூர்க்கமுட னதிகாரம்
அண்டி யிவர்முடிவுக் கப்பீயல்
அதிகாரமே முடிவு செய்ய
பண்டிதர்க் கோர்ட்டொன்று சில்லா வுக்கொரு
பாப்பர் வழக்கும் வாங்க வைத்தார்
சில்லா சட்சியுட தீர்மானம்
தெரிந்து அப்பீயல் செய்ய வென்றால்
சல்லாப மாக சதிர்க்கோர்ட் டப்பீயல்
தானேயதில் முடிவு வென்றார்
திருந்த கலெக்டர் தீர்மானத்தை
ஸ்திர மென்றுங் கொள்ளாதார்
பொருந்தும் ரெவினியும் கோர்ட்டுப்
போய்வர தீர்மானம் பெற்றுக் கொள்வார்
யேசி யவர்செய்த தீர்மானத்தை
எண்ணுதார் கெவுனரிடம் பெறுவீர்
தாகம் தாய்க்கோர் நாலுக் குச்சபை
நியமித்தார் கும்பினியார்
கொலைகளவு வஞ்சனை பொய்கள் காமம்
குறியாதா ரெப்போதும்
தவமும் பொருளும் நீங்கார்கள்
எப்போதும் சதிர்வேதனை யடைவார்கள்
உடையா ரவர்மேனி ஊனுறக் கமுங்குலைந்
தலைந்து உண்பது நரக மென்பார்
தடையன்றித் தண்ணியி லேத்திப்பின்
தன்னுடைய தேசம் வரமாட்டார்
களவு கொலைபொய் மோசஞ் செய்த
கசடர்க்கு நடக்குந் தண்டனைகள்
கொலைக்குக் கொலை நடப்பி விச்சு
கொடுங்களவுக்கு வம்படி விலங்கு முண்டு
எரிகுளங் காலு எகும் வழிச்சாலை
எரியிடு தீமிகுந்த குற்றமென்று
மீறி விதித்த ஆக்கினைகள்
விதித்த படிக்கு நடக்கு மென்றார்
சாதித்துத் திட்டம் தனக்கதுக்குள்
பிரிவுத் தப்பாமல் பார்த்ததை யுணர்ந்து
ஆதி முதல்சட்ட திட்டங்களை
அன்பாகப் பார்த்ததி காரஞ் செய்ய
கோர்நாலு வேந்தர்கள் தங்களுக்கு
கொடுத்தங்கே அவரவர்க் கனுப்பலுற்றார்
பாரில் கவுனர்கள் நாலு பேரு
பண்புடன் வருதிகள் பெற்றுக் கொண்டு

அங்கங்கே சென்று அடைவுடன் தங்கள்
அதிகா ரத்தைச் செலுத்த லுற்ருர்
சங்கை தவருமல் தானடத்தித்
தர்மந் தவருமல் நீதியுடன்
கட்டாக தேசத்தைக் கண்டு பிடித்துக்
கைவசம் செய்யவே வேணுமென்று
பட்டாள மென்றுப் படையேற் படுத்தி
பண்புன புல்தார் சீமையதார்
கட்டினுர் பட்டாளங் கண்டு கொள்ள
கண்கொள்ளாச் சேனை தளம்பெருக்கி
சட்சி கலெக்டர் தனிமேசத்
திரட்டார் ஜோர்ட்டா லோசனேக்கு
பரீட்சை சதிர்மீறும் பண்டிதர்
முனிசுபு கோர்ட்டுகளும்
குறித்தபடி அவரவர் சில்லாவுக்குக்
கோரிய படியே நடந்தார்கள்
தக்கப் பட்டாளம் சிப்பாயி சோஷர் (சோல்சர்)
அவுல்தார் கலெக்டருடன் நடந்தார்
மிக்க புகழ்தென் தேசத்துக்கு
இராமஞ தபுரம் சில்லா வுக்கு
மாட்டியனைப் பார்த்து நீசெல் என்றிட
மாட்டியனுங் கெம்பீ ரமதாய்
தாட்டீக மான மருதுவழி யின்று
தப்பாமல் வந்ததுகாண் என்றெண்ணி
சேகரித்தார் மூன்று துரைமாரும்
தீரர்கள் சோல்சர்கள் மாஞ பீட்டருடன்
சேகர மாய்க்கூட்டிச் சென்னை நகர்விட்டு
சேது ராமஞத புரம்நோக்கி
மாட்டியன்துரை கர்னலுஞ் சேது முகவை
பங்களா வந்து இறங்கினராம்
தாட்டீக சேது திருண வல்லி
சமஸ்த்தானம் வணங்கிப் பகுதி தந்தார்
மேட்டிமை யாய்ச்சிவ கங்கைநகர்
விளங்கும் பாஞ்சாலங் குரிச்சி ரெண்டும்
வாஞ்சை யுடன்வந்து வணங்காமல்
மாச்சீமை யாகவே தானிருந்தார்
பாஞ்சைப் பதியும் சிவகங்கையும் தவிர
பாரெல்லாம் வந்து பணிந்தார்கள்
தென்தேசம் சீமை மன்னரெல்லாம்
சென்னையில் கெவுனர் பேட்டி செய்துவந்தார்
வன்கண்மை யாகச் சிவகங்கை மருது
வளர்பாஞ் சாலங் கட்ட பொம்மு

என்செய் தாரின்னம் அவர்களுக்கு
கலெக்டரேன் அறிவிக்க வில்லை என்று
கெவுனர் காயிதம் வந்திடவே
கெருவிதமாய்க் கர்னல் மாட்டியரும்
மவுன மில்லாமல் காயிதத்தை
மருது கட்டபொம்முக் கனுப்பி விட்டார்
மனத்திட மாயத்தை வாங்கிக் கொண்டு
வாசிக்க மருதிருவர் கேட்டு
தனதட் டவணைப் பிள்ளைமார் பிரதானி
தாங்களே யோசனை செய்து கொண்டு
வம்புதனை மனத்தில் நினையாமல்
மாட்டியன் கர்னலைப் பேட்டி செய்து
தென்புடன் கெவுனர் பேட்டி காணலாம்
தீரனைக் காண்பதே நல்ல தென்றார்
என்ற வுரைகேட்டு மருதிருவரும்
எழுந்து மாட்டியன் பேட்டி செய்ய
சென்றார்கள் வெள்ளிக் கிழமையிலே சேது
சேர்ந்துமே பேட்டிகள் செய்ய லுற்றார்
வாரும் இருமென்று மாட்டியன் துரையுட
கருத்துப் படியங்கே காத்திருந்து
காரியக் காரர் இருவரும் துரைக்குக்
கழுத்தில் முத்தாரம் பவளம் போடலுற்றார்
நவமணி தான்பதித் தாற்றினசரம்
கழுத்தில் தாங்கியே மாட்டியனும்
அவமில் லாமலே சென்னை நகர்சென்று
அத்தன் கெவுனரைப் பேட்டி செய்து
சமயத்தி லெங்களுக்கு நீங்கள்
சகாய மாகவே இருந்தாக்கால்
எமனும் எப்போதும் உங்களிடத்தில்
எட்டிப் பாராது போய்வாரு மென்றார்
சென்றார் பலவிருதுடனே
செயசிங்க மெனுஞ்சிவ கெங்கைநகர்
அன்று மகராசி ராணி யருள்பெற்று
அன்புடன் கெவுனர் பேட்டி செய்ய
பதினாயிரம் பேரைப் பார்த்தெடுத்து
படைகுஞ்சங் குடைசுருட் டியுடன்
கதியும் வலுவும் உள்ள காவலர்கள்
கைகளில் ஆயுதந் தானெடுத்து
அசுவமதைத் துலக்கி மருதிருவர் அநேக
ஆயுத மெடுத்து அண்ணனுந் தம்பியும்
பிசகாமல் பாதை வழிகாட்டி
புறப்பட்டார் விருதனேகஞ் சேனையுடன்

நாடு நகரை விட்டு நடந்திட்டார்
சென்னைநகர் நோக்கி காடு மலையுங் கடந்திட்டார்
காவேரி ஆற்றையும் தாண்டி விட்டார்
உத்தமன் மருதிருவர் தஞ்சை நகரில்
ஒருமித்துக் கூடாரந் தானடித்தார்
சுற்றியே சீமை சிறப்பைக் கண்டு
துழாவியிதைப் பின்னாலே சேர்ப்போ மென்று
தஞ்சை நகரமுந் தான்கடந்தார்
தானே சென்னைநகர் சேர்ந்தார்
அஞ்ச லென்றே கூடாரந் தானடித்தார்
அநேகம் பீரங்கி முழக்கஞ் செய்தார்
பீரங்கிச் சத்தம் பெருநாச் சத்த மெழும்பிட
பெருங்கடல் நீருங் கலங்கிடவே
ஆரிந்தப் பீரங்கிச் சத்த மென்று
அறிந்து வரச்சொன்னார் கவுனர்துரை
சிவகங்கை மாநகரம் ஆளும்திரு
மருது இராசர் இரண்டு பேரும்
நவபத்து டங்கா நகரு பீரங்கி
நல்ல தம்பூரு முழக்க மென்றார்
பேட்டி செய்ய இருமருதும்
பிரபல மாக வாரா (வருகிறு) ரென்றார்
வேட்டெழுப்பி வாரரென்று தூதர்
வேகமாய் வந்து சொல்லிடவே
போவாய் ரவுனியும் (?) போர்ட்டார்
சதிர்க்கோர்ட் டாரா லோசனையானை
மேவி இங்கே யழையு மென்று
விட்டா ருதவியா லழைத்தார்
பட்டாளஞ் சோமர் படையுடன்
பார்த்திபரை யங்கே யணிவகுத்து
விட்டார் வகைவகை யாயங்கே
வெடிகள் துப்பாக்கி பீரங்கியை
இருவேட்டின் சத்தம் பரிந்திடவே பூமி
எங்குங் கிடுகிடென் றதிர்ந்திடவே
மருது துரைசனமும் பட்டாளமும்
புல்தார் வளர்சோல்சர் சிப்பாய்களும்
சிவிகை தன்னை விட்டிறங்கி
தீரன் மருது இரண்டு பேரும்
கவுனரிட மிரண்டு மன்னருங்
கால்நடை யாய்வருஞ் சுந்தரத்தை
கண்டு மனமடக்கிக் கவுனர்கடைக்
கண்ணாலே பார்த்து மகிழ்ந்திருந்தார்

தண்டியாய் அண்ணன் தம்பி யிருவரும்
கவுனர்க்குத் தாழ்ந்து நமாங்க சலாங் கொடுத்தார்
அம்புவி யாள துரைமார்கள்
அத்தனை பேரும் குரிச்சி யதிலிருந்தார்
தம்பிக்கும் அண்ண னிருவருக்கும்
தகுந்த குரிச்சி கொடுத்திருக்கச் செய்தார்
அப்படியே துரைமார்க ளெல்லாம்
அவரவர்க் குரிச்சியில் தானிருக்க
இப்பால் கவுனர்துரை யவர்கள்
இவர்கள் பேச்சை அறிய வேணுமென்று
இருவருக்கும் புவியி லெவரும் நிகரில்லை
இவர்களை அரவணைத் திருப்ப மென்று
பருமமும் அழகும் பலமும் போலப்
பதியில் பலசாலி யாரு மில்லை
என்று கவுனர் சென்னல் துரைமார்
இங்கிலீஷில் வார்த்தைகள் பேசிக் கொண்டு
அன்று வரையில் அவர்கள் செய்த
அதிகாரத் தையினிச் சகிப்போ மென்றார்
முத்துச் சரங்கண்டி மோகனமாலை
பதக்கம் மூர்க்கமாய் இருவரும் தானெடுத்து
பார்த்திபன் கெவுனரை சதிர்க்கோர்ட்டார்
சென்னல் பார்த்திபர் கழுத்தில் தான்தரித்து
கொண்டு வந்தமான் வேங்கை பன்றிமுயல்
கொடுவண்ட கரடி குயில் மயிலை
அண்டி யவர்முன்னே வைத்தார்கள்
அதையறிந்து துரைமார் மகிழ்ந்திடவே
மன்னன் மருது இருவருக்கும்
வெகுமானம் தந்து துரைமார்க ளெல்லாம்
சென்னல் கவுனரை மேசத் திரட்டார்
சேர்ந்து பட்டண மாவுன் (பவனி) சுத்திவந்து
அங்கே வுமக்கரு காகவே கர்னல்துரை
மாட்டிய னிருக்கிறார் ஆசை யினாலே
எங்கள் துரைமா ரனுப்பிடுங் காயிதம்
எப்போது வந்தாலும் சிந்தை வைத்து
சென்று உதவி வரச்செய்து
சேர்ந்து தவறாமல் நடந்தீ ரென்றால்
என்றும் இதுபோலே வாழ்ந்திருப்பீர்
எங்க ளரசாட்சி யுள்ளளவும்
ஆள்வீரு மதுவை யுடனே யின்னம்
அநேகம் சீமையைச் சேர்த்திடுவோம்
வாழ்வீர் சவுபாக்கிய மைந்தர்
வளரு முங்களுக் கெந்நாளும்

பெற்றபிள்ளை நாங்க ளுங்களுக்கு நீங்கள்
பிதாவெங் களுக்கென்று உரைத்தார்
ஒத்திரு வருக்கு முறையு மென்றார்
உண்மை யதுவென் றெப்பினார்துரை மார்களெல்லாம்
பேதமில்லாக் கும்பினி யார்களுக்கு
பிள்ளைமார் தந்திர னிருவ ரென்றார்
மோதும்பெருஞ் சபையில் மைந்தர்க ளென்று
மொழிந்தார் கவுனர் துரைமார்க ளெல்லாம்
எழுந்து சலாங்கொடுத்து மருதிருவர்
இருந்து பிறகெழுந் திருந்தார்
தெளிந்து முகமலர்ந்து தீர்வை
பகுதிக் குத்தர வென்ன வென்றார்
கும்பினிக்கு நீங்கள் பிள்ளை யென்று
குறிப்பிட்டு நாங்க ளெண்ணினதால்
அன்புடன் நீங்கள் நடக்கு மட்டும்
ஆன பகுதிதர வேண்டா மென்றார்
சீராய் நடந்து புவிசெல்லு மென்றார்
தீரர் இருவரும் நல்ல தென்றார்
போரீரே ஊரெதிலும் வழியில்
பொல்லாங்கு செய்யாமல் போங்க ளென்றார்
வந்தார் கவுனர் வழியனுப்ப
வாசல் வரையிலே நின்று கொண்டார்
சிந்தை மகிழ்ந்து சலாம் கொடுத்து
திரும்பினார் கவுனர் கோட்டை யுள்ளே
விரும்பி இருவரும் சிவிகையின் மேலேறி
வீதி வலஞ்சுத்தி தான்பார்த்து
விடுதி வந்து சேர்ந்து மருதிருவர்
மேவலர்கள் தளகர்த்தர் சேவுகர்கள்
அடைவாகவே வஸ்திரம் சோடு சாலிவை
அநேக மாகவே தான்கொடுத்து
நன்றாய் சகலருடன் மருதிருவர்
நகரா,தம்பூர் விருது முழக்குடன்
சென்றார்கள் தஞ்சா வூரில் வந்து
சேர்ந்தங் கிரவு அதிலிருந்து
திருந்த எழுந்து தென்முகமாய்
தீரரும் படையும் வேகமதாய்
அருந்தும் ஸ்ரீரங்கந் தன்னில் வந்து
ஆதி ரங்கர் தரிசனஞ் செய்து
கும்பிட்டு விழுந்து கோவில் வலஞ்சுத்தி
கோவிந்தர் பாதம் பணிந்தெழுந்து
திரும்பிட்டு மன்ன ரிருவரும் நமக்குத்
தீங்கு ஒருநாளு மில்லை யென்று

நடந்தார் சிவகங்கை நகர்நோக்கி
நல்ல நாடெங்கும் பூமி யதிர்ந்திடவே
கடந்தார் அதுமுதலாய்
காவேரியில் ஸ்தானம் செய்தகன்றார்
வழிகூட்டித் தான்நடந்தார்
வழியிலுள்ள ஸ்த்தலந் (நதி) தீரந்தனைப் பணிந்தார்
பழிபா வங்கள் தீர்ந்திடு ராமேஸ்வரம்
பருவத வர்த்தினி பதம்பணிந்து
சேதுஸ்த் தானஞ் செய்து சிவஸ்தலம்
விட்டுணு ஸ்தலம் தெரிசித்து வந்தார்
மாது மீனாட்சி சொக்கலிங்கம்
மதுரை நகர்சென்று தெரிசித்தார்
தீதகற்றும் நாகலிங்கர் சவுந்தர நாயகி
தேவி திருத்தா ளடிபோற்றி செய்து
சேர்ந்தார் சிவகங்கை நகர்தோறும்
வீதி வலஞ்சுத்தி வருகையிலே
சந்தோஷ மாகவே மாந்த ரெல்லாம்
தங்கத்தா லரிலாத்தி யேந்திவர
திஷ்ட்டி சுத்திநின்று தாசி மங்கையர்கள்
ஜெய்மங் களமுரைத்துப் பாடிடவே
கிட்டி நெருங்கி கவுனர்துரை
இட்டமுடன் பேட்டி செய்துதுரை
மெத்த விவன்பல சாலி
இத்தலத்துக் கேத்த இராச னெனப்பார்
சித்த மகிழ்ந்து சிவத்தலம் விட்டுணுத்தலம்
செகமெங்கும் தெரிசித்து வந்தவர்கள்
மாட்டியனைக் கண்டு மயங்க வைத்து
மன்ன னுடன்சரி பேட்டி செய்து
தாட்டிமை யாயிவர் கவுனர் பேட்டியில்
சகல வரிசையும் பெற்றவர்கள்
தண்டிகை விட்டுக் கீழிறங்கி
தம்பியும் அண்ணனும் நடந்துவர
கண்ட கர்னலிக்கர் கைப்பிடித்துக்
கண்ணில் கையையும் வைத்துக் கொண்டார்
மங்கை ராணிவே லுலகு மாதை
மருதிருவர் வந்தடி பணிந்து நின்றார்
சங்கையாய் நின்ற மருதிருவரைப் பார்த்து
தாரணி யாள்வே லுலகு மாது
சிந்தையாய்க் கவுனரைப் பேட்டி செய்து
அந்தச் செப்புமெனக் கேட்க
தந்தார் வரிப்பணமும்
தாராதே என்றார் கவுனர்செனரல்

என்னவே மன்ன ரிருவர் மொழிகேட்டு
இராச மகராணி மகிழ்ந்து சொல்வாள்
உன்னுடைய கிருபையா லுந்துரை ராணி
உலக மாதர் அதிருஷ்டத் தாலே
திண்ணமாய் நின்றவர்க்குப் பகுதியைச்
சென்னல் கவுனர் தள்ளி விட்டார்
மன்னவர் பகுதி தரவேண்டாம்
மகனென் றெந்தாளும் வாழ்வா யென்றார்
என்னவே மருதிருவர் இயம்பிட
இராச மகராணி மகிழ்ந்திருந்தாள்
இப்படியாகத் தேசத்தை இராணி
இராச ரீகம் செய்யும் நாளையிலே
தப்பித மில்லாமல் மருதிருவர் புத்திரர்
தானீன்ற மைந்தர் மருமகமார்
ஒப்புரவாய்ச் சென்று காட்டு மிருகத்தை
ஒருமிக்க வேட்டை யாடி வந்தார்
சிவகங்கை அரண்மனைக் கொப்பாக
சிறுவயல் தன்னில் மருதிருவர்
நவகோள அரண்மனை ஆசாரம்
நல்ல சிறுவர்புரிப் பட்டணமாய்
மைந்தர் மக்கள் மருகன் இளைஞரோடு
வாழ்ந்து உள்ளம் மகிழ்ந்திருந்தார்
சந்தோஷ மாகவே இராச ரீகத்துக்கு
சக்கந்தி வெங்கண பெரியுடை யாரை
சிந்தை மகிழ்ந்தவர் பட்டங் கட்டி
சீமை உத்திரவும் பெற்றிருந்தார்
படமாத்தூர்க் கெவுரீ வல்லவர்
பட்டந் தனக்குப் பாத்தியம் என்றுவந்தார்
அடமாகச் செய்த மகராசி ராணியை
அடிவணங்கிக் கெவுரி கேட்டிடவே
மங்கையருங் கர்னல் மாட்டியனும்
மன்னர் கெவுனர் செனரல் வறுதிப்படி
சுங்கமுடிக்கி நாமந் தாழ்வு செய்யத்
தகாது தப்பாமல் எப்போதும் போல்
அஞ்சாமல் இப்போது ஆண்டால் படமாத்தூர்
ஆண்டிருங் கொஞ்ச வேளையிலே
வஞ்சமன்றிப் பட்டம் மாறுமல் கதறுவோம்
வம்புசெய்யாமல் படமாத்தூ ராளுவோ மென்றார்
ஒன்றும் பேசாமல் ஒய்யத் தேவர்பேரன்
உனக்கேற்குமோ இராச தருமமென்றார்
கண்டு சமாலி கருத்தி லுற்றுக்
காளையார் கோவிலில் காவல் வைத்தார்

இப்படி ஓராண்டு இருக்கையிலே
இதுசேதி ராச ராணி யறிந்து
செப்பமுடன் திருவுளத்துக் கேற்காது
செய்த காவலை விலகிக் கூட்டிவந்து
பாவம் நினையாமல் படமாத்தூர்
பாளையத்தை ஆண்டிருப் பாயென்றார்
ஆவலாய் இராணியும் செப்பிடவே
அரசனும் படமாத்தூர் ஆண்டிருந்தார்
பின்னுமோ ராண்டு பலமாய்க் கழித்தபின்
பிரபலன் சமாலி யேது செய்தான்
மன்னன் ஒய்யத் தேவன் பேரன்
மாளாமல் பூமியில் தானிருந்தால்
மெய்யாக நம்மையிப் பூமியிலே
மேலாட ஒட்டா னென்றே நினைந்து
மைத்துனன் சங்கிலி பூபன்
மன்னனுட சேர்ந்தசில ராணுவத்தை
சித்தமுட னென்னுட சேனை யேழாயிரந்
திரண்ட படையைக் கூட்டிக் கொண்டு
மன்ன கெவுரியுட காட்டில் வேட்டைக்கு
வாரு வலைக்கட்ட வந்தோ மென்று
திண்ண முடன்பட மாத்தூர் சென்று
தீரனைக் காவலாய்க் காரு மென்று
ஆண்ட வனமருது அறிந்திடாமல்
அப்பால் கெவுரி ஒழிந்திடாமல்
வேண்டி நமக்காய் நீங்கள் சென்று
வீரனை பத்திரம் காரு மென்றார்
ஆயிரம் வாலா ஈட்டி சமுதாடு
அநேக ஆயுதக் கூட்டமதாய்
நாயி லொருநூறு துப்பாக்கி அஞ்னூறு
நல்லவெடி வல்லையங்கள் ஆயிரமாம்
இரண்டாயிரஞ் சனமும் திரண்டு ஏகப்
பெரும்படை கூட்ட மதாய்வர
கண்டார் கெவுரி வல்லதுரை
கலக்கமிட் டுவெகு யோசனையாய்
வண்டன் சமாலி நம்மை வதைக்க
என்று படையை ஏவி விட்டார்
கொண்டார் மனதி லதுபோலக்
குறித்தவன் செய்யும் சயிக்கினையை (?)
அந்நேரங் கெவுரி அறிந்து கொண்டு
அவர்களுக்குச் சமையல் அமைத்து வைத்து
வேட்டைக்குச் சென்று முயல்புள்வாய்
விரைவாய் பிடித்து வாரமென்று

காட்டை நோக்கி நடக்கையிலே
கடும்பரி கொண்டுவரச் சொல்லி விட்டார்
அந்நேரம் பரியின் மீதி லேறி
அரசனுங் காட்டி னூடே சென்றார்
வின்னப் படுத்த வந்தபடை காணாமல்
விரைவாய்த் தேடியே போக லுற்றார்
மன்னன் சமாலி இதையறிந்து
வந்த வழிநோக்கிப் போகலுற்றார்
அன்று பயமடைந்து கெவுரி
ஆற்றோரப் பாதையாய்த் தானடந்து
சென்று பொழு (ரு) தும் சண்டையிலே
சென்றார் உள் துடிக் காட்டுக் குள்ளே
தீரமாய் நத்த தெற்குக் காட்டில்
சென்று செடியொதுக்கி வாருகட்டி
உரமாய் மற்று துரையும் மைந்தனும்
ஒளியி லிருந்தார் வெடிவாரு பண்ணி
அவ்வொளி தன்னில் கெவுரி வல்லவர்
வந்தகப் பட்டுக் கொண்டார் மான்போலே
வேவுக் குடைக்காத் துடையார்
பிடித் துருட்ட நினைக்கு மந்நேரம்
மருது துரையறிந்து நிறுத்தி வைக்கும்படி
சொல்லித் தன்னொளிக்கு வந்து
உறுத்தாய்க் குடைக்காத்துத் தம்பி ஒன்றுஞ்
செய்யாதே என்ற மத்தி வைத்து
தன்னொளி தன்னிலே கூட்டி வந்து
தாபத்தைத் தீர்த்து மனந்தேற்றி
என்ன புத்திதம்பி கெவுரி வல்லவா
இவ்விருளில் நீயொன்றியாய் வந்த தென்ன
வரலாமோ இப்படிக்கு வந்ததில்
மோசங்க ளாச்சு தென்றால்
தெரியாமல் வந்ததினால் இங்கே
தீங்குகள் வந்து நேர்ந்திடுமே
நில்லாதே தம்பிநீ போய்பிழைப்பாய்
நெடுந்தூரம் திருச்சுழி சேருமென்று
வெள்ளையன் பிச்சன் இருவரையும்
வெடிக்கார ரையுந் துணைகூட்டி விட்டு
பிள்ளையவன் கெவுரி
பேதமொன்றும் எண்ணிடாமல் நீங்கள்
பள்ளிமடை தன்னில் கூட்டிவிட்டு
பதிவாய் அங்கே நிறுத்தி விட்டு
வாருமென்று வருதி செய்திட
வழிகூட்டி பள்ளி மடைசேர்ந்தார்

தீர னனுப்பிய சேவுகர்கள்
தீரன் மருதியும் வந்து சேர்ந்தார்
பையவே பள்ளி மடைசேர்ந்து கெவுரி
பார்க்கும் அதிகாரிக் காள்விட்டு
செய்யுஞ் சின்னச் சாமித்தேவன்
தெரிந்து வந்து அழைத்திடவே
சிந்தை கலக்கமதை தேற்றிவர
தெளிந்து மனக்கலக்கந் தீர்ந்தவுடன்
வந்த வகையதைக் கண்டெழுதி
மகராசன் சேதுபதிக் காளனுப்ப
சித்தர் புகழ்முத்து இராமலிங்கச்
சேது பதிமக ராசனுந்தான்
முத்திரை யுடைத்து ஓலையை வாசித்து
மூர்க்கமுடன் சேதுபதி கேட்டு
மோசம் மருது முடித்தானே
தேசத்தைக் கைவசஞ் சேர்த்தானே
வாசம் புகழ்இராம னுதர்கிருபையாய்
வந்து சேர்ந்தானே கெவுரியுந்தான்
இந்தச் சண்முகவை நகர்நோக்கி
எச்சரிக்கை யாய்வந்து சேருமென்று
வந்து சேர்ந்தால் சுகமெனவே
வரைந்து மறுவோலை வந்திடவே
பார்த்தா ரதையவிழ்த்து
பதிசேதுக் கிப்பவே பயணமென்று
ஏகதார் பரிமிசை யேறியே
வேகமாய்ப் பரியை விட்டு
இராமநா தபுரந் தன்னிலே முத்து
இராமலிங்கச் சேதுபதி முன்னே வந்து
பூபன் கெவுரி தங்கபழப் போட்டு
பொற்பாதந் தன்னில் தெண்டனிட்டு
விருந்து கொண்டு நடந்த சேதி
எல்லாமுஞ் செப்பிடச் சேதுபதி
தெரிந்து மறுவார்த்தை செப்பிடச்
சேது பதியும் மனம்வெகுண்டு
மாற்றான் மருதை வலுக்கூட்டி
வளைந்து அவனுடன் சென்றெதிர்த்து
தோற்றோடச் செய்திட வேணுமென்று
துரைசேது பதிராச னுந்தான்
கூடாரம் பீரங்கி மோர்சாவும்
குண்டு கருமருந்து தோட்டாவும்
தேபாமல் வாளைத் திரள்பரியும்
சேகரஞ் செய்தா ரனேகம்படை

அண்டி விசவனூர் தானடைந்து அதில்
ஊடையங் கட்டாப்பு மோரீசாவும்
எண்டிசை யெங்குங் கிடுகிடெனவே
யேகியே சண்டைகள் செய்யு மென்று
நன்ருக இப்படிக்குச் சேது
ராமலிங்க ராசன் சொல்லிடவே
போவென்ருர் மன்னன் கெவுரி
போர் பொருதவே நினைவாய்
மேவும் படையுடனே கெவுரி
விரவ நூறுடையந் தன்னில் சேர்த்து
கூடாரந் தானடித்து பரியானை
கோட்டையைச் சுற்றி சலாத்தி யிட்டு
ஊடையமுங் கட்டாப்பும் எங்கும்
உருட்டு முள்ளு வாடிகளும்
பாசுபத முதலான பீரங்கிகள்
பத்திரமாய் சுத்தி லெங்கு மேத்தி
ஓசைதா வீத்துக் கெவுரி ராசன்
ஒருமாத மாய்வந்து காத்திருந்தார்
இருந்தார் ஒருமாத மங்கே மருது
எதிர்த்துச் சண்டைக்கு வராததினல்
மருது ஓலையை வாசித்துப் பார்த்து
மனவேகமுங் கோபமும் உண்டாகி
இருவரும் புதல்வருடன் வந்து
எல்லோரும் ஓர்முகமாய்க் கூட்டமிட்டு
பிள்ளைமார் அட்டவணைப் பிரதானி
சர்மாஜிதள கர்த்தர்கள் பாளையப் பட்டாரும்
எல்லாரும் ஓர்முக மாய்க்கூடி
ஏகத் தளங்களைத் தான்திரட்டி
ஆனந்த ஆண்டு ஆனி மிதுனத்தில்
ஆருந் தேதிமுதல் சண்டை யென்று
ஆனந்தூர் தன்னிலே மருதுதுரை
ஆனை படைசேனை தான்திரட்டி
ஜெயம்பெற்று மருது வாரதுக்கு
தேவி புலிக்குட்டி யம்மனெனும்
ஏகப் பெரும்படையை யெழுப்பி
எண்ணிக்கை இருபத்தே ழாயிரம்பேர்
ஆக மருதுதுரை அவர்தம்பி மைந்தன்
மருகன் மைத்துனன் அனைவோரும்
ஆனை அரைக்கடகம் அசுவம்
அதுமுந்நூ ரெட்டகை அதிர்நடந் திடவே
சேனைகள் திரண்டிட பீரங்கி யாறு
பெரிய சர்கோபி மோரீ சாவும்

இப்படி மருது சேனை ஏகமாய்த்
திரண்டு வந்து எதிர்த்து நின்றார்
செப்பமாய்க் கெவுரி வல்ல பேந்திரன்
சேர்ந்த படையைத் திரட்டிப் பார்க்க
அங்கவர் படையைக் கூட்டி
அணியணி யாக எண்ணிப் பார்க்க
எங்கு மிடங்கொள் ளாம
லெழுபத்தா யிரம்பே ரெண்ணிக்கை
மன்னன் மருதுட பாளையமும்
மகராசன் கெவுரி பாளையமும்
திண்ணமுடன் இருவர் சேனைகளும்
திரண்டு கோட்டை யாற்றில் குதித்திடவே
மருது படையுங் கெவுரி படையும்
மண்டி யொருபகல் சண்டையினால்
மருது படையில் ஐந்நூறு சனமும்
மன்னன் படையில் ஆயிர மடிந்ததுகாண்
முடிந்தார்க ளன்றிரவு முடிந்து
பின்னே கதிரவன் தோன்றிடவே
விடிந்ததின் பேரில் சமர்புரிந்து
வெகுரோஷ முடன்சண்டை செய்திடவே
அண்டி யிடும்சண்டை பகல்முழுவதும்
அடியுங் குத்தும்கொடும் வேட்டுகளால்
இரண்டா யிரம்பே ரிறந்து
இரத்தம் வெள்ளாறு யோடிடவே
சேர்ந்தா ரவரவர்கள் பேரணியில்
வந்து சேர்ந்து கொண்டார்
சேர்ந்தா ரவரவர் பேரணியில்
சேர்ந்திருந்து சூரிய னுதித்திடவே
மூன்று நாள்சண்டை யிலேவெகு
மூர்க்கமாய் ரோஷம் மனத்துடனே
காண்டா வனமெரித் தால்போல்
கனசேனைகள் மாண்டன விருவர்படை
சென்றார் பேரணியில் கோட்டையார்
தென்கரை வடகரை படைவீடாய்
இதமாய் இருவர் படையும்
இப்படியே தப்பாமல் பதினேழு நாளாய்
மிதமாகவே சண்டை செய்து
வெகுபடை மாண்டதை மருதிருவர் கண்டு
வல்லவ னாமிரு மருதுதுரை
வார மீரொன்ப தாம்நாள் சண்டையிலே
நல்லசேவுகன் முகத்தில் விசையுள்ளவ னானால்
நம்முட சேனை ஜெயிக்கு மென்றார்

நின்று பொருது மெனநிகழ்த்தி ஞரதைக்
கண்டு வெகுரோஷங் கொண்டுதளம்
சென்று ஒருமுகமாய்ச் சேர்ந்து தீரன்
கெவுரி படையை வளைந்து சுத்தி
வேலலகு கத்தி விடுசூலஞ் சக்கரம்பின்
வாலா வளரி வாணமருந்து குண்டால்
மேல்வனு வாய்க்குடைக் காத்துத் தும்பியும்
வீரன் புக்குளி வேல்முருகும்
ஒன்றுய்த திரண்டு ஒருமித்துக் கெவுரிபடையை
ஒன்றோ டொன்று சேராமல் அடித்து
இன்று இருவர் படையி லிறந்தபடை
ஏகமாய்ச் சரியாய் இருக்கு மென்றூர்
மிஞ்சிக் குடைக்காத்துத் தீரனும்
வேலு முருகும் உடையண்ணனும்
அஞ்சாம லின்றேடே அடிக்கிறேனபார்
கெவுரி படையை யத்தனையும்
பாய்ந்தார் அமர்புரிந்தார் பாய்ந்து
வெட்டுங் குத்தும் நடைக்கையிலே
சாய்ந்தார் கெவுரி படைத்தளத்தில்
ஐய்யா யிரம்பேர் வரையில்
கண்ணுலே பாத்துக் கெவுரி
கலங்கியே மனம்பே தலித்தார்
மன்னன் மருதுட சேனைதனில்
மாண்டிட் டாருயிரம் பேர்களுந்தான்
மாநகர் இலங்கையில் இராவணன் சண்டையாய்
வான்குரங்கும் அமர்ந்ததுபோல்
கானக் கவிகளு மரக்கரும் கைகலந்
தொன்றே டொன்று மாண்டதுபோல்
கெவுரி தளத்துடன் கிட்டிப் போராடையில்
கெவுரி படைமுறிந் தோடிடவே
இங்கு இவர்கள் இப்படிக்கு
யெடுபட் டுப்படை யோடையிலே
அங்கு மருதுபடை கைமிஞ்சி
கெவுரி படையை யடித்துத் துரத்திடவே
பிடித்தார்கள் பாசுபதப் பீரங்கியை
பின்வந்தப் படையை விரட்டிவிட்டு
அடித்தார் கயத்து வெடியாலும்
அநேகம் சுண்டுவில் வாளரி யாலும்
மடித்தார் வெகுசனத்தை
மாண்டு கெவுரிபடை யோடிடவே
துடித்துக் கெவுரிதுரை
துஞ்சினூர்போல் மனவாட் டமுடன்

ஏறும் பரியை விரட்டிக் கொண்டு
இறங்காமல் விசவனூர் வந்து சேர்ந்தார்
வாரு மென்று நின்ற படைகளை.
வரவழைத்து ஒருமுகமாய்ச் சேர்த்துக் கொண்டு
சேர்ந்து ஒருபொழுது விசவனூரில்
தயக்க முடனவ் வூரிலிருந்து
ஏந்தான் இவ்விடத்தி லிருக்க வென்று
எண்ணி மனதில்பல யோசனையாய்
சேதுமகா ராசன் சமூகத்தில்
சென்று எப்படி விழிப்போ மென்று
சேதுவை நோக்கி கெவுரி வல்லவன்
சென்றார் இராமனா தபுரங் கோட்டை
வாதுபுரி மருதிருவர் மைந்தர்களும்
வந்தார் சிறுவர்புரி தன்னிலேதான்
தேசம் புகழ்ராசர் பணிநேசன்
சேதுபதிக்கு இராம பாண மொக்கும்
பாசுபதம் பீரங்கி முன்மா னேசி
பாளையத்தைச் சுட்டு வென்றதுவாம்
வெங்கலப் பீரங்கி அதில்
விநோதங்களாய்க் கோல மிட்டதுவாம்
தங்கும் வெகுபடை சேனையதை
தக்கது வெற்றி புரிந்ததுவாம்
வாகுடைய பீரங்கியை மருதுமகன்
வலுவாய்ப் பிடித்து சிறுவர்புரி சேர்ந்தான்
ஏகிச் சிறுவயல் தன்னில் வந்து
ஏக மகிழ்ச்சி யதாயிருந்தார்
இங்கே கெவுரிசேனை இறந்தது போக
இருந்த சேனையைக் கூட்டிக் கொண்டு
துங்கன் இராம லிங்கச் சேதுபதி
துரைமுன் போக மனங்கூசி
வாடியே ரொம்ப மனஞ்சலித்து
மன்னர் சபைதனில் செல்லாமல்
நாடியே அதிலோ ரமதில்
லட்சுமி புரத்தில் போயிருந்தார்
அறிந்தே கெவுரி வல்லவன்மன
தாயாசந் தெரிந்து விசனப்பட்டு
விரிவாங் காட்டாங் குடியை விட்டு
விரும்பி அதிலிருக்கச் செய்தார்
மாட்டியன் கர்னல் இதையறிந்து
மன்னர்கள் செய்த சண்டைகளை
தாட்டீக மாகக் கெவுனருக்கு
தானெழுதிக் காயிதம் போக விட்டார்

வந்த காகிதந் தனைக்கெவுனர் பார்த்து
மகாகோபமாய் மேசை தனிலடித்து
மைந்தனெனுங் கும்பினி யாருக்கு
மருது சொல்லியது அறிந்திருந்தும்
தொந்தஞ் செய்த தேதெனவே
லண்டன் துரையை துருசா யனுப்பிவிட்டார்
வந்ததே லண்டன் துரைதானும்
மருது இருவருக்கும் தெரியச் செய்ய
சுந்தரஞ் சேர்குமத் தொண்டி நகரத்தில்
துரை லண்டனும் வந்திறங்கி
மன்னன் இராமலிங்கச் சேதுபதி
மருதிரு வரையும் வரும்படியாய்
திண்ண முடன்துரை லண்டன் வரும்படி
சீக்கிரம் காயிதம் வரைந்தனுப்ப
மன்னன் மருதிருவரும் மைந்தரும்
வந்துகண் டார்வெகு திரசு விரைவுடனே
சந்தோஷ மாக எழுந்திருந் துதுரை
லண்டனும் எதிர்க்கச் சென்று
சிந்தை மகிழ்ந்து மருது இருவருக்கும்
தொப்பி கழற்றிச் சலாங்கொடுத்து
தண்டிகை தன்னை விட்டிறங்கி
தாங்களும் எதிர்சலாங் கொடுத்து
மண்டலத்தை யாளும் மருதிருவரும்
லண்டனும் கூடாரம் வந்திருந்தார்
வீற்றிருந்தா ரடப்பை எழுபத்திரண்டு
பாளைய வேந்தர்களும்
காத்திருந்தார் சுத்தி கலங்காத
மன்னர் மருதிரு வர்களும்
கேட்டார் சமர்புரிந்த கெம்பீரம்
நடந்ததை அறிவோ மென்று
வாட்ட மென்ன சேதுமக ராசனுக்கும்
மன்னனுக்கும் வந்து நேர்ந்த தென்ன
போட்டி யினிவேண்டாம் நமக்காக
பொறுத்து நாடாள்வீ ரிப்போது
என்றுதான் மேஸ்த்தர் லண்டன்துரை
மருதிரு வருக்கும் புத்தி சொல்லி
நன்றுநன் றென்றென்று மருதிருவர்
லண்டன்துரை சொல்படியே வென்றார்
தம்பியுடன் தானும் எழுந்திருந்து
தணிந்து நாமாங்க சலாங்கொடுத்து
அம்புவி யாள்துரை லண்டன் மேசரை
அனுப்பிச் சிறுவர்புரி வந்து சேர்ந்தார்

சேது பதியொரு ஆள்வசத்தில்
சேதுபதியாக நாமர சாளுகையில்
வாது புரிமன்னன் மூாத்தான்
மருதிருவர் நகரினில் வந்திறங்கி
என்ன விதமாக அவ்விடம்
என்னை வரச்சொல்லி யெழுதி விட்டார்
அந்நகர் தன்னை விட்டு நமக்கு
அடுத்த நகர்வந்தால் கண்டு கொள்வோம்
என்றெழுதியே காலாளிடம் கொடுத்து
ஏகவே அனுப்பி விட்டார்
அன்றவர் வாசித் தறிந்துதுரை
லண்டனும் ஆயாச மடமும் வைத்தான்
சேது பதிமீதில் தீராத கோபமாய்
சென்னைநகர் கெவுனர்க் கெழுதிடவே
சனப்பெருக் கத்தோடே சேது பதியைத்
தப்பி டாமலே காவல் செய்து
அனுப்புவீ ரித்திசைக்கு அங்கு
அவரைநாம் பார்க்க வேணு மென்று
கமிட்டியி னுத்தரவு
கர்னல் மாட்டியர்க்கு வந்திடவே
அமட்டியே கர்னல் அறிவித்தே
அரசன் சேதுபதிக்கு காவலிட்டு
பட்டாளந் துருப்புப் பாளையத்தால்
பார்த்திபனைச் சுத்தித் தான்வளைந்து
திட்டமுடனே வளைந்து சுத்தி
சேதுபதிக்கு சிப்பாயி பாரா வைத்து
எடுத்தார் சிவிகை தனிலேத்தி
ஏகமாய் பட்டாளம் சூழ்ந்துவர
தொடுத்த திருச்சினுப் பள்ளியிலே
சிறையி லடைத்தார் சேதுவையும்
சீர்குந் துரைலண்டன்
சிந்து பூந்துரை விடுதி வந்து இருந்தார்
அறவே துரைக்கும் ராணிக்கும்
அவ்வூர் பிடியாமல் அம்பல்கண்டு
துரையும் துரைராணி இருவரும்
சேர்ந்தார்கள் துஞ்சி எமலோகம்
மருதுங் கெவுரியும் அவரவர்
மாநகர் சேர்ந்து இருக்கையிலே
பரம்பக் குடியிலே பரம்பூர் நாயக்கர்
பாரிய கல்மண்ட பத்திலிருந்தார்
உரமாய் அவனுடைய ஊடையமும்
பாளையமும் உஷாராக வைத்திருந்தார்

நளதுதளத் துடன்தம்பி குடக்காத் துடையான்
சனத்துடன் இமனேசுபர மிருந்தான்
தென்ளு புகழ்பரம் பூரு நாயக்கன்
தீரன் மருதி மனேஷ பரத்தை
கொள்ளே யடிக்க வென்று
குறித்தாய் வந்து சொன்னூர்கள்
கண்டோ மெனவே குடக்காத் துடையார்
கரணி இரண்டிலும் பொறுப்பாக்க
கொண்டானே கோபமதாய்
கூவென்றே கல்மண் டபத்தில்
ஈட்டியைச் சாத்தி இறக்கை கட்டி
ஏறியே தளத்தில் நிற்கையிலே
தாட்டீகன் கவண்டத் துரைதம்பி
குடைக்காத் துடையார் தளத்தில் நிற்கையிலே
மண்டபத்தைச் சுத்தியே படைவளைந்து
நின்றது ராணு வங்கள்
கொண்டாட்ட மாகக் குலவையிட்டு வெகு
கூச்சலுடன் ஆயுத வீச்சுடனே
யேசியே ரோஷம் வரஇருந்து
அவரை வைது திட்டிடவே
கூச்சலாய் பரம்பூருன் குறிப்புடனே
வெகு ரோஷம் வைத்து
கருமருந்தும் குண்டும் கைவெடி
தன்னிலே இட்டு அடைத்து
விரைவாகவே வெடிமுகந் திருப்பி
வெடிவேட்டை எழுப்பி விட்டிடவே
குண்டு வரிந்து குடக்காத்துத் தம்பி
குடல்வயிற்றினில் தைத்ததுவே
யண்டு விதியினுல் குண்டுபட்டு
உறுவி யப்பால் போனதுவே
ஆயாசமாகி அழகு குடைக்காத் துடையான்
அண்ணன் கவண்டன் துரையைப் பார்த்து
கேட்டுக் கவண்டன் துரைக்கு
கீர்த்தி பெரிதெனக் கோபங் கொண்டு
வாலா வழியாக மன்னன்
குடைக்காத் தவனுங் கவண்டன் துரையும்
காலனிவ ரிருவர் கைவாள் வளரியி
ஞலாயிரஞ் சனங்கள் சாய்ந்திடவே
நாசமாய் பரம்பூர் நாயக்க னுடைய
நன்மகன் குண்டு நடத்திடவே
வாசம்புகழ் கவண்டங் கோட்டைத்துரை
வயிற்றில் குண்டு பட்டுப் பரிந்திடவே

அந்தத் தருவாயில் மன்ன ரிருவருங்
அசந்து வீரசொர்க்கஞ் சேர்ந்திடவே
சிந்தை கலங்கியே மன்னனுட சேனை
தீரன் இருவரைத் தூக்கிக் கொண்டு
மன்ன ரிருவரைத் தோள்தனில் தூக்கியே
வடகரை புளியந் தோப்பில் வந்தார்
தென்னன் இருவர் இறந்த சேதி
தீரன் மருதிரு வருக்கும் தெரிந்திடவே
சிந்தையும் பதரித் தயங்கிச் சோம்பி
தீர ரிருவரும் புவியில் பாய்ந்திடவே
அந்த ஆனந்தூர் சண்டையில் ஊடளித்து
அரசன் பீரங்கி பிடித்த மன்று
பாயும் பரிமிசை யேறியே தீரர்
பரியைப் பாச்சலில் விட்டெழும்பி
ஆயாச மின்றி அர்த்த ராத்திரியில்
ஆற்றோரம் புளிதனில் வந்திறங்கி
மைந்தனை யெடுத்து மடியில் வைத்து
மருது இருவரும் வாய்விட் டரற்றலுற்றார்
சிந்தை மயங்கி அழுதிடும் தீரரை
சேர்ந்திடும் மன்னர் பற்றிடவே
மோடியுடன் மகனைச் சிவிகையி லேற்றி
மூர்க்கமுடன் தூக்கிக் கொண்டு வந்து
சூடியூர் தன்னி லடக்கஞ் செய்து
சூள்மாலை யீடுமடங் கட்டி வைத்து
நடக்குஞ் சடங்குகள் நடத்தி வைத்து
நல்ல சத்திரத்தில் அன்னதானஞ் செய்து
என்றைக்கும் சத்திரம் அன்ன தானம்
இயல்பு தவறாமல் நடக்கச் செய்தார்
அன்றுமுதல் சூடியூர் சத்திரம்
அன்னதானம் இன்னம் விளங்குதுபார்
கலெக்ட ராயிருந்த கர்னல் மார்ட்டியனை
கமிட்டி யாலோசனைக்கு வரவழைத்து
லண்டன் துரையை அனுப்பி வைச்சு
லண்டனும் சார்பீசு ஒப்புக் கொண்டார்
கெவர்னர் செனரல் துரைமார்கள்
தேடித் தலங்கள் சுற்றிப் பார்த்து வந்தார்
கவன மாகவே சீமை வளங்களும்
கலெக்டர் சட்சி செய்யும் அதிகாரத்தையும்
மதுரா புரிதன்னில் வந்தார்
மதுரை மீனாட்சி பட்டணம் பவனிவந்தார்
மதுரைக் கோட்டை வந்தசேதி கேட்டு
மன்னன் மருதிருவரும் கனசேனை விருதுடனே

வந்து பேட்டி செய்து சலாங்கொடுக்க
மன்னன் கெவுனர் எதிர்சலாங் கொடுத்து
சிந்தை மகிழ்ந்து இருக்கச் சொல்லி
தீரர் இருவருக்கும் வரிசை செய்தார்
இப்படியாக மருதிருவரும் கும்பினிக்
கேற்ற பிள்ளையா யரசாண் டிருந்தார்
அப்படியாக இருக்கையிலே மன்னர்க்
கழிவு வந்ததைச் சொல்லுகிறேன்.
யாஞ்சைப் பதிவளத் தூமைத் துரைதனை
பார்த்திபன் கும்பினியார் பிடிக்க வென்று
வாஞ்சை யுடன்தேச மெங்குஞ் சுத்தி
வளைந்து தேடி வருகையிலே
அஞ்சாதே என்றும் மருதிருவர் அவனுக்கு
ஆதரவு சொல்லி வைத்திருந்தார்
சஞ்சல மில்லாமல் வைத்திருக் குஞ்சேதி
தரும கும்பினி யாரறிந்து
திருப்பத் தூர்க்கா ரீசனர் சல்தாரை
சென்றறிந் துவர வோலை விட்டார்
விருப்பமாய் ஓலையைத் தான்பார்த்து
வேவுபார்க்க சிறுவர் பரியில் வந்தார்
வந்திடும் அசல்தாரை ராவிருளில்
வகைமோச மாய்ச்சிர மறுத்துக் கொன்றார்
தொந்தமுடன் கும்பினி யார்மேலே
துரைமரு திருவரே எதிர்த்திடவே
ஊமைத் துரையைத் தேடிப் பட்டாளம்
உலகமெல்லாஞ் சுற்றிப் பார்க்கையிலே
சீமை சீமை யெங்குந் தேடித்
திரிகையில் மருதிருவர் மக்கள்
கூடியே கும்பினிப் பட்டாளத்தை
குலைகுலை யாகவே கொல்ல லுற்றார்
அப்போது மார்ட்டியன் கர்னல்துரை
கெவர்னர் ஆலோசனை யிலேயிருந்து
தப்பாமல் காகிதம் தானெழுதி
தாட்டீகன் நாயக்கர் தனையனுப்ப
மருதிரு வரிடம் சென்று
மாத்தா னூமையனை ஒப்புவித்தால்
இதுவரையில் நீயும் மைந்தரும்
எண்ணாமல் செய்ததெல்லாம் பொறுத்தோம்
சதிசெய் யாமலிக் காயிதம் பார்த்துடன்
சண்டாளன் ஊமையனை ஒப்புவித்தால்
விதமாகப் பொறுத்து உந்தனை
வேந்தனெனக் கொண்டாடிக் கொள்வோ மென்று

கர்னல்துரை கொடுத்த காயிதத்தை
கர்த்தன் ராமசாமி நாயக்கன் வாங்கி
மன்னன் மருதிடத்தில் வந்து
சலாஞ்செய்து கொடுத்திடவே
வாசிக்கக் கேட்டு மருதிருவர்
மனமகிழ்ந்து புஞ்சிரிப்புக் கொண்டு
தஞ்சமென் றென்னிடம் வந்தவனே
தாவறி யாமல் ஒப்புவிக்கச் சொல்லி
வஞ்சக மாய்துரை மார்ட்டியன் எழுதின
மார்க்கத்தை நான்கண்ணால் பார்ப்ப தில்லை
எந்த விதந்துரை எழுதினாலும் ஊமையனை
இனி ஒப்புவிக்க மாட்டேன் என்றுசொன்னார்
சிந்தை வெறுத்தெனைக் கும்பினி யாரெந்தன்
மைந்தர் கிளைஞரைக் கொன்றாலும்
வந்து அடைந்த ஊமைத் துரைதனை
வாழ்நாளை வதைக்க விடமாட்டேன்
என்று மருதிருவரும் செப்பிட
ஏகியே நாயக்கர் மார்ட்டியனுக் குரைக்க
காட்டியே மருதிருவர் சொன்னபடி
கமிட்டிக் கலெக்டர்துரை
மார்ட்டியன் துரை யாலோசித்து
மன்னன் கமிட்டிக் கெழுதலுற்றான்
காகிதத்தைப் பார்த்துக் கவர்னர்துரை
கமிட்டியார் அப்போது அறிக்கை விட்டார்
சேயிவன் கும்பினியார் பிள்ளையெனச்
செப்பிய மொழிதப்பி எதிர்த்து விட்டான்
மேஸ்தர் அக்கினீசு தனையழைத்து
விளங்கிய காகிதத்தைக் காட்ட
ஆஸ்தானங் கெடிதலம் அநேகம்
மன்னரைச் செயித்திருக்கோம்
சண்டை சமர்பொருதக் கும்பினிக்குத்
தத்துவங்க ளில்லை யென்றெண் ணினானே
விண்டே அரசாட்சிதனை
விட்டோடிப் போனவ ரெத்தனையோ
என்றுரைத்து அக்கினி மேஸ்த்தர்
எழுந்துபோய் வருகிறே னென்று சொல்லி
சென்றான் தன்மா ளிகையில்
சேர்ந்திருக்கும் அந்நேரமதில்
மன்னவன் கெவுரி வல்லவ ராசன்
மருதுபேரில் துரைமார் முரிசல் கண்டு
சென்னை நகர்சென்று தீரன்
கும்பினியார் யோசனை அறிவோ மென்று

அறிந்து இச்சமையம் நமக்கு
ஆனதென் றெண்ணி யோடிவந்து
விரைந்து இரவில் அக்கினீ சுத்துரை
வீற்றிருக்குங் குரிச்சி முன்னே வந்து
நின்று சலாங்கொடுத் தார்துரை
நீயாரு சொல்லு மெனக்கேட்டார்
அன்றுவரை மருது செய்த
அநியாயங் களெல்லாம் உரைத்திடவே
எடுப்பாய் மருதுதனைப் பிடித்துநீ
என்னிடம் ஒப்புவிச்சி யானால்
கொடுப்போ முமக்குக் காசுக்
கொடுத்தவ னேபதில் செப்பு மென்றான்
நானேயே சிவகெங்கை நகரரசு
நானே உமக்குக் கொடுத்திடுவேன்
பானையங் கூட்டிப் பதிசேர்வோம்
பதறாமல் என்னுடன் கூட வந்து
சொல்லு மென்று அக்கினீசு துரைகேட்க
கெவுரி நானேச் சொல்லுகிறேன் துரைக்கேற்க
வல்லவன் கெவுரி இராசன் துரை
மகராசன் சேதுபதிக் கறிக்கை செய்து
உதையந் தனிலெழுந்து கெவுரிக்கு
உறுதிக ளக்கினீசு சொல்லிடவே
கதியாய் கெவுனர்துரை கமிட்டியில்
அக்கினீசு சென்று நின்று
விதியால் மருதிருவரைச் செயிக்க வீரன்
கெவுரி உதவி வேணு மென்றார்
தேவர் புகழும் சிவகெங்கைச் சீமைக்கு
சேர்ந்த பார்த்திபன் கெவுரித் தேவன்
பாவ மறியாப் படமாத்தூர்த் தேவன்
பாலன் கெவுரி ஒளித்து வந்து
விந்தையுடன் சேது வேந்தனுக்கு
சொந்தமுடன் அவரா தரவாய்
வந்தி ருக்கிறான் மன்னன்
கெவுரி வல்லவ னென்றொருவன்
அந்த நகர்க்கரசன் ராணி
ஆதரவாய்ச் சீமை மருதாளுகிறான்
இந்தச் சணமே இனியழைத்து
இவனுக்கு இப்பவே மணிமகுடம் சூட்டி
என்னுடன் கூட்டி யனுப்பு வித்தால்
இருமருதையும் வாரமொன்றில்
கொன்றவன் மைந்தர் இளைஞரையும்
கூட்டப் படையுடன் ராணுவத்தை

வென்று சிவகங்கைநகர்
மேதினியைக் கைவசஞ் செய்து கொண்டு
நன்றாய் வருகிறேன் மருதிரு வருக்கும்
நமன்காலும் நானக் கினிசு
ஆவணி மாதம் பதினைந்தாந் தேதி
அன்பான மதிவாரந் தனுசு லக்கினத்தில்
தாழ்வில் லாமல் கதிரோ னுச்சியில்
தப்பாமல் பார்க்க நாற்றிலசையும்
தாராள மாய்ச்சிறுவர் புரிநகர்
தங்காமல் டேருவடித் தவ்வூரில்
பேருக டைப்பன் பொசிப்ப
னெனவே வெகுகோ பமதாய்
சீறியே அக்கினீசு செப்பிடவே
சிறந்த கெவுரி இராசனைக் கூட்டிவந்து
வெற்றி மகுடம் விளங்கவே சூட்டி
வெள்ளைக் காரர்கள் சலாங் கொடுத்தார்
சுற்றியே பட்டணப் பிரவேசம் வந்து
சூழவே கும்பினி வாழ்த்திடவே
வீரு செய்து தான்பொருதும்
வெள்ளை மருது மக்கள் கிளைஞரையும்
கூறு செய்வா யென்று கும்பினியார்
குறிப்பாய் கெவுரிக் குறுதி செய்து
மன்னு கெவுரி வல்லவனே உந்தன்
மைந்தர் புத்திரர் கிளைஞரோடு
விண்ணு மண்ணு முள்ள மட்டும்
விளங்கவே சீமையை அரசாளுவீர்
உன்னாலே யான உபாயங்கள் சூதினு
லுறுதியாய் மருதிருவரைப் பிடித்துக்
கொடுப்பாய் நடவுமெனக்
கூறினர் வெள்ளைக் காரரெல்லாம்
எடுப்பாய் சிவகெங்கை அரசை
எப்போதும் அரசாட்சி செய்வாய்
அந்தப் படியே ஆகுமென்று
ஆனைபரி சேனை திரட்டுமென்றார்
சிந்தை மகிழ்ந்து கும்பினியார் சேனை
திரண்டதை யென்ன சொல்வேன்
ஆனைபரி பீரங்கி ரிசுமுட்டு
அநேகம் சோல்சர் பட்டாளமுடன்
சேனை திரண்டு ஒருமுகமாய்
தேசங்க ளெங்கெங்கும் கிடுகிடென
பாங்காய் விட்டுப் பட்டாளம்
பனிரண்டு பீரங்கி ஈராறு யோரீசு

ஆங்கார மாக அநேகம் படைதிரண்
டலைகடல் சூழ்ந்து எழுந்ததுபோல்
கூடாரம் பாவட்டா கோணக் குழலூத
குண்டு மருந்து தயாருடனே
மோடியுடன் தம்பூரு முழங்க
முன்னும் பின்னும் பட்டாளந் துவங்க
அந்த முள்ள அக்கி னீசுதுரை
அரசன் கெவுரி வல்லபேந் திரதுரை
வந்தார் எழுந்தார் எழுகடல்போல்
வான முட்டக்கொடி விருதுடனே
சென்றார் திருமயக் கோட்டையிலே
தீரர்கள் பாளையம் வந்திறங்கி
அன்றிரவு தங்கி அங்கிருந்து
அருண னுதித்த வுடனெழுந்தார்
அத்தருணங் கெவுரி அக்கி னீசுத்துரை
அடுத்து சலாஞ்செய்து ஒருசேதி சொல்வார்
உற்றவசனம் நானென் றுரைக்கிறேன்
உண்மையுட னெனக்கு உறுதி செய்வீர்
மாத்தான் மருதிருவர் மகன்சமாலி
உடையார் தம்பி சிவஞானம்
முத்து வடுகு கருத்து டையான்
மூர்க்க நன்னி உடையா ரழகுடன்
குழந்தைச் சுவாணம் சங்கிலியும்
குறிப்பான சக்கந்தி வெங்கணனும்
சமந்தா னெனக்குப் பெரியதம்பி சேநவை
பலசாலி புக்குளி வேலு முருகு
மருவலர் குடோரி வாருப்பூர்
மன்னன் சிறுவயல் நன்னிமுத்துச் சாமியுடன்
வெரிமருது வீரன் கரிசைப் பதியோன்
வேந்தன் கோவானூர்க் குடியான்
காவலனே இங்கிவர்கள் பொல்லாக்
காராக் கோடரிவர்கள் அனைவோர்களும்
பாவமதுக் கஞ்சாதார்ப் பொல்லாப்
பாதக மென்று எண்ணாதார்
ஆவலுடன் என்னை அவதி செய்தவர்
ஆன இருபத்திரெண்டு பேர்களும்
துருபத்திரக் கொன்று தூக்கினி-ராமாஇல்
துரைகள் பின்னாலே வருவேன் பதருமல்
திருவான லெட்சுமியாள் செகஜீவனி
சீதா தேவி தானறிய
கத்திதனைப் போட்டு கடந்துருதி செய்து
தந்தாலுன் பின்னே வருவே னென்றார்

எத்தும் வகையாய் எனையழைத்துச் சென்று
எதிரி வந்தெனைப் பணிந்தக்கால்
சித்த மிறங்கி அவருடன்
சேர்ந்துகொண்டா லதற்கு என்னசெய்வேன்
குத்தி எனது குடலைப் பிடுங்கிடுவார்
கொள்ளை கொலைக்கஞ்சாத் துஷ்டராவர்
என்றுகெவுரி வல்லபேந் திரதுரை
இன்புற் றக்கினிசுக் கெடுத்துரைக்க
நன்றுன் மனதுப் படிக்கு நடத்துவேன்
ஒன்றுக்கு மஞ்சாதே கெவுரி வல்லவனே
கண்டு கொள்ளுமென்று கத்திதனைப் போட்டு
கடந்து கொடுத்தார் அக்கினிசுதுரை
அப்பால் கெவுரி மனமகிழ்ந்து
அக்கி னிசுத்துரை பின்னடந்தார்
சுற்றிலும் பாளையம் அணிவகுத்து
சூழ்ந்து படைநடந்து வருகையிலே
மத்தியில் அக்கினிசு துரையும் மன்னன்
கெவுரி வல்லவர் மட்டத்திலும்
எத்திசை யெங்கும் புகழ்ந்திடவே
பாளையம் எதிர்த்து வருகிற சேதிதனை
கர்த்தன் மருதிருவ ரறிந்து
கனத்த மக்கள் மருமக்கமார் பந்துவர்க்கம்
சித்தமுடன் பார்த்து எது சொல்வார்
தீரன் கும்பினி யாரைக் கூட்டி
மன்னன் கெவுரி வல்லவ ராசன்
துரைமாருடன் கூடி வருகிறான்
முன்னாள் கெவுரி முனையிழந்து
மூர்க்கமுடன் கும்பினி முரிசல் கண்டு
இந்நாள் வருமளவும் கெவுரி
பெப்போ வென்று சென்று காத்திருந்து
கொன்று நமது குலத்தைக் கருவறுத்துக்
கும்பினியார் தயவாலே
இந்நகர் தன்னையும் ஆள்வோ மென்று
ஏறி வருகிறான் பரிமீதில்
ஆனதி னாலுங்கள் அழைப்பென்ன
சொல்லுங்க ளனைவோரும் ஓர்முகமாய்
மானபரன் மருதிருவர் வழுத்தவே
மன்னர்க ளெல்லோருந் திரண்டு
ஆண்டவனே யெங்களுக்கு
அன்னை பிதாக் குருகுல தெய்வம் நீரே
பாண்டியனே நாளைப் பார்ப்போ மொருகை
படமாத்தூர்க் கெவுரி தன்னுமத்தை

அப்போது சேனைக ளணிவகுத்தார்
அறுபத் தாறுயிரம் பேருடனே
தட்டாம லட்ட திசையும் சென்று
வழிகூட்டித் தானைய மாகவே சென்றிருந்தார்
இட்ட முடன்சுத்த வீரரெல்லாம்
எட்டுத் திசையும் வளைந்து நின்றார்
இங்கு இவர்க ளிப்படி யிருக்கவே
எழும்பிக் கும்பினி வருவதைச் சொல்லுகிறேன்
அங்கே கெவுரி வல்லவரும்
அக்கி னிசுத்துரை பாளையமும்
தங்குந் திருமயக் கோட்டை விட்டுத்
தானே படையை யெழுப்பி வந்தார்
எங்கே மருது இருக்கு மிடமெதுவோ
இப்போ அதைக்காட்டு மென்றார்
ஆங்கரித் தாரக்கி னிசுத்துரை
அப்போது கெவுரி வல்லவ ராசன்
யாங்குடனே பாளையத்தைப்
பயிலாய்ப் பிரியும் நீரென் றுரைத்தார்
ஒருபட்டா ளத்தை பத்தணியாக
உகந்து நூற்றிருபதாய் வகுத்தார்
மறுபட் டாளங் காப்பரிகள் பத்தணி
பாங்கிகள் வகுத்தன்ன பத்தணி
பேச்சு மூச்சுவிடா சோல்சர்கள் பத்தணி
பாச்சல் பரியும் பகுந்து பத்தணி
ராட்சசத் தளமென நடக்கு முன்னணி
வாய்த்த பீரங்கியை வகுத்தார்கள் நாலணி
செப்பமுடன் திருப்பத்தூர்க் கோட்டை
சென்று பிடித்திட வேணு மென்று
ஒப்புர வாகவே பீரங்கி மோரீசாவை
ஒருமிக்கக் குண்டு மருந்து போட்டு
தண்டு நடக்கத் தளத்து நடுவிலே
தருமக் கெவுரி அக்கினீசுத் துரைவர
மண்டியே நான்கு திசையிலும்
மருது படைகிட்ட வணுகாமல்
சுத்திப் படைகள் அணியணி யாய்வர
சூறுவளி போலச் சோல்சர் முன்னடக்க
வித்தார மாகவே செந்தூள் கிளம்பி
வெளியெங்கும் இருளாக மூடிடவே
வரவே இதுவிபரம் வாருப்பூர்
மன்னச்சுவான் சிராவயல் நன்னியுபே
அறிந்தே யவர்படையை
யணிவகுத்து வந்து வழிமறித்தார்

பிரிந்து அப்பால் போக விடாமல்
பேசியே அக்கினீசுப் படையில் பாய்ந்து
வாளாலும் வேலு வளதடி சக்கரம்
வாகு கல்வெடி கயத்து வெடியாலும்
வாளாலே வெட்டி வதைத்தா ரதில்
மாண்ட படைதனைக் கேளுமினி
ஆனை யொன்று துருப்புக் குதிரைரெண்டு
அலறியே சோல்சர் ஐந்துபேர் மாண்டார்
கானகத்தில் அறுபதுபேர் பறங்கிகள்
ஆப்புச் சேருறு பேர்மடிந் திடவே
சீருக மூன்றுபேர் சீமையதார்ச்
சிறந்த நாயக்கர் பத்துச் சிப்பாயினூறு
மாறுக வந்து எதிர்த்த மருதுபடையில்
மண்டி நூற்று ஐம்பதுபேர் மடிந்தார்
பார்த்தானே அக்கினி மேஸ்தர்துரை
பதரியே வெகுகோபங் கொண்டு
கோர்த்தானே முதனுள் சண்டையிலே
குறிப்பான பேர்களைக் கொன்று விட்டான்
இதமாக மறுநாள் எதிர்த்தாக்கால்
எப்படிச் செய்வானோ நாமறியோம்
எம்மாத்திரம் என்னவே எண்ணினோம்
நாம் மருது இருவரையும்
சும்மா யிருந்ததி னாலே யல்லோ
துண்டித்தான் சேனையில் வெகுபேரை
புத்தியினால் யோசனையைப் பொருந்தாமல்
மிதமாய் இருந்து விட்டோம்
பித்தனைப் போலே இருந்து விட்டேன்
பீரங்கியில் குண்டு மருந்து செலுத்தாமல்
வெய்யோனைக் கண்ட பனிபோலே
விரட்டு கிறேன்பார் நாளைச் சண்டையிலே
செய்கிறேன் பாரெனச் சினந்து எழுந்தான்
பீரங்கியில் குண்டுமருந்து செலுத்து மென்றான்
திட்டமுடன் காப்புரிச் சேனை பறங்கியரை
தீர்க்கமுடன் முனையாய்ப் பொறுமளவில்
விட்ட பன்னிரெண்டு பீரங்கியிலும்
வேட்டெழுப் புமென மூட்டி முழக்கினான்
வண்டன் தளத்திலக் குண்டு பறிந்திட
மாய்ந்து மூளைசிதறித் தலையுருள
மண்டிக் குடல்கரிந்து கையொடிந்தும்
மாண்டுதே நூறு சனங்கள் வரையும்
கண்டு வாருப்பூர் மன்னன்
காவலவன் அச்சுவான் இதனை யறிந்து

மீறுமல் அக்கினீசு மேஸ்தர் பாளையம்
மேதினிக்குள் வந்து சேராமல்
போராட வென்று போய்வளைந்தான்
பொறுத்தார் மனவனு வாய்ப்போய்
பெரும்போ ரதுபோய்ப் புரிந்து
பேசுங் கெவுரி அக்கினி மேஸ்தர்
தாரணிக் குள்ளாக வந்து விட்டால்
சமர் புரிந்தும் வீணுமே
போரினி மேல்செய்யப் பொறுக்குமோ
நம்மாலே போச்சென்று பேச்சு நடந்திடுமே
நாடுங் கெவுரியை வணங்கிவிடும்
இராச்சியம் போய்விடுங் கும்பினியில்
வீடும் இழந்து மெலிந்திடுவோம்
நம்மமேம் பாடெல்லாம் அழிந்துவிடும்
திருப்பத்தூர்க் கோட்டை செல்லாமல்
அக்கினீசை திருப்பி வந்தவழி போவதற்கு
நெருப்பாய் எதிர்த்துக் குதித்திடுவோம்
நேருவோம் சண்டை வாரும் என்று
வாளாலே வெட்டி வதைத்தா ரடிக்கடி
வளரியால் தலைகளை உருட்டி ஞர்கள்
காளை நாயக்கர் எங்களுக் குதவியாய்
கதியுந் தைரியந் தாரு மென்றூர்
கண்டு அக்கினீசு மேஸ்தர்
கலங்கிப் பீரங்கியில் தீவையுமென
அண்டியே அக்கினீசு சொல்படி
ஐந்நூறு வேட்டும் முழக்கிடவே
வாருப்பூர் மன்னன் தளத்தில்
மாண்டார்க ளெண்ணூறு சனம்வரையும்
வாருப்பூர் மன்னன் சினந்து எழுந்து
மண்டியே குத்தும் வெட்டுடனே
சிக்கெனவே நன்னி திரும்பிப் பொருதையில்
தீர்ந்தது நூறுபேர் சிப்பாயிகள்
கச்சித மாகவே அக்கினி மேஸ்தர்
கனவேட் டெழுப்பியே பாளையத்தை
தேருந் திருக்குளமும் சிவாலையமும்
சிறந்த திருப்பத்தூர்க் கோட்டைக் குள்ளே
மீறியே அக்கினி மேஸ்தருங் கெவுரியும்
விரைந்து வந்தார்க ளாகையினுல்
சொந்தக் கொழுந்தி மகன்வேல் முருகுத்
துடித்துச் சகிக்காமல் படைதிரட்டி
தந்தளத்தைத் தூண்டி ரோசம் பாராட்டி
தாக்கியே வெகுமூர்க் கமுடன்

வந்துவிட்டான் திருப்பத்தூ ரக்கினி மேஸ்தர்
கவுரி வந்ததால் மருதுக்கு இந்தச்சீமை
சொந்த மில்லையினித் தொலைந்தது
சீமையும் வாழ்வும் மருதை விட்டு
அப்பால் இனிமேல் ஆரரசாண் டென்ன
நம்மை ஆதரிப்பவர் யாருமில்லை
மெய்யாக நாம்திருப் பத்தூர்க் கிப்பால்
மேஸ்தர் அக்கினீசை விடாதபடி
நெருப்பாய் எரித்து நிலைக்காமலே
எழுப்பி ஓட்டிடுவே னிமிஷமதில்
வெல்லுவே னென்று சபதஞ் சொல்லி
வெகுவீரமுடன் வேல்முருகு
கொல்லுவே னென்று சினந்து எழுந்து
கூரிய வாள்வேல் சூலமுடன்
கால்தள மாயிரம் பேரும்
கடுகியே திரண்டு ஊடழித்து
வீமன் திருமாலை மேனாள் துதித்ததுபோல்
வீர வயிரவரைத் தியானம் செய்து
வேலலகு ஈட்டி சமுதாடு கட்டாரி
விளங்கும் வளரி துப்பாக் கியினால்
காளையென குதித்து வேல்முருகு
கால்தளத்தை நொருக்க லுற்றான்
சோல்சர் பறங்கி துடியான காப்புலியரைச்
சூறை யாடினான் வேல்முருகு
சாகிறோம் வீணாய் சண்டாள
னாமையனால் சாடினான் மருதுபடை
ஏகக் குரலெழுப்பி யிறந்தது
சோல்சர் பட்டாள மெண்பதுபேர்
அப்போது அக்கினி மேஸ்தர் கெவுரி
ஆங்காரங் கொண்டு எழும்பி வந்து
காப்புலியர் சோல்சர் காலாள்
பறங்கியைச் சுத்தி பீரங்கி யேத்தி
கூட்டமிட்டுச் சுத்துக் கோட்டை போலே
வளைந்துகொண்டு தேட்டமுடன்
சூரியனுஞ் சேர்ந்தார் அஸ்தமன கிரிதனிலே
மறுநாள் விடிந்து கதிரோனும் வந்து
-தித்தார் அந்தக் கீழ்த்திசையில்
நதிக் கதிரோனைக் கண்டு
த்தனெனும் புக்குளி வேல்முருகு
யுதியுடன் சேனை யெல்லாம்
ந்து ஒருமித்துத் தானெழுந்து
மிக பார்த்து மன்னன்

மாட்டினுன் அக்கினீசு படை தத்தளிக்க
அசதி கண்டு வேல்முருகு கோட்டை
அணைவாக வந்து நின்று கொண்டு
கீழ்த்திசையிலோர் வகுப்பாக
வேல்முருகு சேனை கெட்டி யாகவேசிலர்
வாள்வீரர் மேற்கே ஓர்வகுப்பாக
ஒருசே கரமாய் வந்து
வளைந்து கொண்டு வாளால் குத்தி
மாட்டி னுன்வெகு சேனைகளை
தந்தாய் இவர்கள் வருஞ்சமத்தைத்
தானறிந்தான் அக்கினி மேஸ்தர்துரை
நான்கு திசையிலும் பேரணியாய்
நாட்டியே பீரங்கி தீட்டி விட்டார்
சால வகுத்துத் தான்பொருதார்
சண்டை நடத்தினுர் கோரமுடன்
மேலாய் அனலோன் வெகுகோ பமுடன்
முழக்கினுன் பனிரெண்டு பீரங்கியையும்
தனிவேட் டெழுப்பிச் சமர்புரிந்தார்
தாக்கினுர் வெகுஆர்க் கமுடன்
தனதான வேல்முருகு படைதள
மாயிர முந்தான் மடிந்திடவே
அவனுட படையில் அப்படியே
அழிந்தார்க ளாயிரம்பேர்
அந்நேரம் அக்கி னீசுதுரை
அடவல்ல மினிநா மிங்கிருக்க
என்னவே சொல்லி படையெழுப்பித்
திருக்கோட் டிநகர் தன்னிலே
செல்ல வென்று படைக்குத் தம்பூரு
தீரன் மாறி யடிக்க லுற்ருர்
வல்லவன் படையெழுப்பி வருகிறது
திருக்கோட்டியூர் பாதையிலே
கும்பலாய் எழுந்து குதிரை
ரிசுமுட்டுக் கொடுமுடி யாக வருவதுவை
வம்ப னெனும்வேல் முருகு அனலன்
வாரடமும் மனவலுவும்
தக்கபுகழ் நன்னி தானறிந்து
தன்படை முழுதும் எழுப்பிக் கொண்டு
அக்கரை யாக வழிமறித்து
அனலன் படையில் சாடிடவே
சோல்சர் படையிலே நாலாறு
துஞ்சினுர் அங்கவர் சேனையிலே
காசினியில் நன்னி காலாட்படை

கால்மாடு தலைமாடாய் சாய்ந்து போச்சு
கலங்காமல் அக்கி னீசுத்துரை
காலாள் படையைத் தேற்றிக் கொண்டு
மலங்கா தீரென்று மனத்திடமும்
மன்னன் கெவுரிதிடம் சொல்லிவர
கூட்டித் திரட்டிப் பாளையத்தை
கோட்டி போலவே வளைந்து கொண்டு
சவுகரிய மாகத் தளத்தின் மத்தியில்
தானடித்தார் கெவுரி கூடாரம்
பவராகவே பீரங்கி மோரீசா
பக்க மெட்டினும் எத்தி வைத்து
பேசா திருமெனப் பாளையத்தைச் சுத்திப்
பிரபல மாகவே பாரா வைத்தார்
விசையன் பாரா மாவேந்தன் நெடுவயல்
அச்சு வானனு மொன்று சேர்ந்து
மூவிரண்டு மன்னரு முடிகிச் சமர்பொருது
நாவரண்டு நடுங்கி விசன முற்று
திருப்பத்தூர்க் கோட்டியூர் சென்று
அவர்கைவசம் செய்து கொண்டார்
இன்னிமேல் நம்மால் இவனை வெல்ல
வலாது அக்கினிசு தேவ னும்
மன்னன் கெவுரியும் அக்கினிசும் வந்து
மகிழ்ந்து சீமையில் முனைந்து விட்டார்
என்று மனந்தேறி எழுந்து வேல்முருகுடன்
ஏக மனதாக வேகமுடன்
சென்றனே நன்னியுடன் தனது
சேனையையுந் திரட்டிக் கொண்டு
காவலவர் சென்று கடும்போர் புரிந்திட
கண்டு அக்கினி மேஸ்தர் துரை
ஆவலுடன் படையை எழுப்பி
அணியணி யாகவே நிறுத்திக் கொண்டு
மன்ன ரிருவர் வளைந்து பெரும்போரில்
மாண்டுதே அநேகம் சோல்சர்படை
சென்ன லக்கி னீசுதுரை
திருப்பியே பீரங்கிச் சப்தந் தீந்திடவே
மிஞ்சியே அக்கினிசு மேஸ்தர்துரை
வேந்தன் விட்ட குண்டதினால்
அஞ்சு நூறுபேர்கள்
அழிந்தார் நன்னி படைதனிலே
அக்கரை யாக இதையறிந்தே
அப்பவே புக்குளி வேல்முரு கெழும்பி
பக்கத் தணியாகப் பதுங்கி எழும்பியே

பாய்ந்து குத்தும் வெட்டும் நடத்திடவே
விட்டானே வேல்முருகு வெகுவேகமாய்
வாலா வளரி ஈட்டியினால்
பட்டாரே அக்கினீசு பாளையத்தில்
நூறுபேர் பாருலகு அதிர்ந்திடவே
காட்டையும் மறைவாக்க கண்மாக் கரையையும்
பதிவாகக் கனசேனையைச் சேதம் செய்தான்
மேட்டுக் கருகாக வீற்றிருந் துவெகு
சேனையைக் கொல்லுகிறான் வேல்முருகு
பக்கமே வேங்கைப் பதுங்கி எழுந்தால்போல்
பாளையந் தனில்பாய்ந்து
அக்கி னீசுதுரை பாளையத்தி
லதட்டியே வேல்முருகு குலவை யிட்டு
இரவு பகலாக இரண்டுநாள் சண்டை
புரிந்தான் அநேகம் பாளையத்தை
அரவு நெளித்தது போலழியும் படையைக்
கண்டு அக்கினி மேஸ்தர் மனங்கலங்கி
சித்தங் கலங்கியே அக்கி னீசு
தீரன் கெவுரி யிடத்தில் வந்து
உற்ற வசன முரைத்திட வேணுமென்று
உண்மையுாய்க் கேட்டிட அக்கினீசு
மன்னு கெவுரி மகராச வேந்தே
மாநில மிந்த இந்தியாவில்
நன்னுச் சமர்புரிந்தான்
நல்ல சமர்செய்தான் வேல்முருகு
கருப்பு மனிதன் கலங்கா மனத்துடன்
காரிருள் தன்னில் அமர்புரிந்தான்
நெருப்பில் எதிர்த்து நின்று பொருது
நெருப்பு அவித்தான் இந்த வேல்முருகு
கண்டறி யோமிந்தக் காவல னுறுதி
கண்வாய்க ளெல்லாம் பார்த்து இருக்கோம்
விண்டு உரைக்கக் கூடாது
வேந்தே வீரரிலிவன் கொடிய னென்றான்
இப்படி வீரர் இருந்தாலும் மருதுக்
கிளைத்திடுவோ மென்று எண்ண வேண்டாம்
என்னுடைய சேனை ஈராறு பட்டாளம்
ஏகமாய் அழிந்து மடிந்தாலும்
மன்னவனே வென்று வாங்கிச் சிவகெங்கை
மாநகர் உனக்குப் பட்ட மென்றான்
மயங்கி விடாதே மன்னவ னேயென்
வார்த்தை தவறாது இராச மன்னு
பயமாய்க் கெவுரி வல்லவன் பாச்சா

அக்கி னீசுடன் ஏது சொல்வார்
அக்கி னீசு வேந்தேநீர்
அநேகம் கெடித்தலம் பிடித்திருந்தும்
கைக்குள் வசப்படுத்தி யநேகங்
காவலரைச் செயித்த மன்னன்நீர்
வெள்ளை மருது மிகுபொல்லான்
வெகுபேரைச் செயித்த மன்னனிவன்
பிள்ளைகள் மைத்துன மாரப்படி யேவெகு
பலமான வீரர்க ளானதினால்
அவனி தனிலுள்ள மன்னர்
அரசரைப் போல்நீ ரெண்ண வேண்டாம்
கவனம் வைத்து மருதிரு வரும்மேல்
கண்ட வீரருந் திரண்டு வந்தால்
காணுவீர் பாருமென்ன அக்கினி மேஸ்தர்
கடுங்கோபங் கொண்டே சினந்து
சேனைக்கு சாறு பண்ணி அக்கினிசு
படைதிரட்டி வெகுசே கரமாய்
தானுங் கெவுரியும் போணி மத்தியில்
சரியாகப் பரியினி லேறிக் கொண்டு
மேல்முகத்தில் நன்னிப் படையுடனே
விடிய ஒருச் சாமமதில்
மால்கெவுரி அக்கினிசு மேஸ்தர்
மன்னன் தளத்தினில் போய்ப்புகுந்து
சுற்றி வளைந்து சூழ்ந்து கொண்டு
சூரனும் சுப்பிர மணிய சுவாமிபோல்
குத்தி வதைத்துக் குலவை இட்டு
கொக்கரித்து வெகுசத்த மிட்டு
தென்திசை தன்னில் வந்து நின்று
தீரன் அக்கினிசு சேனை தளத்தினில்
வந்து விழுந்தான் வாருப்பூர் மன்னன்
வானத் திடிபோல் முழக்கஞ் செய்து
சிந்தை சினந்து குலவை இட்டு
ஜெய ஆயுதங்க ளநேகந் தொட்டு
வாண மெறிந்து சக்கரம் வாள்தடி
வலுசட்டி சமுதாடு வளரியினால்
கோணவேல் கொண்டு பாளையத்தைக்
குத்தி இழுத்துக் குடல்சரிய
பைய நீருஞ் சோல்சர் கும்பினியும்
பாங்காய் புல்தார் சுபேதாரும்
மெய்சோர்ந்து காப்பிரியும்
வெகுபறங் கியரும் தத்தளித்து
அபய அபயமெனக் கூக்குர லிட்டு

அலரி யழிந்தது நூறு சனங்கள்
சீமையந் தன்னில் பீரங்கிச் சப்தம்
பரியாமல் சந்ததிஞல்
அந்தி சந்தி உச்சி அஸ்தமிச்சு
மல்லிரவில் அழித்தான் அநேகம் பாளையத்தை
வந்து விழுந்த குத்தி
வாளுளை மாய்த்திட்டான் சேனைகளை
சீறி விழுந்து சினந்து பன்றிவேலால்
சிங்கம் புலியில் பாய்ந்ததுபோல்
வாருவெடி கயத்துவெடி
வலுவில்லுக் கம்புருண்டை கல்லா ளுலும்
குண்டுகள் தைத்துக் கூவென் றலரிட
கூவிய வாளாக் களையால் வதைத்திட
அப்படி மூன்றுநாள் இராப்பொழுது
அடித்தா னக்கினீசு பாளையத்தை
இப்படிக்குச் சண்டை இசைவாய்ப் பொருதையில்
இரவினில் ஒன்றும் அறியாமல்
கரிசைப் பதியான் எழுந்து வந்து
கர்த்தன்படை யத்தனையுந் திரட்டி
வரிசையாய் நெடுவயலான்
வந்து குறுக்கிட்டுப் போர்புரிந்தான்
இன்னிநாம் இங்கே இருக்கத் தகாதென்
றெண்ணியே எழுப்பிப் பாளையத்தை
மன்னன் அக்கினீசு மேஸ்தர்
மனது உறுதியுடன் படையணி வகுத்து
செப்பமுடன் இந்தத் திருக்கோட்டியூர் விட்டு
செல்லுவோஞ் சோழ புரந்தனிலே
எப்பாதையும் நடந்து இருளா ளுலுஞ்
சோழபுரஞ் சேர்ந்தால்
வண்டன் மருது மன்னனுட சேனை
வந்து வணங்கிடுங் கெவுரி பாதம்
தொண்ட னெனவந்து நாடு வணங்கிடுந்
துரைமகன் கெவுரி வல்லவனை
போவே மெனவே புல்லாங் குழலூதி
புறப்பட்டான் அக்கி னீசுமேஸ்தர்
தாவி யெழுந்து தம்பூர் அடித்த
சத்தத்தைக் கன்னடர் தான்கேட்டு
நன்னி யோராயிரஞ் சேனையாள் கூட்டி
நடக்கையிலே நெடுவயல் வேந்தன்
முன்னே நடந்து முடுகி யெதிர்த்திட
மூர்க்கன் அச்சுவான் நம்படையுங் கூடிட
மூவருடன் புக்குளி வேல்முருகு

முன்னணி யாகத் தன்படை யுடனே
ஆவலுடன் முந்தி யடுத்திருக்கும்
அவ்வழி அக்கினீசு அறிந்திடாமல்
மாறி நடக்க வழியறி யாமல்
மாவேலிக் கண்மாய் மதுகாலில் வரவே
காரிருள் தன்னில் வழி தெரியாமல
காஞற்றில் வந்து இறங்கிடவே
மனேக்கா லிருட்டில் ஆச்சு தென்று
மன்னர் இளைக்காமல் கவிந்து கொண்டு
வளைந்து சுத்தியே நாலு பக்கமும்
வகைவகையாய் வந்து கன்னடத்தார்
வேலு யெரியீட்டி வாளலகு
விளங்குங் கல்வெடி கயத்து வெடியால்
மாலு மாக்களும் எதிர்த்ததுபோல்
வந்து எதிர்த்தார்கள் கன்னடத்தார்
காஞறு விட்டுக் கரையேறி அக்கினீசு
காட்டு வழியாக நடந்திடவே
மானேக நன்னிவகைச் சனங்கள்
வந்து வளைந்தார்கள் பாளையத்தை
முன்னுக வந்து முடிகிவெகு
மூர்க்கமுடன் வேல்முருகு கனதாட் டிகமாய்
மன்னர் மதகு பட்டிவளர்
கண்வாயைக் கட்டிக் கொண்டார்
கண்வாயை விட்டுக் கடவாம லக்கினீசு
கனவேட் டெழுப்பிக் குண்டு விட்டார்
மணல்வாரி மாருதங்கள் வருஷித்த
பாவனையாய்ப் பொழிந்தார்
வாலைாமுடன் குண்டு வளதடி சக்கரம்
வாலா ஈட்டி வேலலகு சுண்டு வில்லால்
வேணபடி வல்லையம் வெடிகள் சர்கோபி
கவ்வானக் கல்லிட்டு அமர்செய்நார்
வாவே யெதிர்பாய்ந்து மன்னன்
அக்கினீசு மேஸ்தர் பாளையத்தில்
புரவி இருப்து சிப்பாய் நானூறு
போச்சு ஆப்புச் சோஞ்சுடனே
அரவே சுபயதார் தானிரண்டு
அவட்டொன்றுந் தானழித்தார்
தவருமல் ஒட்டகை சுவடாய்
தானிரந் தக்கினீசு படைமாண் டதினுல்
கவனமுடன் அக்கினீசு மேஸ்தர்
கடுங்கோப மாய்படை யெழுப்பிடவே
காஞறு ஓடிச் செங்குருதிபாய

கண்டக்கினி மேஸ்தர் கண்கள் பொரிபரக்க
தானே வெகுகோப மாகி மேஸ்தர்
தங்கள் பராபரனைத் தொழுதேத்தி
அன்று கண்வாயை அகண்டு
ஆரிரண்டு பீரங்கியும் பலித்தாத் தீந்து
இன்று எழுப்பி பாளையத்தை
ஏகமாய்த் திரட்டி யணிவகுத்து
துருப்பு நெருங்கிப் பட்டாளந்
திரண்டு கொண்டு கண்வாய் கடந்திடவே
கருப்பு மனிதர்வெகு கூட்டமுடன்
கையாயுத முஸ்தீபுடன்
அணைவாக அங்கிருந்த ஆறுதள கர்த்தர்களும்
ஆச்சிரமங் கொண்டு எழுந்து வந்து
கீழ்மே லிருபுரமும் கெக்கலித்துத்
தொடைதட்டிக் குலவை யிட்டு
நெரு நெரென்று காட்டில் வந்து
நேர்ந்தவரைக் கொன்று தானுழக்கி
விருவிரென்று நடந்து பட்டாளம்
வெள்ளைக்கல் பொட்டல் வெளியில் வந்தார்
ஒக்கூர் வெளியும் ஊரழியும்
கண்மாயும் உகந்தமேட் டணைவாக
தொக்கென்று நன்னி வேல்முருகு
தொடர்ந்து வந்தார்பின் வாங்காமல்
இரவு பகலாக இடைவிடாமல்
எதிர்த்துச் சண்டை நடத்துவதை
அறவே மனங்கலங்கி அக்கினீசு
மேஸ்தர்க் காங்காரம் உண்டாய்
மன்னன் கெவுரியிடம் வந்து
வழுத்துவார் அக்கினி மேஸ்தர்துரை
என்ன நினைவு உமக்கு
எனக்குரைக்க வேணு மிப்போது
நச்சுப் போர்செய்து துய்ந்து
வருவதில் நமதுபடை பாளையத்தில்
இச்சணமே யிவர்கள் கொன்றார்
இறந்தார் வெகுபடைகள்
இங்கே நாம்விட்டு யெதிர்த்து
வேட்டும் பீரங்கிக் குண்டாலே
அங்கே அவரில் ஆயிரம் இறந்தும்
அவருக் கெள்ளளவும் மயக்க மில்லே
தீரனே நாமே சிறுவர் புரிக்கருகே
சென்று இறங்க இடம்வசதி யுண்டோ
பாரினில் இரண்டு மருதுபடை

பாளைய மங்கே கூட்ட முண்டோ
மன்னன் அக்கி னீசுதுரை கேட்க
மகராசன் கெவுரி வல்லபேந் திரதுரை
சென்ன சூள்சிறுவர் புரிதன்னில்
சேர்ந்த இருமருது படைகூட்டம் ரொம்ப
செல்லலாஞ் சோழ புரந்தனிலே சென்றால்
நம்மை நாடு வணங்கிவிடும்
எல்லோரும் வந்து வணங்கிடுவார்
எதிரிபடை கூட்டம் கலைந்துவிடும்
வாடுவான் வெள்ளை மருதிருவர்
மனமிடைந்துத் தத்தளித் திடுவார்
காடு கெதியெனத் தானடந்து
காட்டுக்குள் ளிருந்து சண்டை செய்வான்
துரையே படையெழுப்பிச் செல்லுவோம்
சோழ புரங்கோட்டை
சிறுவர் புரிக்குச் செல்ல வென்றால்
சீரான பாதை நேர்கிடையாது
சீறிச் சினந்து சென்ன லக்கினீசு
சேரவே படையை அணிவகுத்து
வாரும் வாருமெனச் சேனைகள் தன்னை
வகைவகை யாகவே குமித்து விட்டு
கோட்டைக் கட்டாகவே பட்டாளத்தை
கொற்றவனும் மதுரை அக்கி னீசும்
வேட்டெழுப்பி ஒக்கூர் வெளிகடந்து
வெகுகாட் டூடே படைநடத்தி
ஓட்டமும் நடையு மாகப்படை
ஓடி வரும்போது நன்னிபடை
காட்டினில் வந்து வழிமறித்து
கடிந்து போர்பொரு தனுற்றார்
திடமாய்ச் சமர்புரிய சென்னல்
அக்கினீசு மேஸ்தர்துரை
அடவாக ஆயிரம்பேர் அழிந்தது
அக்காட்டுச் சண்டையிலே
பலீரென்னவே பீரங்கி பனிரெண்டிலும்
பாச்சி மருந்து குண்டு போட்டு
பலமாகப் பீரங்கிச் சப்தம் பரிந்திட
பெருங்காட் டணைவில் நின்றபடை
படிந்தார்கள் வேல்முருகு
பாளையம் இரண்டாயிரம் சனமும்
பிடித்தபிடி விடாமல்
பெரும் பீரங்கிச் சத்தம் எழும்பிடவே
நன்னிச் சுவரன்ன ராணுவத்தில்

இரண்டாயிரம்சனம் மடிந்தார்கள்
உன்னி அநேகம் படைதிரண்டோம்
ஒருபலித் தாவில் மடிந்தாரென மயங்க
கண்டார் அவர்கள் கலங்கினதை
கண்டந்த அக்கினி மேஸ்தர்துரை
கொண்டார் கடுங்கோபங் கொண்டு
கொளுத்தினர் பீரங்கிக் குண்டை எல்லாம்
வண்டுபோல் குண்டு கருமருந்து விட்டு
பலித்தாவை அக்கினீசு தீந்தடவே
விட்டார் அதனாலே வேல்முருகு சேனையில்
விரைந்தார் நானூறு சனங்கள்
கட்டாக வந்த படைகளெல்லாம்
கால்மாடு தலைமாடய்ச் சாய்ந்திடவே
யீதறிந்து நன்னி படையெழும்பி
யேகமாய்க் குத்தும் வேட்டும் நடத்திடவே
வேதனையாய் அக்கீ னீசுபடை
வேந்தர் இருபது பேரழிந்தார்
வருந்தி விழுந்திடும் அக்கினிசு சேனையை
வண்டியி லேத்தி நடத்திக் கொண்டு
திருந்த நடக்கையிலே
திருமதில் கோபுரந் தெரிந்திடவே
அண்டினர் சோழ புரந்தனிலே கந்த
வனப்பொய்கை யடுத்தார் அக்கினீசு கெவுரிதுரை
மண்டியே கோவிலுக்குத் தெற்கே
குளத்துக்குக் கீழ்புர மடித்தார் கூடாசம்
காவுமிளந் தோப்புகளுங்
கந்தவனப் பொய்கை தீர்த்தங்களும்
மேவிய கோபுரந் திருமதிலும்
மேலான தேரோடும் வீதிகளும்
மண்கோட்டை போட்டு சத்தி
மாக்கோட்டை அதைச்சுத்தி லிட்டு
பொன்போலே கோட்டைக் குள்ளே
கெவுரி அக்கினீசு புடைசூழவே இருந்தார்
ஆனைமே லம்பாரி தானும் வைத்து
அக்கினீசு மேஸ்தர் கெவுரியுடன்
சேனைகள் சூழ்ந்திட வீதிசுத்தி
தேவர்கள் போலே பவனி வந்தார்
பவனி வந்து கெவுரியும் அக்கினீசும்
பாங்காக அங்கே கொலுவிருந்தார்
அவனிபுகழ் நடுநாட் டரசரெல்லாம்
அணியணி யாகவே வந்து பணிந்துகண்டார்
நாடு முழுக்கக் கெவுரி ராசனை

நலமாய் வணங்கிக் கண்டு கொண்டார்
வாடியே வேலு முருகனும் மன்னன்
நெடுவய லானச் சுவான னுடன்
கூடியே வாருப்பூர்க் கொற்றவனும்
குழந்தை நன்னி படையுடனே
நம்மாலே ஆனமட்டும் சண்டை
நடத்தினோம் இராசன் கெவுரியக்கினி மேஸரும்
சிம்மமென அக்கினி மேஸ்தர் நிடாரித்துப்
பூமியைக் கெவுரி கைக்கொண்டான்
நாடுகள் வந்து வணங்கினதால்
நாடெங்கும் கைவசம் ஆச்சு தென்று
பாடியே மருது படைமன்னர்
மனங்கலங்கியே சோர்ந்திருந்தார்
ஆளலா மென்று அதிகாசை தன்னுடன்
அக்கினீசுங் கெவுரியு முள்புகுந்தார்
சோழபுரங் கொடிப்போட்டுக் கொண்டு
துரையுங் கெவுரியும் மகிழ்ந்திருந்தார்
என்று மருதுபடைத் தலைவர்மனங்
கலங்கி யேங்கியே கூட்ட மிட்டிருந்தார்
சென்றுதான் சோழ புரத்துக்குத்
தென்கிழக் காகவே கூட்டங் கூடி
பாளைய மயங்கி எண்ணவொண் ணாச்சேனை
பார்க்கடல் போலே திரண்டவர்கள்
வேளை உறக்கங்கள் தான்பார்த்து
விடிகிறதற்குள் ஒன்றொன்றாய்
சென்றே கெவுரி மகாராசனிடம்
திட்டிச் சீலைபோட்டு வணங்கிடவே
நின்றார் வணங்கி ரெட்சிக்க வேணுமென்றார்
நிருபனும் மகிழ்ந்து வருதி செய்தார்
பத்துநாட் குள்ளாக மருது படையில்
படுபாதித் தளங்குறைந் ததுவே
வித்தகனும் அக்கினீசு வேந்தனிடம்
சென்றே கெவுரி ராசன்துரை
கண்டுகொண் டார்வெகு கால்தளங்கள்
காவலுக் கப்படிப் போடு மென்றார்
உண்டு சுகமாக வேயிருந்து
உதவி யாகவே படைசேரு மென்றார்
வண்டன் மருதினி வாழ்வ தில்லை
மாற்றா னாய்நாம் வந்ததினால்
ஆள்வான் கெவுரி ஆதரவால்
உங்களுக்கு அநேகம் வாழ்வு உண்டாம்
வாழ்வன்றி வாழ்ந்து எந்நாளும்

தயங்கா திருப்பீ ரெனவுரைத்தார்
கண்டார்கள் அருகிருந்த கால்தளங்கள்
கெவுரியிடஞ் சேர்ந்ததுவே
விண்டு நெடுவயல் வேந்தன் அச்சுவர்னன்
வேல்முருகு மனமுள் ளுடைந்து
போனவர்கள் போக புத்தியுடன்
சேர்ந்தவர்களைச் சேகரித்து
ஆனவர் தங்களைக் கூட்டிக் கொண்டு
அமர்புரிந் தார்கள் இராப்பகலாய்
முப்பது நாளாய் முடிந்திடுஞ் சண்டையில்
மிஞ்சினது நன்னி படையறுபது
ஒப்புரவா யக்கினீசு குண்டால்
ஒழிந்தார் ஐய்பாயிரஞ் சனங்கள்
திக்கோர் புகழ்கின்ற சென்னல்
அக்கினீசுதுரை சேர்ந்த கெவுரி ராசனுடன்
சுக்கம் படையினில் சிதைந்தோர் போகத்
தன் படை தன்னை யணிவகுத்து
சோழ புரத்தில் ஒருமாதம் நின்று
சூழ்ந்த படையை எழுப்பிக் கொண்டு
வாழும் மருது சிறுவைநகர் நோக்கி
வருகுது பட்டாளம் பீரங்கி சத்தமிட்டு
சிறுவர்புரி நோக்கி சென்னலக் கினீசுதளம்
சேர்ந்து துடியாய் நடந்திடவே
பெருமையுடன் மருது படைபிறகே
நன்னி படையுடன் வேல்முரு குந்துயர (தொடர)
இன்னளவு நம்மா லியன்றமட்டும் பார்த்தோம்
இன்னி நடப்பது தெய்வச்செயல்
என்ன எழும்பி எதிர்த்து மறித்து
இருவர் படையும் எசலப் (எதிரப்) பொருதையில்
தன்னை யக்கினி மேஸ்தர்துரை
தளம்போய்ச் சுத்தி வளைந்து கொண்டார்
இருவருட படையும் ஒன்றுக் கொன்று
எதிர்த்துக் குத்தும் வெட்டும் நடக்கையிலே
விறுவிறு என்று அக்கி னீசுதுரை
விளங்கும் பீரங்கிக் குண்டு பரியவிட்டார்
குண்டு பரிந்து நன்னி படையுடன்
கூடி வேல்முருகு படையும் அழிந்திடவே
கண்டு வீரங்கள் விட்டு விலகினர்
கர்த்தன் வேல்முருகும் நன்னியும் மனங்கலங்கினர்
கதிரோன் கிழக்கே வேகமாய் வரக்
கண்டு படைகள் நெருக்கிடவே
சதிரான அக்கினீசு மேஸ்தர்துரை

தாய்முகங் கண்ட சேயைப்போல்
முக்கியமாய்ச் சூரிய னுதித்திட
மூர்க்க முடன்வெகு தீர்க்கமதாய்
ஒப்பிட்டுச் சேனே யணிவகுத்து
ஒருகும்பாய்த் திரட்டி சோல்சர் முன்விட்டு
அன்னம் புசியாமல் தண்ணீர் குடியாமல்
ஆகார மில்லாமல் தன்படையை
இந்நாள் மருது இருக்குஞ் சிறுவயல்
தன்னைப் பிடித்துத் தாகந் தெளிவதாய்
பசிக்கு அமுது டைப்பன் புசிப்பு
பதினேஞ்சு நாழிகைக் கவட மென்றே
இப்படியே சொல்லி யேகும் படைகளை
எழுப்பி யேவெகு வேகமுடன்
செப்பமுடன் மட்டிச்செடிங்
காட்டை விட்டு வழியைக் கண்டுதுரை
வழியும் வெளியும் வயலும் வரப்பும்
தாண்டி வருகுது கும்பினிப் பட்டாளம்
தெளிவாகக் கண்டு சேனை பட்டாளம்
தீரத்துடன் முன்னே நடந்திடவே
காட்டையும் மேட்டையும் தான்கடந்து
காவல்வன் அக்கினீசு மேஸ்தர்துரை
ஓட்டமும் நடையுமா யோடி வருகையில்
உத்தர கோபுரங் கோவில் கண்டார்
இதுவே சிறுவை நகரெனக் கெவுரி
யேகியே அக்கினீசு நடந்தார்
அதிக மகிழ்ச்சி கொண்டு
அக்கினீசுங் கெவுரியுந் தானடந்தார்
இறந்த தளங்களையும் ஏறிட்டுப் பாராமல்
யேகியேபடை வேகமுடன்
விரைந்து வண்ணுன் கண்மாய் வீதி
வெளிவந்து சேர்ந்ததுவே
வந்தே சிறுவைநகர் அக்கினீசு மேஸ்தர்
வண்ணுங் குளந்தனில் பாளைய மிறங்கிடவே
சிந்தை கலங்கிச் சிறுமருதுத்
தெளிந்து பாளையந் தனைப்பார்த்து
ஆங்கார மாக அக்கினீசு வந்ததை
அத்தன் மருது கண்ணுல் பார்த்து
மாங்கொண்டான் பொய்கை வடகரையில்
மாந்தோப்புத் தன்னிலே தானிருந்து
வாலே விசுவை மருதேந்திரன்
வடமுக மாய்க்கொலு வீற்றிருந்து
சாலவே மாற்றுன் வருவதையும்

தன்படை மறித்துப் பொருவதையும்
பார்த்துமே மருதேந் திரதுரை
பல்லை நெருநெரெனக் கடித்து
ஏகத்தன் கட்டாய் படையிருந்தும்
எதிரியும் படையும் வீட்டில் வந்துவிட்டான்
வீணாய்ப் பலதிசையில் படையை
வீற்றிருக்கப் போகச் சொல்லி விட்டோம்
வீணாக நாமிருக்கும்
வீட்டையும் ஒப்புக் கொடுத்து விட்டோம்
இன்னிமே லென்ன இருந்தென்ன
இப்புவி நம்மை விலகிப் போச்சு
மன்னன் கெவுரி வல்லவனும்
மாற்றான் கும்பினி ஆதரவாய்
ஆள்வான் சிவகங்கை நகரரசும்
அதிகார முள்ள தெல்லாம்
மாள்வோம் நாமும் நமது மைந்தரும்
இளைஞர் மச்சுனமார் சுற்றமுடன்
பட்டணத்திலுள்ள சனங்க ளெல்லாம்
பாரி வனந்தன்னில் செல்லு மென்றார்
திட்டமுடன் காட்டில் செல்லுமென
தேரியே பாரிகள் போடச் சொன்னார்
ஊரிலுள் ளவருங் சகலருங் காட்டினில்
ஊரணிகுளத்தில் நாய்கழுதையை உருட்டச் சொன்னார்
விருப்பமுடன் மேஸ்தர் அக்கினீசு
வேந்தன் கெவுரி வீற்றங் இருக்காமல்
நெருப்பைக் கொளுத்தி நிமிடத்தில்
நிலங்களை வெட்டித் தள்ளு மென்றார்
தன்னுட சேனை பெண்டு பிள்ளைகள்
தளங்களை யெல்லாம் திரட்டிக் கொண்டு
அந்நேரமே எழுந்திருந்து மருது மன்னன்
ஆரண்ணியந் தன்னில் சென்றிடவே
சித்திர வனமான சோதி வனந்தன்னை
தண்ட காரண்ய வனமென் றெண்ணி
வெத்தியூர்க் காட்டில் சேனை படைகளை
வேகமாய் மருது கூட்டிச் சென்றார்
சக்கந்தி வெங்கணப் பெரியுடையார்
தன்னுடன் அடங்கலுங் கூட்டிச் சென்றார்
மக்கள் மருமக்க மார்மனைவி
மன்னர் படைஞர் இளைஞருடன்
அடங்கலுங் காட்டில் சென்றார்கள்
ஆன பரிவார முள்ள தெல்லாம்
திடங்கொண்டு அக்கி னீசு

சின்ன பழங்குடி கூடார மடித்தான்
பூங்குடிக் கண்மாய் பெரிய வெளிதனில்
பிரபல னக்கினீசு பாளைய மிருந்தான்
பாங்காகக் கூடாரம் பதறுமல்
அக்கினீசு கெவுரி தாணடித்தார்
சந்தோஷ வேட்டுத் தீர்ந்திடவே
தவறுமல் பாளையந் தம்பூரு முழங்கிடவே
பந்தயஞ் சொன்னபடி மேஸ்தர் அக்கினீசு
பாவட்டர் திறுத்தி தீனி தின்றுர்
பாரி படுக்களம் பத்திரமாய்ச் சுற்றிப்
பாருப் போட்டுக் காவலிட்டார்
பூரித்து மேஸ்த ரக்கி னீசுதுரை
புசித்தானே டீப்பனுந்தான்
வாருப்பூர் மன்னன் நெடுவயலாண்
வந்த படைகளைத் தான்திரட்டி
சீரான வேல்முருகு
சிறுவயல் நன்னிச் சுவர்னன் படையுடனே
சீவிக் கண்மாய் இரண்டும்
சிறந்திருக்கும் பழங்குடிக்கும்
தான வர்கள் தெற்கே
தானைய மாகவே தானிருந்தார்
பொருஞ்சமரில் அன்று பூபாலன்
அக்கினீசு மேஸ்தர் கெவுரியுமாய்
வரும்படையில் நானூறு சனங்கள்
மடிந்தார்கள் பட்டாளந் தன்னிலேதாண
அக்கினீசு மேஸ்தர் கண்டு
ஆங்கார மாகவே தானெழுந்து
பக்கத்தில் நின்ற பன்னிரண்டு
பீரங்கியும் பலித்தாத் தீர்ந்திடவே
எழுப்பிப் பரிந்திடுங் குண்டுகளால்
இங்கிருந்த நன்னி படையுள்ள தெல்லாம
வரவர வேபடை மடிந்துவிட
மற்றவர்க ளெல்லாம் ஒளித்தோடிடவே
இன்னி நாம்பெரும் பாளையத்தில்
எதிர்த்து எப்படிச் செயிக்கப் போறோம்
மன்னன் மருது தன்னிடத்தில்
வந்துரைத் தார்படைத் தலைவ ரெல்லாம்
வந்து உரைத்திடக் கேட்டு மருது
மன்னரைப் பார்த்து எது சொல்வார்
சிந்தை கலங்கி மிகுந்த இலேசமாய்
செப்புவார் மருது மன்னவனும்
இங்கேயினி நம்மாலே எது நடந்திடும்

என்னுட செயலல்ல ஒன்று மில்லே
உங்கள் மனதிற்கு உகந்தபடி
உங்களூறு தலத்துடன் போய்ச்சேரு மென்ருர்
நாட்டை எதிரி வசமாக்கி
நாமாய்க் கொடுத்து விட்டு விட்டோம்
காட்டை யின்னி யாறுலுங்
காபந்து செய்து பிழைத்திடுவோம்
கட்டாப்பு ஊடைய மெட்டுகளும்
கனத்ததொறு பாரு காவல்களும்
திட்டமுடன் பீரங்கி மோரீசா
சிறந்ததோர் மேடைகளும்
கற்பித்தான் மேஸ்தர் கர்னல் கலெக்டர்
சென்னல் அக்கினீசு திறமாய்க் கெவுரி
மன்னன் றனேயழைத்து
வகையா யுரைப்பா ரங்கவற்கு
மன்னவனே யின்ன மருதுக்கு
மகாசேனேதா ணநேக முண்டு
சென்னல் பரியுஞ் சிறுவர்புரிக் காட்டில்
செயிப்பது அரிது மருதுதனே
வைநீருஞ் சோல்சரும்
பட்டாளந் துருப்புச் சேனேயுடன்
கைபிரித்துத் தானணியாய்க்
காட்டை வெட்டி வெளியாக்கி
காளேப்பதி காளீசர் சன்னதி
கனமான ஆனேமடுத் தெரிய
நேராகக் காட்டை வெட்டி வெளியாக்கி
நிமிடத்தில் வழியையும் உண்டாக்கி
சீரான கோபுரமும் சிறுவர்புரிக்
கெதிராகத் தெரிந்திடச் செய்ய வேணும்
சொன்ன உரைக்கேட்டு அக்கினீசு மேஸ்தர்
துருப்புக் குடனே வருதி செய்தார்
கூந்தாலம் வெட்டு அரிவா ளோடு
கோடாலி கட்டப் பாரைகளால்
சாய்ந்த எரியனுடன்
சதிரிக்கும் வாய்ச்சாத்துகளும்
மண்வெட்டிக் கூடையுடன்
வகைவகை யாகவே தானெடுத்து
அப்படியே நல்லதென்று மேஸ்தர்
அக்கி னீசுதுரை தானெழுந்து
செப்பமுள்ள காட்டில் செடிக ளெல்லாம்
வெட்டி நொறுக்க லுற்ருர்
வெட்டினுர் காட்டை யெல்லாம்

வெகுவேக மாய்வெளி யாக்க வென்று
திட்டென வெட்டி வெளியாக்கச்
சேனை படைகளைத் தான்திரட்டி
மருது மன்னனும் படைசேர்த்து
வந்து எதிர்த்துப் பொருத லுற்றார்
இருவர் தளமும் ஒன்றோ டொன்று
எதிர்த்து ஏகமாய்ச் சமர்புரிந்தார்
காடெல்லாம் சுத்திக் கட்டாப்புக்
கண்ட விடமெல்லாம் ஊடையமும்
மேடைமேல் பீரங்கி யேத்தி யேவெகு
வேகமாய் சத்தம் பரிந்திடவே
சண்டைமேல் சண்டை தவறாமல்
தானே கடும்போர் பொருதிடவே
தண்ட காரண்யச் செடிகளையும்
சேரவே வெட்டி நொறுக்க லுற்றார்
வெட்டிக் காட்டில் நுழைந்து சண்டை
வெகுவேக மாய்ச்சமர் பொருதையிலே
கட்டாப்பில் நின்று குத்தும் வெட்டுமாய்
கைகலந் துபடை பொருதினதில்
ஐம்பது சோல்சரும் அறுபது பைநீரும்
ஆப்புச் சேறொரு கும்பினியும்
ஒன்பது சுபையதார் அபுல்தார் பத்தும்
ஒன்றோடிக் காரர் மடிந்திடவே
மாண்டது அறிந்த அக்கினீசு மேஸ்தர்
மயங்கித் தவியாமல் கோபங் கொண்டு
தாண்டியே பைநீரும் சோல்சரும்
தளமு மிகுந்து நின்று கொண்டு
ஒருநாள் முழுதும் ஒருமரமும் செடியும்
ஓயாமல் வெட்டியு முடிய வில்லை
வெருவி மருதுதுரை பீரங்கி யேத்தியே
வெகுண்டு மருந்தும் பரிந்திடவே
பைய்நீரில் நூறுசனம் மடிந்தார்
பார்த்த விடமெல்லாம் புகையழல் மண்ட
மெய்பத றாமல் அக்கினீசு மேஸ்தர்
வேகமாய்க் காட்டை வெட்டையிலே
வாருப்பூர் உந்தன் மன்னன் நெடுவயல்
மாறுத நன்னிச் சுவரனுடனே
தோருத புகழிடை யாத்தூர்
துட்ட ணக்கப்பன் சேருவை தளங்களுடன்
சின்னச் சீனிக்கனா மாய்ச்செடிங் காட்டில்
சேர்ந்து படைகள் வந்துநின்று
வண்ணவேல் ஈட்டி வளரிமரம்

வாகாய்ச் சமுதாடு வில்லு உருண்டையினால்
கொன்றார்கள் சோல்சர் காப்பிரிசியைக்
குத்தி வெகுபேரை மலாத்திடவே
பீரங்கி நான்கு மோரிசாவி லேத்திப்
பெருவேட்டினால் குண்டு பரிந்திடவே
மருதுடைய சேனையில் ஐம்பதுபேர்
மாண்டு விழுந்தார் அதுசமயம்
வனத்தை விட்டு அக்கினீசு மேஸ்தர்
வந்து தன்னுட ஊடையத்தில்
சனத்தை நிறுத்திச் சரிபார்த்துத்
தரணிபுகழ் கெவுரி இராசனிடம்
மன்னர்புகழ் கெவுரி வல்லவனே இந்த
வனத்தின் பெருமை என்ன சொல்வேன்
என்ன விதமாகப் பைநீரும் சோல்சரும்
இயன்ற மட்டும் வெட்டிப் போகையிலே
கட்டினான் முன்னாகக் கட்டாப்பு மருதுக்
காட்டில்வெகு மோரீசா யேத்தி வைத்து
மேட்டில் பீரங்கி குண்டு மருந்திட்டு
வெகுவாய் முழக்கி மாக்கி விட்டான்
சேனை வெகுவாய்ச் சிதைந்த தல்லால்
காட்டில் செடிமரங்கள் சாயவில்லை
கூனிரும் பால்வெட்ட மருதுபடைக்
குறுக்கிட்டுச் சனத்தைக் கொல்லுதுகாண்
இந்த விதமானால் எத்தனைநாள் செல்லும்
எப்படிநாம் மருதைப் பிடிக்கிறது
சிந்தை கலங்கி அக்கினிசு மேஸ்தர்
தீரன் கெவுரியைக் கேட்டிடவே
காடுவெட்டச் சற்றுங் கலங்காதீர் இந்தக்
காட்டை வெட்டி வெளியாக்கி
நாடு வந்து நம்மைக் கவிந்ததினால்
நான்பிடிக்க வகை சொல்லுகிறேன்
உள்ளாளை விட்டு மருது ஊடையம்
உள்வெளி யறிந்து கொண்டு
கள்ள வழியாகக் காளையார் கோவில்
கல்கோட்டை தன்னை வசப்படுத்தி
திங்கள்பத் தானாலும் சென்று செழித்து
மருது வனத்தை வெளியாக்கி
சுங்காமல் நித்தஞ் செடியைத் தறிப்பீர்கள்
தானே வழிகள் தான்தெரிந்து
என்னவே கெவுரி வல்லவன் செப்பிட
எதார்த்த மென்று அக்கினீசு மனதில்கொண்டு
மன்னவன் அக்கினிசு மேஸ்தர்

பாடி விட்டுப் பூங்குடியில் வந்து
பீரங்கி யோராறு முன்னும் பின்னும்
பலமாய் மோரிசாவி லேற்றி வந்து
வாரங்கே சோல்சர் பட்டாளமும்
வரிக்குதிரையும் பின்னே தொடர்ந்துவர
பக்கத்தில் காட்டில் அநேகம்படை
பதிவாய் இருந்த அநேகம் பேர்கள்
சக்கப்பன் சேருவை தளவீரன்
தளகர்த்த நன்னியுட ஞறுபேரும்
கூடிப் படைத்தலைவ ரனேகமக்
கூட்ட மிட்டு அக்கினிசு பாளையத்தில்
தேடியே வந்து இருமருது
சேருவை யுங்கன கூட்டமுடன்
பையநீர் மரம்நறுக்கப்
பருஞ்செடிகளை வெட்டி யூடருக் கையிலே
கைவளரி வேலலகு ஈட்டியினுல்
கன்னடத்தார் வெட்டிக் குத்தினதில்
ஓடும் விதமதுவும் கன்னடத்தார்
ஒளிந்து வந்து சண்டை செய்வதுவும்
போடும் விதமதுவும் அக்கினிசு மேஸ்தர்
போராட வாரதுந் தான்தெரிந்து
கெவுரி முகம்பார்த்து அக்கினிசு மேஸ்தர்
கேட்பார் அவரை விருப்பமுடன்
சுவுரியமாய் இருமருதும் அதன்படை வீரரும்
தளத்தை இனிநொருக் குகிறுன்
மனக்கவலை தன்னுடனே மன்னன்
அக்கி னிசுதுரை சொன்ன வளவில்
கனத்த மருது கைத்திரளை அன்னங்
காத்திருந்து உண்ணுங் கருத்தானே
உருத்தாய் அழையு மென்றுதான்
உத்தானைப் போக அனுப்பி வித்தார்
கருத்தானும் நடந்தோடி வந்து
கர்த்தன் கெவுரியைப் பணிந்து நின்றுன்
காத்திருந்து நீ நம்மிடத்தில்
கருத்தான் கைத்திரளைச் சோறு உண்டிருந்து
வேற்றுமை களன்றி நீயிருந்தால்
விளம்புகிறே னுனக்கு இன்னமுங்கேள்
ஆயிரம் பொன்னவன் கையில் கொடுத்து
அவனுக்குத் தகுந்த கிராமம் ஒன்று
தாயகமாய்ப் புல்வாய்க் கரையை
தலைமுறை தப்பாமல் ஆண்டு கொள்வாய்
கொல்லாமல் நீயு மிந்தக்

கும்பினிப் பட்டாளம் சோல்சருடன்
மன்னன் வெள்ளை மருதிருவர்
மைந்தர் கிளைஞர் மருமக்க மார்களையும்
காட்டில் விடாதபடி மருதை
கைப்பிடியாய் நீ கொண்டு வந்தால்
நாட்டிலுனைக் கண்ணுக்குள் கண்மணியாய்
நானென்முன் வைத்துக் கொள்ளுகிறேன்
நன்று துரையேநீ யொன்றுக்கு மஞ்சாதே
நானங்கே போயொரு நொடியில்
சென்றிந்தத் திருக்கானைச் செடிங் காட்டை
யெல்லாம் போய்ப் பார்த்தறிந்து
கண்டு மருதேந்திர காவலனை
கைப்பிடி யாகப் பிடித்துத் தாரேன்
கொண்டு வருகிறேன் தேட வேண்டாம்
கொற்றவனே சமத்தைப் பாருமென்று
தொங்கு வெடியாகத் தூக்கியே காலோட்டம்
துறுசாய் வனத்தைச் சுற்றிப் பார்த்து
தங்கிப் பதுங்கித் தலைகுனிந்து
தவழ்ந்து செடிங்காட்டை ஊடறுத்து
வாரில் இரண்டு கும்பினியுஞ் சோல்சரும்
வகையுடனே கானிடத்தில்
வீரியங்க ளுள்ள வேந்தர்களில்
மூந்நூறு வேகமாய்க் கூட்டி நடந்தேகி
வேட்டைக்குப் போகும் விதம்போல வீரன்
கருத்தான் படைகூட்டி வந்து
காட்டைக் கடந்து கருத்தான் ராத்திரிக்
காரிருள் தன்னில் படைகூட்டியே
நாடி நடந்து நல்லுறுதிக் கோட்டை
நகர்க்காட்டி னுள்ளே நுழைந்து
தேடி யவர்களைச் சுற்றிப் பார்த்து
தெரிந்து அடியெடுத் தங்கே சென்று
அசதி மயக்கம் அதுவறிந்து
அக்கினிசு பட்டாளம் கும்பினியும்
வசதியெனப் பலித்தா மன்னர்
மழைமாரி போல பொழிந்திடவே
அந்தத் தருவாயில் மருது இருவர்படை
அநேகம் மிரளமிரள விழித்துக் கொண்டு
சிந்தை கலங்கித் தியங்கி யேபடை
தெரிபட்டு விழுந்து ஓடிடவே
வேட்டு எழுப்பிச் சந்தோஷ
விருது துவசங்கொடி நாட்டி மன்னர்
தாட்டீக மாகக் குலவை யிட்டு

சந்தோஷ மாகவே பாளையங்கள்
மாபுரத்தை வென்ற வளம்போல்
மகிழ்ந்து கும்பினிப் பாளையத்தார்
கோபுரத்திலே இங்கி லீசுக்கொடிப்
போட்டுத்துரை மகிழ்ந்திடவே
எழுபத் தாயிரம்பேர் படைகள்
எண்ண வொண்ணு ராணுவ மன்னவர்கள்
நாளுக்கு நாளாய் மெள்ள மெள்ள
ராப்பகலாய் ராணுவம் ஓடிவிட்டார்
கையாயுதத் துடனே மருதிருவர்
கனபடை வீரர் எல்லோரும்
ஐய்யா சரணம் சரணம் என்று
கெவுரியிடம் அநேகம் படைவந்து சேர்ந்ததுவே
ஆண்டு முடிந்து அழிவுவந்து சூழ்ந்த
அரும்வனத்திலே மருது சென்று
வேண்டும்படி பெண்டு பிள்ளை மக்கள்
மீறிய மைத்துன மாருமக்கள்
மூன்றும் உதவாமல் மருது
ஒத்தையாய் வனத்தில் மயங்கி மன்னன்
நின்று மயங்கி நெடுநேரம்
நினைவுத் தடுமாறி இரக்கமுடன்
அப்போ கெவுரி வல்ல பேந்திரன்
அக்கினி மேசரைப் பார்த்து உரைப்பார்
இப்போ மருது இருவரையும் படைவிட்
டேகியே வனத்தில் தவிக்க விட்டார்
காத்து ரட்சித்தான் படையைக்
காவலவன் மருது இருவர்களும்
மாற்றுன் உறவே வனத்தில்
மருது அன்னங் கிடையாம லலைகிறான்
சமரில் சதிசெய்து நம்மிடம்
சண்டாள ரெல்லோரும் வந்து சேர்ந்தார்
அந்நில மருதை ஒளித்து விட்டு
அஞ்சாமல் நம்மிடம் வந்து சேர்ந்தார்
மாபாதகர் முழுதும் மருதை விட்டு
மனந்துணிந்து நம்மிடம் வந்து விட்டார்
ஆபாதன் கேடு அன்னியாயக் காரர்
ஆனபடை ராணுவந் தமர்க ளெல்லாம்
இந்நாள் இவர்கள் அதனை நாங்கள்
இகழாமல் வார்த்தைகள் சொல்லாமல்
கன்னன் மருதிருவர் கைவசமாய்.
காட்டில் பிடித்தவுடன்
என்று கெவுரி எடுத்து உரைத்திட

ஈதெல்லா மறிவே னென்றுரக்கினீசு
சத்திய முஞ்சொல் நிசமும்
தயவுடனே பெருமைக ளுண்டானால்
முத்திலும் சாதித்துப் பிடிவாதம் செய்தால்
மோட்ச முண்டே கருப்பு மானிடர்க்கு
சிறுவர் புரிக்கும் திருக்காணை ஊருக்கும்
காட்டை வெட்டிச் சென்றார் காளைநகர்
கருப்பு மனிதர்கள் செய்திடுந் தீங்கை
கர்த்தன் அக்கினீசு கெவுரியுந் தானறிந்து
பட்டாளந் துருப்புப் பாளைய மெழுப்பி
பாதை வழியுடன் காளைநகர்
திட்டமுடன் வந்து அக்கினீசு மேஸ்தர்
தீரன் மருதிருவரைப் பிடிக்க வென்று
அடிக்க வென்றார் தமுக்கு
அடித்தார்க ளவனி யெங்கு மிரிந்திடவே
கெடித்தலம் கெடித்தலத்துக் கெல்லாக்
கெட்டியாய்க் காகிதம் போக விட்டார்
காளையார் கோவிலுக் கோட்டையிலே
கர்த்தன் அக்கினீசு துரையுங் கெவுரியும்
பாளையமும் சிறிது ப்ட்டாளமும்
பலத்த சோல்சர்களையும் நிறுத்தி
வெளியாத்தூர்த் தன்னில் வேந்தன் கெவுரி
அக்கினீசு மேஸ்தர்துரை
தெளிவாக மன்னர் இருவோ ருஞ்சில
பாளையத் துடனங்கே வந்து இருந்தார்
சித்தனு மருதேந்திர ரிருவரும்
சீமைதனை விட்டுக் காட்டில் சென்று
குத்திரு மேலுமே காதுக் குரும்பி
வந்து அடைக்கவும் மேனி மெலிச்சலுடன்
தத்துவம் வேறு உடலாகித்
தகையினால் மயங்கித் திரியையிலே
எட்டுநா ளன்னங் கிடையாமல்
எழுந்து பிடிக்கனிகளை தின்றதிலும்
கட்டுடம்பு மெலிந்து கனிகிடை யாமல்
காளையார் சாமியைத் தியானம் செய்ய
மட்டம் சிறுபிள்ளை ஒருவன் சாதங்
கொண்டுவந்து மருதுக்கு அன்னங் கொடுத்திடவே
உண்டு சோற்றை மென்று முழுங்கையில்
உட்புகைச் சலாலன்னம் விக்கிக் கொள்ள
கண்டு சிறுவன் எழுந்திருந்து
காணாற்றில் தண்ணீர் எடுத்து வந்து
அன்னத்தைக் கரைச்சுக் கொடுத்தவனும்

ஆயாச மயக்கம் தெளிய வைத்தான்
இன்றைக்கு என்னேநீ காத்ததினுல்
என்காதி லிருக்கும் மரகதக் கடுக்கனை
திண்ணமுடன் உன்காதில் போட்டுக் கொண்டு
சேரு முந்தன் பதிக்கென்று அனுப்பிவிச்சு
முந்தியால் பூமியைத் தூர்த்துக் கொண்டு
முந்தியே விரித்து அங்கே படுத்திருந்தார்
சிந்தை கலங்கி மயக்கந் தெளியாமல்
தியங்கித் தவித்துப் படுத்து இருந்தார்
கைக்குள் ளிருந்து திரளைச் சோறுண்ண
கடுநீலன் கருத்தானுங் கண்டு இவரை
அக்கினீசு மேஸ்தர் கெவுரி ராசன்
ஆன வெளியாத்தூர் இருக்கையிலே
அவ்விடத்தில் கருத்தான் ஓடி வந்து
அரசனையுந் துரையும் வணக்கம் செய்து
செவ்வையாய் வேத்தியூர்க் காட்டுக்குள்ளே
தீரன் சின்ன மருதையைக் கண்டுவந்தேன்
மன்னவரே எந்தன் பின்னுடனே
மாற்றானைப் பிடிக்கவொரு கும்பினிப் பட்டாளம்
திண்ணமுடன் கூட்டி யனுப்பி வைத்தால்
தீரன் சின்னமருதைப் பிடிப்ப மென்றான்
இன்றுநாம் போகா திருந்தாக் காலவர்
எங்கையும் போவார்நாம் காண மாட்டோம்
சென்று பிடித்திட வேணுமென்று
திரளைச் சோரும் சந்திதிண்ணபயல்
கருத்தா னுரைத்த மொழியதனை
காவலர் இருவருந் தான்கேட்டு
வருத்தந் தெளிந்து மனமகிழ்ந்து
மன்னர் பட்டாளம் தனையெழுப்பி
திட்டமுடன் மேஸ்தர் அக்கினிசுதுரை
தீரன் கெவுரியுந் தானெழுந்து
பட்டாள மொன்று அதுவுடனே
பார்த்திபன் கெவுரி படையுங் கூட்டி
கல்லுவெடி எடுத்து ரெட்டைக் குண்டுபோட்டு
கருமருந் தெட்டுவிரல் போட்டு இடித்து
வெல்லுவேன் என்று கருத்தான்
விரைவாய்ப் பதுங்கி தவழ்ந்து முன்னேவந்து
வல்லமைசேர் சின்ன மருதுமேல்
விளாஞ்செடியை அணைவு வைத்து
உள்ளிக் கருத்தான் ஒளிந்திருக்க
உள்சலாய் கெவுளி மேலுரைக்க
நாணிப் படுத்திருந்த மருதெழும்பி

நாலு பக்கமுஞ் சுற்றிப் பார்க்க
மன்னன் எழும்பிச் சுற்றிலும் பார்த்திட
வஞ்சகன் கருத்தான் சுட்டிடவே
என்னை யிவ்வனத்தில் சுட்டது யார்
என்றெட்டி யண்ணாந்து பார்க்கையிலே
திண்ணமுடன் கருத்தான் ஓடிவந்து
சிறுமருது பாதத்தில் வீழ்ந்து அழுதான்
பாண்டிய னென்றுநா னறியாமல்
பழிபாவத் துக்குநான் ஆளாகினனே
தீண்டியே சிறியேன் செய்தபிழை
தெய்வமே பொருத்தருள்க வென்றான்
என்று கருத்தானுஞ் சொல்லிடவே
எந்தனுக் கோநீ எமனாக வந்தாய்
உன்னுடைய குலமும் நீயும் உள்ளவர்களும்
பெருநரகில் சேர்வாய் என்றார்
உந்தனைநான் வளர்த்திடுந் தோஷம்
ஒருமித்துந் தன்கை வெடியால் சுட்டு
எந்தனை இன்னம் தாக்கி விட்டாய்
எழுப்பிச் சுட்டால் மாண்டிடுவேன்
கண்ட பலனிது வென்று சொல்லி
காசினி யுள்ள மட்டும் வசையாச்சு
விண்டு விளங்குமடா கருத்தான்
வீணாகப் போகாது எந்தன்பழி
நேராய் எனக்கெதிராய்க் கருத்தான்
நின்று நீவேட்டு எழுப்பாமல்
சூரனைப் போல்நின்று மறைந்துநீ
சுட்டிட்ட தென்ன கபடமடா
எதிர்த்து வெளியேறி கருத்தான்நீ
என்முன்னே நின்று சுட்டி யானால்
மதித்துநீ யென்னுட மார்பைக் குறிசெய்தால்
மாய்ந்திடும் எந்தன் சீவனுந்தான்
இந்நேரம் உந்தனை எந்தன் கண்ணெதிரே
பார்த்து இருந்தாலும் உன்னையும் நான்
கண்ணாலே கண்டு கவலை யொழிந்தது
கருத்தில் நீயொரு பிள்ளையடா
சற்றுந் திகையாமல் அக்கையால்
தண்ணீ ரெனக்குக் கொண்டுதா! வாடா
ரத்தக் களையெடுத்துத் தேகம் நடுங்கி
நரம்புக ளெங்கும் சுளிக்குதடா
அந்தரத்தில் வனத்தில் யாரும்
உதவியில் லாமல்நான் தவிக்கையிலே
எந்தன் நரம்புகள் இழுக்குதடா

எந்தன் காலைப் பற்றி யிழுக்குதடா
சத்திராதி யானாலும் இந்தச்
சமயத்தில் தன்னுயிர் போலே யெண்ணி
சித்த மிரங்கி சீவனை வெறுத்து
மற்றொரு உயிர் தன்னைக் காப்பதுண்டு
அருகே துணையா யிருந்து எந்தன்
ஆவ வெளியான தின்பின்நீ
மருகாம லெந்தன் சீவனிப்போ
மாண்டாலு மண்ணி லெடுத்தடக்கி
போனாலு முந்தனுக்கு நல்லது
பிழைவந் துன்னை யொருநாளுஞ் சேராது
ஆனதினால் இப்பொது எந்தனுக்கு
அடங்காத் தாக மயக்க மானதினால்
தானே நீகொண்டு வந்து தண்ணீர்த்
தாக விடாயதைத் தீர்த்திடுவாய்
முட்டி விழுந்தழுது கையால்
முகத்தி லறைந்து கொண்டு
அட்ட திக்கும் நடுநடுங்க
ஆண்டவ னேயினி என்ன செய்வேன்
வண்டன் கருத்தா னலறி
வஞ்சமாய்ப் புலம்பிப் பரதவித்து
அண்டி யருகினில் ஓடிவந்து
ஆன்டவனே மருது பாண்டியனே
என்றழுதானே
பெற்ற தகப்பனிடம் பிள்ளைவந்து
கற்ற வித்தை காண்பித்த ததுபோல
சித்தங் கலங்கி கருத்தான்
சிறுமருது தாளடி வீழ்ந்தழுதான்
ஆனதினால் இனிநீ யென்ன செய்வாய்
நமக்கவதி வருங்காலம் நேர்ந்ததினால்
நானுனக்கு இப்போது கொடுப்பதற்கு
நம்முட கையிலே ஒன்றுமில்லை
தன்கையில் மூன்னாள் எனக்கு
தரணியாள் ராணிதரித்த கணையாழி மோதிரம்
என்கையி லொன்று இருக்குது யதை
என்கையால் உனக்குத் தருகிறேன்
என்றுரைத்து மருது தன்கையில்
இருந்த கணையாழி மோதிரத்தை
அன்றே கழற்றி மருது கையால்
அவன்கையில் தானே தரித்து விட்டார்
ஓமனுன் வைகைதனில் தண்ணீர்
உறுத்தாய்க் கருத்தான் எடுத்து வந்து

நாடியே நீரே எடுத்து வந்து
நல்கினன் மருது மன்னனுக்கு
மன்னவனுந் தண்ணீ ரருந்தி
மருது மயக்கந் தெளிந்து இருக்கையிலே
அந்நேரம் அக்கினீசு மேஸ்தர் படையுடன்
மருது அருகே நெருக்கி வந்திடவே
பட்டாளமுந் துருப்பும் மருதை
பாளையங்கள் சுற்றி வளைந்திடவே
கிட்டவே வந்திடப் பாளையமும்
கெடிப்புலி மால்மரு தேந்திரனும்
திருக்கண்ணால் கண்டு மன்னன்
திருவாய் மலர்ந்து அருளிச் செய்யலுற்றார்
செருக்கிச் செருமிச் செப்புவானச்
சிறுமரு தேந்திர துரைமன்னன்
அக்கினீசு மேஸ்தர் துரையேநீ
யனேகங் கெடித்தலம் பிடித்தவன்காண்
கைக்குள் வசப்படுத்தி
கமிட்டியிலும் நீர்பேர் வாங்கினவர்
வித்தை யுமது புத்தி யெல்லரம்
விசாரித் திருப்போம்நாம் நெடுநாளாய்
அத்தனையு மல்லாமல் மேஸ்தர்
சென்னல் அக்கினீசு மெந்தனுட
வீரஞ் சவுரியமும் விவேகம்
விதட்சணமும் விசாரித் திருப்பீர்காண்
சூரன் மருதேந்திரன் வெகுதீரன்
துரைக ளென்றுங் கேட்டிருப்பீர்
என்னுடைய அண்ணன் மருதேந்திரன்
கையில் எடுக்கும் இருப்பு வளரியினால்
மன்னர் மன்னர் சிரமுருளும்
வகைவிப ரங்கள் கேட்டிருப்பீர்
வெட்டிக் கருவறுத்த வெள்ளை
மருதேந் திரனுக்கு நேரிளைய
துட்ட நிட்ரேன் துரைவேந்தன்
சின்ன மருது என்பேரு
அன்ன சொர்ணதானம் பிரமாலயம்
அநேக சிவாலயம் சத்திரங் கட்டிவைத்தோம்
எண்ண வொண்ணாத தருமம்
இப்புவியில் அநேகம் அற்புதமாய்
நானுமக்குச் சொன்னேன் துரையே
நலமோ யிடரோ அறிந்து கொள்ளும்
ஆனதினால் சென்ன லக்கினீசு
மேஸ்தர்துரை யறிவுடையவ ரானதினால்

மன்னன் கெவுரி வல்லவன் மனசு
மாத்தா னுங்கள் ஆகையினால்
என்னையு மண்ணனையு மென்குலத்தி
லுள்ளவர் தன்னை யெல்லாம்
சின்ன பின்னமாகச் சிதைத்திடவே
தீரனே உந்தனிடம் சொல்லி
உன்னிடத்தில் உறுதிமொழி
உண்மையாய்க் கொண்டு இருப்பதினால்
சொன்னபடி அக்கினீசு மேஸ்தர்
துரையேநீர் முடித்து விட்டீர்
இன்ன மொருவார்த்தை மேஸ்தர்
அக்கினீசு துரைஇயம்பக் கேளென் வாக்கால்
கண்ணுக்குள் கண்மணியாய்
கைக்கிளிபோல் வெகுலட்சணமாய்
சமாலி சிவஞானம்
தனக்கிளைய குழந்தை துரைச்சாமி
சதிரில் துரைமார்கள் சபையில்
துரைலண்டன் துரைச்சாணி
அதிபிரிய மாகஅவள் (பேர்) அப்போது
துரைச்சாமி யென்றழைத்தாள் இளையவனை
முந்தவே நான்வைத்த பெயர்
முத்து வடுகன் என்பதை மறைத்து
சிந்தையுறத் தள்ளித் துரைச்சாமி
என்று துரைமார்கள் வைத்தார்
மைந்த னெனவே வளர்த்தாள்
துரைச்சாணி யம்மா ளவனை
கொல்லாமல் சும்மா
கொடுங்காவலில் வைக்கிறே னென்று
சொல்லுங்காண் மேஸ்தர் அக்கினீசு
துரையே யுன்வாய் திறந்து
அன்று மருதேந்திர துரையெடுத் துரைக்க
அக்கினி மேஸ்தர்துரை
நன்றுகா ணப்படியே
நலமாகச் செய்வோமென் றாக்கி னீசுதுரை
துரையே மருதேந்திரா நீ
துஷ்டத் தனங்கள் செய்யாம லிப்போ
தரையி லிருப்பானேன்
தண்டிகை மீதினி லேறு மென்றார்
அப்படியே நல்லதென்று மருதுதுரை
அண்டியே தண்டிய லேறிடவே
செப்பமுடன் சின்ன மருதுதுரை
சிவிகையின் மேலே யெழுந்து வந்தார்

சுற்றியே யெங்குந் துருப்புகளும்
சூழவே கும்பினிப் பாளையமும்
வெற்றி கொண்டு அக்கினீசு மேஸ்தர்துரை
வெளியாத்தூ ருடையத்தில்
கூடாரந் தன்னில் துரைவந் திருந்து
கொற்றவனைச் சுத்திக் காவல் வைத்தார்
வாடா மதிமுகத்தான் மன்னன் சின்னமருது
தண்ணீர் தாக மெடுத்திடவே
போசன மில்லாமல் தண்ணீர் தாகத்தால்
புளித்த தயிரைக் குடித்திடவே
வாசவ னுண்துரை மால்மருது
தோஷமிருந்து துஞ்சிக் காளையார் பதஞ்சேர்ந்தான்
இராசன் கெவுரிக்கு அக்கினீசு மேஸ்தர்
நேசமுடன் வந்து செப்பிடவே
சித்திரம் போல வொருபெட்டி செய்துவதில்
சேர்த்துமே காவலில் வைத்திருந்தார்
பெரிய மருதேந்திர துரைவேறு
உலகை விட்டு வனம்புகுந்து
வறுமை சிறுமையதாய் மருதுதுரை
வனத்தில் அவர்படுந் துயரம்
அறிந்த மட்டுஞ் சொல்லுகிறேன்
அன்புடன் வந்து கேளும் பெண்ணே
மதகு பட்டிக் காட்டில் மன்னன்
பெரிய மருதேந் திரதுரை
விதமுடன் பசிக்கன்னங் கிடையாமல்
வெகுமயக்கங் கிரக்கமுடன்
விளாமரத் தடிதன்னில் வந்துவெகு
விளாம்பழந் தன்னைப் பொருக்கிக் கட்டி
களங்கமற் றிருந்து மன்னன் மருது
கனிதனை யுடைத்து எடுக்கையிலே
சொல்லிய நிமித்தந் தனையறிந்து
துரைமகன் கெவுளிக் காதல் பார்த்து
அல்லல் உண்டாகு மென்றெண்ணி
கனியை எடுத்துத் தின்று கொண்டே
எல்லையை விட்டுப் போந்தெழுந்து
அப்பாலே போவோமென் றெண்ணி மன்னன்
சத்தயர்ச்சி தீர்ந்து
மருதுதன் பதியில்போய்ச் சேர்வதற்கு
எட்டுநாள் ஓர்வாரம் இருக்கு தென்று
சாதகத்தை எடுத்துப் பார்த்து
திட்டமுடன் எண்ணி திருமருது
தீரனிங் காட்டில் திரிவ மென்று

தப்பித் தலைபிழைத் தாலிந்த
தாரணியை இனியாள்வோ மென்று
செப்பும் நிமித்தமதை தீரன்
வெள்ளை மருதேந்திரன் தானறிந்து
திருக்காளைக் காளீசர் தன்செயல்
நமக்கு எப்பவும் உண்டானால்
இருக்கலாம் புவியாசை
இயல்பாகத் தம்பியுடன் ஆள்வோம்
என்றுதான் வெள்ளை மருதேந் திரதுரை
எண்ணியே மன்னன் அவ்வனத்தில்
நின்று உலாவி மருதுதுரை
நிழலி லிருந்து விளாங்கனி யுள்ளதெல்லாம்
உண்டார் சமையம் பார்த்து ஒளித்து
இருந்து கண்டோர் வலையன்
கண்டோடி வந்து வெள்ளை மருது
காவலனைக் கண்டவிதம் செப்பிடவே
கெவுரியுட னுரைக்க அதைக்கேட்டு
அக்கினீசு துரைக்கு உரைக்க
சவுரியவான் மேஸ்தர் அக்கி னீசுதுரை
தன்னிடத்தில் கெவுரி சொன்னவுடன்
சொன்னவன் தன்னையும் முன்னே விட்டு
துரையக்கி னீசு வழக்குண்மை சொல்லி
சென்ன லக்கினீசு துரைதிரண்ட
கும்பினி யிரண்டு சோல்சர் துருப்புடனே
வந்தார் வெளியாத்தூர் பாடிவிட்டு
மாயன் வளர்திருக் கோட்டிநகர்
சந்தோஷ மாகக் கடந்துதான்
தானையம் பாளையம் வேகமுடன்
குறளித் தனமாய் ஒருவலையன்
கூறினவனைக் கூடக் கூட்டிக் கொண்டு
அரளிக் கோட்டை வெளியில் வந்து
அக்கினி மேஸ்தர் அடித்தார் கூடாரம்
நாட்டவர்க ளெல்லாங் கூட்ட மிட்டு
நயந்து வார்த்தைக ளுரைத்துக் கொண்டு
வாட்டப் படும்பெரிய மருதுதனைப் பிடித்து
வரவேணு மென்று வெகுகூட் டமுடன்
வந்தே மதகு பட்டி வனந்தனில்
வந்த வலையனை யோட விட்டு
அந்த வலையனை மருது தடங்காட்ட
அக்கினி மேஸ்தரும் பாளையமும்
சுற்றி வளைந்து சூழ விட்டுச்
சோல்சர் புட்டாளத்தை முன்னே விட்டு

மத்தியில் மேஸ்தர் அக்கி னீசுதுரை
வாம்பரியை விட்டுக் கீழிறங்கி
கையில் வெடியை யெடுத்துக் கொண்டு
கால்நடை யாக வருகையிலே
பையப் பைய செடிமறைவில்
பதுங்கிப் பதுங்கி மெதுவாய் நடந்து
செங்கை வெடியை அக்கி னீசுதுரை
திரமாக வேதான் ஊன்றிக் கொண்டு
மறைந்து நின்று மருதுதுரை
கைவளரிக் குத்துரை பயந்து நின்று
கரைந்து மதிமயங்கி மேஸ்தர் அக்கினீசு
காவலனை எப்படிப் பிடிப்ப மென்று
பிடிப்போம் அவன் மிகுந்த
பலசாலி யாமென்று மனதி லெண்ணி
துடியாய்க் கெவுரி முன்னாள் சொன்னார்
அதுபோலத் துப்பாக்கியால் சுடுவோம்
துப்பாக்கி யாலே சுட்டிடு வோமென்றால்
துப்பாக்கிச் சூடு தவறிப் போனால்
செப்ப முள்ள சிப்பாயி சோல்சரையும்
சேனையையும் நம்மளையும்
வைப்பது இல்லை மருது
வளரியினால் சிரசைக் கொய்திடுவான்
தாக்குடைய மால்மருது துரைதம்பி
அண்ண னிருவ ரையும்
தூக்குவே னென்று துரைகெவுரிக்குச்
சொன்ன உறுதியும் பொய்யாமே
எடுப்பாக நாமுன்னாள் இயம்பியசொல்
உறுதிக் கிளப்பங்கள் வந்துவிடும்
முடிப்ப தில்லை நிச்சயமாய்
மோசமது வந்து நேரிடாமல்
எப்படிக் கிப்போது மருதுதனை
யெங்கும் விடாதபடி பிடிப்போம்
கைப்பிடி யாக இவனைப் பிடித்திட்டால்
கைவளரி யால்தலை கொய்திடுவான்
தேசத்து மன்னன் மேஸ்தர் அக்கினீசு
தீர்க்கமாய் ஆலோசனைகள் செய்து
யோசிக்கும் போது பச்சை வாதம்
உண்டென்று கெவுரி யுரைத்ததனை
தெரிந்து அக்கினீசுதுரை மனதைத்
தேற்றி வெள்ளைமருது தீரன் கைவளரி
யேலாது நம்முட மேலே யென்றெண்ணி
யெப்படியுங் கைப்பிடியாய்ப் பிடிக்க வென்று

வாலாய மாய்ப்பிடிக்க வாய்க்கு
மென்று துரைமனந் தெளிந்து
சேனையைச் சுற்றி யுஷார்பண்ணி மேஸ்தர்
சென்னல் அக்கினீசுதுரை முன்னடந்து
மானபரனுன வெள்ளை மருதுதுரை
மன்னன் முன்னேதுரை வந்திடவே
இந்நேரங் கண்டு மருதுதுரை
யேமன் நமக்கினிக் கிட்ட வந்தான்
யென்றே இருப்பு வளரிதனை
யெடுத்து வலது கையால் தூக்கிடவே
இருப்பு வளரிதனை யெடுத்து
அக்கினீசு மேலேவ மனதிலெண்ணி
விரும்பியே கையைத் தூக்கிடவே
மெய்பதறிக் கையும் நடுங்கிடவே
நீட்டின கையை மடக்கறியான்
நிமிர்ந்த கையை முடக்கறியான்
வாட்டமுடன் பச்சை வாதங் குறுக்கிட்டு
மருதேந்திரன் வளரி தவறிடவே
அசைந்தா ரறிவழிந்தார் மருது
ஆருந் துணையில்லாக் கானகத்தில்
வசந்தா னினிமருதைப் பிடிக்க
வாச்சுதென்று சென்ன லக்கி னீசுதுரை
இடந்தான் என்று மனதில் எண்ணி
யேகமாய்ப் பாளையஞ் சுத்தி விட்டு
நடந்தான் சென்ன லக்கி னீசுதுரை
நல்ல மருதுமுன் வந்திடவே
மன்னவனே நீதானோ சென்ன லக்கினீசு
வந்தது பாளையந் தன்னுடனே
சென்ன லக்கினீசு மேஸ்தர்துரை யென்று
செப்புவார் நாங்களும் கேட்டிருப்போம்
நீர்தானோ அக்கி னீசுதுரை
நீர் நினைத்த படியே முடித்தீ ரென்றார்
ஆதலா லெனக்குப் பச்சை வாதம்
ஆனதால் அகப்பட்டுக் கொண்டேன்நான்
வீம்பாக நானினி யும்மிடத்தில்
விளம்பினதி னாலென்ன பிரயோசனம்
நான்பாவி தானுனக்கு நல்ல வளரி
மரம்நா னெடுக்கக்கை யெழும்பாமல்
தான்பாவி யாயெனக்கு வளரிமரம்
சதிமானஞ் செய்து இருந்ததினால்
என்பாவி எனக்காக என்
முன்னே நீயேன் வருவாய்

யென்னை வரச்சொல்லி முன்னெழுதின
காகிதம் என்னிடம் வந்துநான் பார்த்தால
தன்னாலே நடந்து உந்தன் பேட்டிக்கு
தப்பாமல் உன்முன்னே வந்திடுவேன்
பாளையமுந் துருப்பும் பட்டாளஞ் சோல்சரும்
படையும் ரிசுமுட்டு நாட்டவரும்
ஏனைநான் கும்பினிக் கேற்ற பிள்ளை
இப்படிக்கு என்முன் என்வருவார்
மன்னவனே யிற்றென்முன் வந்ததுபோல்
ஒருமாதத் துக்குமுன் வந்தா யானால்
என்னைப் பிடிக்க உன்னாலே யாகாது
யேறும் வளரியால் தலைதுணித் திடுவேன்
சிந்தைதனில் நன்றாய்த் தெளிவாகுந்
தீரன் மருதுட சேதி யப்போ
இந்த வளரிகை சோராமல்
இருந்தால் சிவகங்கை சீமைதனை
ஆள்வான் கெவுரி துரைராசன்
அப்போது உள்குடிக் காட்டொளியில்
மாள்வான் செடிங்காட்டில் ஸ்மந்தன்
குடக்காத் துடையார் கையாலே
தம்பி கயத்து வெடிபரிந்தால்
தலைகொண்டு பேர்வான் கெவுரி யப்போ
தெம்பாகக் கெவுரி இங்கு வந்துத்
தேசமதை யாள வெண்ணிடுவான்
வருவான் அவனுன் பிறகே
மன்னவனே நீயும் என்முன் வந்திடுவாய்
சிறுவர் புரிதனில் சென்று நீயும்
தீனி புசித்துக் கூடார மடித்திடுவாய்
மன்னாநீ இப்படிக்கு மாதம்
ஒன்றுக்குமுன் யென்முன் வந்தா யானால்
என்னுட சேவுகத் தன்மையை யுன்முன்
என்னுட வாக்கா லியம்ப லாமோ
சத்தியந் தப்பாதார் கும்பினியார் என்று
தாரணி யெல்லாம் புகழ்ந்திடவே
உத்தம ரென்று ஒழுங்காய்ச் சட்டதிட்டம்
உலகத்தில் வெகுமனு நீதியுடன்
நீதி மிகுத்த நிருபரென்றும் இந்த
நீணிலத் தோர்கள் சொல்வ தல்லால்
பேதகமே உங்களிடத்தில் பிறந்ததுகாண்
பின்வருங் காரியம் முன்னறிந்து
சூதினால் சொன்ன சொல்லீது எனவே
துரையுன் மனதி லெண்ண வேண்டாம்

வையகத்தில் வஞ்சகமில் லாரென்றுலிந்த
வையகம் உங்கள்கை வசமாகாது
பொய்யும் புரட்டும் கொலைகளவும்
பிறந்தவிடம் கும்பினி யார்களுக்கு
மெய்யாகச் சூது வினையுடன்
மேன்மையாய் ஆளுகிறீர் சீமையிப்போ
கர்நாடகத்தார் கபடத்தார்
காலத்துக்கு தக்கது பிழைப்பார்கள்
மன்னு இந்நாடு நபாபுவிடத்தில்
வஞ்சக மாகவே வாங்கினீர்கள்
ஆனாலு முங்களுக் கிப்போது
அரசாள் வதற்கு இயல்நா ளானதினால்
தானாக எங்களுக் கிப்போது
தாழ்வு வருங்கால மாச்சுதுகாண்
கானம் புகுந்த நாள்முதலாய்
கண்ணான தம்பி மனைவி மக்கள் கிளைஞரை
விட்டுப் பிரிந்த விசார மன்றி
வேறுவிசன மெந்தனுக் கில்லை யிப்போ
தட்டுப்பட இல்லையோ துரைமகனே
உந்தன் பார்வையில் தம்பி யிதுவரையும்
என்று பெரிய மருதேந்திரதுரை
யெடுத்துரை செப்பிட அக்கி னீசுதுரை
அன்று மறுவார்த்தை துரை
அக்கினி மேஸ்தருஞ் சொல்லுகிறார்
மன்னு பெரிய மருதுதுரை தானேநீ
வண்மையுடன் சின்ன மருதுடனே
இன்னம் புதல்வர் கிளைஞர்வெகு
யெண்ண வொண்ணு மன்ன ருண்டுனக்கு
வல்லமைகள் ரொம்ப விளங்கிக் கமிட்டியில்
வல்லவன் கெவுரிக்கு இப்பட்டங் கட்டி
எல்லாமும் நாமறிந்து இருந்து
இங்கு வந்தோஞ் சண்டைக்கு உன்மீதில்
சண்டை கமர்புரிந்தா லெதிர்த்துநீ
நாங்கள் சற்றுமுனை யிங்கே செயிப்ப தில்லை
அண்டி ஒன்றோ டொன்று சேராமலக்
கானில் அலைந்ததால் நாங்கள் பிடிக்கவந்தோம்
வெள்ளை மருதேந்திர வீராண் கேசரிபுனை
வீறாக நாங்கள் செயிப்ப தில்லை
வள்ளல் கெவுரி துரைராசன்
வல்லவ னிங்கே வாரா திருந்தால்
பன்னிரண்டு வருடம் ஆண்டு
யாங்காக மாமாங்கந் தன்னுடனே

இனிரெண்டு சென்றாலும் மருதுதுரை
உன்னை யெங்களால் வெல்ல முடியாது
உன்னைச் செயித்திடவும்
உன்காடு கண்டிந்த வழியறிந் திடவும்
தன்னை யறிந்து வந்து மருதேந்திரர்
தாரணி நாங்கள் கைக்கொள் வதில்லை
என்போல் அநேகம் வெள்ளைக் காரர்
எண்ண வொண்ணு பட்டாளம் ரிசுமுட்டும்
தன்பாளையந் திரண்டு சோல்சர்
உன்னிடம் எங்கள்தளம் பொங்கி வந்தாலும்
உன்னைச் செயிக்க மருதுதுரையே இந்த
உலகினில் யாரும் ஒருவ ருண்டோ
என்னை யிதுவரையும் மருது துரையே
எதிர்வைத்து நீகண்ணால் பார்ப்பாயோ
வீரமும் வல்லமையும் மருது துரை
வேந்தே உன்வளரியும் மனத்திறமும்
சூரனுட வாழ்வும் இராவணன் வாழ்வுமுன்
வாழ்வுக்குத் தோதாக மாட்டாதே
கஞ்சன் இரணியனும் மருது
கன்னரவக் கொடியோன் முதலாய்
வஞ்சன் திரியோதனன் மருது துரையே
வாழ்வுமுன் வாழ்வுக்குப் பத்தாது
மாபாதக னிலங்கை விபீடணன்போல்
மன்னன் கெவுரி என்னிடம் வாராட்டால்
தீபாவி இராவணன் வாழ்வும் மருது
துரையே செல்லுமோ உந்தன் வாழ்வுக்கு
சென்றுடன் சேரன் சோழன் மருது
தென்பாண்டி மதுரையான் வாழ்வும்
போதாது மருது துரையே யுந்தனுக்குப்
பூவுலகில் யாரும் நிகரில்லை
வீருலே மன்னு நீ எதிர்த்துக்
கெவுரியை விலகி வீணுவிலே மெலிந்தீர்
இன்னஞ் சிலநாள் ஊமையன் வாராட்டால்
இயல்பாக வாழ்ந்து உண்டிருப்பீர்
மன்னு மருது துரையேயுனை யொருவர்
மதிக்க வுண்டோ இந்த மாநிலத்தில்
விக்கிர மாதித்தன் பட்டி யிந்த
மேதினியை யரசாண் டதுபோல்
சக்கிரவர்த்தி யாகிய மருது துரையே
தம்பியும் நீயுமிந்தத் தரணியை யோர்குடைக்குள்
திக்குவிசயஞ் செலுத்திநீ யின்னம்வெகு
தேசங்களை யாளுந் திறமை யுண்டு

மன்று மருது துரையே யுனக்கு
வளர்காலம் எப்போதும் உண்டானால்
கூர்னல்துரை மார்ட்டியன் வார்த்தை
கடப்பாயோ இந்தக் காசினியில்
கும்பினி யார்க்குநீ குரோதம் மெத்தக்
கொடுமைகள் செய்து வந்ததினால்
செம்பொன் நகர்தேவை சென்னைநகர்க்
கெவுனர் துரைமார்கள்
பூமண்டலங் களெல்லாம் கும்பினியார்
பிடித்தார் வெகுசீமை ராச்சியத்தை
பாமன்னர் மருது உங்களைப்போல்
படைபொருதுவா ராருமில்லை
லாட்டு (லார்டு) முதல் கமிட்டி வாகான
சென்னைக் கெவுனர் சென்னனுடன்
போட்டியுடன் கத்தி கெவுரிக்குப்
போட்டுக் கடந்து கொடுத்ததினால்
வந்ததொரு கெவுரி
வல்லவன் ஓர்மனது கொண்டு
சந்தேகங் கள்தீர்ந்து கெவுரிக்குச்
சத்தியங்கள் செய்து வந்ததினால்
வந்தேன் எந்தன் அநேகத்தளம் மாண்டுது
உந்தன் வேல்முருகு சுவர்னன் நன்னியினால்
இந்த நகரினுள்ள இருவருடன்
சொந்த மைந்தன் மருகன் மைத்துனமார்
சுந்தரஞ் சேர்மால் மருது துரையே
தூக்கிற திருபத்தி ரண்டுபேர்கள்
பழிவாங்க வென்று வந்தோம் மருது
பார்த்திபன் மால்கெவுரி வல்லவற்கு
எழுதிக் கொடுத்து விட்டேனினி
என்றாலுங் கவுனராலும் தடையாமோ
இப்ப இருக்கும் விசனமருது துரையே
அப்ப விருந்தா லிப்படி யாமோ
தப்பி வனம்போன உன்தம்பி
மருதையும் பிடித்துத் தளைந்திட்டோம்
வந்து அகப்பட்டா னவனை
வனஞ்சிறை காவலில் வைத்து வந்தோம்
உந்தனையுங் கூட்டி மருது
உந்தம்பியுஞ் சேர்த்துக் காவல் வைப்போம்
வாரீர் சிவிகை தனில்மருது
வந்திருப்பீர் வம்பு செய்திடாமல்
பாரீர் உன்தம்பி சின்ன மருதுபடும்
பர்த்தா வையும் உந்தன் கண்ணாலே

நேரமல் லோவெகு வாகுதிப்போ
மருது உன்னாலே வெகுநேர மாச்சு
சேருவோம் வாரும் வெளியாத் தூர்தனிலே
சென்றங்கே பாளையந் தானிருக்கு
கூறு மொழிகேட்டுப் பெரிய மருது
கொற்றவனும் மனந்தான் வெறுத்து
தம்பி அகப்பட்டா னென்றக் இனீசுதுரை
சாற்று மொழிதனைத் தானறிந்து
அம்புவி யாள்மன்னன் மருதுதுரை
அநேக விசன முடனெழுந்து
தெம்புடனே பெரிய மருது
சிவிகை மேலே யெழுந்தனராம்
கும்பினியுந் துருப்புங் குதிரை
ரிசுமுட்டு டட்டாளஞ் சோல்சருடன்
வம்பு செய்வான் மருது துரையென்று
வளைந்து தளங்கள் உஷாராய் நடந்திடவே
செம்பொன் நகர்மரு தேந்திரதுரை
சிவிகையி லேறி யிருந்திடவே
சீக்கிர மாகச் சென்றார் தீரன்
அக்கினீசு மேஸ்தர் வெளியாத்தூர்
பாக்கியவா னிளைய மருது
பாண்டிய னிருக்கு மிடந்தனிலே
கூடாரந் தன்னில் கொண்டு சென்றார்
கொற்றவன் தம்பி யெங்கே யென்று
தேடியே தம்பி திருமுகந் தன்னைக்
காணத் தியங்கி மயங்கி மன்னன்
ஓடினார் கிட்ட உட்கார்ந்தார்
உன்னையுங் கண்டேனோ தம்பி யென்று
வாடினார் கையால் மருது
மவர்முகத்தி லறைந்து கொண்டார்
தம்பிதிரு மேனியைக் கண்டு
தமையன் வெள்ளைமரு தேந்திரனும்
வெம்பி மனமுடைந்து தம்பி
விதிவசம் என்றவர் தானுரைத்து
மக்கள் பெண்டீர்கள் சுற்றம் கிளைஞர்
மருமக்கள் மார்மைத் துனரை
அக்கமுடன் பக்கந் தமர்க
ளனைவரையுந் தம்பி மறந்தாயோ
திக்கெல்லாம் போற்றி செய்ய உன்னை
திசைக ளெட்டும் ஆண்டவனே
திக்கெல்லாம் போற்று திருப்பத்தூர்க் கோட்டை
சிங்காரத் தோப்புநீ வைத்ததிலே

அக்கினீசு மேஸ்தர் துரைநமக்கு
அருந்தவசு மனமூன்றி
வைக்கிறே னென்று முன்னுள்
வாய்மத மாகவே சொன்னபடி
இப்பிறப்பை நீக்கி நாமும்
இனியொரு பிறப்பில் வந்து
செப்பமுட னிருவரும்
தீரராய்ப் பிறந்து அரசாள்வோ மப்பா
இப்போது நாமும் இருக்குந் தவவலுவால்
இராசா வயிற்றில் பிறந்து வந்து
அப்போது எதிரிகளை அறுத்து
அரசாள வருவோம் இருபேரும்
நின்று தவிக்கிறதை நிருபன் கெவுரி
கண்டு தூதாளை விட்டு
விண்டு உரைப்பார் மன்னன்
வெள்ளைமருது விசனம் ஆறுதற்காய்
தன்னிமை யுடனெனைக் காத்து வந்த
தன்மரு தேந்திர துரையே
மன்னவரே துரையே யுன்னாலே
வாகாக என்னுட னுயிரிருந்து
தப்பிப் பிழைத்துத் துரையே
தாரணி யாளவென் றிங்கு வந்தேன்
இப்போது வந்து இருக்கிறேன்
இராசாங்கம் நீரே எடுத்துக் கொள்ளும்
திக்கோர் கவிழ்ந்துனைத் தெண்டனிட
தீரனே சீமை யரசாள
வைக்கிறேன் சும்மா மயங்காதீர்
மன்னனே என்று கெவுரி சொல்ல
இப்போது என்தம்பி மக்கள் மறுமக்க
மாரெல் லோரும் இறந்த பின்பு
தப்பியே கெவுரி தன்கீழாய்
தானரசு நானுண் டிருந்தால்
ஒப்புமோ பூவுலகு நான்
உயிர்வைத் தன்னம் உண்ண லாமோ
வாழும் சிவகங்கை மாநகரில்
மன்னன் கெவுரி அரசா யிருந்து
ஆளுஞ் சுகமாய் புத்திரர் பவுத்திரர்
அடியடி வாழையாய் இருந்து
மலங்கு மனைவி யுடன்மைந்தர்
மக்கள்மறு மக்கள்மார் கிளைஞருடனே
கலங்காமல் பத்திரமாய்க் கெவுரியைக்
காக்கவே சொல்லுடா தூதாளை

தூதன்வந்து சொல்லிட துரைகெவுரி ராசனு
சொல்தவ ருமல் நடப்பே னென்று
ஆதரவாய் நாமும் அவர்களை
அஞ்சாமல் காத்திருப்போ மென்றார்
என்று கெவ்ரி இதமாகத் தூதனிடம்
இயம்பினதைச் சென்று சொல்லிடவே
நன்றுநன் றிந்தச் சமுதாடு
நம்மதுரை வடுகனுதர் எனக்கு ஈய்ந்தார்
இன்றரசு புரிகவுரி வல்லவு
இராசனுட கையில் கொடுத்திடென்றார்
கொண்டு வந்திந்தச் சமுதாடு
குறிப்பான பட்டத் தாயித மென்றீந்தான்
சிந்தை மகிழ்ந்து கெவுரிவல்ல பேந்திரன்
தீரன்வாங்கிச் சிரசில் வைத்துக் கொண்டார்
சந்தோஷ மாகவே மருது பூபாலன்
தம்பியுடன் காவலில் போய்ச் சேர்ந்தார்
மாலோன் விசுவமருது துரைமன்னர் இருவரும்
மைந்தர் கிளைஞர் சுற்றத்தார்
பாலர் முதலான பேர்களைப்
பற்றித் துரத்திப் பிடிக்க வென்று
அகப்பட்டா லந்நேரங் கமிட்டிக்கு
அறிவிப்போ மென்று சொல்லி
மகிழ்ந்து விவரமுடன் வகைவகை யாக
வரைந்து அக்கி னீசுதுரை
யேட்டி லெழுதி முன்னுளே
எவினுர் சென்னல் கெவுனர் கமிட்டிக்கு
தாட்டீகவான் கமிட்டி சென்னல்
கெவுனர்தனி லுள்ளவர் களெல்லாம்
கோர்ட்டு மிகக் கூடிக்
குறித்தார்கள் கமிட்டி யோசனையில்
வாட்டப் படுத்தாமல் மன்னன்
மருதிருவரை காவல் வைத்து
கமிட்டிக் கெழுதி விட்டாலத்
துரைமார் கருத்தினில் உதித்தவிதம்
சிமிட்டி விழிக்கு முன்னே யோசித்துச்
சிறக்கவே நாமும் அனுப்பும்வரை
அனுப்புவோம் உத்தரவு அக்கினீசு
அதுவரை யில்நீர் வார்ாமல்
வினையமது நினையாமல்
மேல்காவ லாக விட்டுவைப்பீர்
கமிட்டியி லுள்ள துரைமார்கள் நாங்கள்
கண்பார்க்க வேண்டுவதால்

அமட்டாமலே மருது இருவரை
அனுப்புவீர் கமிட்டி வந்துசேர
முந்தியோ ருத்தரவு சென்னல் கெவுனர்
முடுக்கி அனுப்பிவிட்டு
பிந்திவர விடுத்தார் கமிட்டியில்
பலமான உத்தரவாய்
மானுபரனுன் மருது இருவர்
மைந்தர்கள் மருமக்கள் மைத்துனமார்
தான்கும்பி னியார்களுக்கு முன்னுள்
சந்ததியாய் வந்து சேர்ந்தவர்கள்
நடுங்கிட அவர்கள் உயிரை
நமனிடத்தில் சேர்ப்பது ஞாயமில்லை
கடுங்காவலில் வைத்து அவரைக்
காப்பதுகா ணீது மன்றி
வண்ண மணிமார்பன் மருதேந்திரர்
இருவர் மைந்தரையும்
கொன்றல் நீ கும்பினிக்குக்
குற்ற முடையவ னுகுமென்று
தாங்கோ மனமிரங்கிக் கோபஞ்
சகியோம் நிமிட மானுலும்
வாங்குவோம் கத்திதனை
மாட்டுவோ முந்தனை அப்பவேதான்
இந்தியாவி லுன்னையும் வைப்பதில்லை
எப்போதும் உந்தன் முகம்பாரோம்
சேர்ந்திடுவீர் நம்முடைய
சீமையைப்போய் பார்ப்பீ ரிந்நாளில்
அந்தமுடன் கமிட்டியா ருந்தனக்கு
அனுப்பிய காகித உத்தரவை
சந்தோஷமாய் அவிழ்த்துப் பார்த்து
சாற்றுகின்ற வாசகத்தைத் தெரிந்து
கண்டு மனம்பதறிக்
கண்கள் நெருப்பெனவே புகைமண்ட
விண்டு மறுவார்த்தை விளம்பாமல்
அக்கினீசு மேஸ்தர்வெகு
வெப்பம் வெதுப்ப முடனேதான்
வெகு கோபமாய் மனஞ்சினந்து
தொப்பி கழற்றி அக்கி னீசுதுரை
துள்ளிய மேசையில் தானடித்து
அதட்டியே அடித்து அக்கி னீசுதுரை
ஆங்காரங் கொண்டு எழுந்து வந்து
உதட்டைக் கடித்து மேஸ்தர் அக்கினீசுதுரை
உருக்கி யேமன வேகமுடன்

வல்லோன் மருது இருவர் தம்மை
வல்லவர் தம்மை நாம்பிடித்தால்
கொல்ல வொண்ணு தென்று கூடிச்
சென்னல் கவுனர் கமிட்டியி லுள்ளோர்
மன்னர் இருவரை பத்திரமாய்
வைத்திரு நீயென்று ஒற்றுமையாய்
என்ன நமக்கு எழுதினு ரிவர்கள்
செய்தநேர் தெரியவில்லே
பாளையமும் சேனே படைபெருக்கிப்
பட்டாளந் தான்திரட்டி
வேளே யிதுசமையம் இந்த
மேதினியோர் எல்லாருந் தாமறிய
திருப்பத்தூர்க் கோட்டைத்
தென்மூலேக் கொத்தளந்தான் தன்னிலே
விருப்பமுடன் தூக்கி விடுவே னென்றே
அக்கினீசு மேஸ்தர்துரை சினமாகி
விட்டால் எனக்கு ஈனம்வரும்
மேதினியை யாள்கெவுரி ராசனுக்கு
பட்டந் தரித்து மென்ன
பலனுச்சுக் கெவுரி வல்லவற்கு
சத்தியஞ் சொல்லி வைத்திருந்தேன்
சத்தியத் துக்குநாம் பேதகமாய்
முற்றிலுஞ் சொன்னபடி நடத்தாமல்
மூர்க்கர்கள் இப்படி யுத்தரவு செய்தால்
நடந்தால் இந்தப் புவிமுழுவதும்
நகைக்குமே கும்பிணி யுத்தரவை
தொடர்ந்த படிக்கே முடித்தால்
தோடமில்லே இந்தப் புவிதனிலே
மட்டுப் படாசு மருது இருவரை
மாநகர் திருப்பத்தூரில் தூக்குவதால்
பட்டணத்தோர் கண்ணுல் பார்க்க
வருவீ ரெனப்பாரி போட்டான்
தமுக்குச் சத்தத்தைத் தான்கேட்டு
தரணியி லுள்ள மனிதரெல்லாம்
சேர்ந்தார் வெகுதிரளாய்
சென்ன லக்கினிதுரை முன்பாக
அந்தத் தருவாய் அக்கினீசு மேஸ்தர்
அதிவேக முடன்பரி யேறிக் கொண்டு
இப்போ திருப்பத்தூர்க் கோட்டைக்கு
எகவேணு மென்று பயணஞ் சொல்லி
செப்ப முடன்றன் பாளையத்தைச்
சேர வெழுப்பிக் கூச்சடித்துக் கொண்டு

சீராய்த் திருப்பத்தூர்க் கோட்டை செல்லுமெனச்
சனங்கள் சகலருக்கு மறுதிசெய்து
போரேயெனச் சேனை
புறப்பட்டார் அநேக தளத்துடனே
திட்டமுடன் பெரிய மருது தம்பி
தீரன் சின்னமருது இருவரையும்
கட்டளைப் படியே சிவிகை மேலேற்றி
காவலரை சுற்றிப் பாரு போட்டு
பீரங்கி ரேக்கிலாப் பின்னும் முன்னும்
பெரிய சோல்சர் பட்டாளஞ் சுத்திவர
சாரங்க புரவி யானைதளம்
தப்பாமல் கும்பினி சிப்பாய் சுற்றிவர
பட்டாளஞ் சுத்தி பயினுமான் பண்ணி
பாருச் சேவுகர் உஷாராய்வர
திட்ட முடனே மருதிருவரைச் சுத்தி
திரண்டு பட்டாளம் பாருவர
சட்ட முடனே அக்கினிசுங் கெவுரியும்
தளத்தின் மத்தியில்பரி யேறிவர
திக்கோர் அறிய அக்கினிமேஸ்தர் இரண்டு
தென்னை மரத்தை வெட்டிவந்து
கோட்டையின் தென்கிழக்குக்
கொத்தளத்தின் மேலேத்தி
தாட்டீகன் அக்கினி மேஸ்தர்
சமதையாய் இரண்டு மரம்நாட்டி
வஞ்ச லெனவே நூல்கயிறு
உருவுஞ் சுருக்கி லதிலேத்தி
பாஞ்சைநகர்க் கட்டபொம்மை
பண்டுமுன் தூக்கிப் போட்டால்போல்
பெரிய மருதேந்திரனை அக்கினீசு
பிரபலத் தவசில் போடு மென்றார்
துருசாய்த் தவசு செய்ய
துரைமருதே சீக்கிரம் செல்லு மென்றார்
வீரசாய் வெள்ள மருதேந்திர துரை
வீரன்வெகு வேகமுடன்
உரசாகவே கொத்தளந் தனிலேறி
உயர்ந்த கயர்ச்சுருக்கு கழுத்தி லிட்டு
திரசாகவே காளீசர் பதத்தைச்
சிந்தையில் தியானம் செய்து கொண்டு
அரசாண்ட வெள்ள மருதேந்திரன்
அரனடிப் பாதத்தில் சேர்ந்தா ரப்போ
பழிக்கஞ்சா மேஸ்தர் அக்கினீசு
பாங்காக வெகு இறுமாப்பாய்

கிளிக்கூடு செய்து சின்ன மருதை
கெட்டி யாயதில் போட்டடைத்து
ஊஞ்சலெனத் தவசில் சின்ன மருது
உறங்கியே ஊஞ்ச லாடினாரே
பாஞ்சைநகர் ஊமையனால் நமக்குப்
பலித்த தருந்தவசு யென்றே
திருப்பத்தூர் தன்னில்வளர்
திருத்தளீசர் சேர்வை புரிந்திருந்தார்
விருப்பமுடன் தவமுடித்து
வீரர்கள் அருந்தவசை விட்டு
சேரதிவளர் காளீசர்
சொர்ண வல்லிபதந் தாள்போற்றி
வேதனை யகற்றி மருதிருவர்
விமலன் காளீசர் பதம்போற்றி
வாளின்மேல் நடந்தவள் போல்
பிள்ளைமேல் பிள்ளை செய்தவள் பதம்போற்றி
மருதவனப் பொய்கையில்
வளர்கரைதனில் மேல்புரத்தில்
துருசாய்க் காளீசர்
தூண்டா மணிவிளக்குத் தூபமெதிர
யெதிரே துரை யிருவருக்கும் எப்போதுந்
தெரிசினை தெரிசிக்கவே
சதிராய்த் துதித்து இருவர்தான்
அங்கே கொலுவாய் வீற்றிருந்தார்
துரைகெவுரி மன்னனை
துரை அக்கினீசு மேஸ்தர் தானழைத்து
அருகே இருத்தி வைத்து
அவரைப் பார்த்தொரு வார்த்தை சொல்வார்
கருத்தானெனுந் துரோகி மருது
கைத்திரளைச் சோறு உண்டிருந்தோன்
ஒருத்தான வேளையிலே ஒளித்து
ஓடித்தானைக் காலை வெடியாலே
அப்படி யாகவொத்த அழகு மருதேந்திரனை
அற்பப் பொருளுக் காசை வைத்து
துப்பு உரைத்துப் படைகூட்டிப் பாவி
சுட்டவனை விட்டு விடலாமோ
மனதின் படியே கெவுரி எப்போதும்
மாறாமல் நீர்நடக்கப் போவதில்லை
தனது செய்ய முடியுமோ பாவி
சமையமது வந்த அளவிலவன்
கொல்லுவா னுன்னையுமே
கொற்றவனே சமயமதில் சத்தியமாய்

வல்லவனே பூமியில் இவனை
வைக்கவு மாகாது தர்மமல்ல
நீருரைத்த வார்த்தை துரையே
நிச்சயந் தானென்று சொல்லிடவே
கூறும் இதற்குவகை கொற்றவனே
என்று அக்கினீசு மேஸ்தர் சொல்ல
நடத்த வென்றார் கெவுரி ராசனிது
சொன்னவுடன் அக்கி னீசுதுரை
திடத்துடன் வளர்ந்த தென்னைமரம்
திடமாக இரண்டு வெட்டி யூன்றி
இரண்டு சுவடாகத் தூக்குமரம்
யேற்றியே கொத்தளத்தில் மேலூன்றி
நிறுத்தி வளைப்போட்டு அதனில்
நீள சுறுக்குக் கயறு எத்தி
கருத்தானையுங் கூடத் தூக்கினார்
காசினி யோர்கள் அறிந்திடவே
மால்மருது மன்னர் இருவரும்
மகாதேவர் விட்டுணு பதஞ்சேர்ந்தபின்
பாலருடன் சேர்ந்த பந்து சனங்கள்
இளைஞர் தலைவ ரெல்லாம்
வலிய நமனிடத்தில் வந்து
சீவசெந்து சிக்கினதுபோல்
நலியாமல் வந்தவரை துரை
நமன் பிடித்து அழைத்துக் கொண்டதுபோல்
ஆக்கினைகள் நியமித்து
அவரவரை அந்த வந்த இடத்தில்
தூக்கிலே போடும் என்று
அக்கி னீசுதுரை உத்திரவு செய்திடவே
அந்த அந்தப் படியே அவரவரை
அருந்தூக்கினில் போட்டாட்டி விட்டார்
மைந்தன் துரைச்சாமி யையும்
மால்வெங்கண பெரியுடை யாரையும்
சிந்தை கலங்காமல்
சென்னை நகர்க்கேக அனுப்பிவிட்டார்
பாஞ்சைநகர் ஆண்டதுரை
பார்வேந்த னூமையனைப் பிடித்து
தானுஞ் சாகக்கடவை யென்று
ஊமையனைத் தனித்தூக்கி லேற்றி விட்டார்
கும்பினி யாரைக் கூட்டிவந்து மருது
குலத்தை எல்லாம் கொன்றுழக்கி
அன்புடன் சீமைக்கு அதிபதி யாரென்று
அக்கினீசு மேஸ்தர் கேட்டிடவே

தென்புடன் காறுபார் இராசப்ப பிள்ளை
தீரன் சபைதனில் சென்றேகி
நாலு கோட்டைச் சுவான்துரை ஆதி
நால்வருக்கும் சிரேஷ்ட்ட புத்திரனும்
மேலுமவற் கிளையோன் படமாத்தூர்
வேந்தன் ஒய்யத் தேவரவர்
சாலுமவர்க் கிளையோன் சக்கந்தி
வெங்கண பெரியுடையான்
கோட்டி மருதுட னென்றுடன் மருதுசேர்ந்து
கும்பினிக்கு நோஷ்த்தன் ஆனதினால்
தாட்டீகன் படமாத்தூர் ஒய்யத்தேவர்
தானிந்தச் சீமைக்கு அதிபதியாம்
என்று இராசப்ப பிள்ளை வாக்குமூலம்
இயல்கும் பினியார்முன் கொடுத்திடவே
நன்றந்த படமாத்தூர் மூத்தோன்
நல்ல ஒய்யத் தேவர் தனையழைத்து
இன்றிந்த சீமையுன் பாத்திய மென்று
இராசப்ப பூபன் வாக்கு மூலம்
வாசிக்கக் கேளு நீயதற்கு
மாறுத்தர வென்ன சொல்லெனவே
வாசிக்கக் கேட்டேன் துரைகளே
வளர்சிவ கெங்கைநக ரெங்கள் பாத்தியந்தான்
உங்கள் இருவரில் பட்டம்
உலகாளு வதற்கு யாரு உரையுமென்றார்
எங்கள் இருவரில் நான்மூத்தவன்
என்தம்பி கெவுரி பட்டத்துக் கேற்றவன்
அந்தத் தவறாக நானிருப்பதால்
அரசாள உகந்தவன் என்தம்பி கெவுரியென்றார்
சிந்தை யுற்றவர் வாக்குமூலங் கொடுத்திடத்
தெரிந்து கும்பினியார் மனமகிழ்ந்து
மங்களமாய்க் கெவுரி வல்லவரை
மகிழ்ந்து அழைத்துக் குரிச்சியில் வைத்துக்கொண்டு
உங்கள் தமையன் பிரதானி இருவரும்
உண்மையாய்ச் சொல்லிய வாக்கு மூலம்
வாசிக்கிறோமதைக் கேட்டு நீரும்
மாறுத்தரவு சொல்லுங் கெவுரி யென்றார்
வாசிக்கக் கேட்டு மனமகிழ்ந்து
மன்னவன் கெவுரி இராசன் சொல்வார்
அண்ணன் அவர்கள் பிரதானி இருவரும்
அன்பாகச் சொல்லிய படியெனக்கு
மன்னவர் கும்பினியார் துரைகெவுனர் அக்கினீசு
மணிமகுட மெனக்குச் சூட்டிவைத்தார்

அன்னவர் வறுதிப்படி அக்கினீசுக் குதவியாய்
அகம்படியன் மருதுகுறும் படங்கினதால்
பின்ன மில்லாமல் இச்சீமையை
விரும்பினுன் ஆள்வதற் கிசைந்தே னென்ருர்
ஆனதினல் துரைமார்க ளனைவோரும்
அப்பவே கெவுரிக்கு நாமாக் கொடுத்து
மாண்பானே கெவுரி வல்லவர்நீ
மனுநீதி தப்பாமல் அரசாளு மென்று
இப்போது கிஸ்த்தி யேற்படுத்திய
எழுபத் தைய்யாயிரம் பூவிராகனும்
தப்பாமல் வாயிதா யேலச் செலுத்தியே
தரும ராசனுய்ப் பரிபாலனஞ் செய்வாய்
பசலி ஆகையாக்குள் வாயிதாப்படி
பகுதி கட்டாமல் பாக்கி வைத்தால்
இசலிச்ச புத்தி செய்து சீமையை
எங்கள் அதிகாரத்தில் வைத்துக் கொண்டு
கிஸ்திப் பாக்கிக்குச் செல்லானதின் பேரில்
சாரி செய்திடுவோம் சீமையை யும்மிடத்தில்
உன்னுட பிரயா சையினல்
ஓடைகள் காடுகள் தரிசுகிடை இராமமாகி
மன்னவனே அதிக ஆமிஷம் வந்தால்
மனமகிழ்ந்து நீரே ஆண்டு கொள்வீர்,
என்னுங் கமிட்டிக் கவுனர் உத்தரவுப்படி
இருபதினு ரெருவருடம் கெவுரி ஆண்டிருந்தால்
அன்னவன் சிவபாதத்தில் சேர்ந்தபின்
அவனுக்கு ஆண்பிள்ளை யிறந்ததினல்
திண்ணமுடன் அவரண்ணன் மகன்
நமசிவாய தீரன் ஓராண் டரசாண்டிருந்து
அன்னவன் சிவபதவி யானதினு லவர்மைந்தன்
போதகுரு பத்தாண் டரசாண் டிருந்தார்
மன்னவன் மால்பதம் சேந்திடவே அவர்க்கிளைய
மால்கெவுரி யீருர சாண்டிருந்தார்
இந்நிலத் தில்வர் சிவபதஞ் சேர்ந்திட
யீன்ற சத்திர பதியீரஞ் சாண்டிருந்தார்
அப்படி யவர்கள் சீமையை யாளுகையில்
ஆதி கெவுரி வல்லவர் தேவிமார்
மெய்ப்படி இஷ்த்தி யீருரி கெவுரி வல்லவற்கு
மேண்மையாம் ராணிமகள் ராணி மிருக்க
பாரிகளுக்குச் சீமை பாத்திய மென்று
பாரி அங்கமுத்து ராணி தீர்ப்புப்பெற்று
வீருடன் அவர்மகள் காத்தம் நாச்சியார்
விளங்கவே யீருறு வருஷம் ஆளுகையில்

சீருடன் சிலேஷ்ட்ட ராணிராக்கு (?) நாச்சியார்
ஈன்றசெல்வி வெள்ளைநாச்சியார் மைந்தன் வழக்குச்செய்து
பேர்புகழும் துரைசிங்க கெவுரி இராசன்
பிரபலமாய் ஒருரா ரசாண் டிருந்து
மேரு வெனுஞ்சிவ பாதத்தில் சேர்ந்தபின்
வீரனவ ரீன்ற மைந்த ரைந்துபேரில்
மூத்தவர் தரும ருடையண சாமிக்கு
முக்கிய மாகவே பட்டங்கட்டி யரசாளுவதில்
யேற்ற தம்பி வீமசேனன் முத்து
வடுகனு தேந்திர துரையிள வரசு
பார்த்த னவர்க்கிளைய அருச்சுனன்
பார்த்திபனச் சுவான்துரை மந்திரியாம்
யேத்தன் பரிகசி நகுலன் அவர்க்கு
இளையவர் டில்லி பாச்சாதுரை
சாத்திர வேதன் அவர்க்கு இளைய
சகாதேவன் சற்குண வேங்கிட சாமித்தேவன்
பஞ்சவர்க ளைந்து பேர்களைப்போல்
பாரரசு தாம்பரி பாலனத்தில்
வஞ்சகர் சீமை வழக்கினாலும்
வம்பினால் பொன்னுச் சாமியுமாக வைத்தகடன்
தென்பாக இருபத்தி ரண்டுலெட்சம்
சேர்ந்த திரவியக் கடனுக்காக
அன்பாக முன்னோர்கள் வைத்தகடன்
அறிந்து கொடுத்திட வேணு மென்று
சத்திய வாசகன் தர்மராசன் உடையணசாமி
தம்பிமார் தங்கையற்குத் தகுந்தபடி
சித்தமுடன் இருமம் பூமிகள் சேகர
மாக அவரவற்குத் தானீய்ந்து
பத்தியாய் மாதமொன்றுக்கு நாலாயிரம் ரூபாய்
பதினாயிரக் கலநெல் வரும்படி யெடுத்துக்கொண்டு
சித்தமுடன் சீமையை இருபத்திரண்டு வருடம்
குத்தகை யாகக் கொடுத்து விட்டுக்
குத்தங்க ளொன்று மணுகிடாமல்
எத்தலத்தினு மதிகத் தலங்கூடல்
சொக்கலிங்கந் திருவிளையாட லருபத்தி னாலில்
முக்கிய மான கருக்குருவிக் குபதேசித்த
சுந்தர மூர்த்தி திருவிளை யாடலில்
இக்கருக் குருவிதா னெய்திய வாத்தைப்போல்
ஈகை யருச்செல்வமும் வாழ்வு மீய்ந்து
தக்கவன் ஒருவன் வாழத்
தன் கிளை முழுதும் வாழ்வதொாத்து
மிக்கவ ரெடுத்துக் கூறும் பழமொழி

விளங்குவது உந்தன் அரசாட்சி தன்னில்
தேவாலயம் பிரமாலயம் மடவாலயம்
சிவபூசை அரிபூசை ஓமயெக்கியங்கள்
தாழ்வாகா மலதிகாரத் தைச்செலுத்த
தம்பிச் சுவானத் துரைக்கீய்ந்து
பாவ மணுகாமல் பாதகஞ் சேராமல்
பரிபா லிக்கிருரச் சுவான்துரை
ஆதி தேவருக்கும் சப்த ரிஷிகளுக்கும்
அமாருக்கும் அஞ்செழுத் துபதேசித்த வடாரலீசர்
சோதிதிரு வாலங்கா டரசாண்ட நாயகி
திருவால் உதித்த மூலலிங்க மாகையினுல்
அஷ்ட்ட பந்தன கும்பாபிஷேகம்
ஆனசேடி பந்தனம் தானடத்தி
இஷ்ட்ட முடனவற்கு முன்னரசர்
யீன்ற யீரொன்று கிராமங்களும்
கஷ்ட்டப் படாமல் கண்மாய் கால்வெட்டி
கண்பார்த்துத் துரஷத்துச் செய்தால்
ஆமிஷ மீரிரண் டாயிரம் பேரீசு
அதிக மாகவே யுண்டாகும்
சாமிகோவில் படித்தரம் சிப்பந்தி
திருவிழாத் தாழ்வில் லாமலே நடந்துவரும்
நேமுக மாகவே திருப்பணி மராமத்தும்
நிச்சய மாக நடத்திடலாம்
கங்கை குலம்வளர் சிவகெங்கை நகர்ச்சீமை
கர்த்தன் அச்சு வான்துரை
மங்கை அயிலாண்டவன் விவாகஞ்செய்து
வாங்கிய ஆராயிரம் பொன்பூமி யுடன்
சிங்கமெனும் பவான்சிங்குவை
தீரன் சுவான்துரை செயித்து
அரசன் விசையன் சேதுபதிக்கு
மூனூறுபங்கு அன்பாகத் தனக்கு இரண்டுபங்கும்
அரசநிலை இட்ட சுவான்துரை யென்று
ஆதி சந்திராதித்தர் உள்ள மட்டும்
பேரு விளங்கிட கீர்த்தி பெற்ற
பிரபலம் எந்நாளும் விளங்கிடவே
பாருலகில் வெள்ளைக் காரர் வந்ததும்
பார்த்திபன் நபருட சீமை எடுத்ததும்
போரில் எதிர்த்தவரை வென்றதும்
பூபன் கெவிரிக் காசீய்ந்ததும்
சீராகப் பாடிய கும்மித் தமிழைச்
செந்தமி ழோர்கள் கிருபை செய்து
பேரு விளங்கிட மனதுவைத்து

பிழைகள் திருத்தி யருள்புரிவீர்
பாலருகில் திருவாலங் காடரசெர் அந்த
நாயகி பத்திரகாளி மகிழடியா ளரசிநாயகி
பேர்புகழும் உத்தமனூர் பிள்ளையார் தம்பிராட்டி
யம்மன் அய்யனூர் முனியப்ப சாமி
பாத மனுதினம் போற்றி செய்து
பாருலகில் பாடிய கும்மித் தமிழை
பேத மில்லாமல் படிப்பவர் கேட்பவர்
பெண்டுபிள்ளை பாக்கியம் பவுசுடன் வாழ்க!
நீதியுடன் பதினன்கு உலகம் வாழி!
நீள்கடலும் புவிமிசை வாழ்நதியும் வாழி!
மாதலத்தி லுள்ள வனக்காவும் வாழி!
மதியுடனே கதிரவனும் மறையும் வாழி!
ஆதிமக மேருமுதல் வரைகள் வாழி!
அம்புவியி லுதித்தவுயிர் அதுவும் வாழி!
மேதினியில் சிவகெங்கை நகரரசு வாழி!
மேன்மேலும் அவரரசு விளங்க வாழி!

முற்றும்.

---

# சிவகங்கைச் சரித்திர அம்மானை

## காப்பு

சீருயர் சீமை தன்னில் சிறப்புடன் தேவர் வாழும்
தீரர்கும் பினியார் மன்னர் சென்னைமா நகர மேவி
ஊரது குடைக்கீழ்ச் சூழ்ந்த உலகமாள் நீதி தன்னை
காருமென் னம்மா னைக்குக் குஞ்சர முகத்தோன் காப்பாம். (1)

வாந்தமாய்ச் சீமை மீதில் வளருங்கும் பினியார் தாமும்
சீந்தியின் கரையில் வந்தே யிலங்கிய சென்னை மீதில்
பாந்தமாய்க் குடிகொண் டிப்பால் பதிமுழு தடைவே யாளும்
வேந்தர்கள் சிறப்பை நன்ருய் விரித்துரை பகர்வேன் பூவில். (2)

## பாயிரம்

சென்னைமா நகர்மீ துற்றுச் செனித்துவாழ் துரைகள் தாமும்
நன்னக ரடங்கச் செங்கோல் நடத்திவாழ் மகிழ்ச்சி தன்னைத்
தென்னவர் புகழ்ந்தே வாழ்த்தி தேசமேல் விளங்க வென்றே
வின்னபே தகங்க ளின்றி விரித்துவம் மானை சொல்வேன். (3)

கும்பினி யார்க ளிந்தக் குவலயத் தரசுங் கொண்டே
தெம்புடன் திசைதென் பாகம் சிவகங்கை நகராள் மன்னன்
தெம்புள மருது தன்னைச் செயித்தவா றதுவுந் தம்மோடு
............வரை வென்ற நடப்பதைப் புகழாய்க் கூறுவேன் (4)

மன்னர்கள் தாமும் வந்து வணங்குங்கும் பினியார் தாமும்
தென்னகர் தன்னில் மேன்மைச் சிவகங்கைப் புவிகைக் கொண்ட
மன்னவன் மருது தன்னை வகையுடன் செயித்தே பூமி
தன்னையே கவுரிக் கீந்த சரித்ரவம் மானை யீதே. (5)

## நூல்

[இதற்குமேல் மூலப்பிரதியில் ஐந்து ஏடுகள் காணப்பெற்றில].

யே.........னவர் யெல்லவரு மப்படியே
நிர்.....ருணர்.....ரவுதில்.....காட்டிலே வளர்ந்தார்
வளர்ந்த.........சமத்திர.....தரசுந் தன்னறிவாய்
தெளிந்தா..தி........ர....த..னவனுங் கன்னிகையே
குணமாக வேநான்கு கோட்டையுடை யார்தமக்கு
மணமாலே முடித்து வாழ்ந்துமகள் வீற்றிருக்க
ஆதரவு பெருகவே ஆறுலட்சம் பொன்சீமை
சீதனமுந் தான்கொடுத்தார் சிவகங்கை ராச்சியத்தை

ஆளுமென்று பட்ட மணிந்தா ரிருந்தவர்கள்
வாள்விழியாள் தன்னை வணங்கிநின்று **ரம்மானை**
**சேதுபதி விசயன்** செப்பமுட னிப்படிக்கு
மாதுதனக் கன்பாய் மங்கலமுஞ் சூட்டிவைத்து
தி........ததும் ஆதிசிவ கங்கை சேகரத்னுத
.... மாய்த் தந்து செலுத்தரசு யென்றவுடன்
........ங்கை மாநகரும் செப்பியபொன் நற்றொகையும்
..........தத்தான் தெரியா......தென்றுமகள்
யேட்டிலத் துகைவகையாய் எடுத்தெழுதி நீ.........ன
காட்டுவயம் யாரெனக்குக் கருதுமென்ற வார்த்தைதனை
கேட்டு மகிழ்ச்சியுற்றுக் கிருபையுமே யுண்டாகி
நாட்டமுடன் விடியா ராசனுமே தன்சனமும்
முன்னிருந்த அட்டவணை **முத்திருளப் பேந்திரனையும்**
கன்னல்மொழி **முத்துக் கருப்ப மகிபனையும்**
வருத்திய......திரு......மணி....கரும் பொன்துகையும்
திருத்தி யெடுத்தெழுதிச் செல்விக்குச் சொல்லுமென
ம.......................மன்னவனு மப்பொழுது
அ.......................கேட்டு அப்படியே நல்லதென்று
................வாம்பரிமே லிருவருமே யின்பமுற்று
ம..............ா நெஞ்சமதில் கோதண்ட பாணியுடை
அடியை மிகத்துதித்து அந்நேரம் வாம்பரியை
ஒட்டமாய் நடத்திவி......ச சிவகங்கை வந்துபுக்கு
மத்தநாள் சென்று வளைந்தநகர் முற்றினுமே
..........தத்துத் துகைவகையும் சரிவரவே கண்டெழுதி ;

## சிவகங்கை சீமை பிரித்தது

ஆறுலட்சம் பொன்னு ஆவுடைய நறும்பதியை
கூறுடனே தான்பிரித்துக் கொண்டுவந்த கைக்கணக்கை
விண்டார் விசயனிடம் வேந்தேநீர் தந்தபடி
கண்டோர்ந்து கைவகையுங்....காணியுங் கண்டெழுதி
கொண்டுவந்தோ மென்று கொடுத்தா ரதுசமயம்
அண்மை நின்றுகேட்ட **அகிலாண்ட ஈச்வரியும்**
வந்தகா ணிக்கந்த மலர்முகத்தைத் தான்பார்த்து
எந்தனுக்கு அவ்வூ ரியலுரைப்பீ ரென்றளவில்......
மாங்குயிலே முத்தை வளம்பார்த் தெடுத்துவைத்தோம்
பூங்கொடியே சிப்பி போட்டுவிட்டோ மென்றுரைத்தார்
இங்கிவ ரிப்படிக்கு யினியமுத வார்த்தைசொல்ல
மங்கையுடன் மன்ன மகிழ்ந் தடைவாய்க் கேட்டவர்க்கு
மெத்த வரிசை வெகுமானந் தான்கொடுத்தார்
அத்தருணம் பக்கத் தடுத்திருந்து மெய்ம்மகிழ்ந்து
நல்ல......மலையாள......ராமரா சேந்திரனும்

பல்லக்கு நல்வரிசைப் பரிமுதலாய்த் தான்கொடுத்தான்
வாங்கி யிருவருள்ள மகிழ்ந்திருக்கு மப்பொழுதில்
அங்கிருந்த மங்கை அகிலாண்ட ஈச்வரியும்
சந்தோஷமா யவர்மேவத் தாதைமுகம் பார்த்துரைப்பார்
எந்தேசத் தட்டவணைக் கிசைந்ததிவ ராகையினல்
நானிவரைக் கூட்டி நடப்பனெனச் சொல்லலுற்றுள்
மா..........பா னப்படியே வாருங்கள்.... நல்லதென்று
இவரிருவர் தங்களுக்கு மியல்பாய் விடைகொடுத்து
சிவகங்கை மாநகர்போய் திட்டமிட்ட வட்டவணை
காரியமுஞ் சேருவையின் கணக்கு அதி காரமுற்றும்
பாருவிது வல்லாமல் பைங்கிளியை யுங்களுடன்
பிள்ளையெனக் கைகொடுத்தேன் பேருலகாள் நீதியதில்
யெள்ளளவும் தப்பாமல் யேத்தமதி யோசனைகள்
............திக் குடிச்சனங்கள் தயங்காமல் பத்திரமாய்க்
காத்து வருவதல்லால் கன்னியையும் மன்னனையும்
அக்கரையாய் நெஞ்சில் அனுதினமுந் தானிருத்தி
விக்கினங்கள் வாராமல் விழிநோக்கி வாருமய்யா
ஈதுமல்லா லிச்சபையி லியம்புகின்றேனோர்வசனம்
சேதுநகர்க் கிடுக்கஞ் செய்துமுன்னே மானோசி
பொரும்போரில் வெற்றி புரிந்தவனைத் தான்தூற்றி
நிருபரெனப் பேராக நிலைநிறுத்தி யிந்நகரை
பெருமைபெறச் செய்தகுலம் பின்னும்....நீ....ரப்படியே
பெருமையது குன்றுமல் பிரபலமே யாம்படிக்கு
நன்மைமிகச் செய்து நகரிரண்டுங் காப்பதற்கு
உண்மைபோல் தாமுமக்கு உபசாரஞ் செய்வதென்ன
காரியமெல் லாமுமது காரியமே கூறுகின்றேன்
நீரேற் படுத்திவைக்கும் நிலவரிவ சூலதுக்காய்
காரியப் பிரதானியெனக் கண்டெழுதி யுங்களுடன்
தப்பாம லுமக்குதவி தாண்டவ ராயனையும்
ஆகையினல் நீங்கள் அகிலாண்ட ஈச்வரியும்
நாகரீக ளுமுடையார் ராசனையுந் தானழைத்து
சென்று சிவகங்கைத் தேசமதை யுன்குடைக்கீழ்
யென்றுயர சாண்டு யிருமென்று ரம்மானே.

விருத்தம்

காவலனிவ் வாறு கூறக் கரணிக்க ரிருவர் தாமும்
பூவுதனை நாளும் பொறுத்துநாங் காப்போ மென்ன
தேவனை யவர்பின் கூடச் செல்வியை நலம்நாள் நோக்கி
கூவியே நடப்போ மென்றே கொற்றவன் மனையின்
[சென்றுன். (6)

அன்றுபோய் மறுநாள் சென்றே அடுத்தநாள் சென்ற பின்னே
நன்றுநா ளிதுவென் றேத ராசனு மகளைக் கூவி
சென்றுநீ பதியில் மேவி செலுத்துமுன் னரசு மேலாய்
என்றும்வாழ்ந் திருப்பீ ரென்ன யினியவர் நடப்ப தானார். (7)

வேறு.

நன்மங்கை யகிலாண்ட வல்லியுடன் உடையார்
சிங்கமுக மிலங்கும் சிவிகையின்மே லேறிவந்து
கோதண்ட பாணிபதம் குனிந்து நமஸ்கரித்தார்
மாதுதிரு மெல்லடியில் வணங்கிப் பணிந்தெழுந்தார்
சுற்றி வலம்வந்தார் தொல்புவியின் நல்லரசு
வற்றும லேபெருகி வளரவைப்பாய் மாயவனே
என்றார் படிகடந்தார் இருவருமே ஓர்மனமாய்ச்
சென்றார் சிவிகையின்மேல் சேர்ந்துவந்து மாளிகையில்
இருந்துண் டிளைப்பாறி யிராசனையுந் தாய்தனையும் ;

## அகிலாண்டேசுவரி சிவகங்கைக்கு வருதல்.

திருந்த நமஸ்கரித்துச் செப்பிவெளி வாசல்வந்தார்
வந்தா ரிருவரிவர் வருமுன்னே ராசனவன்
தந்த மொழிப்படிக்குத் தானடப்பே நானெனவே
திட்டமுடன் மாவுத்தன் சிக்கெனவே வோடிவந்து
பட்டத்து யானைதனைப் பாங்கா யலங்கரித்து
சித்திரமும் வைத்தெழுதிச் சிங்காரம் செய்துவைத்து
அத்தியின் மேலிடத்து அசையா திருத்தியதோர்
தங்கத்தி னாலே சமைத்தசவு தாகிரிமேல்
மங்கையுட னுடையார் வந்தேறி வீற்றிருந்தார்
இருந்தார் மதன்ரதியென் றெல்லவரும் போற்றிசெய்தார்
திருந்த யிவரிருந்த செய்கைதனை யொப்புரைக்க
என்னாலே யாமோ யேலாது வாகையினால்
அந்நேரம் யானைதனை அடைவாய் நடத்தலுற்றார்
சிவகங்கை மாநகரம் திசைநோக்கி யேநடந்து
தவறும லானையது தான்வரவே முன்நடவாய்
கட்டியங்கள் கூறக் கவிவாணர் பாடிவர
எட்டுதிசை முதலாய் எங்கும் கிடுகிடென
ஆனைமேல் டம்மாரம் அதிர முழங்கிவர
வானத்தி லிடியெனவே மல்லரிகள் ஓசைதர
கைத்தாளம் பம்பை கடல்போ லொலியிடவே
மத்தளம் பேரி வகைவகையாய்த் தான்முழங்க
எக்காளம் பூரிகையும் எங்கும் கிடுகிடென
தக்க தவுல்முரசு தானொலிக்க நாற்புறமும்
வாங்கா......வும் கொம்பும் வாய்த்ததித்தி சங்கமதும்

பாங்குடனே யூதிவரப் பாடிவர நாடகப்பெண்
ஆல வட்டம் சுருட்டி அருகில் நெருங்கிவர
தாலவட்டம் வெண்கவரி சாமரமும் வீசிவர
பக்கமதில் குஞ்சம் பலவிருது நின்றிலங்கத்
திக்கோர் புகழ்க்குடைகள் சேர்ந்துசுற்றித் தான்பரவ
வாலாவுங் கத்தி வளதடியுஞ் சக்கரமும்
வேலலகு யீட்டி வில்லம்பு வல்லயமும்
வரவே யொருவகுப்பாய்.........வண்ணமுள்ள கிள்ளரியும்;

**(இதற்குப் பின்பு இருபது ஏடுகள் மூலப் பிரதியில் காணப்பெறவில்லை.)**

என்று மனக்கலக்க மில்லாம லேவளரும்
தென்திசையில் போவலூர் தீரன் படையுடனே
போரி லடிவில்கான் புகழ்பெரிய மன்னனெனும்
சூரத்தூ ரான்படையும் சுற்றிவர வேயருகில்
வன்னித்தே வன்படையும் வழிவிட்டான் சேனையதும்
கன்னங் குடியவருங் கயத்துவெடி நேரிசமும்
கலையூர் விசயனுடன் கனத்தபடை மன்னவரும்
சிலையோ சுனிம்பாட்டுத் தேவன் படையுடனே
பாலைக் குடித்தேவன் பெரும்படைகள் தம்முடனே
வாலை பவான்சிங்கு மன்னன் பெருந்தனமும்
மண்டலக் கோட்டை மன்னனுடை யிராணுவமும்
ஒண்டொடிக் காரர் ஒடுங்காத மன்னவரும்
ஓரியூர் வேந்தனுடன் உள்ளபடை யாளருமே
தீர னரையத்தூர் சேருவை தன்படையும்
மாரன் பெருவாக்கோட்டை மாயாண்டி சேருவையும்
தேர்போகி நாட்டுத் திரண்ட படைக்கலமும்
வேம்பாத்து மன்னன் வெகுவீரன் தன்படையும்
பாம்பாத்துக் கோட்டைப் பதியில்......அவர்களும்...
பள்ளிமடைச் சின்னச் சாமிப் பெரும்படையும்
தெள்ளிய வான்சிக்கன் சீராம நாய்க்கனுடன்
ஆயக் குடிமன்னன் அடங்காப் படையுடனே
தீக்கொளுத்தி மாயாண்டி தீரன் பெரும்படையும்
வழுவா தாக்கினைமுன் வெம்போர் புரிந்ததொரு
கழுரணித்......தே....வன் கனத்த படைக்கலமும்
இரவிசேரி நாடு யெண்வொண்ணு மன்னவரும்
வெருவிச் சினந்து வெகுசேனை சூழ்ந்துவர
கப்பலூர் நாடுங் கறுத்துக்கோட்டை நாட்டவரும்
குப்பண்ண தேவன் கொடிய தளத்துடனே
அஞ்சுகோட்டை நாட்டவரும் அவர்கள் தளமுடனே
குஞ்சங் குளத்தான் குமாரு.........மவன் சேனைகளும்

ராசசிங்க மங்கலம் நல்லபுவி மன்னனுடன்
மாசங்க மாக....வருஞ்சேனை மன்னருடன்
கைக்குடி நாடவரும் கருதவொண்ணு வாயுதமும்
சக்கரக் கோட்டைச் சமத்த னுடையாரும்
வளநாட்டு முத்துக் கூரி மகிபனுடன்
கிழ்காட்டு மன்னர் கொடிநோக்கி யேநடக்க
இப்படியே யட்டதிக்கி லிருத்தமன்னர் சேனையுடன்
தாமல் வந்து சார்ந்தார்கள் தேவைநகர்
செப்பமுடன் சேனைவந்த சிங்கார மத்தனையும்
உப்பரிகை மேலே உயரவே வீற்றிருந்து
மந்திரி முத்திருளப்ப மகிபனு பெண்ணோடு
சந்தோஷ மாய்ப்பார்த்துச் சரியென் றகமகிழ்ந்தார்
அந்தத் தருவாயி லருளோடு வந்துநின்று
வந்தார் சகலரென வழுத்தினு ரம்மானை
கேட்டுமதி மந்திரியுங் கெம்பீர முண்டாகி
நாட்டுப் படையுடனே நமது பெரும்படையைக்
கூட்டி யொருமுகமாய்க் கும்பலிட்டு வையுமென
ஓட்டம் நடையாக வோடிவந்து அப்படியே
சேர்த்துத் திரட்டிவைத்துத் திரும்பிவந்து யீதுரைக்க
வேற்றரசர் மீதில் வெகுகோப முண்டாகி
மேதினியில் தன்பேர் விளங்கவென்று உள்நினைந்து
சேதுலக மாதா திருவடியே தஞ்சமென்று
மேடைதனை விட்டு விரசா யிறங்கிவந்து
நாடுபுகழ் கோதண்ட ராமனுடைச் சந்நிதியில்
வந்து பதம்பணிந்து மாதுதிருத் தாள்துதித்து
உந்தன் கிருபையினுல் உலகமெல்லாந் தானறிய
வந்த வெதிரியின்மேல் மனம்வைத்தேன் போர்புரிய
இந்தத் தருணத்தில் எதிரிக் கிளக்கமாய்
காட்டிக் கொடாதபடி காத்தருள்வாய் மாயவனே
வாட்டமின்றி யுந்தன் மலர்த்தாள் துணையென்றே
போரே னெதிரிதனைப் போனவுடன் வெற்றிகொண்டு
வாரேன் செயம்பெறவே வாக்கருள்வா யுத்தமனே
என்று துதித்து எழுந்துஅடி நாடியே
நின்று வணங்கி நெடுமாலே யென்றிறைஞ்ச
மாதரசும் மாதவனும் மகிழ்ந்துகனி வாய்திறந்து
சேதுக் கிடுக்கமது செய்யவென்று யிங்குவந்த
வேற்றரசர் தம்மை வென்றுவெற்றி நீபெறுவாய்
சாற்றினேம்போய் வாவெனவே சாமிசொல்ல மந்திரியும்
ஆவலுடன் நடந்து அரண்மனைமுன் வந்துநின்று
தேவைநகர்க் கரசி சேதுலக மாதாவை
வணங்கி நமஸ்கரித்து மாற்றானை வென்றுவரக்
குணங்காமல் நல்வாக்குக் கொடுப்பாய் விடையெனவே

தாயார் முகமலர்ந்து தந்திரியைப் பார்த்துமுன்னே
மாயவனூர் கோதண்ட வள்ளலுடைத் தன்செயலால்
நீயேபெறு வாய்வெற்றி நெடுநாளு மப்படியே
போய்வா மகனேயெனப் பொருந்தி யனுப்பிவைத்தாள்
விடைவாங்கி மந்திரியும் வேகமுடன் தான்நடந்து
அடைவாய்த் தனதுடைய அரண்மனையில் வந்திருந்து
போசனமு முண்டு பூரித்து மேனியெல்லாம்
நேசமுடன் மாலை நிறுத்தி யிருதயத்தில்
கைக்கு ளருகிருந்த காவலனைப் பார்த்துரைப்பார்
திக்கோர் புகழ்நமது சேனைபரி யானைதனைச்
சேகரமாய்த் தானிருக்கச் செப்பிவா வென்றுரைத்து
நாகரீக நன்று நவாபுமேல் நோக்கமதாய்
விசகிதமாய்ச் சல்லடமும் வெல்குவா............தார்
கச்சணிந்தார் வச்சிரக் கவசமது தானீந்தார்
வில்லம்பு வல்லயமும் வேலலகு வாளெடுத்தார்
வல்லவனுங்......திபுடன் வாலாவுந் தானெடுத்தார்
கட்டாரி நேரிசமுங் கனத்தசமு தாடுடனே
நெட்டா யெரியீட்டி நிமுச்சாவும் வச்சணிந்தார்
இடைதனிலே வாங்கு இறுக்கினார் நேர்த்தியதாய்
வடதேச மன்னவர்மேல் மகாகோப மாய்ச்சினந்தார்
ஆனைதனைச் சுற்றி அலங்கரித்து வாருமென்றார்
ஆனபின்பு வெள்ளி அவுகா தனைநிறுத்திக்
கொண்டுவந்து முன்னே குறிப்பாய் விடுங்கரிகள்
கண்டு மனமகிழ்ந்து கால்மீறி யேநடந்து
அத்தியின் பால்வந்து அம்பாரி மீதினிலே
முத்திருளப் பேந்திரன் முன்னிருந்தா ரம்மானை
மந்திரியுமிவ....ா வந்தவுதா மேலிருக்க
பிந்தியே வெண்கவரி பிடித்திருவர் வீசிநிற்க
சேர்பயண மென்று செப்பினா ரெல்லவரும்
பாற்பெரும் படைகள் பயணம் பயணமென்றார்
ஆலவட்டஞ் சுருட்டி ஆனமீ னக்கொடியும்
கால்வட்டம் பெரிய சண்டைக் கொடிகளதும்
கரவிக் கொடிகளவை கலந்து நெருங்கியதும்
தேவைச் செயமெனவே சிங்கக் கொடிவிருதும்
வெள்ளைக் குடைநெருங்க வெண்கவரி வீசிவர
தெள்ளு தமிழ்ப்புலவர் செயகீதம் பாடிவர
பாடுவார் சங்கீதம் பாடவே பாவையர்கள்
ஆடுவார் முன்நடக்க அழகுகுஞ்சம் வீசிவர
தித்தி னவுரி சின்னமொடுஞ் சங்கமதும்
மத்தளந் தாளம் வங்காவுங் கொம்புடனே
சங்கீதம் மேளம் தவுல்முரசு தாரையுடன்
பொங்கு கடலொலியாய்ப் பூரிகையுந் தான்முழங்க

ஆனைமேல் பேரிகையும் அதிக முழக்கமிட
வானத் திடியெனவே மகாவாத் தியமுழங்க
ஒட்டகை மேலநகார் ஒலிகள் இடுகிடென
கிட்டிவெகு டமாரம் கர்ச்சனைகள் மிச்சமென
தவண்டையுடன் மல்லாரி சந்திரப் பிறைமுழங்க
துவண்டு யிருபுறமும் சூரியப் பிரபைவிளங்க
பவழக குடையுடனே பசுங்குடைகள் தானெருங்க
தவளச் சங்கதிவர் சங்கீதம் பாடிவர
வானம் பலவிருது வகைவகையாய்த் தான்முழங்க
ஆணிமுத்துக் குடைகள் அருகே நெருங்கிவர
ஆளியெனச் சூழ்ந்து அடர்ந்த படைநடுவே
வாளில் வலியோன் மந்திரியுந் தான்வரவே
கட்டியங்கள் கூறக் கவரிபணி மாறிவர
மட்டில்லாப் பாவாடை வானமதை முட்டிவர
பஞ்சவர்ண டால்விருது பக்கமதில் கொஞ்சிவர
குஞ்சுமயில் தும்பை....கூடவே தான்துலங்க
நடந்தார் படையரசர் நபாபுத்துரை யெங்கேயென
திடந்தான் மனத்திலெண்ணி சிறந்ததொரு பூத்தொண்டி
ஊரருகே நன்ருக உள்ள பெருவெளியில்
தேரியிது பாளையமுஞ் சென்றடித்தார் கூடாரம்
அந்தநா ளங்கே அமர்ந்திருந்தார் சூரியன்போல்
சந்தோஷ மாய்மறுநாள் தானுதித்த நேரமதில்
காலையில் தானெழுந்து கவிந்தபெருஞ் சேனையுடன்
சல்லட முகமாய்த் தானேக்கி யேநடந்தார்
வார படைக்கலமும் மந்திரியும் மன்னவனும்
பார்தூரத் தோப்பில் பரிந்தடித்தார் கூடாரம்
தாடாளன் சேது தளவாய் மனமகிழ்ந்து
இன்றைக் கிவடமதி லிருந்துநா மெல்லவரும்
சென்றுமே நாமும் தீரப்போர் செய்வதென
உரைத்தவ் விடமதனில் உற்றிருந்து உண்டுபின்னே
கருத்துடனே கண்துயின்று காலமதில் தானெழுந்து
ஆளழகன் சேது அரசுபதி மந்திரியும்
பாளையத்தைப் பார்த்துப் பகருவா ரந்நேரம்
போறேும்நாம் ஆவாம்பல் பூமியுடன் சேகரமாய்

ஆறுமுகக் கோட்டை அணைவாகப் போயெதிர்த்து
வண்டன் நபாபுதுரை மன்னனுடைத் தன்தளத்தைத்
துண்டிக்க வேணுமெனச் சொல்லிப் படைவகுத்து
வாகுடனே நான்கு வகையா யுதயமதில்
போகவிட்டார் வெற்றி புரியுமென்று ரம்மானே.

வேறு

தேவைநகர் மந்திரி யிதுசெப்பிய போதப்போ
காவலவர் சேனையிரு காதினிலே கொண்ட
நாவுரையக் கத்திமறு நடத்துவமோ ரெண்
வாவென நடந்துபடை வளைந்தனர் திசையை ; (8)
திசைதிசை வளைந்துவரும் சேனையைக் குறியாய்ப்
புசபிவன் நவாபுதுரை போசனுமே கண்டு ; (9)
[இடையில் ஒரு ஓலை காணப்பெறவில்லை]

வேறு

**திறமுடைய பஞ்சவர்கள் சேனைதனைக் கண்டுமுன்னே**
**அரவக் கொடியோன்படை அலமலந்த பாவனைபோல்**
பட்டணத்தை நோக்கிப் பயணமென்ற வார்த்தையது
மட்டடங்காச் சேது மந்திரிபால் வந்தணுக
அதுவே நிலவரமா யறிந்தேதா ணிங்கவரும்
இதுவே சமயமென்று எழுந்தார் படைகடல்போல்
தீனோர் குலத்தரசன் சேனைதனை யிப்பொழுதே
நானே வதைப்பனென ராசன்மதி மந்திரிபால்
வனுக்கவே வாதுரைத்து வளைந்துவருஞ் சேனையவை
துலுக்கன் படையெதுவோ சொல்லுமென்று வாசதுவை
கண்டார் நபாபுதுரை காலெழும்பக் கூடாமல்
கொண்டே விசாரமது குலைந்துமனம் புண்ணாகி
**அல்லா வருளிதுகாண் ஆலநபி தன்செயலே**
பொல்லாத வேளையிதோ புறப்பட்ட நேரமதோ
முந்தளவாய்த் தாமோ தரனவனும் முன்னமக்கு
நிந்தைமிகச் செய்து நெடுநாள் படையெடுத்து ;

## நவாபு, சேதுபதி சீமைக்குப் பகுதி வேண்டாமென்று வந்த படையைத் திருப்பினது.

அவனு மிறந்ததன்றே அறிந்தோம் படையெடுத்தோம்
இவனு மவனைவிட யெட்டதிக மாகுமதால்
இதமா யிவனுடனே யெதிர்த்துப் பொருதுவென்றால்
உதவாது நம்மாலே ஒன்றும் நடப்பதில்லை
என்றுறுதி யாக எண்ணியே மன்னவனும்

அன்றேயவ் விடம்விட்டு அகன்றுபின்னே வாங்கவென்று
மானபரன் கும்பினியார் வந்திருந்த நால்வரையும்
தானழைத்துக் கிட்டவைத்துச் சாற்றுவா ரங்கவர்க்கு
உங்கள் வலுவாலும் உரமிகுத்த சோல்சரிவர்
தங்கள் வலுவாலும் தனதென்று ராணுவத்தார்
மனவலுவி னாலும் மாஞேசி யப்பாவின்
தனது படையாலும் தப்பாம லெப்படியும்
**சேதுசிவ கங்கை சிறுபாஞ்சை யூரதையும்**
**வாதைசெய்து நாமும் வசப்படுத்த லறமெனவே**
வந்தோம் நகரடுத்தோம் வருமிந்தச் சேனைதனை
எந்தவிதஞ் செயிக்க ஏலுமோ யாவதில்லை
இனியுமிவ் விடந்தனிலே யிருக்கவுங் கூடாது
தென்னவரே நாமுஞ் சிவகங்கை மாநகரம்
போவோஞ் சகலருமாய்ப் புறப்படுங்க ளென்றுரைத்து
ஆவலுடன் முந்தி அரசன் நவாபெழுந்தார்
இங்கந்த **மாஞேசி** யெழுந்தா ரவர்பிறகே
கடல்போல் வளைந்திருந்த கனத்தபெருஞ் சேனையதும்
அடைவா யதுபோல வனைவர்களுந் தாமெழுந்தார்
கூடார மும்பிடுங்கிக் கூவெனவே சத்தமுடன்
ஊடையமுந் தான்கலந்து ஒட்டகமும் யானைபரி
பீரங்கித் துப்பாக்கிப் பெருவிருது தம்முடனே
வீரம் விடாதபடி மேல்முகத்தி லேநடந்தார்
ஆனைபரி சேனை அரசன்முத லிப்படிக்கு
தானடக்கும் விந்தைதனைச் சங்கையுட னங்குவந்து
**மந்திரிமுத் திருளப்ப வரோதயனுங்** கண்குளிர
வந்தபெருஞ் சேனையது மாறும லேபார்த்து
துயந்தா ரவர்பிறகே சூழ்ந்துசமர் செய்யவென்று
பயந்தார் நவாபுதுரை பாளையத்தை முந்தவிட்டு
சோல்சர் தமைநிறுத்தித் துரைமாரும் நிற்கவென்று
வீசினர் வெள்ளை வேண்டாங்காண் சண்டையெனக்
கருதினர் பின்னே காவலவன் ஆள்வசத்தில்
உறுதியிது நிசமே உன்சீமை யுந்தனுக்கே
பகுதிப் பணம்வேண்டாம் பாளையத்தைப் பின்வாங்கும்
நிகுதி யிதுவெனவே நிகழ்த்திவிட்ட வார்த்தைதனை
ஒப்பியே மந்திரியும் ஒருவர்மேல் சண்டையிட்டால்
தப்பாகு மீதுவசை தானுமே சீமையெங்கும்
என்று தனதுபடை யெல்லவர்க்குஞ் சேதிசொல்லி
நின்று தளமமர்த்தி நின்றதள மத்தனைக்கும்
ஆதரவாய் வார்த்தை அருளியே யங்கவர்க்கு
போதுமென வரிசை பூபனுமே தாங்கொடுத்து
**ஆறுமுகக் கோட்டை** யாதரவில் பாளையத்தைச்
சீருடனே தானிறுத்திச் செப்புவா **ரம்மானை.**

மன்னவரே! பாளையமே வார்த்தையொன்று கேளுமய்யா
தென்னவர்கள் போற்றும் சேதுலக மாதுவளர்
சேதுராம நாதபுரஞ் சீமைதனைத் தான்பிடித்துச்
சூதாய் நபாபுவகைத் துலுக்கனுக்கே பட்டமது
கட்டிவைப்பே னென்று கருதிப் படைமிகுத்து
வட்டக் கடல்போல வந்த நவாபுமிங்கே
சமாதானம் பண்ணித் தள்ளிவிட்டுத் தீர்வைதன்னை
அமரா திருபடையை அமர்த்தியே வார்த்தைசொல்லி
சென்றான் சிவகங்கைச் சீமைதனை வாங்கவென
நன்றா யிதுவிவரம் நாமறிய வேணுமதால்
அதுவரையி லிங்கே யடைவா யிருக்கவென
மதியூகி சொல்ல மன்னவரும் நல்லதென்று
முன்னிருந்த வாறுமுகக் கோட்டை யாதரவாய்
தன்னவருஞ் சேனைத் தளங்களதும் வீற்றிருந்தார்
செந்திருவாள் சேதரசி சேதுலக மாதினுடன்
மந்திரியு மங்கே மகிழ்ந்தொருநாள் வீற்றிருந்து,

**நவாபு தன் சேனையையும் கும்பினியார் சேனையையும் சிவகங்கையைப் பிடிக்கச் சொல்லி நிறுத்தித் தன் பட்டணத்துக்குப் போனது.**

வெய்யோ னுதயகிரி மேலெழுந்த காலமதில்
சய்யோக மாகத் தளவா யெழுந்திருந்து
நானுரைக்குஞ் சொல்லை ராணுவமு மன்னவரும்
தானடைவா யென்மேல் தயவுவைத்துக் கேளுமய்யா
பேய்மதியாய் நாவாபுதுரை பேர்ந்துசிவ கங்கையின்மேல்
போயிருப்ப தாலே போக்குமிகக் காட்டியவன்
திரும்புவது நிச்சயமாய்ச் சிவகங்கை மாநகர்மேல்
விரும்புவதும் நாமறிய வேணுமவர் நாமவர்போல்
போவோமே மேல்முகமாய்ப் புண்ணியரே வாருமென
ஆவ லுட னெல்லவரும் அந்நேர மேயெழுந்தார்
திசைமேல் முகமாகச் சேனைமன்னர் வாரதுவை
வசமாய் நவாபுபடை மன்னவரு மன்னவனும்
கேட்டு மனத்தில் கிலேசமது வுண்டாகி
வாட்டமுட னரசன் வந்ததுரை மாரிடமும்
தளகர்த்தன் தன்னிடமுஞ் சாற்றுவா னுத்திரமாய்
வளமாய்ச் சமாதான வார்த்தைநாம் சொல்லிவந்தும்
பிறகே நகர்சேது பிரதானி வருவதனால்
அருகே யிதிலிருக்க ஆகாது வம்பனவன்
ஒன்றுரைப்பே னிந்த உதவிசெய்வீர் கேளுமதைச்
சென்றுநீ ரெல்லவருஞ் சிவகங்கை மாநகர்போய்
சேர்ந்து வசப்படுத்திச் செயகம்பம் நாட்டிவைத்து

சாந்தமுட னிருந்த சங்கைதனைக் கண்டெழுதி
அனுப்புவீர் நாமுமக்கு அப்பாவே உத்திரவு
மனப்பிரிய மாயனுப்பும் நவாபுதனைப் பார்த்தெழுந்து
வருவீ ரதுவரையும் மன்னவரே சேகரமாய்த்
திருவளரு மாநகரம் சிவகங்கைக் கரசனாய்
வீற்றிருப்பீர் நாமும் மேல்முகமாய்த் தானடந்து
பார்த்து மதுரைவளம் பாதைவழி யேதெரிந்து
திண்டுக்கல் ஊர்வழியாய்ச் சென்றுசென்னை மாநகரை
அண்டுவேன் செல்லுமென அங்கவரைப் போகவிட்டார்
அங்கவரு மங்கலத்தில் மாற்றார்கள் கூடாரம்
இங்கே நாவாபுதுரை எழுந்துசில சேனையுடன்
ஒவ்வியே பூவந்தி ஊறுமண லூர்கடந்தே
போர்விதஞ் சேதி திருப்புவனத்தி லேயிருந்த
தீரனதி பதியான் சிறந்ததொரு ரங்கராவ்
செவிதனிலே கேட்டு திடுக்கிட் டெழுந்திருந்து
அவனுடைய சேனையுடன் ஆவலது மெத்தவுண்டாய்
வந்து மணலூர் வழிமேற்கே பாதைதனில்
சந்தித்து நின்று சலாங்கொடுத்து யெல்லாமும்
தெரிந்து அவன்திரும்பி திருப்புவனஞ் சேரலுற்றான்
பிரிந்த நவாபுதுரை/ செ ....பாதை மார்க்கமதாய்
சிலைமான் வீதிவழி தெப்பக்குளத் தோரமாய்
பலமாய் நவாபுசந்தைப் பேட்டைதனை விட்டகன்று
மாதுமையாள் வாழ்மதுரை மணிக்கோட்டை யோரமதில்
காதலுடன் வந்துநின்று கண்ணாலே தான்பார்த்து
இராசன் மனமகிழ்ந்து நலமாக வேகிழக்கு
வாசல்வழி சென்று வரும்போதே மாமதுரை,

[இங்கு இரண்டு ஏடுகள் காணப் பெறவில்லை]

செந்திருவாஞ் சேது சேதுலக மாதுடைய
மந்திரியா யிங்கு வந்ததொரு முத்திருளப்
பிள்ளையும் பாளையமும் பெருக்க விறங்கியதால்
பிள்ளைப்பா ளையமெனவே பெறவிளங்கு மந்நகரில்
இங்கே யிவரிருக்க பியல்பாம் நவாபுதுரை
அங்கேதான் கோச்சடை யூரறுக்க வேயவனும்
அப்போ வரும்போது அருளியதோர் வார்த்தைதனை
ஒப்பி வழிநடந்து உரம்பேசி வந்ததொரு
தீரனேன் படையதுவும் சிறந்தபுகழ் கும்பினியார்
மாண்பான படையும் மங்கலத்தி னோரமதில்
இருந்தா பொருபகலும் இரவுமது மப்படியே
மருந்துகுண்டும் வைத்து மறக்கோட்டைக் குள்ளதிலே
கூடாரந் தானடித்துக் கோட்டையுடைச் சுற்றிலெங்கும்
வாடியிட்டு நன்றாய் வரிக்குதிரை காவல்வைத்து

பத்திரமா மென்று பகர்ந்துஅதன் பக்கமதில்
சுத்திரமே பீரங்கி சோல்சுரையுங் காவலிட்டார்
மத்தாப்புப் போட்டுவரும் விதங்கள் காண்பதென
எத்துடனே கும்பினியும் இன்னும்வெகு கருநடமும்
சத்தியுள்ள ராம சாமித்துரை பூரியுடன்
முத்துக் கருப்பனுமே முனைவீரன் மாட்டியனும்
கப்பித்தான் சாரிசந்து கருதான மேசருடன்
மெய்ப்பாய் பிரட்டன்துரை வேந்தரிவ ரித்தனையும்
வீற்றிருந்தார் மத்தியிலே விரும்பியவர் வாரவித
வார்த்தைதனைத் தெரியா வடுகனா தேந்திரதுரை
மன்னன் சிவகங்கை மாளிகையில் தானிருந்து
துன்னுங் கதிரவனூர் தோன்றும் உதயமதில்
மன்ன ரிருவரையும் வரவழைப்பீ ரென்னவுடன்
ஓடினா ரங்கவர்கள் உள்ளரையில் சென்றுகண்டு
கூடினார் வாருமய்யா கொற்றவனா ருத்தரவு
வரச்சொன்னா ரென்ன மருதிருவ ரப்பொழுதே
அரைச்சொல் விழுமுன்னே அங்கவரை வந்துகண்டு,

## முத்து வடுகதுரை வேட்டைக்கு வருதல்

வரும்படிக்குச் சொன்ன வகையென்ன மன்னவனே
கருதுமெனக் கேட்க காவலவனந்நேரம்
பாளையத்தைக் கூட்டிப் படைவேந்தர் நாங்களுமே
காளையார் கோவில் கட்டாப்பில் சென்றுபுக்கு
வேட்டைக ளாடி விரும்பிவர வேணுமென்ன
கேட்டு மருதிருவர் கம்பீர முண்டாகிச்
சேகரித்தார் சேனை திரட்டியே கூட்டமிட்டு
வாகுடனே வேட்டை வகையுரைத்தார் சம்மதித்தார்
வல்லவனும் முத்து வடுகதுரை மன்னவனும்
எல்லாருங் கூடி யெழுந்தார் வழிநோக்கி
நடக்கக் குறிக்கையிலே ராசனுடைத் தேவியர்கள்
அடக்க முடனிருந்த ஆயிழையோர் தாமிருவர்
வேலுலக மாது மின்கொடியாள் தங்கையரும்
பாலமிர்த வாயால் பகருவா ரப்போது
தீர்க்கமுடன் மன்னவனீர் செய்துவரும் வேட்டைதனைப்
பார்க்கவே நாங்கள் பரிந்தாசை மெத்தவென
வாருமென்றா ரப்படியே மன்னனுடன் வந்திருவர்
ஏறினார் பொற்சிவிகை எழுந்தா ரனைவர்களும்
காட்டைக் கடந்தார்கள் காளையார் கோவில்வந்தார்
கோட்டைதனில் சென்றார் கொற்றவனு மத்தருணம்
செங்கண் விழிமடவார் தேவியிரு வோர்களிலே
அங்கே யிளையவளை அமர்த்தினார் தாதியுடன்
காலாள் சிலபேரைக் காவலிட்டா ராவலுடன்

வேனுலகை மாதாவை வேந்தனுமே வாந்தகமாய்
கொல்லங் குடிதனக்குக் கோதையரோ யிப்பொழுதே
செல்லுவா யென்னத் தேன்மொழியுந் தானெழுந்தே
கொல்லங் குடியில்வந்து கூடினுள் மாளிகையில்
வல்லமை சேர்முத்து வடுகநா தேந்திரனிங்கே
காளையார் கோவில் கற்கோட்டை மேடையின்மேல்
வாளையொத்த கண்ணுள் மங்கையிளை யாள்தனையும்
பத்திரமாய் வைத்துப் பதனமென்று சொல்லிவிட்டு
சுற்றியே சேனைவெகு சூழவே வேந்தனுந்தான்
வந்தார்கள் கந்தவனம் வளர்காளி மாவனமும்
அந்தமுள்ள வீரைவனம் அடர்ந்தபெரு மீச்சவனம்
போயவற்றி னுள்புகுந்து புலிகரடி பன்றிமுயல்
பாயும்பெரு வேங்கை பருவுடும்பு பட்சிசில
மான்கலைகள் பூங்கனிகள் வாழைப் பலாக்கனியும்
தேன்கனியும் மாங்கனியும் சிக்கியதோர் வேட்டைதனை
மனத்திற்குகந்தபடி மன்னவர்கள் தாம்நடத்தி
அனைவர்களு மொன்ருகி அதிக மகிழ்ச்சியுடன்
சேனை மிகப்படைத்த தீரன்வடு கேந்திரதுரை
காளைப் பதிதனிலே காளீச ராலயத்தில்
மன்னவர்கள் வெள்ளை மருதேந் திரருடனே
தன்னவனுஞ் சேனைத் தளத்தோ டிறங்கினராம்
ராசனவ னிப்பால் நலமாய்ச் சகலருடன்
போசனமு முண்டு பூரித் திருப்பளவில்
மங்கலத்தி லேயிருந்து வந்தொருவ னேடியெங்கும்
தங்காமல் வேகமுடன் தளபதிக ளானவொரு
மருதேந்திர மன்னனிடம் வணங்கி நமஸ்கரித்துக்
கருதுவான் வாயுளறிக் கைகால் நடுக்கமுற்று
மெய்பதறி யிந்நகரை வெற்றிகொண்டு மித்தருணம்
கைவசமே செய்து காவலவ னுனதொரு
வடுகநா தேந்திரதுரை மன்னனையும் காவலிட்டுக்
கொடுபோக வேணுமென்று கூறியே வீரமுடன்
பாரான் நவாபுடைய படையுடனே கும்பினியார்
வாரார் நிமிசமதில் மங்கலத்தில் தங்கவென்றுன்
கங்காணக் கும்பினியுங் கடியதுனுக் காணமதும்
மங்கலத்தில் தங்கவென வந்தவன்சொல் வார்த்தைதனை
வெள்ளைமரு தேந்திரர் வீரருமே கேட்டெழுந்து
வள்ளலெனு முத்து வடுகதுரை தன்னிடம்போய்
சொன்னுர் நவாபுபடை துரைவேந்தர் கும்பினியும்
மன்னவனே மங்கலத்தில் வாசமா யின்றெழுந்து
வாராரா மிப்புவியை வசப்படுத்தி நின்னையுமே
போகவே பிடித்துப் பெருங்காவ லிட்டுவைத்துப்
பாகினைசேர் சென்னப் பட்டணமே திட்டமுடன்

கவென்ற வார்த்தை புரவலனே நானறிந்தேன்
ன்ன மருதிருவ ரெடுத்துரைக்க வேசெவியில்
ந்நேரம் மன்னன் அறிந்துரைப்பா னம்மானே.

## விருத்தம்.

சேனையின் தலைவர் கேளீர் சிவகங்கை நகரந் தன்னைத்
தீனவர் குலத்து வேந்தன் செயித்திட மனததி லெண்ணி
ஆனதோர் படையுஞ் சேர்த்து அரசர்கும் பினியுங் கூட்டி
மாநகர்க் கருகே சூதாய் மங்கல மிருப்பா மென்றீர். (10)

என்றவர் வரவு மிந்நாள் என்றுநீ ருரைத்த தாலே
இன்றுநாம் செய்வ தேது இயம்புகென் றரசன் கேட்க
அன்றிவர் மருது தானும் அரசன்றன் வதன நோக்கிச்
சென்றுநீர் திருப்பத் தூரில் இறப்புட னிருக்க நன்றே. (11)

## வேறு.

மண்டலத்தை யாளும் மன்னன் நவாபுடைய
சண்டைப் பெரும்பேச்சுத் தான்பிறந்த நாளையிலே
இருப்பிடமும் நீர்தானும் இங்கிருக்கக் கூடாது
திருப்பத்தூர் தன்னில் சென்றிருக்க வேணுமய்யா
நிருபருடன் சண்டை வெருவெனவே கூடுமிதோ
தருகாம லிப்பொழுதே தையலருந் தாமும்
சிலருட னெழுந்து திருப்பத்தூர் போயிருந்தால்
கால் வயிரவனூர் காப்பார் கடைபோக
அல்லவென்று மிங்கே அடைவா யிருக்கவென்றால்
நல்லதல்ல மன்னவனே நடந்துநீர் போகவென
என்ற மருதுரையும் இருந்தவர்கள் சொல்வதிலும்
அன்றரசன் கேட்டு அருளுவா ரங்கவர்க்கு
இங்கிருக்கப் போகா தெழுமெனவே நீருரைத்தீர்
உங்களையும் விட்டு உள்ளவரை நான்பிரிந்து
மந்திரி சேனுபதி மணிமகுட மன்னரையும்
எந்தனுடை நகரம் எல்லா மறந்துவிட்டு
என்னுயிரை மட்டும் இடுக்கியே ஆதரித்து
மன்னவரே காத்தால் விளங்குமோ கீர்த்தியது
அட்டவணை முத்திருள அப்பனுடன் கைப்பலனும்
கட்டளைகள் சேர்வைக் கணக்குமுத்துக் கருப்பனுமே
மந்திரி தாண்டவ ராய மகிபனுந்தான்
தந்திரவான் நல்ல தனராம கிருஷ்ணனுடன்
பந்தமுள்ள ராணுவமும் பதிவுசுந் தானிருக்க
வேந்தர்களும் நீரிருக்க மெலிவுண்டோ யெந்தனுக்கு
இவ்வார்த்தை யெந்தனுக்கு யேற்காது யிப்போது
ஒவ்வும் படியுமக்கு உரைப்பேன்நான் கேளுமதை
உள்ளியக் காரர்முதல் ஒண்டொடிக் காரருடன்

பாளையப் பட்டுப் பதினெட்டு வேந்தர்களும்
ஆனைபரி சேனை அனைவர்களு மொன்றாக
தானே நிமிடமதில் சகல விருதுடனே
வேளை யிதுசமய மேவலர்மேல் போர்புரிய
காளையார் கோவில் காடுவந்து சேருமென்று
அனுப்புமென்றார் இள்ளாக்கை அரசன் வடுகதுரை
மனக்குறிப் பினைக்கண்டு வரைந்தா ரதுபோல
பேரணிக ளான பலமான சேனையதும்
வாரணமும் வாம்பரியும் மகாவிருது வாத்தியமும்
ஆவலுடன் மன்னன் அனுப்பிய வப்பொழுதும்
சீவிதங்க ளாண்டவரும் தேவமார் சேருவையும்
பீரங்கி சஞ்சாலி பெரியசர கோபியுடன்
வீரவேல் ஈட்டி வில்லம்பு தன்னுடனே
குண்டுகள் வெடியும் கொடியபெருங் கத்தியதும்
வண்டப் பீரங்கி வல்லியங்க ளுள்ளவுடன்
குறையாமல் காளையார் கோவில்வந்து சேருவேன்
வரவேதா னுத்தரவு வாசகத்தைக் கண்டுடனே
வெகுசேனை கடிவிருது பலகூட்ட முடனே
வகைக்கான மந்திரியை வந்துகண்டா ரந்நேரம்
வந்தவரைப் பார்த்து மந்திரியுஞ் சங்கைதனை
இந்தவித மென்று யெல்லாமுஞ் சொல்லிவிட்டுச்
சேனைபடை மன்னவரே சிவகங்கை தன்னைவிட்டு
போனால் வடுகுதுரை பூபனிடம் நாங்களுமே
கூடி யவர்வருவார் கொற்றவர்மே லார்ப்பரித்து
நாடுவார் போர்புரிய நாடியபோ தெப்படியோ
கண்தெரியாக் குண்டும் கருமருந்தும் வாரளவில்
புண்படுமே மேனி புரவலன்மேல் குண்டுபடும்
ஆனதனால் நாமு மங்கவர்க்குச் சொல்லாமல்
தாண்டவராயத்தீனேன் தளத்தின்மே லேகவென
மொழிந்தேதா னட்டவணை முத்திருளப் பேந்திரனை
அழைத்தே யரண்மனையும் அல்லாமும் பத்திரமே
காருமினிச் சேர்வைக் கரணிக்கன் தொண்டிவளர்
காருடையான் முத்துக் கருப்பனுக்குச் சீட்டெழுதி
அவ்வழியாய் வேலூர் அயலரசர் வாராமல்
செவ்வேதான் பத்திரமாய்த் திருஷ்டிவைத்துப் பார்க்கவென
ஆளனுப்பு வென்று அடைவுடனே தானுரைத்துப்
பாளையத்தைக் கூட்டிப் பதிவாய் வருமளவில்
வேலலகு வாளெடுத்த வேந்தர்சிலர் தாமறிந்தே
மேனுபரி யாக விரைந்துசெல்ல வேணுமென
வேண்டும் விதம்விதமாய் வீம்புசொல்லிக் காண்பதென
தாண்டவ ராய தந்திரிமுன் வந்தவர்கள்
சக்கநதி அய்யர் தளமு மவரெழுந்து

திக்கொரு கையாகத் திரண்டு நடக்கலுற்றார்
**உளக்குடி மன்னன்** உற்றபடை தன்னுடனே
ஒழக்கே யொருவகுப்பாய் கெம்பீர மாய்நடந்தார்
ஊர்க்குடித் தேவன் ஒருஆயி ரஞ்செனமும்
மேற்கே கைபிரித்து விரசாய் நடந்துவந்தார்
வாரார்ப்பூ நாயகன் மகாவேக மாகவேதான்
தோராப் படையுடனே துரையும் வடகையிலே
**கோவானூர் சின்னய்யா** கூடியதோர் சேனையுடன்
மேவலர்மேல் கோபம் விளைத்து நடக்கையிலே
**நெடுவயலூர் மன்னன்** நெடுஞ்சேனை தன்னுடனே
கடுவா யதுபோலே கரிசனமா யோர்கையிலே
மூச்சிட் டதிரு முழக்கம்வெகு தாக்குடனே
கரிசப்பட்டு நாயக்கன் காவலவன் ஒர்கையிலே
சீரா வயல்நன்னி தீரனுமே யோர்கையிலே
மறவர் குலத்தரசர் மன்னவரு மோர்கையிலே
தடம்பாத் தடியெடுத்து சமர்செய்தார் சூரனே
**படமாத்தூ ரொய்யாத் தேவன்** படையுடனே
**மருங்கூ ருடையனானும்** வரும்வனத்தான் காலானும்
கருங்கால் குடிகருத பத்தியூர் காவலவன்
**கருப்பண்ணன் சேர்வை** கார னவன்சனமும்
விருப்ப முடனெழுந்து மேல்முகத்தி லேவரவே
இதம்படவே நெஞ்சில் இருத்தும் படிமுடிப்போன்
அதப்படக்கிச் சங்கிலி அவன்தன் சனத்துடனே
**புக்குழி வேலு** முருகன் பெருஞ்சனமும்
முக்கியமாய்க் கரையாய் முன்னேறி யேவரவே
சிறக்கும் நகர்மேலும் செங்கால் **வயலூரான்**
பிறக்கும் புகழ்ச்சாமி **சேர்வை** பெருஞ்சனமும்
கட்டாரி நேரிசமும் கைதவரு தெப்பொழுதும்
**குட்டையன் சேர்வை** குணவா னவன்சனமும்
**கலியநகர் முத்தணனும்** கண்டவரை யண்டி நின்று
**வலியச் சருவும் மச்சூரில் முத்தணனும்**
வன்னியூர்ச் சின்னத் தம்பியும்வெகு வீரமுடன்
மன்னர் புகழ்மன்னி வளர்சொக்கு தன்சனமும்
**நாகாடி ராமச்சந்திரன்** ராணுவமும் அங்கவனும்
வாகன மயிலாடி **மன்னவனுந்** தனசனமும்
வெள்ளிச்சட்டி போருடுப்பு வீரனதி சூரனெனும்
**துள்ளுக்குட்டி** சேருவையின் சூழ்ந்த சனமுடனே
வாழுக் குரியமன்னன் மகாபலவா னெனதொரு
சிறக்க வளருஞ் சீர்த்திரெகு **நாதனுடன்**
பொன்னே வலிக்கோட்டை புகழ்பெரிய **தம்பியுமே**
மன்ன **னழகுதுரை** மைந்தனுடை யாரவனும்
பத்தியுள்ள நற்றலமாம் பனைக்கரையி னூர்வளரும்

முத்திருளப் பேந்திரன் முனைவீரன் நன்சனமும்
ஏரணி ராம சாமி யிவன்சனமும்
வீர தளவாய் விமலன் சனங்களவை
காங்கயத் தேவன் கனவா னவன்சனமும்
நாங்கூர் திருப்புலனம் ராணுவங்கள் தம்முடனே
பாளையக் காரர் படையுடனே நாட்டவரும்
காளையார் கோவில் காடதுவே யாதரவாய்
மங்கலத்தைச் சுற்றி மந்திரியு மன்னவரும்
தங்கினார் தீனோர் தளத்தைக் கவித்திருந்தார்
இங்கிவர்கள் வந்து இப்படிக்குச் சூழ்ந்திருக்க
அங்கேதான் காளையார் கோவிலில் வீற்றிருக்கும்
மன்னவனார் முத்து வடுகதுரை தம்மிடமும்
தன்னவர்க ளாயிருக்குந் தளவாய் மருதிடமும்
ராசவள நாட்டு ராணுவங்கள் தம்முடனே
வாசமுள்ள தென்னாலி வளர்நாட்டு ஊரவரும்
உருவாட்டி நாட்டவரும் ஒரூர் வளர்சனமும்
வருமந் தனைமாவா மங்கல நாட்டவரும்
மேல்சிலம்பா நாட்டவரும் மிக்கறகள்
சாவமுத்து நாட்டுத் தலைவர் வெகுசனமும்
கனடதேவி நாட்டுக் கனமான மன்னவரும்
வண்டரெழு வங்கோட்டை மன்னருடன் நன்னயமாய்
கண்டமா ணிக்கம் கனநாட்டு ராணுவமும்
துண்டரிக்க னை துரைபாக னிச்சனமும்
பட்டமங்கலம் நாட்டு பலசனங்கள் மெத்தவுமாய்
திட்டமுட னயுதங்கள் சேர்க்கைவெகு வாகவுமே
பள்ளத்தூர் நாடும் பாலைய நாட்டவரும்
கள்ளற் சிலகுடியுங் காவலவ ராரும்
நேரிய போரில் நிலையதனை விட்டகலார்
ஏரியூர் மல்லர் கோட்டைக் கியல்புடைய
சேதுபதி யம்பலம் தீரன் வெகுசனமும்
பேதமிலா மன்னன் பெரியபிள்ளை யம்பலமும்
பெரிய கறுப்பன் பேரோதை வெள்ளையனும்
அரியதொரு வீரன் ஆண்டியப்பன் தன்சனமும்
பொங்கொளி யாண்டியப்பன் பொருந்துஞ் சனமுடனே
கங்கொள்ளா மன்னர் கலாதரி நாட்டவரும்
மீலபா மனமுடைய மாறைநாட் டுச்சனமும்
வலுவான வாயுதமும் வைத்திருக்கி யித்தனையும்
சேர்ந்தார் வடுகநா தேந்திரனும் பாந்தமுடன்
சார்ந்தவரை மருது தளவாயுந் தான்பார்த்து
அமர்த்திச் சகலருக்கும் ஆனதெல்லாந் தான்கொடுத்து
சமர்த்துந் தயிரியமுந் தாமமையச் சேகரமாய்
நின்று பொருதுமென்று நிகழ்த்தியே தான்திரும்பி

அன்று மருதிருவர் அரசனிடம் வந்துரைப்பார்
நாட்டுச் சனமும் நமதுசன முழுதும்
காட்டி லிணைவாகக் கவிந்தார்கள் மன்னவரே
இங்கவரைக் கூட்டி யேகியே நாமிருவர்
அங்கேதான் மங்கலம்போய் அவ்விடத்தி லேயிருக்கும்
ஈமான் தளத்தை யெட்டவே விட்டகற்றி
பூமானே வாரோம் பொருந்தி யதுவரையும்
காளையார் கோவில் கற்கோட்டைக் குள்ளாகப்
பாளையமும் சிறிது பதிவாக நீர்தாமும்
வீற்றிருக்க வேணும் வேறோர் வசனமதை
சாற்றுநீ ரென்ற தளவாய்-மருதுதனை
வல்லவன் முத்து வடுகுதுரை தான்பார்த்து
சொல்லுவார் நீங்கள் தொடர்ந்துபோர் செய்குவதும்
நாமிங் கிருப்பதுவும் நல்லதோ சொல்லுமினே
ஆமோ நமக்கிநுதான் அடைவோ மெதுடனே
வாரே னெனவுரைத்த மன்னனையுந் தானிறுத்தி
கூறுவார் பாருமிதோ கொற்றவனே யுந்தனுக்கு
ஆதரவா யிங்கே அருகே சிலசனமும்
சாரநுவாய்ப் பின்னும் தளராம கிருஷ்ணனுமே
**வயித்திசு வரன்கோயில்** வாடியிலூர்க் குடியான்
செயித்து எதிரிதனைச் செயம்பெறுவே னெனவே
**திருவாலாக் கோவில்** சிறந்த வொளிதனிலும்
மருவலர்கள் வாராமல் வாராப்பூ ரானிருக்கப்
பயமென்ன மன்னவனே பாங்குடனே யிங்கிரும்நீர்
தயவுசெய்து வெற்றிபெறத் தருவாய் விடையெனவே ;

## மங்கலத்தில் நவாபு படையுடன் மருதிருவர்படை பொருதல்

தாயகமாய்க் கேட்கத் தப்பாம லப்படியே
போய்வருவீ ரென்று பொருந்தி யுரைத்தமன்னன்
அவ்விடத்தில் சுற்றி அடர்ந்திருந்தார் தங்களையும்
இவ்விடத்தில் பத்திரமாய் இருமென் றுரைத்துவிட்டு
அன்றெழுந்து காளை யாருடைய வாலயத்துள்
சென்றிருந்தார் மன்னன் தேவியிடம் **அம்மானை.**

### விருத்தம்.

மன்னவ னிருந்தா னிங்கே மருதிரு தளவா தானும்
தென்னக ரடைவாய் நீங்கள் சேர்ந்துமங் கலத்தை நோக்கி
உன்னியே நடப்பீ ரென்ன உரைத்தவா றகன்றூர் சேனை
தன்னுட னவருங் கூடி சார்ந்துமே நடப்ப தானார். (12)

நடந்திவர் வருகும் போது நடத்திய வெடியின் சத்தம்
படிந்திட மந்திரி காதில் படைகளுக் கதைக்கண் டோதி
அடர்ந்துவேட் டெழுப்பு மென்ன அதுவொலி யிவர்தான் கேட்டே
இடம்வலம் பிரிவாய்ச் சென்று இருவருங் கலந்தா ரொன்றாய்.(13)

**வேறு.**

ஒன்று யிருபடையும் ஒருமித்து நால்திசையும்
நின்றே பளீரெனவே நெதப்படி வேட்டெழுப்பி
மங்களத்து க்கம்மாய் வளைந்தகரைப் பாதைவழி
சங்கையுடன் வார தளக்குறிப்பும் வேட்டொலியும்
நாட்டமுடன் காதில் நவாபுடைய ராணுவமும்
கேட்டரசர் கும்பினியார் கம்பீர மாயெழுந்து
பாளையத்துக் கோதி பரிவேட் டெழுப்புமென
வேளைதனில் பீரங்கி வேட்டிவர்கள் போட்டசத்தம்
மருதுதுரை தளவாய் வகைச்சேனை தாமறிந்தே
அருகே நெருங்கிவர அறிந்திவர்கள் போயெதிர்த்து
சோல்சர் வெடியெடுத்துச் சுட்டா ரவரருகே
மீசரமாய்த் தீனோர் வில்லம்பா லெய்யலுற்றார்
ஈட்டிதனைப் போட்டார் எறியீட்டி விட்டெறிந்தார்
மேட்டிலிட்டுப் பீரங்கி விடுகுண் டடிபடவே
முறிந்தார் மருதுபடை முறிந்தவர்பின் தான்திரும்பி
எறிந்தா ரிவர்மேல் ஈட்டியுடன் சக்கரமும்
மிக்கவே வாளாவும் வேலுடனே வல்லயமும்
பக்கம் வளதடியும் பலவிதமா யம்புகளும்
வால்வெடியுங் கவுத்து வல்வெடியும் வாணமதும்
சீர்சூல மித்தனையும் சேகரமாய் விட்டெறிந்தார்
இதனால் நாவபுபடை எள்ளளவு மஞ்சாமல்
அதைவே லலகுகுண்டால அகற்றியே பின்னுமிவர்
சங்கையில்லாக் குண்டும் சரமிகவே யேவிவிட
அங்கே யவர்படையில் அழிந்தார்க ளாயிரம்பேர்
அற்றை மருதிருவர் அறிந்துவெகு கோபமுடன்
உற்றுத் தனதுபடை உள்ளவரை தான்பார்த்து
எடுத்தீர் பலவிதமாய் எண்ணவொண்ணு வாயுதத்தைப்
பிடித்தும் பலனிலையே பெரியவனு யாச்சுவிது
செழிப்பா யினிநடந்து சென்றுமன்னன் தன்முகத்தில்
விழிப்பதும்நீ ரெப்படிகாண் முகத்திலென்ன வீசையடா
வச்சுவரும் ஒன்று எள்ளளவும் ரோசமில்லை
வாய்த்ததென்று மேல்விழுந்து வன்போர் புரியுமென்றார்
தளவா யிதுவுரைக்கத் தான்கேட்டு ராணுவங்கள்
விழவே நவாபுபடை மேல்விழுந்து குத்தும்வெட்டும்
நடத்தினர் சண்டையது நவாப்படை யீதறிந்து
அடித்தார் பீரங்கிதனை அநேகமெனக் குண்டுவிட்டு

குண்டுவந்து பாய்ந்து குலைந்தா ரறுபதுபேர்
தண்டு மருதிருவர் கருத்தில் விசாரமுற்று
தேத்தித் தனதுபடை தேவமார் சேருவையை
ஆத்தி அரவணைத்து அமர்புரிவீ ரென்றுரைத்து
வடக்குடனே மேற்கு வளைந்திவர்கள் சண்டையிட
துடுக்குடையார் தங்களுடன் சூழ்ந்துமதி மந்திரியும்
தெற்குங் கிழக்கிலுமாய்ச் சென்றுநின்று தான்பொருது
கன்னடத்தார் குண்டும் கருமருந்து ஆயுதத்தால்
மன்னன் நவாபுபடை மடிந்தா ரிருபதுபேர்
இப்படிக்கு நின்று இகலிப் பொருகையிலே
**கப்பித்தான் நீலன் கர்னல்துரை மாட்டியனும்**
**பிரிட்டன் துரைமேசர்** பலத்தநீர் மேல்நெருப்பு
திரட்டியே **பூரியுடன்** தீரன்ராம **சாமிதுரை**
தெள்ளிமையாய்ச் சோல்சரையுந் தீரோர் படைகளையும்
தள்ளி நிறுத்தித் தளவாயைத் தானழைத்து
சண்டை தனைநிறுத்தி தந்திரங்கள் பேசலுற்றார்
வண்டர் மருதிருவர் மகாசேனைக் கூட்டமுடன்
கட்டை மாவுவைத்துக் கடும்போர் புரிவதனால்
போட்டிபண்ணிச் சீமை பிடிக்கநம்மா லாகுமதோ
தளஞ்சேது தந்திரியைச் சமாதானஞ் செய்ததுபோல்
வளமா யிவன்தனக்கு வகைமானஞ் செய்யவுந்தான்
போகாது சீமைப் புவிமுதலாய்த் தாகைக்கும்
ஆகாமல் வெற்றிநமக் கபசெயமே நேர்விப்ப
இங்கிவர்மேல் சிந்தை யெப்போது மெங்களுக்குத்
தங்குமித னாலே சலியாதே சொல்லுகின்றோம்
சென்றுசென்னப் பட்டணத்தில் சேர்ந்து படைதிரட்டி
வென்றிடுவோந் தப்பாது விடுவோமோ நாமிவரை
இப்போது வுங்களிடம் எங்களுடை யெண்ணமதை
செப்பியென்ன பின்னாலே தெரியுமது கண்டறிவீர்
விருதாவி லிப்போது வீண்சண்டை செய்வதனால்
அருவாமோ யேதும் ஆவதில்லைக் காவிதிலே
நல்லது நாமொன்று நவிலுகின் றோங்கேளும்
தீரோர்'சிலரும் சேர்ந்ததொரு கும்பினியில்
தானுஞ் சிலருந் தளஞ்சோல்சர் தாஞ்சிலரும்
ஆகவே நின்று அமர்புரிவீ ரிங்கிருந்து
வாகுடனே கள்ள வழியறிந்தே நாங்களுமே
பாளையமுங் கூட்டிப் பதிவா யிரவினில்போய்க்
காளையார் கோவில் கற்கோட்டை தான்பிடித்துக்
காரிசன் வைத்துக் கனவேட் டெழுப்புவதும்
கூறுடனே வெற்றிக் கொடிநின் றிலங்குவதும்
பார்த்துப் படைவிலகிப் பதரும லோர்முகமாய்
சேர்த்துநீர் பாளையத்தைத் திரட்டியே காடுவிட்டு

வெளியேறிப் பீரங்கி வேட்டெழுப்பி நில்லாமல்
அழிவா யவர்படைகள் தாமாகப் போம்படிக்குப்
போடுவீர் குண்டும் பொருதுக் கருமந்தும்
சாடுவீர் கைமெய் சலியாம லேநடத்தி
மெலிவுகண்டு அங்கவரை விரட்டியே யோட்டிவிட்டுச்
சலியாம லெல்லாமுந் தான்வழியே கண்டறிந்து
கூட்டங் கலையாமல் குறுக்குவழி போகாமல்
காட்டி லலையாமல் காளையார் கோவில்வந்து
சேருவீ ரப்பால் சிவகங்கை மாநகரைப்
பேருலகு தானறியப் பிடிப்போங் கொடியிடுவோம்
நயப்பா யதன்பிறகு நவாபுவுக்கு யிதுமுற்றும்
செப்பிச் சகலமுஞ் சேருவோம் பட்டணம்போய்
என்றுரைக்கக் கும்பெனியார் இசைந்தே மாஞேசியுட
அன்று மூத்துக் கருப்பன் அதிபதியான் சேனைமன்னன்
சாங்கமா யெல்லவரும் சம்மதித்தே யப்படியும்
போங்களென வுரைத்துப் பொரு(ந்)தினு ரிங்குவந்து
இங்கே மருதுடனே இவரெதிர்த்துப் போர்புரியப்
பங்கமிலா திங்கவர்கள் பட்டாள மீராறில்
எட்டுரெண்டும் நீலனையும் இங்கிருத்தி யங்கவர்கள்
பட்டாளம் ரெண்டும் பயணமெனத் தாமுரைத்தார்
இடதுபுற மேல்முகமாய் இரவுதனி லேயெழுந்து
திடமாய்ப் பீரங்கியணி சேர்த்துவிட்டுப் பின்புறத்தில்
வாரங்கே முன்னைவிட்டு வரிக்குதிரை சுற்றிவிட்டு
போரதொரு வார்த்தை புரவாமல் கும்பினியார்
அடர்ந்தார்கள் காளையார் ஆலயத்தைச் சுற்றிவந்து
படர்ந்தார் திசையனைத்தும் படர்ந்துவரு முன்னேதான்
அங்கேதான் காளையார் ஆலயத்தி னுள்ளேதான்
முங்கையுடன் முத்து வடுகநா தேந்திரதுரை
பந்தயமாய்த் தாமிருவர் பஞ்சணை மெத்தையின்மேல்
சந்தோச மாயிருந்து சதுரங்கம் பார்ப்பளவில்
நாலுபுறம் வளைந்து நடந்துவந்து கும்பினியார்
கால்தளங்கள் சோல்சர் கவிந்துவந்து கோட்டைதனைப்
பிடித்தார் மயிலேறிப் பெரியதொடிச் செண்டரக்கன்
அடித்தார் பீரங்கிதனில் அனேகமெனக் குண்டுவிட்டு

எழுப்பினூர் சத்தமதை இடிமுழங்கும் பாவனைபோல்
குழப்பினு ரங்கிருந்த கொற்றவர்கள் தம்மனத்தை
அன்றெழுந்த சத்தம் அதட்டியிலே அவ்விடத்தில்
நின்றதொரு காலாள் நிலைகுலைந்து கட்டழிந்து
காடே கதியெனவே கலைந்தார்கள் கோட்டைவிட்டு ;

## முத்து வடுகநாத துரையும் இராணியும் குண்டு பட்டு இறந்தது (காளையார் கோவிலில்).

நாடுபுகழ் வடுக ராசனுமே யீதுசத்தம்
ஏதெனவே யெண்ணி யெழுந்துதிடுக் கிட்டவனும்
மாதுதனைக் கைப்பிடித்து வாவெளியே யென்றழைத்து
வரவேயுள் மண்டபத்து வாசல்வெளி மூலைதனில்
உரமாய் வரும்போது உபாயமுள்ள கும்பினியார்
மதிலேறி நின்று மராட்டியனும் பூரியும்தான்
இதமா யவர்வரவு இனந்தெரியா தேயிரவில்
கன்னல் மனுவேல கலங்காத மாட்டியனும்
சொன்னுன்.. கலீரெனவே சுட்டானே பூரிநுரை
கப்பித்தான் சுட்டகுண்டு கன்னியர்க்கு மன்னனுக்கும்
ஒப்பிலையாய்ப் பட்டு ஊடுருவிப் போனதுவே
தப்பியதோர் கரனடத் தார்தான தெய்விடமோ
இப்படிக்கு மன்னன் இருந்தா னிவ்விடமதில்
கும்பினியு மவ்வாறும் குதிரையுடன் சோல்சர்களும்
தெம்புடனே பத்திரமாய்ச் சிவாலயத்தைத் தம்வசமாய்ச்
கொண்டு அதைவளைந்து கொடுங்காவ லிட்டுவைத்து
அண்டாமல் கரனடத்தார் அந்திப்பகல் சந்தியிலும்
பீரங்கித் துப்பாக்கி பிடித்தோலால் சத்தமிட்டு,

## நவாபு படையில், கும்பினியில் சேர்ந்த நீலன் துரை மருது வளரியினுல் ம(டி)ந்தது

வீரமுட னிருந்தார் வேந்தனிவன் சாய்ந்தவிதம்
அங்கே மருதிருவர் அறியாதா ராகையினுல்
மங்கலத்தில் நின்று வன்போர் புரிகுவதில்
மிஞ்சினூர் கன்னடத்தார் மிகுந்துசெய்த சண்டையினுல்
அஞ்சினூர் சோல்சர் அலமந்து பின்னரித்தார்
நீல னிதையறிந்து நிமிட்மதில் கூச்சமற்றுச்
சீலமுடன் வந்து திருப்பினுன் தில்லரியை
மோரிசா வைத்தான் முந்தியதன் மேலுரமாய்ப்
பீரங்கி யேத்திப் பெருவேட் டெழுப்புகையில்
வேட்டும் புகையும் மிஞ்சவே மெத்தமெத்த
தாட்டிக வான்மருது தானறிந்து யித்தனையும்

தம்பியுடன் தமையன் தனிவிலகி முன்வந்து
கொம்பிக் கொதித்து கோபமது மெத்தவுண்டாய்
தரையில் உரசியதை தன்னில் வளதடியை
விரசா யெடுத்ததனை வீசினார் நீலனின்மேல்
நீலன் தலைபிரிய நின்றபடை தத்தளிக்க
வாலை வடுகுதுரை மடிந்ததொரு வார்த்தைதனை
அந்நேரம் வந்து அறிவித்தார் காலாளும்
மன்னனுடைச் சேதம் மருதிருவர் தாங்கேட்டு
அழுதார் துயரமுற்றார் அவர்தளமு மீதறிந்து
நழுவினா ரால்தமக்காய் நடத்துவோம் போரெனவே
காட்டில் வளைந்து கடந்தே யவர்வளைகள்
வீட்டையுமே தேடி விலகினா ரீதறிந்தே
தாண்டவ ராயத் தந்திரியும் மெய்கலங்கி
ஆண்டவருக் காக அமர்பொருது வீணாச்சே
என்று பலவிதமா யெண்ணியே யின்னமும்நாம்
அறிவோம் பிறகெனவே அந்நேர மாளனுப்பி
தீரராம கிருஷ்ணன் தீரனையுந் தானழைத்து
அங்கே வடுகதுரை அவதிதனைப் பேசியும்பின்
இங்கிவரை விட்டு யேகுவதேன் மாட்டியன்மேல்
துரத்தியிவ் விடமுள்ள சோல்சர்களை வெற்றிகொண்டு
பிறகு அவனிடம்போய்ப் பேசுவோம் வாவெனவே
இருபா சனமுடனே எகியே மங்கலத்தில்
தருகாம லேயெதிர்த்துச் சமர்புரியும் வேளையிலே
சுட்டார்கள் சோல்சர்படை சுட்டதொரு குண்டுகளால்
பட்டாரி வாகனத்தில் படிந்தாரிரு நூறுபேர்
இவரா லவர்படையில் இப்படியே யாவதனால்
அவதிதனை யடைந்து அவரிவருங் கோபமுற்று
எதிர்த்துச் சமர்பொருது இருக்கின்ற நேரமதில்
கதித்தொருவர் கும்பினியார் காலாளு மோடிவந்து
வாங்கினோங் கோட்டைமதில் மேலே சென்றறவும்
ஓங்கி யடித்தோம் உடையவனைக் கொன்றுவிட்டோம்
இந்தமட்டும் நீங்கள் இருந்தென்ன வாருமென்ன
சந்தோஷ மாய்வார்த்தை தான்கேட்டு சோல்சர்வர
பெருகி மகிழ்ச்சியது பீரங்கி யுள்ளதெல்லாம்
நெருங்கியே முன்நிறுத்தி நிறைமருந்துங் குண்டுமிட்டு
தீர்ந்தார்ப் பலித்தார் திகைத்தேதா னகரடைந்தார்
எந்தான் மடியவென எல்லாருந் தட்டழிந்து
நகர்ந்தார் செடிமறைவில் நழுவியே மெள்ளமெள்ள
அகன்று ரதுவிவரம் அத்தனையும் புத்தியுள்ள
தந்திரியும் வந்த தளராம கிருஷ்ணனுமே
சிந்தை தனிலறிந்து திகைத்து இருவருமாய்
என்னசெய் வோம்நாம் இருவரினா லாயதென்ன

ஈன்னவே பேசி இருவருமே வாட்டமுற்று
மன்ன னிறந்த மயக்கமிவர்க் குண்டாகி
ஏன்ன பலனமக்கு ஏதுமிலே பாருமெனச்
சென்றே யவரிருவர் எவர்தமக்குந் தோன்ருமல்
சென்ருர் வழிவிலகித் தியங்கி வடமுகமாய்
கொல்லன் குடியருகே கூபவழி யேநடந்து
நல்லபெரும் நகரம் நாட்டரசன் கோட்டைவந்து
சேர்ந்து வொருவருக்கும் தெரியாமல் வீற்றிருந்தார்
வேந்தரிவ ரிங்கே வீற்றிருக்க விப்படிக்கு
மன்னர் மருதிருவர் வடுகுதுரை காரியமும்
பின்னுமதி மந்திரியும் பிரிந்தகலப் போனதுவும்
இன்னவித மென்று ஏதுந் தெரியாமல்
முன்னேறி மங்கலத்தில் மூடுகிப் பொருதயலே
உச்சியிலே காலடிக்க ஓடிவந்து அங்கொருவன்
அச்சமுட னின்று அரசன் மடிந்ததென்ருன்
மந்திரி பிரிந்ததென்ருன் வளைந்திருந்த ராணுவங்கள்
எந்திடமோ காணேம் ஈதுரைக்க வந்ததென்ருன்
அரசனுயிர் பிரிந்தும் அகன்றுமதி மந்திரியும்
மரித்தா ரெனவருந்திப் பேசுமவன் வார்த்தைதனை
வாதுபுரி மருது வகையுடனே மங்கலத்தில்
காதினிலே கேட்டு கையின் வளதடியை
எறிந்தா ரிருவருமே எண்ணமது மெத்தவுண்டாய்
பிரிந்தார் சமரைவிட்டுப் பின்தொடர்ந்த தஞ்சனத்தை
அமர்த்தியினி யிப்போர் ஆகாது நில்லுமெனச்
சமர்த்தன் வடுகதுரை சங்கைதனை யங்கவர்க்குச்
சொல்லிச் சகலருமாய்த் துயர்மாறிப் போர்விலகிச்
செல்லும் நகர்க்குச் சிந்தைகளில் நேர்ந்தபடி
போங்களென்று ரங்கவரைப் போதுமென்று சேகரமாய்
வாருங்க ளென்றுகாட்டி மறைந்தார்க ளனைவர்களும்
கந்த வனத்தில் கலைந்தோடிப் போகலுற்ருர்
இந்தவிதம் பிரிய இவர்மருது மன்னர்துரை
ஒருவர் முகத்தை ஒருவருமே தான்பார்த்து
இருவருமே யிங்கே இருந்துபலன் ஏதுமில்லை
மாடமயன் சிவன் வலிவா யிருந்ததனுல்
காட்டில் மறைந்துவந்து காவலனைக் கொன்றுவிட்டான்
நாமும் நடுப்படையில் நாணமுந்த வாருேம்
போமோ வீருகப் பிழைத்தார் நவாபுபடை
ஆனுலும் பொருதும் அகற்றுவோம் நமதுதுரை
சாமியோ னுலும் தளம்போய் விசனமில்லை
உலோக மாதாவை நொடிக்குள்ளே தப்பவைத்துச்
சாகாமல் காத்தால் தருமமே யாகுமதால்
பாழாக மாட்டாது பட்டதும்வீண் போகாது

காளியூர் நம்மைக் காப்பார் கடைபோக
என்றிருவர் சொல்லி யெழுந்துவழி யூடறிந்து
குன்றுமல் கொல்லன் குடியில்வந்தா ரம்மானை.

### விருத்தம்.

குறித்திரு மருது கொல்லங் குடியினில் இரவு சென்றே
உருத்துட னுலக மாதா உத்தமிக் குடனுள் விட்டே
வருத்திமுன் னெதிரே நின்று வந்தவள் வதனம் நோக்கித்
திருத்தமாய் விழிநீர் சிந்தத் தேம்பியே சோம்பலானார். (14)

விழியினு லருவி யோடி விழவிவ ரழுத போதில்
ஒளிதரு முலக மாதா உடலது நடுக்கங் கொண்டே
தெளிவுள்ள மனத்தார் நீங்கள் தியங்கிய வகையீ தென்னே
சுளுவதா யுரைப்பீ ரென்னத் துரைமக ளிறந்தா னென்றார். (15)

### வேறு.

என்றவுரை கேட்ட இராணிமகா மங்கையரும்
அன்றவரிக் கீழே அடித்து விழுந்தழுது
கையால் முகத்தறைந்து கதறி யபயமிட்டு
அய்யோ சிவனேயென அழகுதிரு மேனியது
புழுதி மிகப்படவே புலம்பிப் பரதவித்தாள்
அழுதவளைத் தேற்றி அமர்த்தினார் தாதியர்கள்
அருகே யதுசமயம் அவ்விடத்தி லேயிருந்த
மருதுதுரை யிருவர் மங்கையரைப் பார்த்துரைப்பார்
எந்தாயே யிவ்விடத்தில் இனியிருக்கப் போகாது
தந்தாய் வெளி....யேறித் தப்பாம லிங்கிருந்தால்
ராசனுடன் தேவி ராச்சியமும் ராணுவமும்
பாசமுள்ள நீதிமதி மந்திரியுந் தானெழுந்து
ஆனை குதிரை அடங்க லிழந்ததல்லால்
மான மழிந்து வரம்புதப்பிப் போகுமம்மா
இந்நகரை விட்டு எழுந்துமே அயிதருடன்
தன்னகரில் சென்று தளங்கூடி யிங்குவந்து
வண்டத் துலுக்கரையும் மரசேனை சோல்சரையும்
அண்டாம லிங்கே அகற்றுவோம் வந்தவழி
என்றுரைத்த வார்த்தை ஏற்றுமே ராணியுந்தான்
நன்றுகாண் தம்பியரே நான்செய்த பாவமதால்
மன்னனையும் தங்கையையும் மடிப்பாகக் கொடுத்துவிட்டு
அன்னசுத்தம் பூமி அரசு மிழந்ததல்லால்
சோமளந்து பட்சியெனத் துயரம் பெரிதாகி
வீமளந்து போக விதித்தா னயனெனக்கு
ஆனு லுமது அன்பும் பெரிதாச்சு
மான மழியாமல் மன்னவரே காருமென்றாள்
நல்லது என்தாயே நடப்பதும் நாளையதால்

செல்லும்நீர் மாளியெனச் செப்பியது மிப்பாலே
தாதியரைத் தானழைத்துத் தானுலக மாதானவச்
சூதான மாகத் தோகையரே யின்றுமட்டும்
காருஞ் சிவகங்கை கண்ணிமை மூடுமுன்னே
வாரோ மெனவுரைத்து மருதிருவர் தானடந்தார்
நடந்தார் சிவகங்கை நன்னகரி லன்றிரவு
அடைந்தா ரிருவர்தாமும் அங்கேதான் மங்கலத்தில்
தொடுத்துப் பொருதும் சோல்சர்படை யாளரவர்
கடுத்த மருதுதனைக் காணாமல் தேடியெங்கும்
எல்லவருஞ் சேர்ந்து எழுந்து பயணமென
நல்லவழி பார்த்து நடந்தார் முழக்கமுடன்
காடுசெடி கடந்தார் காளையார் கோவில்வரை
ஊடையத்தில் வந்தார் ஒன்றாகச் சேர்ந்திருந்தார்
இங்குவந்து சேர்ந்து இருமருது மன்னருடைச்
சங்கைதனைப் படித்துத் தானடைவாய் வீற்றிருந்தார்
இருந்து துரைநீலன் இருந்தவழி யென்றுவந்து
வருந்த மருதிடத்தில் வாங்குவே னென்றுரைத்துக்
கவனமுடன் மாடமயனுங் காளைநகர் மீதிருந்தார்
சிவகங்கை சேர்ந்திருவர் சேர்ந்ததொரு பாந்தமுள்ள
கட்டழக னுமருது கருயிருளில் வந்துறமாய்
அட்டவணை முத்திருள அப்பனே தானெழுவர்
உம்மானுந் தன்மையுள்ள உம்முடைய தன்மருகன்
தம்மானு மித்தலத்தைத் தவமென்று பேர்கொடுத்து
எடுத்தீ ரகிலாண்ட யீச்வரிக்குப் பட்டமது
கொடுத்தி ரதுமுதலாய்க் குறையாத நல்லரசாய்
நாட்டினீ ரிப்புவியை நன்றாய் நிலைநிறுத்தி
வாட்டமில் லாதிருக்க வைத்ததொரு வுத்தமிநீர்
மாறுமுடி கொடுத்த வள்ளலே விள்ளுகிறேன்
வீரர் வடுகுதுரை விதிமுடிந்தா ரென்றழுதார்
இங்கிவர்கள் தாமழுது இயம்புவதைத் தான்கேட்டு
அங்கவனு மிப்படிக்கு ஆச்சுதோ காலமெனத்
தியங்கி மனமிகவே தெளிந்தேதா னங்கிவரை
மயங்காதீ ரென்றே வகையினிமே லாவதென்ன
உற்ற மொழியதனை உரையுமென்று அட்டவணை
முத்திருளப் பேந்திரன் மொழிந்தா ரதுசமயம்
அங்கவர் சொலக்கேட்டு ஆன மருதிருவர்
இங்கே யவர்முகத்தை ஏறிட்டுப் பார்த்துரைப்பார்
காலமது சூழ்ந்த கற்பனைக்கு என்செயலாம்
சாலவே யின்னொன்று சொல்சாத்தக்கே ளய்யாவே
தாமசமா மிங்கிருக்கச் சமயமல்ல யிப்போது
நாமங்கே சென்று நடத்தும்வகை கேளுமிப்போ
விதியால் பதியரசன் விண்ணுலகம் போய்ச்சேர்ந்தார்

திரி லவன்மறைவில் தந்திரியும் போய்மறைந்தார்
உத்தமியாள் வேலுலகு ஒற்றையிலே வாடுகிறார்
இத்தலத்தை நாமிருந்தும் எதிரியிடம் விட்டுவிட்டு
அண்டாம லேதிரிந்து அலையவே நாமுமே
திண்டுக்க லயிதரிடம் சென்றுபடை கூட்டிவந்து
வாங்கலாஞ் சீமை மன்னவரே வெற்றிகொண்டு
தாங்கவன்றி நீங்கள் தயவுசெய்து தொண்டிவளர்
சேருவை யின்கணக்குத் திட்டமிடும் நின்மருதன்
காரியவான் முத்துக் கருப்பனையு மிங்கழைத்து
வைத்து நிறுத்த மனிதரெல்லாஞ் சேகரித்துச்
சுற்றியே பத்திரமாய்ச் சூழ்ந்துசிவ கங்கைதனைக்
காத்திருப்பீ ரிங்கே கலகமொன்றும் நேராமல்
பாக்கியங்க ளய்யாவே படிப்படியாய் நாமுரைத்தோம்
கதிரோ னுதயமது காணுமுன்னே போயணுகி
மதிவதன வேலுலகு மாதாவை நாமழைத்து
தண்டியல் மேல்வைத்துத் தப்பாம லெப்படியும்
திண்டுக்க லயிதரிடம் சென்றுகேட்டு வாருமெனச்
சொல்லி மருதிருவர் துருசாக வேநடந்து
கொல்லங் குடியிலிங்கே கோதுவந்து நேருமென்று
ராத்திரியே வந்து ராணிவேல் மாளிகையில்
காத்திருந்தா ரங்கே கரணிக்கன் அட்டவணை
முத்திரு ளப்பன் முடித்தனுப்பும் வாசகத்தைச்
சித்தமுடன் தொண்டிச் சேர்வைக் கணிக்கனவன்
வாசித்தும் பார்த்து மனத்துள் விசாரமிட்டு
மோசம்வந்த தென்று மொழிந்திருந்தோர் தங்களிடம்
ஆறுதலாய்ச் சொல்லி அங்கிருத்தி வைத்துவிட்டுச்
சீரும் பரிமிசையே சென்றேறி வேகமுடன்
வந்துசிவ கங்கை மாநகரில் மாமனிடம்
சந்திச்சு வுள்ள சமாசார மெல்லாமும்
பேசி முடித்துப் பிரிந்தசனம் யாவரையும்
ஏசியே தானழைத்து இருத்தியே நாற்புறமும்
பயத்தா லிவரிருவர் பாரிவரும் பாவனையாய்க்
கயத்துவெடி கல்வெடிகள் கனமாக வேட்டெழுப்பிப்
பட்டணத்தி லுள்ள பரிசனங்கள் யாவருக்கும்
திட்டமுட னுதரவாய் தேற்றியே யெச்சரித்து
இரவும் பகலும் நாடாமல் மேலவர்கள்
காவலனே யிங்கிவர்கள் காத்திருந்தா ரம்மானை
இங்கேசிவ கங்கையில்........வலா யிருக்க
அங்குலக் மாது அரண்மனைமுன் காத்திருந்த
தளவாய் மருதிருவர் தான்கதிரோன் வந்தபின்னே
விளமாயர் மனையுள் வேலுலக மாதிடம்போய்
வருந்தாமல் மாதாவே மறைபாதம் நோகாமல்

இருந்திடீர் சும்மா இரத்தினச் சிவிகையின்மேல்
வாரு மிருமென்ன மங்கையரு மப்பொழுது
காருஞ் சிவனே கடவுளரே தஞ்சமென்று
ஏறினாள் பொற்சிவிகை எடுத்தா ரிருவருமாய்
போரில் மலையார் பூவையரைத் தாமெடுத்து
கொல்லங் குடியில் குளத்துக்கு மேற்கரையில்
நல்லபெரும் வாடி நரிநுழையாக் கட்டாப்பு
மூங்கிலும் இனமே முளைத்திருக்கும் வாடிதனில்
தாங்கிச் சிவிகை தலைமீதி லேசுமந்து
உருட்டியுங் கட்டாப்பும் ஓடவழி காணாமல்
குறட்டு வளதடியால் குறுக்கே வழியாக்கி
வாடி தனைமுறித்து வந்தார் வெளிதனிலே
கூடி வருங்குறிப்பைக் கும்பினியார் தாமறிந்து
பட்டாள மென்று பயிறுவரப் பண்ணிவரக்
கட்டாப்பைச் சுற்றிக் காரிக் குதிரைவர
சுற்றிக் குதிரைகளுஞ் சூழ்ந்துபடை யோடிவர
மெத்த மனந்திகைத்து விரசாக ராணிதனை
இருவருமே தோள்மேலே யெடுத்துச் சிவிகைதனை
வரும்போ ததுகடந்து மரித்திடவே மேவலர்கள்
குதிரையுடன் தளங்களும் கொற்றவரைச் சூழ்ந்தளவில்
அதிவேக மாய்ச்சிவிகை அலையவே வோட்டமதாய்க்
கீரனூர் வீதி கிழக்கே வடக்கொதுங்கி
வார வழியில் வழிமேல் குளங்கரையும்
ஊருணியைக் கண்டார் உடனே யிருவருந்தான்
தாரணியாள் மன்னன் தையல் புவியரசாள்
வேலுலக மாதாவை மேட்டி லிறக்கிவைத்தார்
நாலு கரையும் நற்பரிகள் தான்கவிந்தார்
வாலை விசுவை மருதேந்திர மன்னர்வர
சாலவே வாம்பரியும் தளங்கவிந்த வாரணிந்து
ஊருணியில் தாங்குதித்தார் ஒருநாழி கைக்கொருகால்
மூரி யெழுவார் முக்குளிப்பா ரக்கரையாய்
கரைமே லருகிருக்கும் கன்னிகையேல் கவனமாக
இறையோனே தஞ்சமென்று இருவர் மனங்கலங்க
பிடித்தோ லதுவெடியால் பின்முன் னகலாமல்
தத்தி வளைந்தவர்கள் சுட்டார் டபீரெனவே
கருமருந்துங் குண்டும் கண்தெரியா தேபுகையும்
நெருநே ரென்றுசுற்றி நெருப்பெனவே யந்நேரம்
கண்டு மருதேந்திரர் கடுங்கோப மாய்ச்சினந்து
விளங்கு மிளையவர்க்கு விளம்புவா ரப்பொழுது
இந்தவிதஞ் சலத்தில் எத்தனைநாள் நாமிருப்போம்
வந்தவர்கள் தாமா வழிவிலகிப் போவதுண்டா
இருவரு மிணைபிரிந்து எமனுலகம் போமளவில்

அரசனுடைத் தேவியர்க்கு அமுடு வராதபடி
காப்பதுவே பாரம் கரையேறு தம்பியரே
பார்ப்போ மொருகை படியளந்தோன் தஞ்சமென
மாயோன் சகாயமதால் வலுநமக்கு வுண்டுதம்பி
ஆயா ளுடன்நம்மை ஆதரிப்பா ராகையினுல்
வாரு மினிக்கரையில் வளரிதனைக் கைப்பிடித்துச்
சீறிக் குதிரைமேல் செல்லுவோம் போகிலும்நீ
ஆரணங்கு பக்கம் அகலாமல் நில்லுமென
வீரன் வளரியினுல் வீசினு ரப்பொழுது
சீறி வளரி சிலேநா ஞெலிமிகுந்து
மீறி யெழுந்து வெம்பரிமேல் சென்றதுவே
இருப்பு வளரி இருபுறமுங் கூர்மையதாய்
கரும்பு வனத்தில் காட்டானே சென்றதென
இருவர் விடும்வளரி எதிர்த்த பரியதனே
சருவித் தலேயறுத்துஞ் சாரதியும் பட்டுவிழப்
பரிகள் சிரமுருளப் படைகளவை தாமிரளத்
துரிசாய்ச் சிவிகைதனேத் தூக்கினு ரக்கரையாய்
ஊருணியைத் தாங்கடந்து உறுஞ்சல்வனம் விட்டகன்று
நாரியரைத் தாஞ்சுமந்து நாட்டரசங் கோட்டைவந்தார்
வந்தா ரிவர்மூவர் வந்திறங்கி யந்திடத்தில்
மந்திரியைக் கண்டார் வகையெல்லாந் தாமுரைத்தார்
மன்னவரும் மந்திரியும் மாதுதனே யாதரித்து
அந்நேர மேயெழுந்து அத்தமிக்கும் வேளேயிலே
காலூர வேநடந்து கடுங்காடு விட்டகன்று
மேலூர் விடியவந்து விடுதி யிறங்கலுற்றுர்.

### விருத்தம்.

இங்குமே லூரில் வந்து இவர்களும் விடுதி தேடி
தங்கிவீற் றிருக்கும் போதில் சங்கையை முழுது நன்றுய்
அங்குள்ள நாட்டார் கூடி அறிந்துவந் தவர்பால் சென்று
மங்கையு மரசர் தம்மை வணங்கியே யெதிரே நின்றுள். (16)

நின்றதோர் நாட்டா ரெல்லாம் நெருங்கிநின் றினிமேல் நீங்கள்
சென்றுவா விடமே தென்னத் திரண்டுமா நகர மேவி
இன்றுநா மயிதர் பேட்டி எடுத்துமே தளத்தைக் கூட்டி
வென்றுதான் நவாபை யோட்டி மீட்போம்நாம் பதியை
[யென்றுர். (17)

### வேறு

என்றவுரை காதி லியற்றியே நாட்டவரும்
நன்றேதா னப்படியே நடக்குமிது தாட்சியில்லே
பஞ்சைநா மோர்வசனம் பகருகின்றே முங்களுக்காய்
இங்கே யொருநா ளிருந்துசெல்ல வேணுமென

அங்கே வரும்படியே அன்றுமறு நாளதிலே
தங்கி யினியிருந்தால் தாமசங்க ளாகுமென
நாட்டவர்கள் மெத்த நலமாகக் கூட்டமிட்டுக்
காட்டைக் கழித்துக் கடுகவழி கூட்டிவந்து
மேட்டுப் படிதன்னில் விடுதி யமைத்துவைத்து
வாட்டப் படாமல் வழங்கிவெகு காணிக்கையும்
மன்னவரே நீங்கள் வருத்தப் படாதிருப்பீர்
இன்னுஞ் செலவுக் கியலா யனுப்புகின்றோம்
என்றுரைத்து மீண்டார் இப்பாலே யிங்கிவரும் ;

## வேலுலக மாதாவும் மருதிருவரும் சிப்பாலக் கட்டைக்குப் போனது

அன்று மறுநாள் அதுகழித்து மூன்றுநாள்
ஒன்றுகி வந்து உறைந்தவர்கள் தம்முடனே
சென்றார்காண் ராணியுமாய் சிப்பாலக் கூட்டைநகர்
சிப்பாலக் கட்டைதனில் சென்றங் கொருவருஷம்
பார்ப்பா னுறவாகிப் பாங்குடனே தாமிருந்தார்
அரிக்காரப் பார்ப்பான் அங்கவனு மிங்கவர்க்கு
இருக்க விடங்கொடுத்து இவர்திறமை தானறிந்து
வருக்கமுள்ள தேனும் மாங்கனி பலாக்கனியும்
பெருக்கமுடன் கொடுத்துப் பிராணைப்போ லாதரித்தான்
வாங்கிப் புசித்து மகிழ்ச்சியுடன் தாமிருந்தார்
பாங்காய் அயிதரிடம் பகர்வான் மறையவனும்
சமுக மரிக்காரச் சர்தார்நான் ஆகையினால்
நிமிஷந் தருகாமல் நேரேநான் அயிதர்முன்னே
கண்டு வுமதுடைய காரியமும் வல்லமையும்
விண்டுரைத்து முந்தி வேந்தன்மனம் நானறிந்து
இங்கேவந் துங்களிடம் உரைத்து நான்திரும்பி
அங்கழைத்துப் போக வாகுமே வரசிதுகாண்
நான்போவ தாலே நலமாக வுங்கள்வகை
தான்வருதல் நன்றே தந்திரியைத் தானனுப்பும்
பேட்டிபண்ணி வைத்துப் பிரியம்வரச் செய்குவதில்
தாட்டீக வான்தயவு தானே கிடைக்குமப்பால்
வேண்டிநீர் தாமனுப்ப வேணுமென நல்லதென்று
தாண்டவ ராய தந்திரியைப் போமெனவே
வழிகடந்து தாமிருவர் வனமும் நகர்கடந்து
வெளிகடந்து நல்ல விருபாட்சி தன்னில்வந்தார்
வந்தா ரிருந்தார் வழித்தங்க லாகவங்கே
விந்தையுட னிரவு வீற்றிருக்கும் வேளையிலே
சாந்தத் தளவாய் தாண்டவ ராயனுக்குக்
காந்தலுடன் கடுப்பும் கால்வலியும் மேல்வலியும்

தாப மதிகமதும் சண்டி வயிற்றுவலி
சோப மிகக்கண்டு துஞ்சினர் மந்திரியும்
வந்த மறையவனும் மனங்கலங்கி யுள்ளுடைந்து
சிந்தையது வேருகித் திண்டுக்கல் வந்துபுக்குச்
சென்ருர்கா ணயிதரிடம் சென்றுசலாந் தான்கொடுத்து
நின்று சமயத்தில் நேர்ந்தவரைத் தான்பார்த்து
அண்ணை ம யருகினில்போய் அடைவுடனே வாய்புதைத்து ;

## அயிதரிடத்தில் அரிகாரப் பார்ப்பான் சிபார்சு செய்தது.

விண்டு யிவர்வகையை விளம்புவார் வேதியனும்
வம்புசெய்வார் தங்கள் மதமடக்கி மங்கலத்தை
ஒன்பது கோடி ஒருகுடைக் கீழவனே
ராசாதி ராசே ராச கெடிப்புலியே
நேசமுட னடியேன் நேரா யொருவசனம்
எல்லோர்க்கு முன்னே இயம்புகின்றேன் கேளுமெனச்
சொல்ல மறையோன் தொடங்கின னப்பொழுதே
வெள்ளை மருது வீரன் தனக்கிளையோன்
வள்ளல் சிறுமருது மங்கைவேல் மாதரசும்
தாண்டவ ராயன் தந்திரியு மேயிவர்கள்
ஆண்ட வரசிருப்பு அழகுசிவ கங்கையெனும்
நாடுதனை யிப்போ நவாபுக்கே யொப்புவித்து
வீடும் அரசிழந்து விதியின் பயனெனவே
ராப்பாதை யாக நடந்து பயந்தவர்கள்
சிப்பாலக் கட்டை சேர்ந்தார்க ளென்னிடமாய்க்
கண்டே னடியேன் காவலர் தம்வலிவை
சண்டைப் பெரும்புலிகள் சமர்த்துந் தைரியமும்
சொல்மொழியுங் கல்வித் துண்டரீகக் கண்டிதமும்
செல்வருடை யழகும் சித்திரமு மொப்பலவே
ஆனதனு லவரை அடியேன் நிறுத்திவைத்தேன்
தானவரை நீருந் தருவித்துக் கண்பார்த்தால்
ஒப்பியே விப்படியும் உண்டோ வுலகிலெனச்
செப்புவீ ரெப்படியுஞ் சென்றழைத்துப் பகர்ந்தவர்க்கு
ஆனை பரியுடனே அழகு சிவிகையதும்
சேனை மிகக்கொடுத்துத் தேசந் திருப்பிவிட்டால்
கீர்த்தியது மெத்தவுண்டு கெடிமன்னர் தங்களால்
நாற்றிசையும் போக நமக்கு வுதவிசெய்வார்
என்று மறையோன் எடுத்துரைக்க வயிதருமே
அன்று வதைக்கேட்டு அடைவாய் மனமகிழ்ந்து
நன்றவர்கள் நம்மை நம்பிவந்த தாகையினுல்
இன்னவர்க்கு நல்ல இருப்பிடமுந் தான்கொடுத்து
ராசபுகழ் ராசா ராசமகா நாய்ச்சியர்க்கு

மாசமிரு நூறுபொன் வழங்குமென்று ரிதுவல்லால்
ஒப்பாலக் கட்டையவர் தேகமதற் கொவ்வாது
தாப்பாய் விளாம்படம் தந்நகரி லிங்கவர்க்கு
விடுதிதனை யமர்த்தி வீற்றிருந்தா ராமாகில்
சடுதியிலே நாமும் தனிவேட்டை மார்க்கமதாய் ;

## விளாம்படம் விடுதியும் மாதம் இருநூறு பொன் சம்பளமும் தருமாறு அயித ருத்தரவு.

வருவோ மவனுடைய வல்லமையைத் தானறிந்து
தருவோம் பரிதனமும் தப்பாது யாதுமில்லை
தடுக்காமல் நாமுரைத்த சம்பளமு மங்கவர்க்கு
நடக்கட்டு மென்று ராச னுரைத்திடவே
அரிக்கார வேதியனும் அதுகேட்டு நல்லதென்று
சுருக்காக வோடிவந்து துரைமன்ன ருத்தரவால்
விளாம்படஞ் சென்று வீற்றிருங்கள் நீங்களுமே
சுருக்கக்கூட்டிப் போவீர் தப்பாது ராசமொழி
செலவுக் கருளினதால் சிறுமையில்லை யுங்களுக்கு
சமமாகச் செல்வீர்கள் ராசன் வருவரிங்கு
வேட்டையது தானுட விரும்பினதால் மன்னவனும்
காட்டினிலே யுங்கள் கைக்கடுமை தான்பார்த்து
சந்தோஷ மாகத் தளமுமக்குத் தான்கொடுத்து
விந்தை யுடனேதான் வேந்த னனுப்பிவைப்பார்
என்று மறையோன் இயம்ப விவர்மகிழ்ந்து
நன்றெமக்குச் சீமை நலமாக வந்ததென்றுல்
சாலைப் பதிவாழுங் காளியுடைத் தன்னருளால்
ஆலைத்தண் வயநா டளிக்கிறே னுந்தனுக்கு
என்னவே மன்ன ரிதுவுரைக்க மெய்ம்மகிழ்ந்து
அந்நேர மேமறையோன் அரசன்முனனே சொன்னபடி
ராணிக்கு மன்னருக்கு நானூறு பொன்செலவு
காணிக்கை தந்து கருத்தாய் வழியனுப்ப
மறையோனைத் தானனுப்பி மன்னவனும் ராணியுமாய்
இறையோனைத் தஞ்சமென்று எழுந்தா ரவிடம்விட்டு
மெச்சும் புகழ்மன்னர் இறைந்துவந்தா ரம்மானை
வந்தா ரிருந்தார் வழிக்குவழி தங்கலென
இந்த விளாம்பட்டி எங்கேயென்று வேகமுடன்
சென்று விளாம்பட்டி சேர்ந்து நகர்வளத்தை
நன்றெனவே சுற்றி நாற்புறமுந் தான்பார்த்து
கண்டு மருதிருவர் கடுஞ்சோங்கும் வல்சாமும்
உண்டு நெடுகினு மென்றவரால் தானறிந்து
இந்த நகரில் இருந்தோமே யாமாகில்

எந்தன் துரைராணிக் கேற்காது விப்புவிதான்
பாவ மறும்நதி பாங்குடைய வேகவதி
தேவர் புகழுகின்ற சித்தர்மலை யோரமதில்
வைகை நதியும் வளமான சோலைகளும்
அய்யன் பதிமலைமேல் ஆறுமுகன் சந்நிதியும்
மெய்யான தீர்த்தம் விசேடமுள்ள மாதலமாம்
ஒய்யார மான ஊரு மதற்கருகே
காட்டை யடுத்துக் கருத்தா யிருக்கவென
வேட்டைக் குகந்தவிடம் மேடலேபட மாமெனவே
நன்றெனவே யெண்ணி நடந்துஅதி வேகமுடன்
அன்று அதில்வந்து அருவைகை யோரமதில்
கோட்டையும் வாடிக் கொத்தளமும் ஊடையமும்
நாட்டியர் மனையும் நலமாக வேசமைத்து
வீற்றிருந்தார் மன்னர் மெய்ம்மகிழ்ந்து ராணியுடன்
பார்த்திபனை நம்பும் பழைய மனிதரெல்லாம்
நாளுக்கு நாளாய் நாடினூர் பையவந்து
ஆளுஞ் சிவிகை அடர்ந்துபரி ராணுவமும்
மன்னர் குடைவிருதும் வல்லையமு மீட்டியுடன்
உன்னிப் படைபொருதும் உள்ளியக் காரர்களும்
பாருவைக் கேற்ற பாளையக் காரருடன்
பரிவார முற்றும் பான்மயனூர் தன்னிடத்தில்
அறிவுடனே வந்து அடைந்தார்கா ணம்மானை.
கூட்டப் படையுடனே கொற்றவனும் வீற்றிருந்து
தேட்டமுடன் நித்தமுஞ் சிந்தை மகிழ்ச்சியுடன்
காட்டைக் கலைத்து கரடிபுலி மான்முயலை
வேட்டைக ளாடி விடுதிவந்து சேர்வதுமாய்
இப்படிக்கு வோராண்டு இருக்குஞ் சமயமதில்
அப்போ தொருநாள் அளப்பிட்டு வேட்டையென
செப்பமுட னயிதர் தீரன் சிறுத்தானும்
கெப்புவி ராசன் கசவேட்டை யாடவென்று
வரவே யிடைவழியில் வந்தவர்க ளோடிவந்து
அரசே பரிமுதலாய் அழியுதே பன்றியினால்
மெத்தக் குடிகள் மெலிந்தோ மதனாலே
இத்தையல்லாமல் சற்றே இன்னுமொன்று கேளுமய்யா
வத்தலக் குண்டு மஞ்சநதி யோடையிலே
மெத்தவே குஞ்சரங்கள் வெகுகூட்ட மாய்த்திரண்டு
திரளாக வந்து செந்நெல்கன்னல் தம்மையெல்லாம்
உரமா யழிக்குதென உண்மைதனைக் கேட்டவரும்
ஆனைமேல் வெள்ளி அம்பாரி வைத்தேறி
சேனை தளத்துடனே சேர்ந்துதுரை யயிதருமே
மெத்தவே யத்தி வேட்டையது ஆடவென்று
வத்தலக் குண்டுநகர் வந்தார்கா ணம்மானை.

**விருத்தம்.**

வத்தலக் குண்டில் மன்னன் வந்துதா னிருந்த போதில்
சுத்துள்ள குடிகள் யாவுஞ் சூழ்ந்தவ ருடனே மேலாய்
பற்றிவந் தெதிரே நின்று பாளையப் பட்டார் தாமும்
துத்தியஞ் செய்து பாடிச் சுலுத்தனைத் துதிசெய் தாரே. (18)

செழிப்புடன் துதிகள் செய்து தென்னவன் முகத்தை நோக்கி
அழிக்குதே பயிர்கள் யாவும் அத்தியும் பன்றி யாவும்
களிக்குதே யதனால் நாங்கள் கலங்கினோம் துரையே யிப்போ
தொளித்தட வதுவு மின்றித் தொங்கிசப் படவு மானோம். (19)

**வேறு**

என்றுரைக்கக் கேட்டு இருந்ததொரு அயிதருந்தான்
அன்றே அவராருகே அடர்ந்து கவிழ்ந்து நின்ற
கண்கொள்ளாச் சேனைதனைக் கண்ணாலே பார்த்துரைப்பார்
எங்குங் கலைத்து எனமதைத் தான்வதைத்துக்
கடமான் வெளிமானைக் கயலே முயலுடும்பை
அடைவாக வேவதைத்து அல்லவரும் வாருமென
நடப்போ மதுபோலே ராசனே பாருமென்று
படைமன்னர் வேட்டையது பண்ணியே நாற்புறமும்
சுற்றி வளைந்து துஞ்சிடவே பட்சிகளை
பற்றிப் பிடித்து பாஞ்சால நற்குறிச்சி
தன்னிலே வந்திருந்து தாகவிடாய் தானகற்றி
நன்னயமாய்ப் பின்னே நாகலாபுரங்கோட்டை
வந்திருந்தார் தங்களுக்கு வகைசொல்லி யாள்விடுத்து
தந்திரவான் டிப்பு தானழைத்து வார்த்தைசொல்வார்
கருங்கல்லுப் பாறைதன்னில் காரானைக் கன்றுடனே
பெரிதான குஞ்சரங்கள் பிரளயமாய் வந்திறங்கி
நாகலா புரத்தோடே நல்லதொரு ஆற்றுவழி
மேகம் திரண்டவிதம் போலே தான்திரண்டு
வத்தலக் குண்டு வயலில் கரும்புகளை
மெத்த வழித்து வெகுசேத மாக்குதென்று
குடிகள் வெகுபேர்கள் கூவெனவே வோடிவந்தார்
மடியவே குஞ்சரமும் மதப்புலிக ளுள்ளளவும்;

**[இடையில் இரு ஏடுகள் மூலப் பிரதியில் இல்லை]**

காட்டுப் புலிக்குங் கரடிபன்றி யானைகட்கும்
நாட்டை நமக்களித்த நல்லறி வுண்டாமோ
என்றுரைத்த ராணி ஈசுவரிக்குத் தேறுதலும்
அன்றுரைத்த மன்னர் ஆதரவாய் வேறுதவி
மன்னரையும் பின்னும் மங்கை சிலர் தாதியரும்
தன்னை. . . .தனையிருத்தித் தாயேபோய் வாரோமென்று
மன்ன ரிருவருமாய் மறையவனார் தம்முடனே

நன்மையஞ் சேர்கோட்டை நாகலா புரமதனில்
சென்று பகலிரவாய் சேர்ந்திவர்கள் மூவருமாய்
நின்று அடிக்கடியே நெருங்கிநிதம் போவதிலும்
சூரனெனும் டிப்பு சுல்தானைக் காணுதற்குப்
பாரமாய் மெத்தப் பதினைந்து நாள்வரையும்
காத்திருந்தா ராற்றங் கரையோர மன்னவர்கள்
தோற்றவே டிப்பு சுதர்வேட்டை யாடவென்று
வெளி(ங்)காட்டில் சென்று வேடிக்கை வேட்டையெனத்
தெளிவாய் முயலுடும்பு தீன்வேட்டை செய்வமென்ன
சேனை தளத்துடனே சென்றார்க ளாளியென
கானம் புகுந்தார்கள் கடிநாயை உளசலிட்டார்
காட்டைக் கலைத்தார்கள் கரடிபுலி பன்றிமுயல்
ஓட்டுமா னோடே ஒளியிழந்தார் மன்னவர்கள்
இப்படி வேட்டைசெய்து இளைப்பாய் வருகையிலே
செப்பம் பெறுவேங்கை சிறுபுலியைத் தான்தொடர்ந்து
வெடிவால் முருக .. வீரதண்டை தான்சுழற்றிக்
கடுவாய் பெருவேங்கை கண்ணில் நெருப்பெழவே
சீறிச் சினந்து செவ்வாயால் சத்தமிட்டு
வார்பெறு வேங்கை வந்த படைத்தலைவர்
தங்கள்மேல் செல்லும் சாட்டைதனைக் கண்ணாலே
அங்கவர்கள் கூடி அகலநின்று தான்வியந்து
கண்டு மனமுங் கலங்கிப் படைமுறிந்தார்
துண்டு சிறுபுலியுந் துலைதூரம் போயிடவே
வேங்கை வெகுண்டு வெகுதளத்தில் வந்துவிழ
பாங்கான டிப்பு படைமுறிந்து ஓடினதை
பார்த்தானே டிப்பு பரியேறி ஊடைபோய்
வார்த்தையினா லேசி வழிமறித்துத் தானிறுத்தி
அலசாகார் அரிக்கா ரரைஅழைத்து
கவனமுடன் அவர்க்குக் கருதுவா னுற்றமொழி ;

[இடையில் ஒரு ஓலை காணப்படவில்லை.]

## டிப்பு சுல்தான் மருதேந்திரரிருவருக்கும் வரிசை செய்தசு

இப்படிக்கி...... இவத்தார் இயல்பா யுரைத்திடவே
செப்பினதைக் கேட்டு தீரன் சுலுத்தானும்
கற்பிலையோ நாயன் கருத்துக் குகந்தவரை
இப்படியோ செய்தாய் எங்கோ னருளெனவே
கூட்டியே வாருமிங்கே கொற்றவரை நாம்பார்க்க
வேட்டைக் கெடிப்புலியாம் வீராதி வீரருக்கு
முன்னேநாம் செய்து முடித்துவைத்த ஆபரணம்
தன்னை யெடுத்துச் சடுதியிலே வாருமென்ன
கொண்டுவந்த ஆபரணம் கோடிபீ தாம்பரமும்

கண்டு மதடிப்புக் காவலன் வாங்கிவைத்து
சென்றழையு மென்ற தீரன் மருதேந்திரன்
அன்றவர் கண்டு அங்கவரைக் கைப்பிடித்துப்
பக்கமதி லிருந்து பார்த்துவெகு நேர்த்தியுடன்
தக்க உபசாரம் சாத்திப் பணிதியிட்டு
இன்னமும் உங்களுக்கு யென்னதான் வேணுமென
மன்னு யெனக்கு வரிசையிது போருமிப்போ
சேனை தளங்குடுத்துத் தேசந் திருப்புதற்கு
மாணபர ஞன மன்னுவாங் குடனென்ருர்.
அப்படியே ஆகும் அஞ்சா திருங்களெனச்
செப்பியே டிப்பு தீரமும் பலவுரைத்து
பதினயி ரம்பரிக்குப் பாங்கானேன் வேந்தனென்றும்
சதிரான மன்னன் சவுதா இரியான்
பத்தேசா பாலாசா ....... வாவரசர்
நத்தடுசா கொம் ...... தி ராவுத்தர் மார்கள்தமை
அழைத்துவரச் சொல்லி ஆளனுப்பி அப்பொழுதே
தளத்துக் கதிபதியை தானழைத்திங் கிதரைப்பார்
கன்னு டகச்சனத்தில் கடுமையுளா ராயிரமும்
மன்னர் நீசாமுதுரை வகுப்பித்தோர் பட்டாளம்
காதம்போய் மீளும் கரும்பரிக ளாயிரமும்
பேதமில்லாத் தில்லரியின் பீரங்கி பன்னிரண்டும்
கொள்ளைக் குதிரையினும் கொடுத்தேவோ ராயிரமும்
வெள்ளமெனத் திரட்டி விளாம்பட்டி மந்தையிலே
கூடாரந் தானடித்துக் குமுக்காசப் போயிறங்கி
வாடா மதிவதனர் மன்னரிவர் தன்வருதி
கடவாமல் கேளுமினிக் காவலரே நீங்களும்நான்
நடவுமென டிப்பு ராச னுரைத்திடவே
உற்ற நவாபு உரைத்தபடி யங்கவர்கள்
வத்தலக் குண்டு மாநகரை விட்டெழுந்து
மேட்டுப்பட்டிச் சித்தர்மலை விளாம்பட்டி மற்றையினும்
நாட்டினர் கூடாரம் ராணுவங்கள் எல்லாமும்
வந்துவிவர் கவிந்தார் மருதேந்திர ரங்கிருந்து
சுந்தரஞ்சேர் டிப்பு சுல்தானைத் தான்வணங்கி
மண்டலங் கைக்கொள்ளு மன்னர் மகிழ்ச்சியுடன்
வண்டத் துலுக்கன் வணங்கியதோர் வாம்பரிமேல்
இருவர் சவாரிசெய்து இந்திராணி வேல்சமூகம்
விருசாக வந்து விழுந்து பதம்பணிந்தார்
வந்து பணிந்து மருதுமன்னர் தங்களுடைச்
சிந்தை குளிரத் திருக்காத்தால் திருஷ்டிசுற்றி
வந்தவிடத்தில் மாறுபடா தேநீங்கள்
எந்தன் மனங்குளிர இருந்தனி ரென்னையிங்கே
சந்தோஷ மாய்ப்போனீர் தம்பியரே நம்பினவர்

எந்தவிதம் டிப்பு என்னசொன்னார் சொல்லுமய்யா
கேடுகெட்ட நாமும் கிலேச மடைந்துவந்தோம்
நாடு நமக்குண்டோ நடவாதோ கும்பியரோ
வந்தீ ரிதுவிபரம் வகையுடனே நீருரைத்தால்
எந்தன் மனக்கவலே என்னைவிட்டு நீங்குமென
ஆயாளே யெங்கள் அரசே அரசர்பணி
தாயாரே உந்தன் சலிப்பு மகன்றதிப்போ
சேனையது வந்திருக்கும் சிங்காரம் பாருமம்மா
காளைப் பதிதனையே கைக்கொள்வோந் தப்பாது
மாதுங்கள் சவுமிய வருடந் துலாமாசம்
மீதுவளர் சுக்கிர வாரம் சிம்ம ராசியிலே
கட்டுகிறேன் சீமை கைவசமே யிப்போது
பட்டந் தரித்துஉன்னைப் பாராள வைக்கின்றேன்
நட்டந்தச் செங்கோல் நடக்கும் வகையறிய
மட்டில்லாச் சேனையுடன் மதுரைக் கெழுந்தருளும்
சொக்கலிங்க மீனாட்சி சுவாமியுடைப் பாதமதில்
அக்கரையாய் வீழ்ந்து அபிடேக மும்நடத்தி
செல்லுவோ மெந்தாயே தேவரீர் பாருமினி
வெல்லும் மாற்றான் வெகுகோடி நேரினிமே
தங்கத்தி னாலே சமைத்ததொரு யாளிமுகம்
சிங்கமுகந் துலங்குஞ் சிவிகையின்மே லேறுமென;

## டிப்பு சுல்தானிடத்தில் மருதிருவர் படை கூட்டி வந்தது

மங்கை சிவிகைவர மன்னர்பரி யேறிவரப்
பொங்கும் படைகளதைப் புறம்நாலு தான்பிரித்தார்
நாலு கையாக நல்ல வணிவகுத்து
சாலே நடக்கையிலே தாமும் தளமும்வர
திக்கொரு கையாகச் சிலசேனை தான்வரவே
அக்கரையாய் வடக்கே அடர்ந்துசில . சேனைவர
நாகமலைக் கப்பால் நடந்தொருகை தான்வரவே
வேகமுட னிவ்வாறு வெம்பரியும் சேனையுமாய்
வாய்ச்சுதென்று நாலு வகையா வருமிதனைக்
கோச்சடையில் தங்கிக் கூட்டமிட்டு முன்னிருத்தி
பட்டணம் நவாபுதுரை பலவார்த்தை யால்தெரிந்து
திட்டமுடன் தென்மதுரை சிறந்தநக ராளுகின்ற
மல்லரா யன்தனையும் வரவழைத்துச் சிக்கனவே
சொல்லுவா ரந்தத் துரைமருது மன்னரெனும்
தளகர்த்தர் ராணியவள் தன்னையுமே தானழைத்து
வளஞ்சேர் சிவகங்கை மாநகரை விட்டெழுந்து
மேலூர் வழிமார்க்கம் விரசாக வேநடந்து
காணுறவே யிரவில் காட்டுவழி யூடேபோய்த்

திண்டுக்கல் சேர்ந்து செழிப்புடனே அயிதர்தன்னை
கண்டுபடை கூட்டிக் கடுங்கோப மாய்ச்சிவந்து
வாரரா ரெனச்சேதி வந்தவர்கள் சொல்வதுனால்
வீருன மன்னனுடன் வெம்போர் புரிவதற்கு
ஆகாது நம்மாலே அயிதருமே முன்பகையை
வாகாய் மனத்திலெண்ணி மாற்றவரை யாதரித்து
வலுவாய்ப் படைகொடுத்து வரவிடுத்தா னெனமீதில்
பலவாறு அயிதருமே பின்னுரைப்பேன் நாளவர்க்கு
இப்பவனு மருது இங்கேவரு முன்னேதான்
தப்பவே வேணுமதால் தான்போறேம் சென்னைநகர்
இதமா யிருநீயும் இங்குவரு மங்கவர்கள்
மதுரையுள்ளே செல்லாமல் வழிவிலகிப் போம்படிக்கு
நடத்தும் அதுவிபரம் நாமறிய ஆளனுப்பி
விடத்தகும்நீ பத்திரமாய் வீற்றிங் கிருமெனவே
என்றுபடை யெழுப்பி எழுந்துபோய் மேலூரில்
அன்றிருந்து காளையார் கோவில் தானையமாய்
இருக்குந்துரை மாட்டியற்கு [1] எழுதிவிட்டு ஆள்வசத்தில்
சிறக்க மருதிருவர் சேனையுடன் வாரதினால்
பார்த்திபனே நீயும் படைகளுடன் தானெழுந்து
ராத்திரியே மேலூரில் நம்மிடத்தில் சேரயென்று
அந்தரங்க மாக அறிவித்துத் தானெழுந்து
வந்திருந்தார் மேலூரில் மறுநாள் படையெழுப்பித்
தங்கி வழிக்குவழி தானெழுந்து பட்டணம்போய்
அங்கிருந்தா ரித்தை அறிந்துநன்று யாராய்ந்து
பிள்ளைப்பா ளையமிகுந்த பேரான முத்திருளா
பிள்ளையும் பாளையமும் பெருக்கமுடன் தாமெழுந்து
இனியி விடமதில் இருக்கவுந்தான் காரியமேன்
என்னவே சொல்லி ஏகினார் சேதுநகர்
சேது யிவரடைவாய்ச் சேர்ந்தா ரதன்பிறகு
வாதுபுரி மருது வந்தான் படையுடனே
படையுமரு திருவர்கள் பாங்காக வாரதுவை
அடைவுடனே மல்ராவு அறிந்தேதான் தம்பியெனும்
ரெங்கரா யன்தனையும் நேராகத் தானழைத்து
தங்கித் திருப்புவனந் தனிக்கோட்டை நீயிருந்து
மணலூரில் கட்டாப்பு வைத்துமே பத்திரமாய்
அணைவாக நீயிரென அனுப்பிவிட்டு மல்லராவு
பட்டாளங் கள்நடமும் பரிகரியும் ஆயுதமும்
திட்டமுடன் தில்லரியும் திடமான பீரங்கியும்
மேலூர் பிரமலையும் வெள்ளலூர் கள்ளர்தமைக்
காலூனு ஓட்டமதாய்க் கடுகிவரக் கூட்டமிட்டு
முன்னேறி மேற்கே முடுகிப் பயணமெனச்
சொன்னபடி யெழுந்து துவரிமான் சாலைவழி

1 மார்ட்டின்

நாலு வகையாக ராணுவத்தைக் கைப்பிரித்து
மேலுபரி மல்லராவு வெம்பரிமே லேறியன்று
வாழவந்தா னுமையாள் மாரிமக மாயிவளர்
சோளவந்தான் வழியே துருசாகத் தான்நடந்து
வேகவதி தன்னை விட்டகன்று வேகமுடன்
வாகாய் நடக்கையிலே வந்ததொரு மல்லராவு
திருக்காய் வருகவெனச் சேனைக்குச் சாடைபண்ணி
அருக்க விளாம்பட்டி அணையோரம் போகையிலே
மங்கம்மா ளுண்டுசெய்த வடகரையின் காலருகே
தங்கிப் புகழ்பெரிதாய்த் தரணியெங் கும்விளங்கும்
கருப்பன் சுவாமி கருணையுடன் வீற்றிருக்கும்
விருப்பமுள்ள சக்கானை மேட்டில்பீ ரங்கிவர
அதிக முழக்கமுடன் அணைக்கரைமேல் மல்லராவு
சதிரா யுடன்வரவே சறுக்குச் சகதிதனில்
பீரங்கி வண்டி பலமாய்ப் புகைந்திடவே
வீரங்கள் பேசி வெகுசேனை மன்னருடன்
வெம்பரிமேல் வந்த வேந்தனெனும் மல்லராவு
தம்பரியை விட்டுத் தரையில் குதித்திறங்கிக்
கும்பலாய்த் திரண்டு கூட்டமிட்டு எல்லவரும்
தெம்பாய்ப்பீ ரங்கியதைச் சேர்ந்து யிழுக்கலுற்ருர்
இழுக்கவே பீரங்கி எழும்பாம லேவளரி
வழுக்கி யழுந்திடவே மல்லராவு செய்கையிதை
கண்டவர்கள் வந்து கைகூப்பித் தெண்டனிட்டு
விண்டார் மருதிடத்தில் மெய்மகிழ்ந்து அங்கவரும்
கேட்டு நகைபுரிந்து கிருபைக் கடலாகித்
தாட்டிகவா னப்போ தண்டிகையின் மேலெழுந்து
வெஞ்சமருக் கஞ்சாதான் வெள்ளைமரு தேந்திரதுரை
அஞ்சுநூறு காலாளும் அசுவமது அம்பதுடன்
எங்கவன் மல்லராவு யெவனவனைக் காட்டுமடா
எங்கே யவன்சமர்த்தை இனிக்காண வேணுமடா ;

## மல்லாரிராவை மருதேந்திரன் கைவளரியால் வதைத்து பீரங்கியும் பிடித்தது.

காட்டீ ரிவனெனவே கைவளரிக் கிப்போது
வாட்டமடா மெத்த வாய்த்தயிரை யில்லையென
ஆதலால் நானிவனை அறிந்துவர வேணுமென்று
ஓதி மருதுதுரை ஒடுங்காத கோபமதாய்
அண்டி வனுவுடனே அவைபறக்கக் கண்களிலே
தண்டிகையை விட்டுச் சடுதியில் கீழிறங்கிப்
பார்த்தார் கிழக்குமுகம் பார்ப்பளவில் நின்றவர்கள்

சாத்துவார் மல்லராவு தானிவனே யென்றுரைத்துக்
கைநீட்டிக் காட்டக் கண்டுஊருத் தானறிந்து
செயிவளரி தன்னைத் திருமால் மதலையின்மேல்
பேசிவிட்ட சக்கரம்போல் பெரியமரு தேந்திரனிவன்
வீசினான் போய்வளரி விலகாமல் மல்லராவு
தலையை நிலைகுலையத் தானறுத்துத் தாங்காமல்
வலுவாய் வடகரையின் வாய்க்காலில் போட்டதுவே
பொல்லாத வண்டன் புகழ்சேர் நவாபுவகை
மல்ல ராயனம்மா வகையிதுவே ஆனதல்லால்
பீரங்கியும் பிடித்தார் பெருத்த தளத்துடனே
சீரங்க மால்பெரிய சித்திர வல்லவரை
வந்து வணங்கு வழிவிலகி வேகவதி
சந்தோஷ மாகத் தாண்டியே தென்கரைமேல்
நடந்து புகழ்பெரிய ராணியுடன் சேனையதும்
தொடர்ந்து நதிகடந்து சோழவந்தா னூர்வழியே
பெரும்பாதை தான்கடந்து பிரியமுட னெல்லவரும்
திருவே டகத்தில் வந்து சேர்ந்தார்கா ணம்மானை

## விருத்தம்.

வாந்தமா யுலக மாதும் மருதிரு பேருஞ் சேனை
நேர்ந்திடு மல்ல ராவை நிமைக்குமுன் நமன்பால் போகச்
சாந்தமாம் நதியும் தாண்டி சனகைமா நகரம் நீங்கிச்
சேந்துயே டகத்தில் வந்து சிறப்புட னிருப்ப தானார். 20

அந்நகர் வளத்தைக் கண்ணால் அனைவரு மகிழ்ந்தே நோக்கி
இந்நகர் தனக்குத் தோதா யில்லையென் றுலக மெங்கும்
என்னவே புகழ்ந்து வாழ்த்தி யேடகத் தீசர் பாதம்
தன்னையே பணிந்து போற்றிச் சகலரு மிருந்தா ரங்கே. 21

## வேறு.

மாவோடா வைகை வளமும்பதி சீர்க்கும்
திருவேட கத்திலுறை சிவனுரைப் பூசைபண்ணி
ஏடகத்தி லன்பாய் இறங்கியதோர் பாளையமும்
கூடாரந் தானடித்துக் கூட்டமிட்டுச் சேகரமாய்
பஞ்சநாள் ராவும் பகலுமதி லேயிருந்து
அஞ்சா தெதிரிகளை அதமாக்க வேணுமெனப்
பீரங்கி ரேக்கிலாப் பெரியசர கோபியுடன்
காரமது பெரிய கச்சைகட்டி நூல்வெடியும்
வேணுமென்ற ஆயுதங்கள் மிகவே சமைத்ததிலே
ராணுவங்கள் முன்நடக்க நடந்தார் மதுரைவழி
மருதேந்திரன் மதுரை வந்து கயற்கண்ணி
இருதா ளடிபோற்றி எம்பெருமான் சோலைமலை
அழகர்தமை மனத்தில் அடக்கியே தஞ்சமென்று

வளமாய் நதிகடந்து வடபுறத்தில் வந்திருந்து
நாலுகை யாய்வந்த ராணுவ மத்தனையும்
சீலமுட னென்றுகச் சேர்த்துமே பத்திரமாய்
விள்ளுவா ருள்ளவர்க்கு வெள்ளைமரு தேந்திரனவன்
வள்ளல் சிவசொக்கர் மாதுமையா ளங்கயல்கண்
இருக்குந் தலமிதுவே ஈதுமல்லால் மாதுதிரு
உருக்கமுள்ள மாலோன் உறையுந் தலமிதுவே
ஆனதினு லிதில் அமர்கலகஞ் செய்யவென்று
தானினைக்கப் போகாது தரித்தவிதம் நாமறிந்தால்
வளரிச் சிறையிடுவேன் மறித்தேதுஞ் செய்யறியேன்
வளரியினுல் மல்லராவும் மடிந்ததுவும் நீரறிவீர்
அப்படிக்குப் பட்டு அழியாமல் நீங்களிங்கே
செப்பு மொழிப்படியே தீரமாக நீர்நடந்தால்
தருவோ முமக்குரிய தகுந்தபெருங் கொள்ளையது
பெறுவீர் நமதுடைய பெருநகரஞ் சென்றபின்னே
என்னவே மன்னர் எல்லார்க்கு மீதுரைத்து
அந்நேரம் ராணுவத்தை அடைவாக வேயெழுப்பி
மதுரைநகர் கடந்து வண்டியூர் மார்க்கமதாய்க்
கதியுடனே ராணியுமாய்க் காலால்கள் வாம்பரியும்
அதிவேக மாய்வரவே அவ்வரவைக் கண்டுரைக்க
விதிமுடிவால் ரெங்கராவு வேந்தனிதைக் கேட்டவுடன்
மலையா மனமுடனே மாசேனை சேகரமாய்
சிலையுமான் ஆத்தோரம் செல்கிறதுதான் ரெங்கராவு
சனிமந்த வாரந் தயிலம் தலைக்கிடுதல்
இனிவந்தான் ரெங்காரா வெண்ணைத் தலையுடனே
செப்பமுடன் மருது தீரனைநான் கொன்றுமுக்கி
அப்பால் தலைமுழுக ஆகுமென வாதுரைத்து
மணலூரு ஊடயத்தில் வைத்திருந்த ராணுவத்தைத்
துணையெனவே ரெங்கராவு துருசாகத் தானழைத்து
ஒட்டுமா ஞேட்டி ஒளியிருந்த பாவனைபோல்
தேட்டமுடன் கூட்டிச் சிலையுமான் காலருகே
அருண னுதையமதில் அவ்விடத்தி லேயிருந்தான்
மருதுவருஞ் சேதி வந்தவரால் கேட்டறிந்து
தானையத்தை விட்டுத் தளம்வார விந்தைதனைக்
காண வெளியேறிக் கண்ணுலே பார்த்துரைப்பான்
வெள்ளை மருதான் மெலிவுள்ளா னென்றிருந்தேன்
தள்ள முடியாது தளமும் அவன்வரவும்
சொல்லி முடியுமதோ தொலையாப் பெரும்படையை
வெல்லுவாரு மில்லை வீணை வார்த்தைசெல்லி
வந்தோம் திரும்ப வழிகாணேம் போகவென்றுல்
இந்தவிட மெனக்கு ஈச னளித்ததுவோ
எந்திடத்தில் போனுலும் இவன்விடா னுனதினுல்

வந்தவிதி நமக்கு வாட்டுமென்று கோபமுற்று
நோக்கினான் தன்படையை நொடிக்குமுன்னே அங்கவரைத்
தாக்கி வதையுமென்று தானும்வர முன்னெழுந்து
தீர்த்தப்பை மருதைச் செல்லாம லப்புறத்தில்
துரத்தவென்று கத்திதனைத் தொடுத்திருகை தாண்பிடித்து
வீசிப் பரியேறி வெள்ளைமரு துன்னையேநான்
தூசியெனப் பரக்கத் துரத்துவே னென்றுரைதது
திடந்தான் மனத்திலெண்ணிச் சிலேயுமான் காலைவிட்டு
நடந்தான் வடமுகமாய் நடுநதியில் போமளவில்
அந்நேர மல்லராவு அளித்ததொரு சேதிவந்து
சொன்னா ரிவன்காதில் துணுக்கமுற்றுக் கேட்டவனும்
விழுந்தான் பரிய மேனியெல்லாம் புண்படவே
அழுந்தி மணல்மிசையே அடித்தடித்துத் தான்விழுந்து
முகத்தி லறைந்துகொண்டு முட்டிப் புரண்டழுது
இகத்தி லுனைநானும் எப்போது காண்பனய்யா
இந்த மருதிவன்தான் ஏவியதோர் கைவளரி
எந்த விதமுன்னை எமனுலகம் சேர்த்ததுவோ
தப்பாமல் நீமருதைச் சங்கரிப்பா யென்றிருந்தேன்
இப்போது நீமடிந்த யெண்ணமொன்றும் நானறியேன்
திடத்தபுலி யதனைச் சிறியமான்,குட்டிவந்து
அடித்தகதை யாச்சே அண்ணாவே என்னசெய்வேன்
தான்மடிந்த பொழுதே தப்பாமல் எப்படியும்
நான்மடிவேன் தப்பாது நகைப்பாரே ஊரவரும்
வேத னமைத்த விதிதனக்குத் தப்பவென்றால்
ஏது உயிர்களாக்க எவராலும் ஆவதுண்டோ,

## சின்ன மருதேந்திரன் கைவளரியினால் திருப்புவனம் காரிஸ் சிலேயுமான் வடகரையில் மடிந்தது.

என்றழுது தேறி இனிமருதை ஓர்நொடியில்
வென்றிடுவே னென்று வெம்பரிமே லேறியவன்
விண்டான் படைதனக்கு வெட்கமுடன் ரோசமதும்
உண்டோ வதுயில்லையோ ஊரிலுள்ள ரேசுவரே
ஆனது மாச்சு அண்ணனும்மண் ணாகிவிட்டான்
ஏனினிமே லஞ்சாமல் இயன்றமட்டும் பார்ப்பதென
அண்டி வடகரையை அடுத்து வருமிவரைக்
கண்டார் மருதிருவர் கண்ணாலே தாம்பார்த்து
ஆரியனோ வாரான் அறிந்து உரையுமென
நேரிருந்தோர் கண்டு ரெங்கரா விங்கிவனே
மல்லராவு தம்பி வழிமறைத்து நம்மையிவன்
வெல்லவோ வாரான் வேகமதைப் பாருமென்றார்
தீரமாச் சிறுமருது சிவிகைதனைத் தானிறுத்தி

இறங்கி வளரிதனை எடுத்துமுன்னே வாரதொரு
ரெங்கரா யன்தலையை நீபோ யறுத்தெடுத்து
இங்கேவா போவெனவென் றேவியதோர் கைவளரி
வந்துரெங்க ராயன் மணிச்சிரத்தைத் தானறுத்து
தந்ததே வந்திடத்தில் தாய்பூமா தேவியிடம்
இறந்தானே ரெங்கராவு இவனிறந்து வீழ்ந்ததுவை
அறிந்தா ரவன்படைகள் அல்லாரும் தட்டழிந்து
வாடினு ரோடி மருதுபடை கண்டவரைக்
கூடி எதிர்மறித்துக் கொன்றவரைத் தான்மத்தி
பெல்லாதான் ரெங்கராவு போனு னவன்படையைக்
கொல்லாதீர் வாருமெனக் கூடவே கூட்டிவந்து
மடிந்ததொரு ரெங்கராவு மணிச்சிரத்தைக் கண்டறிந்து
படிந்தவனை ஆக்கினைகள் பண்ணுவதி லென்னபலன்
அண்ணனுடன் தம்பி அமர்புரிய வந்தவர்கள்
கனவிலே கண்டபலன் காவலரே பாருமிதோ
இந்தச் சிரசுதனை யெடுமெனவே கொண்டுவந்து
சிந்தை மிகமகிழ்ந்து சிறுமருது வேந்தருமே
சிலைமா னூரருகே செழித்தபெரும் பாதையிலே
பலமான ரெங்கராவு பேர்விளங்க வேணுமெனச்
சந்தோஷ மாகத் தான்பார்க்க யெல்லவரும்
மந்தையிலே ஆல மரத்திலிதைத் தூக்குமென்றூர்
ஆல மரத்தில் அவன்சிரசைத் தான்தூக்கிச்
சாலை வழிகூடித் தானடைந்தா ரம்மானை
மணலூர் வழியாக மருதுமன்னர் தாம்நடந்து
குணமாய்த் தனதுப்படைக் கூட்டமதை ஆதரித்து
பூவனம் நாம்கூறப் போய்ப்புகுந்தா ரிங்கவர்கள்
நாவனந்தம் வேணும் நகர்வளமை சொல்லவென்றல்
பூவணலிங் கேசர் பொற்று மரைப்பதத்தை
மாவீரர் போற்றி மனமகிழ்ச்சி யாகிப்பின்
வெள்ளைமரு தேந்திர வீராதி வீரனிடம்
கொள்ளைக் குதிரைக் குரியவர்கள் வந்துநின்று
வள்ளலே கொள்ளையிட வாக்கருள வேணுமென்றூர்
தள்ளாம லத்தைச் சம்மதித்தே யீதுரைப்பார்
மன்னவரே நீங்கள் மறுநகரில் செல்லாமல்
என்னகரை யுங்களுக்கு ஈந்தேநான் கொள்ளையேல்
நாங்கூர் ஒருநாள் கொள்ளையிட நாமளித்தோம்
பாங்குடனே சூறை பகல்வேட்டை செய்யுமிப்போ
மாற்றானை வென்று மணிநகருங் கைவசமாய்
வீற்றிருக்குங் காலம் வெகுகொள்ளை நான்தருவேன்
அதுவரையும் நீங்கள் அதிககொடுமை செய்யாமல்
பாளையத்துக்கு நாங்கூர் ஒருநாள் பகல்கொள்ளை
பதிவா யிருங்களெனப் பகர்ந்த மொழிப்படியே

உசிதமுடன் நான்கூற ஒருநாள் கொள்ளைபகல்
செய்தார் அவர்கள் சிக்கியதைத் தக்கவைத்தார்
அப்பால் அவர்களும் அமர்ந்திருந்தார் பூவனத்தில்
இப்பால் நவாபுவகை இனிவருங்கே ளம்மானை.

**விருத்தம்**

பாங்குடன் நவாப்பு முன்னே பட்டணம் போகு போதில்
வாங்களென் றெழுதி ஒட்டும் வாசகம் வரவைக் கண்டு
தாங்கிமுன் பிரட்டன் பார்த்துத் தாவேமாட் டியன்பின் நோக்கி
ஈங்குரைப் படியே செய்தீர் எவர்களும் நகைப்ப தாமே. (22)

ஆவது அறிவோ மென்றே அவருடன் பூரி சேர்ந்தே
காவலன் தளவாய் முத்துக் கருப்பனுக் குரைத்தே யிப்பால்
சேவகப் படையைத் தேற்றித் திரண்டிவ ரிருக்குங் காலைப்
பூவன மருது வந்த புதுமையங் கிவர்தாங் கேட்டார். (23)

**வேறு**

கேட்டார் பிரட்டனுடன் கிலேசமின்றிப் பூரியுந்தான்
மாட்டியனும் கேட்டு மருதிருவர் தம்மேலே
உண்டோ குறைகளெவை ஒன்றுமிலை கேளுமிது
திண்டுக்கல் லயலிற் செய்துவிட்ட கோலமினி
இங்கிருந்தால் நாமும் இருவர்வர ராணுவுடன்
இங்குவந்து நம்மோ டெதிர்த்தபின்பு நாமவரைத்
துரத்த வருத்தமது துணிந்துமிங்கே வாரதுக்குள்
மறித்து யிடைவழியில் வாராமல் சண்டையிட்டு
வந்த வழிபார்த்து வலங்காட்டில் போம்படிக்கே
தந்துசெய்ய வேணுமிது தளங்கள்தமைக் கூட்டமிட்டு
வாருமென மாட்டியனும் வகுத்தபடி பாளையத்தைச்
சேருமென்று கூட்டிச் சென்றேதான் மேல்முகமாய்ச்
சேனை முழக்கமுடன் சேகரமாய்க் கூட்டிவழி
மானா மதுரையிலே வந்தமைத்தார் கூடாரம்
மாட்டியன்தன் சேனை மானா மதுரைவந்து
நாட்டியக்கூ டாரமதை நற்பபூ மிருந்த
மருது துரையறிந்து வாம்பரியுஞ் சேனையையும்
துருசாய்ப் படையெழுப்பித் துயந்துபெரும் பாதைவழி
சதிராய் நடந்திருப்பர் சந்திநக ரோரமதாய்
மதியாப் பெரும்படைதான் வந்தாரே முத்தநேந்தல்
முத்தநேந்தல் வந்து முனைவீரன் தானையமாய்
வைத்ததந்த மாட்டியனும் வந்துசொல்ல நொந்துமனம்
பருதிஎழு முன்னேதன் பாளையத்தைத் தானெழுப்பி
எருமைத் திடல்தனிலே இறக்கினார் பாளையத்தை
தானா யிவரெழுந்து தங்கியதோர் வார்த்தைதனைச்
சேனா பதிமருது தீரனுமே தானறிந்து

காட்டவரு மற்றவரும் நலமாய் வருகவென்று
போட்டார் திருமுகத்தை போனவுடன் கண்டறிந்து
நாற்றிசையி லுள்ளவர்கள் ராசரா சேச்வரியைப்
போற்றிப் பணியவென்று புறப்பட்டா ரென்னசொல்வேன்
திருப்புவன மேற்கே தெற்கே திருச்சுழிகை
சிறப்பாய் வடக்கே திருப்பத்தூர் கோட்டைவரை
கூடி நிறைந்தவர்கள் கொக்கரித்து அக்கரையாய்
சாடி நவாபுதனை நறுக்குவேன் பாரெனவே
வக்கணைகள் பேசி வருஞ்சேனை தங்களுடன்
சக்கந்தி வெங்கண பெரியஉடையார் தாமெழுந்தார்
சின்ன மருதுதுரை செல்லக் குழந்தையெனும்
மன்னன் சமாலி உடையார் மகிழ்ந்துவர
வெள்ளைமரு தேந்திர வீரன் மதலையெனும்
கொள்ளைச் சனத்துடனே குடைக்காத்துத் தம்பிவந்தான்
பொங்குந் திருப்புவனம் பொன்னகர்க்கு மன்னனெனும்
சங்கிலிப் பூபன் சனமு மவரெழுந்தார்
பொன்னே வலிக்கோட்டை புகழ்பெரிய தம்பியுடன்
மன்ன னழகுடையார் வந்தா ரவர்சனமும்
வினைக்கு மனமலையான் வீராதி வீரனெனும்
பனைக்கரை முத்திருளும் பாட்டுடன் கூடவரத்
துன்னுக்குட்டி சேருவையும் சுற்றிவெகு சனுவமும்
வெள்ளிக்கட்டிக் காளாஞ்சி வீரன் வயிரவனும்
அதப்படக்கிச் சங்கிலியும் அவன்சேனமும் வாத்தியமும்
விதப்படவே புக்குளி வேல்முருகுன் கூடவாக்
காளாஞ் சிக்கார்க் கருப்பண்ணன் சேருவையும்
வேழமது சினந்த விதம்போ லவன்வரவே
தாட்சிணிய மில்லாச் சேனமும் விருதுடனே
நாச்சியப்பன் சேருவையும் நலமா யுடன்வரவே
கருப்பண்ணன் சேருவைக் கார னவன்சனமும்
விருப்பமுடன் மருங்கூர் வீர னவன்சனமும்
முறையூரு ஞர்க்குடி முனைவீரர் மன்னவரும்
வனராணி பாதம் இணையெமக் கென்றுரைத்துச்
சொட்டை வாளைதொத்தன் தொலையச் சனத்துடனே
கட்டளை புக்கிரானைங் காங்கையனும் கூடவரச்
சிலாமேய நாட்டுச் சிறந்தசொக்கு சேருவையும்
தலையான வெள்ளி சின்னத்தம்பி யவன்சனமும்
விசயா புரத்து வெகுசனங்கள் கூட்டமுடன்
அசையாத வெள்ளிக்கட்டி ஆயுதங்க ளுள்ளவனும்
வாகுடைய வேலீட்டி வல்லயமு முன்னதொரு
நாகாடி ராமச்சந்திரன் நாடிவா வேகமுடன்
பள்ளத்தூ ருள்ள பலசனங்கள் கூட்டம்வெகு
கள்ளர் பெருஞ்சனமுங் கடுங்கோப முள்ளவர்கள்

மல்லாக் கோட்டையூரில் வளராண்டி யப்பனவன்
வல்லவன் பின்னேதான் வாராப்பூர் மன்னவனும்
சேதுபதி யம்பலம் தீர ன்வன்சனமும்
பேதக மில்லாத பெரியபிள்ளை யம்பலமும்
வாளில் வலியோன் மகாவீர முள்ளதொரு
காளாப்பூர் மன்னன் கருசப்பட்டு நாய்க்கனுடன்
நெடுவையைச் சுக்கான்பட்டு நிலத்திலுள்ள மன்னவரும்
துடியன் வயித்திலிங்கத் தொண்டமான் தன்சனமும்
சீரா வயல்நன்னி சேர்ந்தசனந் தன்னுடனே
பிரான் மலையிலுள்ள பலசாலி ராணுவமும்
சிறுவயல் நாகலிங்கஞ் சேருவைக் காரனுடன்
திருப்பத்தூர் வயிரவன் சேருவையும் வீறுடைய
மானு மதுரை வளர்நாக லிங்கமுடன்
சேனை மிகுசனமும் திரண்டு நடந்துவர
மருவத்த மன்னன் மாவேலி வாளனுடன்
வெரிமருது சேர்வை வேந்தன் சனம்வரவே
ஒய்யத்தே வன்படையும் உடையா ருடைச்சனமும்
கையீட்டிக் கார கனமான மன்னவரும்
பெருவிருது பூண்டு பேர்விளங்கும் பூவுலகில்
அருங்குளத்து மன்னன் ஆறுமுகன் சேருவையும்
வாய்த்ததென்று போரில் வைத்ததென்று பின்வாங்கான்
தாட்சியில்லா மன்னன் தண்டியப்பன் சேருவையும்
எதற்குமனங் கலங்காதான் எவர்தமக்கு மஞ்சாதான்
புதுக்கோட்டை மன்னன் பூபனவன் தன்சனமும்

**(இடையில் ஒரு ஏடு மூலப்பிரதியில் இல்லை.)**

கைக்குறியாய் விபீடணன்முன் காட்டவே ராவணனை
சுக்கிரீவன் பாய்ந்த துரிசெனவே கும்பினிமேல்
பாய்ந்தா னதன்பிறகே பாய்ந்ததவன் சேனையவை
தோய்ந்து தவியாமல் சுட்டுவெட்டிக் குத்துகையில்
கும்பினியி லம்பதுபேர் குறைந்தா ரறிந்துதுரை
வம்பரென்று சற்றும் மயங்காமல் மாட்டியனும்
தந்திரன்முன் இந்திரசித்தன் சதுர்முகனு ரத்திரத்தால்
வந்துநின்று வாரணத்தை மடித்ததொரு பாவனையாய்
மூன்றுபீ ரங்கிதன்னை முன்னேவிட்டு ஒன்றுபண்ணிக்
காணவே மூளிலிவர் கனமருந்துங் குண்டுமிட்டு
விடுத்தா ரவர்படையில் மேலிதுபோய்ப் பாய்ந்தவுடன்
படுத்தார் மருதுபடை பதிதனிலே யாயிரம்பேர்
கால்மாடு தலைமாடாய்க் கரைந்தவரை யத்தருணம்
வேல்முருகன் பார்த்து மிஞ்சுகிறு ரென்றறிந்து
விசையாய் வெளியேறி மேவுதங்கள் ராணுவத்தை
வசையாய்ப் பெறும்படியாய் வைதுதிரட்டி யெல்லோரும்

சென்று வொருமுகமாய்ச் சிக்கெனவே சோல்சர்களைக்
கொன்றிடுவீ ரென்று கொடும்பாசை வைத்ததுவை
கடைத்தார் கண்டு காரியமுந் தான்சரியே
என்ன விதுவரையும் இத்தனைபேர் நாமிருந்தும்
மிஞ்சவிட்டோம் கும்பினியை மேலுமினி நில்லாமல்
வஞ்சகமு மில்லாமல் வாருமென்று ராட்சதர்மேல்
வானரம் போய்ப்பாய்ந்த வகையதுபோல் கருநடத்தார்
தானவரைப் பாய்ந்து சக்கரம்வேல் வல்லையமும்
ஈட்டி வளைமரம் எரியீட்டி நேரிசமும்
கூட்டி யெறிந்துமிகக் குல்லையிட்டுக் குத்துதலும்
கல்லு வெடியாலும் கயத்து வெடிக் கச்சைகட்டிச்
சொல்லும் வெடியாலும் சுடுவதிலும் வாளெடுத்து
வெட்டுவதும் பிடித்தால வெடிமருந்துக் குண்டாலும்
பட்டார் நவாபுபடை பாளையமுன் நூறுசனம்
போனவரைக் கண்டு பூரித்துரை மாட்டியனும்
ஆனமட்டும் பார்த்தோம் அநேகமதா யங்கவரில்
மடித்தோ மிலங்கையில்முன் வந்துவந்து மூலபலம்
அடுத்த விதம்போல அடுக்குகிறு ரென்னவிது
ஆச்சரிய மென்று அப்பொழுதே சோல்சரிடம்
பேச்சுரைத்து மூன்று பெருவேட் டெழுப்பியதால்
அமர்ந்தாரே ராணியுடைப் படைதனிலே வாயிரம்பேர்
முடிந்தா ரவர்திரும்பி மத்ததொரு குத்துவெட்டால்
துரைமாட மயன்தனது சோல்சரிலே யைம்பதுபேர்
இரையாளு ரிப்படிக்கு இங்கிவர்க ளோர்பகலாய்
அத்தலத்தில் நின்று அமர்புரியும் செய்கையிதை
முத்தனேந்தல் தங்கும் முடிமருது ராசதுரை
செழிப்பா யறிந்துடனே சேனைதனைச் சேகரமாய்
எழுப்பி நதிகடந்து இரவில்வழி தானடந்து
சார்ந்தா ரமர்புரியும் தன்னுடைய சேனையிடம்
சேர்ந்தா ரிருவகையும் சென்றுவொன்ருய்க் கூடிநின்று
மாலவன்தன் வானரங்கள் மலைகள்தமைத் தாமெடுத்து
மூலபலச் சேனையின்மேல் மோதியதோர் வாறதுபோல்
சக்கரம் ஈட்டிதண்டி பிண்டி பாலமுடன்
தக்க வெடிகுண்டால் தான்மோதி வெட்டுவதால்
துஞ்சினுர் பூரி துரைபடையில் நூறுசனம்
மிஞ்சியே கோபமது வெகுவாக வேபெருகிச்
சோல்சரையும் தீனேர் துலுக்கரையும் மெத்தமெத்த
ஏசியே ரோசமவர எள்ளளவு மஞ்சாமல்
செய்யுமென்ருர் சண்டையது செய்யவேதுப் பாக்கியிஞல் •
பெய்யு மழையெனவே பெருங்குண் டதுபொழிந்தார்
பொழிந்தா ரதுசமயம் புகழ்மருது ராணுவத்தில்
அளித்தா ரொருநூறு அமர்புரிந்த மன்னவர்கள்

சென்று ரெனச்சேதி திருமருது காதினிலே
நன்ருகக் கேட்டு நரிவேட்டை யாடவந்து
இலந்தை முள்ளுத்தைத்து இறந்தவர்க்கு ஒப்பனையாய்
பலமா யிதுபுவிக்குப் பேராச்சே நேர்த்தியிது
என்று பரியைவிட்டு இறங்கியே கால்நடையாய்ச்
சென்று மருதிருவர் தேன்மொழியாள் ராணியிடம்
எந்தாயே நாங்கள் இகலிலைத்து வேட்டையாட
வந்ததே நாளுமிது மாதரசே கேளுமம்மா
நாங்கள் வருஞ்சேதி நவாபுதுரை கேட்டெழுந்தான்
தாமதித்த மல்லராவு சிதைந்தானே யப்படியே
தம்பி ரங்கராவும் சிதைந்தானே நிமிஷமதில்
வம்பாய் நவாபுவகை மாட்டியனும் பூரியுமாய்
எதிர்க்கிருர் கண்டாயே இங்கிவரைப் போய்ப்பிடித்துச்
செதுக்கு மரம்போட்டுச் செதுக்கவே நேரமிது
தேவியரே நாமிவரை செதுக்கரத்தால் தேய்த்துவிட்டு
ஆவலுட னப்பால் அடர்ந்துவருஞ் சோல்சரையும்
துடுக்கர் துலுக்கரையும் சூழ்ந்துவரு வ்ார்தமையும்
இடுக்கி எலியதனை இருபுறமுந் தானெருக்கிச்
சதைத்தொரு பாவனையாய்த் தம்பியொரு பாரிசமும்
பதருமல் நானுமொரு பாரிசமாய்த் தானெருக்கி
எலிவேட்டை யாடிவரும் இயற்கைபோல் செய்துவர்
வலுவாக வுந்தனுடை வாக்கருள்வா யென்றுரைக்க
வேலுலக மாது விரும்பியிதைக் கேட்டவுடன்
சேல்விழி யணங்கு சிறுநகைகண் டப்போது
நாயகமே யந்த நவாபுதுரை யிங்கிருந்து
தாயகமாய் நின்று சமர்புரிந்தா ளுமாகில்
அங்கவன் முன்நாங்கள் ஆண்மைதனைக் காட்டுவது
சங்கை யிலரென்னச் சமானமென்ரே சொல்லுவது
வல்லவனே நீங்கள் வளைந்திருக்கு மாட்டியனைக்
கொல்லாமல் காளையார் கோவிலுக்கு அப்புறத்தில்
துரத்திவிடு மல்லாது துஞ்சிடவே செய்யவென்று
தீரத் திருவர்நீங்கள் செய்யாதீர் சண்டையது
வல்லவர்க ளுங்கள் வலிமைதனை நானறிவேன்
மல்லாடு மாட்டியன்தான் வகையறியா னய்யாவே
விடாதே யெனத்துரத்தி விரட்டிவிடுங் கைவளரி
எடாதீ ரெனவேண்டி இந்தமனுத் தாருமென
வேலுலக மாதா வேண்டினதால் மெத்தமெத்த
மேலிருவர் கைகூப்பி விழுந்து நமஸ்கரித்து
உத்தாரந் தப்பி ஒருநாளும் பேதகமாய்
வித்தகியே செய்யோம் விரட்டியே வாராயென
ஏறிஞர் வாம்பரிமேல் எடுத்தார் வளரிதனை
மீறியே மாட்டியன்மேல் விட்டார் பரியதனைப்

பரிமேல் மருதிருவர் பரும்வளரி கைப்பிடித்து
வ நமுன் னிதுதெரிந்து மாட்டியனும் வாட்டமுற்று
நப்பூ வனமிருந்த ராணியுடன் ராணுவமும்
எப்போ வந்தாரின்னி இவர்மருது மன்னவர்கள்
கண்டாலே நம்மைக் கலக்கிடுவான் சண்டையிலே
வண்டன் வருமுன்னே வகையுடனே வீற்றிருந்து
பொருவோ மவரமர்தான் புரிந்தா லறிந்துமிப்பால்
பிரிவோம் பதினேக்கிப் பிற்படுவோ மாமெனவே ;

## மருதேந்திரனும் மாட்டியனும் எதிர்த்துச் சண்டை செய்தது.

மனத்தில் மிகநினைந்து மாட்டியனுங் காட்டமுடன்
தனது படைமுழுதுந் தான்திரட்டிக் கும்மலிட்டு
வண்டர் வருவரென மாட்டியனும் பீரங்கியில்
குண்டுங் கருமருந்துங் கூடவே போட்டிடித்து
மோரி சாவை முன்னிறுத்திச் சோல்சர்களை
வார மருதிருவர் மன்னவரை யின்றள்வில்
மிஞ்ச விடாதபடி வெற்றிகொள்வீ ராமெனவே
அஞ்சா மனமுடனே அங்கவர்பின் னிங்கிவரும்
நின்றார் பரியேறி நிற்பளவில் வெம்பரிமேல்
சென்றார் மருதிருவர் சேனையுட னப்பொழுது
மாட்டியனுங் கண்டு வலுத்தரமாய்ப் பீரங்கியை
மூட்டுமென்றார் குண்டு மூவிரண்டு மாவலுவாய்ப்
பாய்ந்தவுடன் முன்னே பதியிலங்கை யூரமரில்
காய்ந்தகும்ப கர்ணன் கையாலே வானரங்கள்
சாய்ந்தவிதம் போல் சனமனூற் கன்னடத்தில்
மாய்ந்தார் மருதறிந்து வரும்பரியைத் தானகற்றி
தன்னுடைய ராணுவத்தைத் தான்பார்த்து யித்தனைபேர்
என்னத்துக் காக இங்குவந்து கூட்டமிட்டீர்
பிசகாமல் நீங்கள் பலத்துப்போய் வீழ்ந்திடினும்
நசித்திடுவா ரல்லாமல் நாடுவரோ போர்புரியப்
பேர்பெருக் காகப் பெருமைக்குக் கூட்டமிட்டு
ஆரிருந்து மென்ன அழிந்தவரைக் காண்பதுவோ
தளம்பா தமர்புரிவீர் சாஇறபேர் தங்களுக்கு
முழங்கால் சமுத்ரமெனு முன்னுரையைக் கேட்டிலிரோ
எங்கள் வளரியது எவினு லிங்கிவர்மேல்
இங்கே யிதுவரையும் எதிரிருக்கக் கண்டதுண்டோ
அன்னே உரைகடக்கப் போகாது யென்றலவோ
இன்றளவும் நாங்கள் இருக்கின்றோம் வீணாக
நில்லாதீ ரென்று நெடும்பாசை வைத்தவரைச்
செல்லுமெனச் சேனை சேகரமாய் நாற்புறமும்
சூழ்ந்தா ரவர்வெடியால் சுட்டுவெட்டு மாகையிலே

வீழ்ந்தார் நவாபுபடை வேந்தரிலே நூறுசனம்
இங்கவர்கள் பட்டு இறந்துவிழப் பின்னும்வர
அங்கதன்முன் கும்பகர்ணன் அரக்கன்மே லோர்மலையை
எறிந்த விதமாக இரண்டுகுண்டு பீரங்கியைத்
திருந்த விடுத்தளவில் தீரனிந்த மாட்டியன்றன்
சேனையிலே பட்டார் திரள்சோல்சர் ஐம்பதுபேர்
தானே நொறுங்கித் தவிடுபொடி யாய்விழவே
நேர்த்தியுடன் பார்த்து நின்றதுரை மாட்டியனும்
சாத்துவான் குண்டுரெண்டு தாரித்து ஓர்பலித்தா
விடுமெனக் கும்பகர்ணன் மீதிலுற்றுச் சுக்ரீவன்
கடுங்காது மூக்கையுமே கரத்தாலே பிய்த்தெடுத்துப்
போனபடி போலே புகழ்மருது சேனையில்போய்த்
தானதுவும் பாய்ந்துகுண்டு தலைமுகம் காதுகளைப்
பேர்த்து உயிர்மரித்துப் பிசகாமல் போனவரைப்
பார்த்தார் மருதுதுரை பாளையத்தில் எண்பதுபேர்
இப்படிக்கு நின்று இருபடையும் போர்புரிந்து
செப்பமா யொன்றையொன்று செயிக்கவே வீம்புரைத்து
குண்டுங் கருமருந்துங் குத்துவெட்டு மாம்பொழுது
கண்டு மருதவரைக் கலைத்தோட்ட வேநினைவாய்
ஏறும் பரியைவிட்டு இறங்காம லண்ணனுடன்
சாருவாய்த் தம்பியுமே தானிருந்து தங்களுடன்
ராணுவத்தைப் பார்த்து நவிலுவார் சேகரமாய்
வான மெரியுமென்றுர் வாய்த்ததென்று அப்படியே
பொழுதடைந்த சேனை போய்க்கவிந்து நாவுதனில்
தொழுதுகா ளீசர்தம்மைச் சூழ்ந்துநின்று மாறுமல்
மிக்க புகழ்விளங்கும் *விருச்சிகத்தின் மாதமதில்
கற்கடகச் சந்திரன் யோகந் தனிலெங்கும்
மாரி பொழிந்தவகை போலே வானமதைத்
தூரிச் சலியாமல் துயந்ததுவாய்ப் போடுகின்றுர்
மாலவனும் லங்கையிலே வல்லரக்கர் தம்மேலே
கோலிய பாணமெனக் குவிந்துவந்து தான்விழவே
........னீடான் துரைபூரி மேல்நோக்கிச் சோல்சர்களும்
அரண்டா ரதுபோலே ஆனுனே மாட்டியனும்
இன்று மிவிடந்தனில் இருக்கவொண்ணு தென்றுரைத்து
அந்நேர மேபடையை அடைவாகத் தானெழுப்பிக்
கூவெனவே சத்தமிட்டுக் கூக்குரலு மெத்தவுண்டாய்
வாவெனவே கூடி வடமுகமே தானேக்கி
நடந்தா ரிரவுதனில் நவிலவொண்ணுக் காடதனைக்
கடந்தா ரிவரிருந்த காளையுமே கண்ணுலே
ஏறிட்டுப் பாராமல் இறந்தவர்போ யுள்ளவரைச்
சீறிட்டுக் கூட்டித் திருப்பத்தூர் சேரலுற்றுர்.

[இடையில் ஒரு ஓலை காணப்பெற்றில்து.]

---

* கார்த்திகை.

## வேலுகமாதும் மருதேந்திர ரிருவரும் நவாபு படையை விரட்டிச் சிவகங்கைக்கு வந்தது.

அழைத்துக் கொடுபோய் ஆலயத்தி னுட்புகுந்து
..............சர் தன்னடியஞ் சொர்னவல்லி
தூயபதம் போற்றித் துதித்தெழுந்து சோமலிங்கர்
இணையடியும் பொன்னினல்லாள் இருபதமுங் கைகூப்பிச்
சொக்கலிங்க மீனாட்சி துய்யமலர்ப் பாதமதை
அக்கரையாய்ப் போற்றி அடிபணிந்து தண்டனிட்டுக்
காத்தாய் கடைபோகக் காப்பீர்க ளென்றெடுந்து
சாத்தி யபிடேகம் தாழ்வில்லா தேநடத்தி
விருதுபல முழக்கம் வெதிபரியும் யானைகளும்
கருதுங் கவிவாணர் கட்டியமுங் கூறிவர
அன்றவர்க ளங்கே அமர்ந்திருந்து மற்றுநாள்
சென்றார் சகலருமாய்ச் சிவகங்கை தானோக்கி
வாரா ரெனச்சேதி மாநகரத் துள்ளவர்கள்
தாராள மாய்க்கேட்டுத் தானெடுத்து ஆலாத்தி
கொண்டுவந்தார் சுற்றிக் கொடுவரவே முன்னேயிரு
தண்டிகையின் மீதே தரணிதனை, முத்தெனவே
முந்தி யெடுத்த முத்திருளப் பேந்திரனும்
சொந்த மறுமகனுந் தொண்டிநகர் சேருவையின்
கரணிக்கன் முத்துக் கருப்பனிவர் சேகரமாய்
வரவே முழக்கமிட்டு வாத்தியங்கள் ஓசைகள்
கேட்டாளே ராணி கம்பீரமாய் மகிழ்ந்து
வேட்டு முழக்கமிது விந்தையெனச் சொல்லுமென
மருதேந் திரரறிந்து வாம்பரியை விட்டிறங்கி
அருகே சிவிகைதனை அடுத்திருவ ரெந்தாயே
தெரியாதோ யுந்தனுடைச் சிவகங்கை மாநகர்முன்
பிரிவாகும் போது பேணியிதை முத்தெனவே
எடுத்து அரசமுடிக் கிடைஞ்சலொன்றும் நேராமல்
அடுத்து நிலைநிறுத்தி ஆள்வைத்த வேளாளர்
அட்டவணை முத்திருள அப்பனுடைத் தன்மருகன்
கட்டழகன் முத்துக் கருப்பனுந்தன் வெற்றிதன்னைப்
பார்க்கவே வாராரே பாரும்வர சேருவையை
எற்பாய்த் தவறவிட எண்ணாதே யுத்தமியே!
என்றளவி லிந்த இருவருமே தண்டிகைமேல்
நின்றவர்கள் கிட்டி நிலத்தில் குதித்துவந்து
காரிகையைக் கண்டு கைகூப்பித் தண்டனிட
வாருமென்று ளப்போ மருதிருவ ரோடிவந்து
அய்யாவே யுங்கள் அனுமதியால் ராணியம்மாள்
வையமதை யாள வந்தாளே யீதுமல்லாமல்
பூவோடு நாரும் பொருந்திமணம் பெற்றதுவாய்த்

தேவியுடைச் சேவகராய்ச் சென்றிருந்து நாங்களுமே
வந்தோம் பழையபடி மாநிலத்தை யாளவைத்து
எந்தாய் வளர்ந்தேறி இருக்கவென்று வாக்கருள்வீர்
என்னமருது இவரவர்முன் கூட்டி யேகை
சொன்ன மொழியதனைச் சுகமாகக் கேட்டவரும்
கேசவனார் பாதக் கிருபையினு லெல்லோரும்
வாச மிருந்து உழந்திருப்போ மல்லாமல்
நாடவர்க ளந்த நவாபுபடைக் கேபயந்து
வாடினார் கூடி மயக்கமது தீருதற்காய்
ராணி முககமலம் நாங்களுமே கண்ணாலே
காண வருவமெனக் கனசனங்கள் ஊரவர்கள்
சேர்வைகள் வரவரச் செய்ததுதியுந் தானேற்று
சீருடனே நாடி சிவகங்கை மாளிகையில்
போயிருக்கக் காலம் பொருந்துதிது நாளெனவே
தாயிடத்தி லோதி தரணிதனக் கேகெனவே
இவ்வார்த்தை தன்னை இவர்மருது முன்னவர்கள்
ஒவ்வி யவர்களுடன் உண்மையதாய்த் தானடந்து
வேலுலக மாதிடமுன் விளம்பினா ரப்போது
வேல்விழியாள் கேட்டு மெய்ம்மகிழ்ந்து வப்படியே
வரந்தகமாய்ச் சொல்ல வந்தசன மாலாத்தி
ஏந்தி துதிசெய்ய எல்லாமுந் தான்பொறுத்து
தேர்ந்த மகிழ்ச்சியுடன் சிவகங்கை மாநகரம்
சேர்ந்து வலஞ்சுற்றித் தெருவீதி போகையிலே
ஊரவர்கள் கண்டு ஒக்கவே மனமுடைந்து
பாருமடி ராணி பார்வைமெத்த ஊரவர்மேல்
மேவலாரில் நாமும் மெலிந்திருப்ப தாகையினால்
ஆவலவள் நம்மேல் ஆதரிக்க வேமனமும்
வந்தாள் மகராசி மாநகரில் லட்சுமியும்
வந்தா ளிவளெழுந்து வந்தபின்னே யிந்தநகர்
இருக்கு மழகுதன்னை எல்லவரும் பாருமடி
உருக்க மிவள்போலாய் உலகமதி லாருமுண்டோ
குடியை வளரவைக்கும் கோதையிவள் பூமாது
வடிவுடையாள் நல்ல மகராசி யென்பாரும்
சுற்றி நவாபுபடை சூழ்ந்துவர மெத்தவரை
வெற்றிகொள் சீமாட்டி மெய்த்தவருள் என்பாரும்
பின்னிடையாள் வேறு மெல்லியரை வல்லபமாய்
இன்று செயிப்பார்கள் எவருமில்லை யென்பாரும்
வாங்களடி யிந்த மகராசி தன்வதனம்
பாங்குடனே கண்டால் பசிபவமுந் தீருமென்றார்
தளகர்த்த னென்று தரணியிலே வேண்டியபேர்
வளமா யுரைப்பதென்ன மருதிருவர் தங்களைப்போல்
உண்டோ வுலகமதில் உரமான பேர்களைத்தான்

கண்டறிவோ மென்று கால்கடுக்க வோடி வந்து
மருதுமுகம் பார்ப்பார் வையம்புக ழயிதரிடம்
பெரும்புலியைக் கொன்று பேட்டிபண்ணிக் கூட்டமிட்டு
நானிலத்தை யாளும் நவாபுதனைத் தான்துரத்தும்
மானபரன் வெள்ளை மருதிவனே யென்பாரும்
அந்நா ளிவர்தானே அயிலாண்ட யீச்வரிக்காய்
இந்நகரை முத்தென் றெடுத்தெழுது மட்டவனை
முத்திருளப் பேந்திரன் மொய்குழலே பாருமிவன்
உத்த மதிமகன் ஒண்டொடியே தொண்டியிவன்
சேர்வைக் கணக்கனடி தேன்மொழியே மாமயிலே
கார்குழலே முத்துக் கருப்பனிவ னென்பாரும்
அன்னை யிவன்தன் அதிர்ஷ்டமிது ஆரிடமும்
முன்னோர் தன்னால் முடிந்தானே மல்லராவ்
என்னவே பேசி எழுந்துவரும் ஊரவரும்
மன்னருங் கன்னிகையார் மகிழ்ச்சி யாய்நடக்க
நடந்தாள் வேலுலக நாயகியும் பொற்சிவிகை
கடந்தே வெளிவாசல் கனகமணி மாளிகையில்
சென்றான் மருதிருவர் சிறந்தகர ணிக்கருடன்
அன்றருகே வொன்றாய் அடைவுடனே வீற்றிருந்து
வாசினைசேர் வேலு மங்கைமக ராசியிடம்
பேசி முடிபுனைய பிரியமது நாளையெனச்
சொல்லிப் பரிமருதும் சேலக்கண்ட தண்டிகையும்
செல்ல விடைவாங்கிச் சென்றவர்கள் தங்களுடன்
எல்லை விடுதிதனில் இருந்தா ரவர்தாமும்
மெல்லியரு மாளிகையில் வீற்றிருந்தா ளம்மானை.

## விருத்தம்

மங்கையு மனையுள் சென்று மகிழ்ச்சியா யிருக்குங் காலை
திங்களும் ஒளிவு காட்டிச் செனித்துமேல் திசையின் கீழாய்
அங்கது புகவே யப்பால் அருணன்வந் துதித்தா னிப்பால்
மங்கைமுன் கணக்கர் தாமும் மருதிரு வோரும் வந்தார். (24)

நால்வரு மிருந்து பேசி நன்றிது நாள தாவே
வேல்விழி யுலக மாது மின்னிடை தனக்கு மின்னாள்
பாலமு தெளித்துத் தீர்த்தம் பட்டமுங் கட்ட வென்றே
சேலதாய் நிருபந் தன்னைத் திசைத்திசைக் கனுப்ப லானார். (25)

## வேறு

வந்த நிருபமதை மன்னவரும் ஊரவரும்
சந்தோஷ மாகத் தானெழுந்து கேட்டதனை
ஆனந்த மாகி அதிக மகிழ்ச்சிகொண்டு
வானங் கவிந்த வகைபோலே தான்கவிந்து
புலிவேலு பட்டம் பொருந்து மதைப்பார்க்கச்

சிவிகை பரியேறிச் சேர்ந்தா ரவரவர்முன்
ஆனைமடு தீர்த்தம் அழகுகண்ட ‡தேவைநகர்
தானுளதோர் தீர்த்தம் தன்னுடனே நன்னயமாய்ச்
சிறுவயல்மான் கொண்டான் சிறந்தகங்கைத் தீர்த்தமதும்
உரிமையுட னெடுத்து உற்றவர்கள் தந்ததுவை
வாங்கி யபிடேகம் மங்கையர்க்கே செய்து பின்னே
தாங்கி முடியெடுத்துத் தரித்தார்கள் வேதியர்கள்
அன்று அரசர்முதல் அங்கிருந்த யாவர்களும்
சென்று அடிபணிந்தார் திருமருது வேந்தர்களும்
கரணிக்கர் தாமும் கைகூப்பி யேபணிந்தார்
தரணி புகழரசி தந்தா ளெதிர்பணிவும்
பூமிக் குடையாள் புகழ்பெரிய வேலுலகு
தாமுந் தனமுந் தளத்துக் கதிபதியும்
கைக்கொண்டார் சீமைக் காசினியெல் லாமறிய
மைக்கொண்ட கண்ணாள் மணிமகுடந் தான்தரித்துத்
தாங்கினாள் செங்கோல் தரணியது மேன்மேலாய்
ஓங்கி வளரவென்று உலகமதை யாண்டிருந்தாள்
இப்படிக்கு ஆண்டு இருக்குமந்த நாளையிலே
அப்போ தொருநாள் அங்கவரும் மெய்ம்மகிழ்ந்து
கரணிக்கர் தம்மைக் கடுகவே தானழைத்துத்
தரணிக் கதிபதியாள் சாற்றுவா ளந்நேரம்
ஐயா வொருவசனம் யானுரைக்கக் கேளுமிப்போ
வையமிதை முத்தாய் மகிழ்ந்தெடுத்துத் தந்தவர்நீ
ஆதலா லின்னே ரளப்புரைக்க வேணுமய்யா
ஏதோ விவரம் எண்ணுநீர் சொல்லுகின்றேன்
சூரன் நவாபும் துரையும் படைமுதலாய்ப்
போரில் வெருண்டு போனா ரவனினிமேல்
சும்மா யிருப்பதில்லை சோர்வுகண்டு எப்படியும்
நம்மேல் படையெடுப்பார் ரானுவங்க ளுள்ளவர்கள்
ஈதல்லா லங்கவர்க்கு எப்போது மேசவரி
ஆதரவாய்க் கும்பினியா ரநேகமெனச் சேர்ந்தார்கள்
சோல்சர் துருப்புச் சொலத்தெரியா வண்டர்தமை
மீசமாய்ச் சேர்த்து வேண்டியதோ ராயுதமும்
உண்டுபண்ணிக் கொண்டா ரொருவரும்நே ரில்லையெனக்
கண்டா ரவருடைய கலக்கம்நமக் குண்டதனால்
அடுத்து அவனுடைய ஆதரவைக் கொள்ளுவதும்
தடுத்து வினிமேலும் சமர்புரியும் வாறதுவும்
தோன்ற வுரையுமெனச் சொன்னா ளவள்மனத்தை
காரு மிவரதற்குக் கருதுவார் மாதரசே
மருதிருவர் தம்மை வருத்தியே யங்கவர்பால்
கருதி யவருடைய கருத்தறிய வேணுமெனப்

‡ இராமநாதபுரம்

போகவிட்டா ராளைப் போயழைக்க வந்தவரை
வாகாக முன்பார்த்து வகையெல்லாந தாமுரைத்து
ஆண்ட வரசிதற்கு அமைந்தமதி மந்திரியான்
தாண்டவ ராயனுமே சதைந்தான் வகையிதற்கு
என்னவித மென்றுள் இவர்மருது தாங்கேட்டு
அன்னையயே நெஞ்சம் அருளாதீர் தீர்வைவரி
என்னுயிர் போமட்டும் ஈவதில்லை பூவையரே
மன்னன் நவாபுதனை வசப்படுத்தி யுள்ளாக்கி
அமர்த்தினன் சொல்வழியே அவரடங்க வேமுடிக்கும்
சமத்தறிவே னெந்தாயே தானறிவாய்ப் பின்னையது
இருந்தாலு மப்படிக்கு எப்படியும் நாமிங்கே
திருந்த வுசாருடனே செனித்திருக்க வேணுமம்மா
அதற்கு வகையெனக்கு அருளுவீ ராமெனவே
துதித்து மருதுரைத்த சொல்லறிந்து ராணியுமே
மெத்த மனமகிழ்ந்து மேனியதுந் தான்குளிர்ந்து
சித்தமது பொருந்தி செப்புவாள் தம்பியரே
நாமுஞ் சிலசேனை நாட்டவரில் கூட்டமிட்டுத்
தாமிருத்த வேணும் தலங்களுக்கு மேதளவாய் ;

## வெள்ளமருதுக்குத் தளகர்த்த வேலையும் சின்னமருதுக்கு மந்திரி வேலையும் நியமித்தது

வேணுமே மந்திரியும் விள்ளுமென்ற வுத்தமியை
ராணுவமுஞ் சேர்க்க நாமாச்சு தாமதற்கு
நேமிப்பீ ரிந்நாள் நிறைந்ததள கர்த்தரென்றும்
ஆமவரே யூகிக் கடைவெனவே பார்த்தெடுத்து
வைப்பதுநீ யல்லாமல் மறுத்தெவரா லாகுமெனச்
செப்பவே தான்பார்த்து தேவியிது கேட்டவுடன்
பெருமருது நீபலவான் பேறளிக்கு மேதலவன்
சிறுமருது மந்திரியாம் சிந்தித்தே னிங்கிவரும்
முன்போலே யட்டவணை முகித்துமே சேருவையின்
தன்கணக்கு மாகத் தவறுமல் வாழ்கென்றுர்
சரியென் றதையவரும் தான்புகழ்ந்து ராணுவங்கள்
குறியாய் வலிவுமனக் கோணலில்லா தங்கவராய்
அமிதர் முன்தந்த அடற்பரியுந் தினவரும்
உசிதமுள்ள ராணு வுடன்அடங்க லாகவுமே
எழுபத்தை யாயிரம்பேர் எடுத்திருத்தி யாயுதமும்
பழுதில்லாப் பீரங்கி பதினாறு மாகவெகு
ரேக்கில்லாக் கல்வெடியும் நின்றபெரு நூல்வெடியும்
தாக்குடைய பிஸ்தல் சனியன்முத லானவற்றை ;

## சென்னப்பட்டணம் நவாபு சபையில் கூட்டம் ஆலோசனை

கொடுத்து அவரவர்க்குக் குறையாத சம்பளமும்
விடுத்தத்திச் சீவிதமும் மென்மேலும் தான்பதித்து
வந்துரைத்தீர் ராணி மகராசி தான்கேட்டு
சந்தோஷ மாகித் தானுலகை யாண்டிருந்தார்
இங்கே யிவர்புரியை இருந்தரசு செய்துவர
அங்கே நவாபிடம்போய் அறிவித்துச் சண்டைதனை
மறுநாளிந் திடத்தில் வந்துரைப்பே னென்றுரைத்த
துரைமாட் டியன்பூரி சொல்லினிக்கே ளம்மானை
மாட்டியன் பூரி வந்துபடை சோல்சர்வர
தாட்டீகன் ராம சாமித்துரை யவர்களும்
நான்கு திசையாளும் நவாபுதுரை ராசனுக்குத்
தாங்களுமே கூடிச் சகாயமது செய்யவென
அவர்பின் வரும்பரியும் அளவற்ற சேனையுடன்
இவர்துரையுஞ் சோல்சர் எண்ணவொண்ணு தாகவுமே
நடந்து ரகுராம நாத மாநகரும்
தொடர்ந்து சிவகங்கைத் துண்டுசிறு பாஞ்சையதை
செய்வோம் வசமாகச் செய்துபின்னே மூவரசை
கொய்வோ மெனவிருது கூறியே யிங்குவந்து
சேதுலக மீதில் செல்லவென்ற நேரமதில்
மோதவென்று வந்த முத்திருளப் பேர்திரனை
அமர்த்திச் சமாதானம் ஆக்கியே போகவிட்டுச்
சமர்த்தாய்ச் சிவகங்கைத் தந்நகரைப் பற்றவென்று
வந்து நவாபுதுரை மனப்படிக்கு மாகாமல்
சந்தோசமின்றித் தானேதா னூர்நோக்கி
போம்பொழுது நீலன் பூரிதுரை மாட்டியனை
தாமிருத்திச் சேனை தளங்களையும் காவலிட்டு
சிவகங்கை மாநகரை செய்வதென வேவசமாய்
புவிநோக்கிப் போனான் புறப்பட்டா னேமருது
வரக்கண்டு மாட்டியனும் வந்தெதிர்த்து நீயுமே
காமவளரிக் கோப்பிலைத்துக் காலனூர் போயிடென
விட்டு மனம்வாடி வெகுவாதைப் பட்டுமன்று
பட்டணம் போய்ச்சென்று படும்பாடு அத்தனையும்
வேளையில்லை சொல்ல வேந்தேநான் போய்த்திரும்பி
நாளைவந்து உன்பால் நவிலுவே னென்றுதுரை
மாட்டியனும் பூரிவந்து தளங்கள் தன்னுடனே
கோட்டைதனில் சென்று கொடிதான கோபமுடன்
உண்டுமே யுண்டபலன் உற்றதுரை மார்களைத்தான்
கண்டு மனவேதை கடுகியே இராவுறக்கம்
இல்லாமல் வீற்றங் கிருந்துவந்த காலையிலே

மல்லாடிச் சண்டை மருதுடனே செய்ததுவும்
துரைநீலன் போனதுவுஞ் சோல்ச ரடைந்ததுவும்
மருது படைமுடிவும் வகைவகையாத் தானெடுத்து
சொல்ல நவாபிடத்தில் துயரமுற்றுக் கேட்டவனும்
எல்லா மறிந்தேன்நான் இனிநடப்ப தென்னவென
......த்தான் மன்னன் மாட்டியனும் பூரியும்பின்
யோசித்து எங்களுக்கு உரையுமெனத் தானெழுந்து
வந்து துரையிருவர் மாளிகையில் தானிருந்து
சந்தோஷம் இன்றிச் சலிப்பும் விசனமதாய்
எந்தவிதம் மருதை எப்போது வெல்வதென்று
இந்தநினை வாக இருந்திடுவர் யோசனையால்
சீமைதனக் கெழுதி சேர்ந்ததுரை மார்களையே
தாமழைக்க வென்று தனித்திவனும் யுக்திபண்ணி
காகிதமுந் தானெழுதிக் கப்பலஞ்சல் மார்க்கமதாய்
வாகுடனே போகவிட்டார் வந்தசுய காகிதத்தை ;

## சென்னைக்குச் சீமைத் துரைமார் கூட்டமாக வந்தது.

சுந்தரஞ்சேர் சீமைத் துரைகவர் தான்பார்த்து
இந்தவித மறிய எகுவோம் வாருமென்று
[1]. சோங்குதனி லேறித் துரைகள்வெகு கூட்டமதாய்
பாஙகுடைய சென்னைப பட்டணம்வந்துத் தரைகாண
உற்றவர்கள் கோட்டைதனில் உள்புகுந்து மாளிகையில்
சுற்றியே வீற்றிருந்து துரைபூரி மாட்டியனை
மத்தியிலே வைத்து வரவழைத்த தென்னவகை
உற்றவிதந் தனையே உரையுமென்றார் எல்லவரும்
அவ்வார்த்தை கேட்டு அங்கவரை மாட்டியனும்
செவ்வே முகம்பார்த்துச் செப்புவான் கேளுமென
தெற்கே சிவகங்கை சேதுவுடன் பாஞ்சைநகர்
ஒக்கவே மூவர்வர உள்ளவரி பாக்கிமெத்த
செலுத்தமனது சற்றும் திரும்பாமல் வம்பிடரை
வலுத்தார் உரைத்த மன்னன் நவாபுதுரை
சொல்லுக்குக் கூடத் துணையாக நாமுமே
செல்லுவோ மந்தச் சிலுகு மறிவதல்லால்
சிறப்பறிவோம் யீந்திச் செழிப்பாம் அறிவமெனப்
புறப்பட்டோம் சேது பெரும்புவியி லுற்றதனைப்
பார்த்தோமதன் சிறப்பும் பகரவொண்ணுச் செல்வமதும்
நேர்த்தி நகர்வளமும் நிகழ்த்துதற்குக் கூடுமதோ
அப்படிக்கே அந்த அடுத்தசிவ கங்கையுந்தான்
இப்படிக்கே யீந்தி யெல்லாஞ் சிறக்குதுகாண்
ஈதிருக்கச் சேது இடமே லடைவுடனே
மோதநிலைப் பளவில் முத்திருளப் பேந்திரனும்

1. கப்பல்.

மந்திரிதான் வந்த வல்லபத்தைச் சொல்லவென்றால்
எந்தவாய் கொண்டு இயம்புவே னுங்களுக்கு
பார்த்தான் நவாபுதுரை பயமடைந்து அங்கவனை
ஆற்றிச் சமானமதாய் அவ்வூரில் செல்லாமல்
திரும்பி நவாபுடனே சிவகங்கைக் கேகுவென
வரும்போதி லுடையோர் வருகையதனைக் கேட்டறிந்து
இங்கே நவாபுவந்தான் எங்களுடன் அங்கவந்தான்
நங்கு படைக்கலத்தை தானையமாய்ப் போகவிட்டான்
போனோம் ஒருவூர் போர்க்காளை யார்கோவில்
ஆன நகர்பிடித்தோம் அடித்தோமே செண்டாவும்
மறைந்தான் மருதெனும்பேர் வாய்த்தயிரு பேரவர்கள்
அறிந்தானே அயிதர்தனை ஆனதிண்டுக் கல்லிலேபோய்,

[இடையில் ஒரு ஓலை காணப்படவில்லை]

## மருதேந்திரர் புத்திரர் பேரன் மருமக்கள்மாருடனே காட்டில் வேட்டையாடுதல்

சோத்து மயக்கமது தொலையாக் கவலையுடன்
ஆத்தி மடம்வழியாய் அலைந்துமனம் நொந்துபுண்ணும்
கண்டார் பெரும்பாதை கவலைதனைப் போக்கடித்து
விண்டா ரிதுவழியாய் விரசாயப் புவிநோக்கித்
தருகாமல் போகவெனச் சாத்து மொழிப்படியே
துரைமருது சேனை துயாமது தன்னுடனே
சிறுவயலுங் கண்டு சென்றார் கதிலிருந்தே
பெருங்களையைத் தீர்க்கப் பேரியே நேசமுடன்
மாங்கொண்டான் பொய்கை வந்துநீர் தானெடுத்துத்
தாங்கொண்டு யாவர்களும் தாகமதைத் தானகற்றி
அ (எ) ல்லாரு மொன்றாய் அமர்ந்து மருதிடம்போய்ச்
சொல்லுவா ரெங்கள் துரையே யொருவசனம்
நிகழ்த்துகின்றோ மிந்த நீர்போ லமுதமது
செகத்தி லகப்படுமோ தேவரீர் பாருமய்யா
உண்ணத் திகட்டுதில்லை ஒருவருக்கு மிப்புவிக்கு
மண்ணுலகில் கிட்டாது மாங்கொண்டான் தீர்த்தமிது
பாருமென்று ரிவ்வார் படையவரு மக்களுந்தான்
கூறு மொழியறிந்து கொற்றவனு மத்தருணம்
இவ்வூரில் மாளிகைதான் இயல்பாய் முடிப்பதற்கு
ஒவ்வு மெனமதித்து உரைத்தெழுந்தே யப்போது
வாருமென்று கூறி மன்னவனு மைத்துனமார்
சேர நடந்து சிவகங்கை தன்னில்வந்து
இருந்தார் மனமகிழ்ந்தார் இப்படியே நாள்தோறும்
திருந்த விருந்து தேசமதை ஆளுகையில்
சென்று சிறுவயலைச் செப்பனிட வேநினைவாய்

நன்று யரண்மனைகள் நடத்தியே பட்டணமாய்
என்று மிதுசிறப்பா யிருக்கவே வேணுமென
அன்று மனத்தி லடக்கமிட்டு வந்திறங்கிக்
கனக நெடுந்தெருவும் காவலர் மாளிகையும்
அநேகந் தெருவும் அலங்கார வீதிகளும்
தேரோடும் வீதி சிறப்புந் திருத்தேரும்
சீராக மும்முடி நாதர்திரு வுற்சவமும்
வீதிக்கு வீதி விளங்குமேல் மாடிகளும்
நால்திக்கு முடிமுரசு நாத மொலிவிளங்கு
கரிக ளணியணியாய்க் கட்டுகின்ற சாலைகளும்
பரிக ளணிவளரப் பண்ணியதோர் சாலைகளும் ;

## சிறுவயலைப் பட்டணமாக்கி அரண்மனை கட்டினது. சக்கந் திருவெங்கணப் பெரிய உடையாருக்குப் பட்டங்கட்டினது.

தென்வடக்கு மூன்று தெருவுந் திருக்குளமும்
நன்ன ..லிக்குட்டி நாயகியாள் சந்நிதியும்
கீழ்மேல் தெருமூன்றும் கிருஷ்ணனுடைச் சந்நிதியும்
வளமாய்த் திருக்குளமும் மாங்கொண்டான் பொய்கையதும்
பார்ப்பனர்கள் முதல் பணிக்கையிட்டு வேணவிதம்
காப்பாகப் பட்டணத்தைச் சரியா யமைக்கலுற்றார்
கொல்லங் குடியறியாக் குறிச்சிக்கு மேநவமாய்
வல்லவனு மிவ்வாறு வகுப்பித்தா ரம்மானை
மருது அதிலிருந்தும் மங்களமுஞ் சோபனமும்
திருநாளுந் தேருஞ் செழித்து வருமளவில்
மங்கையந்த ராணி மகராசி வேலுலகு
துங்க கனமருது துரைவேந்தைத் தானழைத்து
மிக்கபுகழ் மன்னு விளம்புகிறே னிப்போது
சக்கந்தி மாநகரந் தன்னில் குடிவளரும்
வெங்கணப் பெரியுடையார் வேந்தனுக்கு வாந்தகமாய்த்
தங்க முடிமகுடம் தரிக்கவென்று ளப்படியே
நாட்டவென்று ராம நாதபுர மீதிலுள்ள
மராட்டியற்குச் சேதி வரைந்தெழுதப் பார்த்தவரும்
கன்னல் மனுவேல் கலைக்கட்டா மராட்டியனும்
அந்நேரம் வந்து அமைந்தார் சிவநகரில்
சுற்றிலுள்ள மன்னர் துரிசாக வந்துபுக்கார்
வெற்றி தருமருது மெய்ம்மகிழ்ந்து அப்போதே
வெங்கண் பெரியுடையார் வேந்தனையே சாந்தமதாய்
அங்கே வரவழைத்து அன்றுதுரை மாட்டியன்முன்
வைத்தார் முடியெடுத்து மங்கையரு மேகொடுக்க
உத்தமனமா யவர்கள் உடன்வாங்கித் தான் பார்த்து
வாக்கினுர் மங்களமும் மாட்டியனு மன்னவரும்

தேத்தினார் நீதி செலுத்தியுல காண்டிருந்தார்
உலகாள வெங்கண் உடையார் முடிபொருத்த
நவமான வார்த்தையது நாராசங் காய்ச்சிவிட்ட
வளமாய்க் கவுரியிடம் வந்துவிழக் காதினிலே
விளமாய்க் கவுரிதுரை மேனாவில் கூனியுந்தான்
ராமனுக்குப் பட்டம் நடவாமல் செய்யவெனத்
தாமெழுந்த பாவனையாய்த் தானெழுந்தா ளம்மானே ;

விருததம்.

வந்ததோர் கவுரி தானும் மங்கைவே லுலக மாது
முந்தவே நின்று பேசி முடியெனக் கடவே......முணர்த்தி
அந்தவார்க் கதிரி தான அதுவெனக் கறியா தாக
இந்தநா முடையார்க் கீந்த விதமுனக் கடவே னென்றார். (26)

என்றபோ துலக மாதும் இருந்ததோர் மருதும் நோக்கி
நன்றுநீ மயங்க வேண்டாம் நல்முடி பெறுவாய்ப் பின்னால்
சென்றுநீ படமாத் தூரில் தேவனா யிருந்து வாழ்வீர்
இன்றுபோ மெனவே பின்னும் இயல்புட னுரைசெய் வாரே. (27)

## படமாத்தூர் கவுரி வல்லவத்தேவன் தனக்குப் பட்டங்கொடுக்க வில்லையென்று விகாதப்பட்டது.

மங்கையருங் கர்னல் மாட்டியனும் வைத்ததொரு
தங்க முடிக்குத் தாழ்வுசெய்யக் கூடுமதோ
மிஞ்சா மல்நீயும் விவேகமதை நெஞ்சில்வைத்து
அஞ்சாம லிப்போது ஆண்டால் படமாத்தூர்
கொஞ்சநாள் சென்று குலமாக வுந்தனுக்கு
வஞ்சமன்றிப் பட்ட மாரும லேதருவோம்
உனக்கே வரசிந்து உன்வாசல் மந்திரியாய்
நமக்கே யதிகாரம் நாடெல்லா முந்தன்கீழ்
வணங்கும் படியாக வைப்போம்நாந் தப்பாது
குணங்கின லிப்போது குடிகேடு வந்துவிடும்
இனியாமல் சும்மா எங்களுரை தட்டாமல்
பழையங் கறம்படமாத் தூர்போ யிருவென
என்றுலக மாதும் இருமருதுந் தாமுரைக்க
ஒன்றுங் கவுரி உரையாமல் தானிருக்க
கண்டு சமாலிக் கருத்திருத்தி நாமிவனை
அண்டி வதைக்கவென அளப்பிட்டே யப்போது
ஒய்யத்தே வன்பேரன் உயிருடனே தானிருந்தால்
மெய்யே தான்மனம் மேலாட வோட்டுவனே
பைய யிவன்நடந்து படமாத்தூர் சென்றபின்னே
அய்யமார் முற்ற ஆரொருவர் காணமல்
காட்டினிலே கூட்டிவந்து காவலனை யவ்விடத்தில

வேட்டைக ளாட விடுத்து வதைக்கவென்றே
மன்னன் சமாலி மனத்தில் மதித்ததுவை
அந்நாள் மருது அடைவுடனே தான்கேட்டு
கொல்லாமல் காளையார் கோவில் கவுரிதனைக்
கல்லலில் லாமல் கடுங்காவல் வையுமென
உத்தரவைக் கண்டு ஒதுங்கச் சமாலியுந்தான்
வித்தகனுங் கவுரி வேந்தனுக்குக் கால்விலங்கு
நேர்த்தியுடன் பூட்டி நினைவரிய வேணுமென்று
நூற்றுக்கால் மண்டபத்தில் நோகாமல் மன்னவனை;

## கவுரி வல்லவனுரைக் காளையார் கோவிலில் விலங்கு போட்டிக் கட்டி வைத்தது.

காவலிலே வைத்தார் கடுங்காவ லென்றுரைத்தார்
ஏவலாள் சுற்றி இருந்தார்கள் பத்திரமாய்
இப்படிக்கு வோராண் டிருந்தார்கள் காவலிலே
செப்பமுடன் ராணி திருவுளமுந் தான்மகிழ்ந்து
காவல் தலைவிலக்கிக் காவலனைக் கூட்டிவந்து
பாவம் நினையாதீர் படமாத்தூர் போயிரென்றுள்
அப்படியே கவுரி அரசன் படமாத்தூர்
மெப்பாகச் சென்று வீற்றிருந்தா ரிப்பாலே
பின்னுமோ ராண்டு பலமாகக் கழித்தபின்பு
மன்னன் சமாலி வதைக்கவெனத் தாநினைந்தான்
மைத்துனமார் சங்கிலி மன்னனுடன் முத்திருளன்
உற்றவனு ரைவருத்தி உங்களுடன் காலாளும்
மன்னன் பட்மாத்தூர் மறைவாகப் போயிருந்து
அன்னவனைப் பற்றி அமர்த்தியே வைத்திருந்தால்
என்னுடைய சேனை ஏழா யிரஞ்செனமும்
வின்னமது செய்ய வேட்டைக்கு வாறதுவாய்
வாரேன் பிறகே வகையாக நீங்களுந்தான்
போரதே யுண்டானுல் பிழையறவே சொல்லுமிது
ஆண்டவனு மருது அறியா திருப்பதின்றி
வேண்டி நமக்காய் விரசாகச் செல்லுமென
எப்படிக்கு மன்னர் ஈத்றியா தேநடத்த
ஒப்பு மவரறிந்தால் உயிருக்கு வைப்பதுவோ
வையமதுக் கொவ்வா வசனமதை நீருரைத்தீர்
அய்யோ அரசளிக்க ஆமோ புவிதனிலே
தெய்வந் துணைநமக்குச் செய்யாது பாருமென
கைகூப்பி வீழ்ந்து கலங்கிப் பணிந்திடவே
அப்பால் சமாலி அங்கவரைத் தான்பார்த்து
தப்பான கவுரி தலையிருப்ப தில்லையினி

ஆரென்ன சொன்னாலும் அறுப்பே னவன்தலையைப்
போரதில்லை யானால் போக்கிடுவே னுங்கள்
ஓடிப்போ வென்று உரைத்து வுருக்கினதால்
வாடி மனமிருவர் மாளாத் துயரமுடன்
போனா லவன்பழியாம் போகா திருந்தக்கால்
தானும் நமதுபணி தவறாது ஆமெனவே
ஆயிரம் வாலா அரிவிகட்டி வல்லையமும்
நாயிலொரு நூறும் நல்லவெடி யாயிரமும் ;

## கவுரி வல்லகாவல் விலகி வடமாத்தூரிலிருக்கும்போது சமர் விசயகாரர் ஆளனுப்பிக் கொல்ல நினைந்தது.

இரண்டா யிரஞ்சனமும் நாடியே கூடிவரக்
கண்டார் கவுரி கலக்கமிக வுண்டாகி
வண்டன் சமர மிவர்விடுத்த தாகுமெனக்
கொண்டான் மனத்தில் குறித்தவரை வாருமென்று
விண்டார் சகலருக்கும் விருந்து நடத்துகிறேன்
உண்டு பசியகற்றி உறங்கி விழித்தெழுந்து
இன்றுபோய் நாளை யகலாம் வாருமென
அன்று சமாலி அழைத்தா ரெனவுரைக்க
நாளைப் பயணம் நடப்போந் தவறாமல்
வேளை யிதுசமயம் விருந்துண்ண லாகுமெனச்
செய்தார்கள் போசனமும் செய்தவுட னங்கவர்க்கு
கைச்சாடை காட்டினார் காட்டினதைக் கண்டவரும்
அந்நேரங் கையி லடைவாய் வைரிதனை
மன்னன் கவுரி வகையுடனே தானெடுத்து
வேட்டைக் குருவி மிகப்பிடித்து நான்திரும்பி
வாட்டமின்றி வாரேன் மயங்கா திருமெனவே
எடுத்து வயிரிதனை யேகினா ரங்கவரைத்
தடுத்தா ரெவருமில்லை தப்பினா ரொப்புடனே
குடையை நிறுத்திக் குடைக்கீழே நிற்பதுபோல்
திடங்காட்டி மன்னன் செயங்காட்டி லேநுழைந்தார்
மன்னவனுங் காடுறைய வாம்பரியும் பின்னைவர
அந்நேர மேயதிலே அடைவுடனே தானேறி
வனத்தி லிவர்நடந்தார் மன்னவனைக் கொல்லவெனக்
கணத்தில் சமாலி தளஞ்சூழ யெக்களிப்பாய்
வந்தார் நவபத்து மகாமுழக்கந் தன்னுடனே
அந்தத் தொனிகேட்டு அவ்விடத்தி லுள்ளவர்கள்
தப்பவிட்டுக் கவுரி தன்னையே தேடுதல்போல்
ஒப்பனையாய்த் தேடி ஓடி வருமளவில்
அங்கே சமாலி அடுத்து நெருங்கிவந்து
எங்கே கவுரி இழுத்துவா போவெனவே

வந்தோம் வளர்ந்தோம் வருமுன்னே தான்கவுரி
சந்ததியங்கள் கண்டு தலைவிஞ் ஞுமெனவே
என்றிவர்கள் சொல்ல இருந்தானே யாமாகில்
இன்றே நமனுலகம் ஏத்துவேன் தப்பாது
நன்று யினிமேல் நடக்கும்வகை யொன்றுமில்லை
என்று சமாலி எழுந்தூரை நோக்கிவந்தார்
அன்று பயமடைந்து அசந்து கவுரிதுரை
சென்றுன் வைகைவழி தென்கரையைத் தான்கடந்து ;

## ஒள்குடி காட்டில் கவுரியைக் குடைகாத்துடையார் பிடிக்க விடும்படி மருது சொல்ல வீடு தப்புவித்தது.

சிந்தை மிகக்கலங்கித் தேகமது முள்ளமுந்தி
வந்தா ருளக்குடியில் மையிருளி லப்போது
திறமாகத் தென்காட்டில் செடியொதுக்கி வாருகட்டி
உரமாய் மருதுதுரை ஒளியிருக்க மைந்தனுடன்
அவ்வொளியில் வந்து அகப்பட்டார் மன்னவனும்
ஒவ்விக் குடைகாத் துடையார் பிடித்தவரை
வருத்தப் படுத்தி வதைக்க நினைக்கலுற்றுன்
நிறுத்திவைக்கும் படிக்கு நிருபன் மருதுதுரை
உரைத்தானே முன்னைவிட்டு ஓடியே வந்துபின்னே
உருத்தாய்க் குடைகாத் துடையாரைக் கையமர்த்தித்
தன்னெளிக்குக் கூட்டிவந்து தாட்டிகவான் தான்பார்த்து
என்னபுத்தி தம்பியரே இவ்விருளில் நீதனியே
வரலாமோ யிப்படிக்கு வகைமோச மாகுமென்று
தெரியாமல் போனதுவோ நீங்குவர லாச்சுதிப்போ
என்று அரவணைத்து இப்பால் மகன்முகத்தை
நன்றுகப் பார்த்து நவிலுவான் மன்னவனும் ;

### விருத்தம்.

முந்தவேசந் திரன் தானும் முயல்கன் தன்னைக் காத்தார்
வந்தாதி சேடன் தன்னை மாலிகை தரித்தா ரீசன்
அந்தநா ளிலங்கை மூதூர் அரசனை மாயன் காத்தார்
இந்தநாள் கவுரி தன்னை இயல்புடன் காப்போம் நாமே. (2[illegible]
செய்திடும் வினைக ளெல்லாம் செய்தவர்க் கெய்துந் தம்பி
நய்துடல் நடுங்கு மிந்த ராசைநாம் வதைத்தால் தோசம்
எய்துமே நமக்குப் பின்னுள் இவனைநரம் விலக்கஞ் செய்தால்
உய்தமே யெனவே பால னுடனிவர் பகர்ந்தா ரான.

### வேறு.

பகர்ந்தா ரதன்பிறகு பாலகனை விட்டகன்று
தகுந்த விதங்கவுரி தனக்குரைப்பார் மன்னவரும்
நானே விருந்ததனுல் நலமாக நீபிழைத்தாய்
நானறியா தாகில் நமனுலகம் போயிருப்பாய்

பொல்லான் சமாலி பொறுக்கா னறிந்தக்கால்
நில்லாதே தப்பி நீபோவா யென்றுவிட்டுப்
பள்ளி மடைநோக்கிப் பாங்காய் நடவுமென
உள்ளபடி மருது உரைத்து அடுத்திருந்த
வெள்ளையன் பிச்சன் வெடிக்கார ரையழைத்து
பிள்ளா யிவன்கவுரி பேதமது நேசமவன்
முள்ளுக் கிழியாமல் முடித்தவிதந் தாளாமல்
பள்ளி மடையில் பதிவாய் நிறுத்திவிட்டு
வாருமென்று ரப்படியே வருத்திக் கவுரிதனைச்
சேருமென்றுள்ளி மடைவாசப லவரைவிட்டு
மன்னனிடம் வந்து மறுசேதி தானுரைத்தார்
அந்நேர மேகவுரி அவ்வூரி லேயிருந்து
பையவே பள்ளி மடைபாங்கா யதிகாரம்
செய்யுஞ்சின்னச் சாமி தேவனுக்கு ஆள்விடவே
வந்தான் கவுரி வகையெல்லாங் கேட்டறிந்து
சிந்தைக் கலக்கமதை தெளிவாக வேயுரைத்து
ஆற்றி மனச்சலிப்பை அவ்வூர் மூலநடத்துங்
காத்தவ ராயனுக்குக் கருதிப் படிகொடுத்து
அமர்த்தி யவிடமதில் அஞ்சாறு நாளிறுத்தி
சமத்தான சின்னச்சாமி தானேதா னிப்பாலே
சித்தர் புகழ்தேவை சேதுநகர் ராசனெனும்
நற்றவஞ் சேர்முத்து ராமலிங்கச் சேதுபதி
வித்தகனுர் தனக்கு வேந்தன் கவுரிவகை
அதனையுமே கண்டு அடைவா யெழுதிவிட்டு
ஓலை தனைக்கொடுத்து ஒதுங்கிநின்று னப்பாலே
வாலைச்சின்ன சாமி வரவிட்ட வோலையென்றுர்
வாசிக்கக் கேட்டு மகராசன் சேதுபதி
மோச மருது முடித்தானே சிந்தைதனில்
தப்பித்து வந்தானே நம்பி கவுரியுமே
ஒப்பும் படிக்கு ஓலை யெழுதுமென்றுர்
இந்தச் செனமே இவ்வூரை நோக்கவேற
வந்தால் சுகமெனவே வரைந்துதந்த வோலைதனை
அரிக்காரச் சுப்பையனதான் அடைவுடனே தான்வாங்கிச்
சுருக்காய்த் திருச்சிவிகை தொல்புவியில் வந்துபுக்கு
மன்னன் கவுரி மகராசன் தன்னிடத்து
மொன்றுக நின்று மொழிந்தோலை தான்கொடுக்கப்
பார்த்தா ரதையவிழ்த்துப் பதிசேதுக் கேகெனவே
ஏத்தார் பரிமிசையே ஏத்தியே தான்நடந்து
ராமநாத புரத்தில் ராசனையே வந்துகண்டு
பூமெனக் கவுரிதங்கப் பூப்போட்டுத் தண்டனிட்டு
இங்கிருந்து சகலமுமே இடம்பவே சேதுபதி
தெரிந்து மருதிருவர் செப்புவா ரம்மானை

## இராமநாதபுரம் சேதுபதியிடத்தில் கவுரி வல்லவகாவல் போய்க் கண்டு தரிசித்துப் படைகூட்டி மருது சேனைக்காரனுடன் எதிர்த்துச் சண்டை செய்தது.

மாற்றான் மருதை வலுக்கூட்டிப் போயவனைத்
தோற்றோடச் செய்யத் துணிகுவார் தப்பாமல்
கூடாரம் பீரங்கி குறையாமல் ராணுவமும்
தேடாம லானைத் திரள்பரியு மல்லாமல்
குண்டுங் கருமருந்துங் கொடுக்கின்றோம் வேணமட்டும்
அண்டி விசைநகரம் அடைந்துநீ ஊடயமும்
காட்டாப்பு மோரிசா கனத்தபெரும் வாடிகளும்
திட்டமுடன் செய்து செலுத்துவீர் சண்டையென
நன்றாக விப்படிக்கு ராமலிங்கச் சேதுபதி
அன்றுரைத்து யெல்லா........த் தான்கொடுத்து
போவென்றார் மன்னன் போர்பொருத வேநினைவாய்
மேவும் படையுடனே விசுவனூர் தன்னில்வந்து
கூடாரந் தானடித்துக் கோட்டையது சுற்றிவிட்டு
ஊடைய முங் கட்டாப்பும் உருட்டிமுள்ளும் வாடிகளும்
பாசுபதம் முதலாய்ப் பத்திரமாய்ச் சுற்றிலெங்கும்
ஓசைத் தர்வீத்து ஒருமாசங் காத்திருந்தார்
இருந்தா ரொருமாசம் எதிர்ப்பா ரொருவரின்றித்
திருந்த மருதுவரச் செல்லவிட்டா ரோலைதனை
இருவர் புதல்வருடன் எல்லவருங் கூட்டமிட்டுச்
சிறுவர் புரியிருந்த திருமருது தான்பார்த்து
ஏதென்று ரோலை எடுத்துமுன்னே வைத்ததொரு
தூதன் கவுரி துரையோலை யென்றுரைத்தான்
உள்ள புதுவிவரம் ஓதுவீ ராமெனவே
விள்ளவே தான்குழந்தை வேலுப்பிள்ளை செய்தியதை
பாருங்கா ணெல்லவரும் பாதியாள வேணுமென்று
திட்டமுடன் ஆளனுப்பிச் சென்றழைத்து வாருமென
அட்டவணை முத்திருள அப்பனுடன் தப்பாமல்
சித்தர்புகழ் தொண்டு சேர்வைக்கர ணிக்கனெனும்
முத்துக் கருப்பபிள்ளை முன்னேவரப் பின்னேவரும்
ராசப்பப் பிள்ளை நலமாயிம் மூவரையும்
வாசம் புகழ்மருது மன்னவனுந் தான்பார்த்து
சுட்டிக் கவுரி துரைமகனு மிப்போது
நட்டணை யாக நமக்கெழுதி விட்டதொரு
ஓலைதனைப் பாரும் உடன்நடத்துங் காரியத்தைச்
சீலமுட னெனக்குச் செப்புமென்று கேட்க
முத்திருளப் பிள்ளை முத்துக் கருப்பப்பிள்ளை
நத்தி யவருடனே ராசப்பப் பிள்ளையுமாய்
மூவருமாய்க் கூடி முடித்த ரகசியத்தை

காவலவன் முன்பாய்க் கருதுவார் கேளுமய்யா
கவுரி சமர்புரிந்தால் கேவலமாய்ப் போய்விடுவான்
அவனோ சிறுகுழந்தை அறியாத புத்தியினால்
பழுது வருமென்று பாராம லிப்படிக்கு
எழுதினான் வாசகத்தை ஈதாலே நாமவனைப்
பொரவே நினைப்பதுவும் போதாத காரியந்தான்
அரசை யளிப்பதுவும் ஆகாத காரியமாம்
பாராமல் நாமும் பகைத்தவனை வெல்லுவது
ஊரைவாய் மூட ஒண்ணா தொருவராலும்
வசையா மிதுவார்த்தை வையமது வுள்ளளவும்
விசையாய் நடக்குமய்யா மேலுமே நீரறிய
காரியங்க ளுண்டோ கருத்திலெண்ணிப் பாருமெனக்
கூறு மொழியறிந்து கொற்றவனுங் கோபமதை
ஆத்தினார் நேர்த்தியிது ஆகுமென்ற வார்த்தைதனை
மாற்றினான் சமாலிதுரை மாலியவான் சானகியை
ராகவனார் பக்கம் நடத்திவிடு மென்றளவில்
வாகல்ல வேயென்று மகோதரனு மேநடுத்து
ராவணர்க்குச் சொன்ன நடத்தையதற் கொப்பனையாய்
காவலனு மருதைக் கலைத்துவைத்துச் சிந்தைதனைக்
கேவலமாய்ச் சொல்லிக் கவுரிதனைக் கொல்லாமல்
ஆவலுடன் விடுதல் ஆகாது வென்றுரைத்துக்
கரைத்தான் மருதுதனைக் கருத்துமிவர் வேறாகி
உரைத்தார் கவுரிதுரை உடன்போர் பொரவெனவே
பனிரண்டு பாளையக் காரர் படையுடனே
இனிவரவே யென்ன எழுதும் படிநடந்து
வந்தார் சகலருந்தான் வரவே யவரவரை
அந்திடத்தில் கண்டு அருளுவா னுற்றமொழி
கவுரி விசுவனார் கிட்டியே வந்திருந்து
சவுரியமாய் நம்மைச் சண்டைக் கழைப்பதனால்
ஆனந்த வாண்டு ஆனி மிதுனமதில்
தானந்த மாதம் தமிழாருந் தேதியிலே
முகூர்த்தமது வைத்தோம் முடுகியே நாமவனைச்
சகியாமல் வெல்லத் தரித்தோ மனந்தனிலே.

## ஆனந்தூர் சண்டை; ஆனந்த வருஷம் ஆனி மாதம் ஆறுந்தேதி முதல் சண்டை

வருஷமு மாசம் வாகுடைய ஊர்பேரும்
ஒருராசி யாக உள்ளநக ரானதொரு
ஆனந்தூர் தன்னில் அனைவோரும் போயிறங்கித்
தாண்டவா யுடையமுந் தானையமும் போடுமென
செயம்பெற்ற வாறதுக்குத் தேவிபலிக் கீட்டியெனும்
சயபத்திர காளிதனைத் தொழுது நடவுமென்றார்

நன்றப் படியே நடக்கின்றே மென்றுசொல்லி
அன்றவர்கள் சொல்ல அதன்பிறகு பேரணியாய்த்
தாமுந் தளமுந் தம்பியருந் தெம்புடனே
ஆனந்தூர் வந்து அமர்ந்தார் மறுநாளில்
வந்தோர் வராதவரை மன்னவனுங் கண்ணெதிரே
சந்தோஷ மாகத் தளத்தைச் சரிபார்த்தார்
வானக் கருப்புடையார் மன்னன்படை யைந்நூறும்
சேனைகளும் நூறும் சூழ்ந்தா ரவரருகே
வெள்ளிக் காளாஞ்சி வேந்தன்படை யாயிரமும்
நுள்ளுகுட்டி மன்னன் சொந்தசன மாயிரமும்
குடைக்காரக் குப்பணன் குறித்ததள மைந்நூறும்
வடக்கூர் வெரிமருந்து வகைசனமு மப்படியே
தாட்சண்ய மில்லான் சமத்தன் தைரியவான்
நாச்சியப்பன் சேர்வை நானூறு தளமதுவும்
வாகா யவர்களுடன் மன்னன் சிறுவைநகர்
நாகலிங்கம் சேர்வை நானூறு சனமுடனே
அறியாக் குறிச்சி அழகுதள மைந்நூறும்
பெரியதம்பி சேர்வை பலத்தசனம் நூறுரெண்டும்
பனைக்குளம் வெள்ளியூர் பண்பான மாலழகும்
தனக்குடைய சேனைத் தளங்களோ ராயிரமும்
பொன்னெல்லிக் கோட்டைப் புரவலனு முடையார்
தன்னுடைய சொந்தச் சனங்க ளிருநூறும்
பனைக்கரை வேந்தன் படைகளோ ராயிரமும்
வினைக்கு மனமலையான் வேகமுட னங்கவர்பின்
கணக்கதி காரக் கறுப்பண்ணன் சேனையதும்
இணக்க முடன்வரவே ஈதவர்பின் வாதுடைய
குடைக்காது தம்பி கொற்றவனுஞ் சித்திரமாய்
அடக்கம தப்படைக்கு ஆனபுலி மன்னவனும்
உடையண ராசன் ஓராயி ரந்தளமும்
படைக்கல வான்கருத்த பாண்டியன் சேனை
அடைக்கலங் காத்தான் அவன்சனங்க ளாயிரமும்
துடுக்கா யவருடனே துட்டன்வெகு திட்டேரன்
கன்னிமன சேருவைக் காரனவன் தன்சனமும்
மன்ன ரிருநூறும் வந்தசமர்க் கஞ்சாதான்
தீரன் சமாலி சேனைமூ வாயிரமும்
வீரன் சிவக்கியான வேந்தன்தள மைநூறும்
துரைச்சாமி வேந்தன் சொந்தச்சன மைந்நூறுப்
திறமுடனே வந்து சேர்ந்தா ரவனுடனே
வித்துவ சனற்குதவும் வேந்தன் சமாலியனும்
முத்துச் சாமிவேந்தன் முன்னூறு சனமதுவும்
சசிவரண பூபன் தளங்க ளிருநூறும்
திசைபுகழுஞ் சிங்கம் திருவாராப் பூர்வேந்தன்

கரிசைப்பட்டு நாயக்கன் காவலவன் தன்சனமும்
அரசன் சிறுவயலான் அஞ்சுநூறு காலாளும்
சொட்டவாளைத் தொத்தன் சொந்தமுள்ளா ரைஞ்நூறும்
நெடுவயல் வேந்தன் நிமலன்தள மைஞ்நூறும்
அடைவா யிவரருகே அநேக விருதுடனே
தெக்காணப் பட்டித்துரையும் துலங்குசன முந்நூறும்
தக்கமிட்டு வந்து சார்ந்தா ரவரருகே
தவண்டைமல் லாரியுடன் தாரைசின்னந் தான்முழங்க
கவண்டங்கோட் டைத்துரையுங் காலாளோ ராயிரமும்
விசயா புரம்நகரான் வெள்ளிகட்டிப் போருடைப்பு
திசைக்காவ லானதுரை தென்னலி நாட்டில்வளர்
ராமசந்த்ரன் சேனையது நானூறு காலாளும்
மாமன் மயிலாண்டி மன்னன் தளம்நூறும்
மருங்கூ ருடையனும் வந்தசனம் நூறதுவும்
அருங்குளத்து வேந்தன் அன்பனுபேர் காலாளும்
கருத்தப்பத்தி யூர்ச்சாமி காலாட்க ளிருநூறும்
பருத்தியூர் மாயாண்டி படைமன்னர் முந்நூறும்
கயைநகரி யில்வாழ் காத்தமுத்து முத்தனும்
வலியச் சருவுதுரை மன்னர்சன முந்நூறும்
ஆளி லழகன் ஆவரங் குடியில்வளர்
காளாஞ்சிக் கார கருப்பண்ண சேருவையும்
காலா ளிருநூறும் காவலவன் தன்னுடனே
மேலான காத்தியனும் வேந்தன் தளம்நூறும்
புக்குழி வேலு புரவலன்தன் சேனையது
கைக்கு ளடங்காத காவலாளோ ராயிரமும்
இதமா யிவருடனே இயல்பாய்ச் சபதமிட்டு
அதமாய்க் கவுரிதனை ஆக்குவேன் பாரெனவே
ஆயாச மின்றி அமர்பொரவே யெண்ணமுடன்
ஓயாச் சமரதிபன் ஊர்க்குடித் தேவனவன்
காலா ளிருநூறுங் காவலவன் பூவனுடன்
கோலா கலனுன குமரன்தளம் நானூறும்
சங்கநதி வெங்க னுடையார் சனம்நூறும்
புக்குளத்து வேந்தன் பொல்லாத ராணுவமும்
மறையூர் முத்து வடுகுதள மைந்நூறும்
முறையூர் வேந்தன் முன்னூறு சேனமதுவும்
வாளில் வலியோன் வஞ்சகத்தில் மிச்சமுள்ள
காளாப்பூர் மன்னன் காலாட்கள் முந்நூறும்
வேழமெனச் சினந்து வெம்போர் புரிந்துவரும்
சோழபுரம் வேந்தன் துரைதன் படைநூறும்
அறவே மனம்வெறுத்து அமர்புரிய வல்லவனும்
குறியான சேனூர் கொங்கதிபன் தன்சனமும்
கல்லங் குடிநம்பி காவலவன் தன்னுடனே

கொல்லங் குடிநல்ல குமாருபடை யாளருடன்
பூங்குடி நல்லதம்பி பூபனவன் தன்சனமும்
மாங்குடி வெள்ளையனும் மகாகோபந் தன்னுடனே
உருவாட்டி நாடும் உயர்மங்கல நாடும்
பெருமை மிகத்தவருப் பெரும்பாலைய நாடும்
ராச வளநாடும் நல்லசிறு பூங்குடியும்
மாசில்லாக் கள்ளர் மல்லர்கோட்டை நாட்டவரும்
எரியூர் நாடும் எண்ணவொண்ணு மன்னவரும்
முத்துநல்ல நாட்டவரும் முனைவீர முள்ளதொரு
சித்திரம தான திருப்பத்தூர் நாட்டவரும்
அண்டர் புகழ்தொண்டி ஆனவரும் பூரவரும்
சிறுகுடி நாட்டவரு தென்மாறை நாட்டவரும்
நிறைந்து பெருங்கடலாய் நின்றவரைக் கண்டறிந்து
சிறுமருது பாண்டியன்தன் சேனையிரண் டாயிரமும்
பெரிய மருதுதுரை பேரணிரெண் டாயிரமும்
ஆக மருதுதுரை ஆள்விட்டுப் பார்ப்பளவில்
ஏகப் பெரும்படைகள் இருபத்தே மாயிரமும்
ஆனை யர்க்கடகம் அசுவமது முந்நூறும்
சேனை வெகுசிறப்பும் திரளான வொட்டகையும்
பீரங்கி யாரும் பெரியசர கோவியது
சீருடனே யைந்நூறும் சிறுரேக்கி லறுநூறும்
கண்டு களிகூர்ந்து கனபிரிய முண்டாகி
வண்டன் கவுரியுடன் வன்போர் புரியுமென்றார்;

### விருத்தம்

இப்படி மருது சொல்ல இருந்ததோர் படைகள் யாவும்
ஒப்பிலே பொருவோ மென்ன உரைத்துமே யெதிர்த்து மேலாய்
தப்புடன் மேள தாளம் தவில்முர சொலிக ளோங்க
மைப்புடன் விருது கூடி வேகமா யெழுந்தா ரன்றே. (30)

இங்கிவ ரெழுந்தா ரிவ்வார் இயல்புடன் கவுரி வேந்தன்
அங்கவர் படையைக் கூவி அணியது வகுத்துப் பார்க்கில்
எங்கிட்டங் கொள்ளா தாக எழுபத்தை யாயிரம் பேர்காண
தங்கியே படையை நோக்கிச் சடுதியில் பொருவீரென்றார். (31)

### வேறு

என்றவுரை கேட்டு இயல்கவுரி பாளையமும்
சென்றார் மருதுதுரை சேனைதனை வெல்லவென
வசமாய் மருதுபடை மன்னவர்க ளப்போது
விசுவனூர்ப் பாளையத்தை வெல்லவே தான்நடந்தார்
இப்படிக்கு அந்த இருவருடை தம்படையும்
செப்பமுட னெழுந்து திரண்டுவரும் வேளையிலே
சட்டமுடன் கவுரி தளகர்த்த னானதொரு
கட்டமுத்துக் குமரர் கடிதாக முந்திவர

அங்கே மருதுவகை அதப்படைக்கு வேந்தனெனும்
சங்கிலி பூபன் தானுமே முந்திவந்தான்
தேட்டமுட னிருவர் சேனைமன்ன ரிப்படியே
கோட்டைக் கரையாற்றில் குதித்தார் குபீரெனவே
தெளிவா யிருவகையுந் திரண்டேதா னேர்முகமாய்ப்
பொருதா ருதயமுதல் பொழுதடையும் நேரம்வரை
இருவர் படைபொருது இப்பால் சமர்விலகித்
தாங்கினா சேனை சரிபார்க்கும் போதினிலே
கவுரிசன மாயிரமும் கீழே படிந்ததுபோய்
சவுரியவான் மருது தன்சனத்தி லைந்நூறும்
முடிந்தார் கதிரவன்பின் முன்னாக வந்துதித்து
விடிந்தார் சமர்புரிந்தார் வேடிக்கைச் சண்டையென
அண்டி யிடுஞ்சண்டை அதிலிங்கு மங்குமதாய்
ரெண்டா யிரம்பேர் நிமிர்ந்து மடிந்ததுவே
பேர்ந்தா ரவரவர்கள் பேரணிகள் தம்முடனே
சேர்ந்தார் விடுதிதனில் சென்றிருந்து சூரியனார்
மறைந்தாரே அத்தகிரி மறைந்துமறு நாள்தனிலே
சிறந்து வுதயகிரி சிறப்பாக வந்தளவில்
செகவீர னுமருது தென்னவனும் நன்னயமாய்
சகலரையும் பார்த்துச் சமர்பொரவே போவீரென
நடந்தா ரமர்புரிந்தார் ராசன் கவுரிபடை
படர்ந்தார் கடல்போல பாசையிட்டு ரோசமுடன்
இருவருமே கைகலந்து எதிர்த்தவரைக் குத்திவெட்டி
பொருது..........மிகுந்து பொழுதடையும் நேரம்வரை
ஒன்றோடு வொன்று உரமாக வேபொருது
சென்றார் விடுதிதனில் தென்கரையும் வடகரையும்
இதமா யிருபடையும் இப்படியே தப்பாமல்
பதினேழு நாள்வரையும் படைபொருதா ரப்பாலே
வல்லோன் மருதுதுரை வாரமீ ரொன்பதிலே
எல்லவரு மொன்றா யிங்கொருவ ரில்லாமல்
சென்று வொருமுகமாய்ச் சேர்ந்து வளைந்துசுற்றி
நின்று பொருதுமென நிகழ்த்தினா ரப்படியே
மேவினா ராட்சதர்மேல் மேன்மையில் வானரங்கள்
தாவிய வாறதுவாய்ச் சமர்புரிந்தா ரங்கவரை
வேலலகு கத்தி விடுசூலம் சக்கரம்பின்
வாலா வளரி வான்மருந்து குண்டால்
வென்று ரதுசமயம் மேலனுவா யாவலுடன்
சென்றனே கோவனூர் தீரன் வடுகுடனே
குடைக்காது தம்பி கொடிய சமாலியவன்
திடமாய்ச் சிவசாமி சிறந்த கருத்துடையான்
கலங்கா மனம்வாணக் கருப்புடையா னானவனும்
துலங்குஞ் சுவர்ண துரைவேல் முருகுடனே

சங்கிலிப் பூவன் தன்னுடனே கன்னியனும்
கண்கள் பொறிபறக்கக் கருத்த மருதவனும்
கரிசைப் பதியான கனத்த நெடுவயலாம்
வரிசைக் கனகுதிரை வாராப்பூர் மன்னவனும்
நன்றாய்ப் படைபொருதும் ராக்கனக வாடியுடன்
ஒன்றாகக் கூடி ஒய்யன்கா லாடியுமே
மருதன் காலாடிமன மஞ்சாத நெஞ்சனவன்
அருளன் காலாடி அடங்கா யிருளனுடன்
மகரக் கொடிகளுடன் மகாவிருது வாத்தியமும்
சிகரக் குடையுடனே செங்காவி டால்நடக்க
வாறு வெடிநெருங்கி வரிசையாய் முன்வரவே
வீறாய்க் கயத்து வெடிகள்தாம் பின்வரவே
பீரங்கி ரேக்கிலா பிறகே தொடர்ந்துவரப்
பாரி லடங்காப் பரிகளவை சுற்றிவர
வந்து கவுரிதமை வளைந்தார் படையுடனே
இந்த விதமறிந்து இவரு மவர்கள்தமை
சுற்றிக் கவிந்தார் தொடுத்திருவ ராயுதத்தால்
குத்தும்வெட்டு மாகக் கோரியதோர் சண்டையதில்
இறந்தார் வெகுபேர்கள் இருவருடைச் சேனையிலும்
தெரிந்தார் குடைகாது தீரனுமே வீரமுடன்
மிஞ்சித் தனதுபடை வேந்தன் தனைப்பார்த்து
அஞ்சாம லின்றோ டவன்படையை வெல்லாட்டால்
செத்தவர்கள் காணீங்கள் திறமும் வலுக்குறைந்து
சுற்றிலுள்ளோ ரேசத் தொலையாப் பெரும்வசையைப்
பெற்றவர்காண் சற்றும் பேதகங்க ளில்லாமல்
இத்தலத்தி லுங்களுக்கு ஈந்ததொரு சீவிதங்கள்
எல்லாமும் வீணா யிழந்திடுவீர் தப்பாது
வில்லையமு மாயுதமும் வேண்டா மெறிந்துவிட்டுப்
பெண்ணாணே மென்று பேருரைத்து விப்படியே
மண்ணுலகை நோக்கி வாகாய் நடவுமென
ஏசினார் ரோசமற எல்லாருந் தான்கேட்டு
ரோசமுண்டு வெங்களுக்கு நொடிக்கு ளறியுமெனப்
பாய்ந்தா ரமர்புரிந்தார் பாய்ந்து வெட்டிக் குத்துகையில்
சாய்ந்தார் கவுரியுடைக் களத்திலே யாயிரம்பேர்
மண்ணோடு மண்ணாய் மடிந்தார் கவுரியதைக்
கண்ணாலே பார்த்தார் கலங்கினா ரப்பொழுதே
மன்னன் மருது மகாசேனை ராணுவத்தில்
அந்நேர மாயிரம்பேர் அதமாய் மடிந்தார்கள்
மாநகரம் லங்கை வலுவரக்கர் தங்களுடன்
கானகக் கவிகளவை கைகலந்த பாவனையாய்க்
கவுரி தளத்துடனே கிட்டியே பொட்டெனவே
சவுரியவா னும்மருது தளம்போய் மனம்வெறுத்து

**பதினெட்டா நாள் விசுவானூர்ச் சண்டையில் கவுரிதுரை படை முறிந்து புறமுதுகிட்டு ஓட மருது இவ்வாறு பீரங்கி பிடித்தது.**

கத்திக்குண்டு வேல்வாலா கையீட்டி வல்லையத்தால்
சத்தப்பீ ரங்கியுடன் சஞ்சாலி வாறுவெடி
சரகோபி ரேக்கிலாத் தன்னுலுஞ் சுட்டுவெட்டி
உரமா யெரிவாணம் உண்டுவிட்டுப் பாடுவிழ
பார்த்தார் கவுரிபடை பதினு யிரம்பேர்கள்
ஆற்றில் மடிந்து அழிந்தா ரதைமுழுதும்
கவனமுடன் கவுரி காலாள்கள் தாமறிந்து
இவனோடு நாம்பொருதல் ஏலாது யினியெனவே
பேசியிவ் வாறுய்ப் பேதலித்துக் காதடைத்துப்
பாசுபதம் விட்டுப் பரதவித்துக் கூச்சலிட்டுக்
கலந்தார் கவுரியதைக் கண்ணுலே தான்பார்த்து
உலைந்தார் மளமளென்று ஓடினர் தென்கரையில்
இங்கிவர்க ளிப்படிக்கு எடுபட்டு வோடுகையில்
அங்கு மருதுபடை அடிமேல் தொடர்ந்துவந்து
பிடித்தார்கள் பாசுபதம் பின்பற்றித் தான்துணிந்து
அடித்தார் கயிற்றுவெடி யானூரத்துக் குண்டுவிட்டு
மடித்தார் வெகுசனத்தை வாடிமனம் வேருகித்
துடித்தார் கவுரிதுரை துஞ்சினவர்க் கொப்பாக
ஏறும் பரிவிட்டு இறங்காம லுள்ளவரை
வாருமென்று கூவி வந்தான் விசைநகரில்
சேர்ந்து வொருபொழுது தியக்கமுடன் தானிருந்து
எழுந்தா னிவிடமதில் இருக்கவென்று பேசியவர்
சேதுமகா ராசன் திருமுகத்தி லெப்படிக்கு
ஏதுவாய் நாம்விழிப்போம் என்றுமனங் கூசியவர்
சேதுவை நோக்கிச் சென்றுர் கவுரியுமே
வாதுபுரி மருது வந்தார் சிறுவயலூர்
தேசம் புகழரசன் சேதுபதி முன்மகிழும்
பாசுபதம் மானேசி பாளையத்தை வென்றதுவும்
வெண்கலப் பீரங்கி வேடிக்கைக் கோலமதில்
தங்கும் வெகுவாகத் தான்புனித முள்ளதொரு
வாகுடைய பாசுபதம் வாங்கியே மன்னவர்கள்
ஏகிச் சிறுவயலில் இருந்தார்க ளம்மானை
அங்கவர்க ளிப்படிக்கு அமர்ந்தார்கா ணம்மானை
இங்கே கவுரி எடுபட்டுச் சேனையுடன்
நாடினர் ராம நாதபுரந் தன்னில்வந்து
வாடி மனமும் மன்னவன்முன் செல்லாமல்

## கவர்ன ரறிந்து லண்டன் துரையை அனுப்பி இவரையுஞ் சமாதானஞ் செய்தது.

அச்சத் துடனே அகமோர மாய்நடந்து
இலட்சுமீ புரத்தில் நேசமுடன் போயிருந்தார்
இருந்தா ரிவருடைய இயல்புதனைச் சேதுபதி
அறிந்தே கவுரிமன மாயாசந் தீருமட்டும்
காட்டாங் குடிநகரில் கருத்தா யிருக்கவெனத்
தேட்டமுட னுரைத்துச் செல்லவைத்தா ரம்மானே

### விருத்தம்

கொற்றவன் கவுரி காட்டாங் குடிதனி லிருந்தா ரப்பால
சித்தமு மருது தேறிச் சிறுவயல் தன்னில் நின்றார்
உற்றிவர் சமர்செய் வீரம் உண்மையைக் கவுணர் காங்க
மத்துள வகையுங் கண்டு மாட்டியன் யெழுத லானான். (32)

வந்ததைக் கவுணர் பார்த்து மத்துளோர்க் கிதுவு மோதி
மைந்தனென் மருது மீதில் மருவல ரெதிர்க்கப் போமோ
விந்தையீ திருவர் பூசல் விலக்கிநீ சமானஞ் செய்து
தொந்தஞ்செய் யெனவே லண்டன் துரைதனை யனுப்ப லுற்றார். (33)

### வேறு

வந்தாரே லண்டன்துரை மனமகிழ்ச்சி தன்னுடனே
சுந்தரஞ்சேர் பூமி தொண்டிதனில் வந்திறங்கிச்
சிறந்தமுத்து ராமலிங்க சேதுபதி ராசனையும்
வருந்தி மருதிருவர் மன்னரையுந் தாம்வரவே
வரைந்தார்கா ணுத்தரவும் மாறும லப்பொழுதே
வரைந்தனுப்பக் கண்டு வெள்ளைமரு தேந்திரரும்
வந்தா ரிருநூறு வல்லயங்கள் தம்முடனே
சந்தோஷ மாகத் தான்தொண்டி மாநகரில்
சேதுவழிப் பாதை சிறந்தமணி முத்துநதி
சீதான தென்கரையில் தெங்குபலா மாமரமும்
முந்திரித் தோப்பில் முடிவேந்தன் தம்பியுடன்
அந்தநாள் தங்கி மறுநாளதி லெழுந் திருந்து
காலையில் மால்பதத்தைக் கருத்தில் மிகத்துதித்து
வேலுமணி யணியாய் விட்டுமுன்னே திட்டமதாய்
தங்கப் பணிதியிட்ட தண்டிகைமேல் கொண்டிருவர்
சிங்கக் கொடிதுலங்கச் சிங்கார மாகவேதான்
வந்துகண்டார் லண்டன் துரையு மனமகிழ்ந்து
சந்தோஷ மாயெழுந்து தான்வந் தெதிராகச்
செப்பமுட னின்று திருமருது மன்னருக்கு
தொப்பி கழற்றித் துரையுஞ் சலாங்கொடுத்து
மண்டலத்தை யாளும் மருது அதுதெரிந்து
தண்டிகையை விட்டிறங்கித் தானுஞ் சலாங்கொடுத்தான்

## இலண்டன் துரையை மருதேந்திரர் பேட்டி செய்தது.

வணங்குந் துரைமருது மன்ன ரிருவருக்கும்
குணங்காமல் லண்டன் துரையுங்கை தான்கொடுத்துக்
கூடாரத் துள்ளழைத்துக் குரிச்சிநாற் காலியிட்டார்
வாடா மதிமுகத்தன் மருதிருவர் வந்ததிலே
வீற்றிருந்தார் டப்பையெழு பத்திரண்டு வேந்தர்களும்
காத்திருந்தார் சுற்றிக் கலங்காத மன்னரிவர்
பேட்டிசெய்த லண்டன் துரையும் பெருமையுடன்
கேட்டார் சமர்புரிந்த கம்பீரந் தன்னையெல்லாம்
வாட்டமென்ன சேது மகராச னுங்களுக்கும்
போட்டியினி வேண்டாம் பிழைகளிருந்தாலும்
நமக்காக வேபொறுத்து நாடாள்வீர் தப்பாமல்
சுமக்கா தரவின்பழியைத் தேசம் மலைத்துவிடும்
என்றுதான் மேசர் லண்டன் துரையுரைக்க
நன்றுதா னென்று நலமா யுரைத்திருவர்
மேல்மானம் பெற்று வெகுவாய்ப் பிரபலமாய்ப்
பேர்நாமம் பெற்ற பெரியமரு தேந்திரனும்
தம்பியுடன் தானும் தயவாக வேயெழுந்து
அம்புவியாள் லண்டன் துரையை யனுப்பிவித்து
வந்திருவர் சேனை மன்னருடன் மாநதோப்பில்
சந்தோஷ மாகத் தானிருந்தார் கேளுமினி
சேதுபதி லண்டன் திருப்பிவிட்ட வுத்தரவை
சேதியெல்லாங் கண்டு திரும்பமா றுத்தரவு
காகிதங்க ளின்றிக் காலா ளிடமாக
வாயிதமாய்ச் சேதி வசனித்தா ரீதருவாம்
சேதுபதி யாகச் சிறக்கவே நாமிருக்க
வாதுபுரி மன்னன் மாற்றுன் மருதுவளர்
தந்நகரில் வந்து தரிபட்டு நீயிருந்து
என்னவித மாக என்னைவரச் சொல்லிவிட்டீர்
அந்நகரை விட்டு அடைவாக நீயெழுந்து
இந்நகரில் வந்தா லியல்பாகக் கண்டுகொள்வோம்
என்றெழுதிக் காலா ளிடங்கொடுத்துப் போவெனவே
அன்றுவர வாசித் தறிந்தார்துரை லண்டனுந்தான்
ஆயாச மானன் அடம்வைத்தான் சேதுவின்மேல்
நியாயா திபனான லண்டன் துரையவரும்
சேதுபதி மீதில் தீராத கோபமதாய்
வாதுசெய்யச் சேது மதித்தா னெனவே தான்,

# இராமநாதபுரம் முத்துராமலிங்க சேதுபதியைத் திருச்சிராப்பள்ளியில் கொண்டுபோய் வைத்தது

கமுட்டிக்குப் பேதகமாய்க் கண்டெழுதி விட்டதனால்
நிமுட்டு விசும்புசெய்து நேரமவர் மேல்சுமத்திக்
கைப்பிடியாய்ச் சேது காவலனைத், தான்பிடித்துச்
செப்ப முடனவரைத் திறமாகக் காவலிட்டு
அறுப்பு விரித்திசைக்கு அங்கவரைப் பார்க்கவென
கமுட்டியி னுத்தரவு கர்ன [லு] (னு) க்குத் தான்வரவே
அமுட்டியே கர்னல் அறிவித்தே ராசனுக்குப்
பட்டாள முந்துருப்பும் பாளையத்தைத் தானனுப்பித்
திட்டமுடன் வளைந்து சேதுபதி ராசனைத்தான்
பிடித்தா ரவர்களையும் பெருங்காவல் சுற்றியிட்டு
எடுத்தார் சிவிகைதனில் எத்தியே ஆத்திரமாய்த்
திரிச்சிராப் பள்ளியிலே சென்றவரைப் பத்திரமாய்ச்
சிறையி லடைத்துவந்தான் திரு மருது வேந்தரிதை
அறிந்தார் பகைமோசம் ஆகுமென்று யோசனையில்
தெரிந்தே யிருவரிங்கே சிக்குவது வெட்கமென்றே
அங்கிருவர் பேசி அண்ணனுமே தம்பிதனை
இங்கே வுறவாக இவ்விடத்தில் நீயிருந்தால்
அருகே வலுக்கூட்டி ஆதரவாய் நானிருப்பேன்
சிறுமையினு லண்டன் தப்புவனோ தம்பியரே
என்றுரைத்து அண்ணன் இருத்தியே தம்பிதனை
நன்று யவரெழுந்து லண்டனிடம் வந்துநின்று
மங்கலத்துக் காட்டில் வந்ததுவாம் வேங்கையென
எங்களுக்குச் சேதி இப்போது வந்ததனால்
பாங்குடனே சென்று பருத்ததொரு காவனத்தில்
வேங்கையைக் குத்தி விடிய வருவனென்று
சாட்டிக் களித்துத் தான்நடந்து மங்கலத்தில்
வாட்டமில்லா மன்னன் மங்கலத்தில் வந்திருந்தான்
மங்கலத்தில் வந்த வரிப்புலிமான் பன்றிமுயல்
சங்கையுடன் பிடித்துத் தப்பாம லங்கவற்றை
உடனுக் குடனேயே ஒண்றொடிக் காரரிடம்
அடைவாக லண்டனுக்கு அனுப்பிவைத்தா ரம்மானை.
இப்படிக்கு மன்னன் இயல்பா யனுப்பிவைக்கச்
செப்பமுடன் துரையும் சித்தமது தான்மகிழ்ந்து
மெத்த வெகுவரிசை வேணதெல்லாந் தான்கொடுத்து
உற்ற சிறுமருதை ஊருக் கனுப்பிவைத்தார்
மருதிரையோ னண்ணனுடன் மாசனங்கள் தம்முடனே
சிறுவயலில் வந்து சேர்ந்திருந்தார் வர்ந்தகமாய்த்
திருச்சிராப் பள்ளியிலே சேதுக்கிறை தானிருக்கத்
திருவயலிலேமருது தீரன் மகிழ்ந்திருக்கச்

சிறக்குந் துரைலண்டன் சிந்துபூந் துறைதனிலே
இருக்க வசதியென்று எகியே வந்திருந்தார்
வந்த துரையவர்க்கும் மங்கைதுரை சானியர்க்கும்
அந்தவூர் சேராமல் அலம்பலது வுண்டாகித்
துரையுந் துரைசானி துஞ்சினு ரஞ்சிமனம்
மருதுங் கவுரியுமுன் மாநகர்க்குச் சென்றபின்பு
பவுராமக் கவுரிவகைப் பாம்பூர் ராயகனும்
மஷ்தையுடன் சேர்ந்த வகைச்சனத்தோ டேகாமல்
பரமக் குடிதனிலே பாரியகல் மண்டபத்தில்
உரமா யவனுடைய ஊடையத்தை வைத்திருந்தான்
தமது சனத்துடனே தம்பிகுடைக் காதுடையான்
எமனேச புரத்தில் இருந்தான் இருக்கையிலே
பாம்பூரா னுள்ள பதிக்கிடையைத் தானறிந்து
தாம்போ யதுபோல தனித்திருக்க வேமனமாய்
சேனை தளத்துடனே திரளாக வேயெழுந்து
மானபரன் கூடியூர் வந்திருக்க வந்நேரம்
விள்ளுவ ராம்பூரான் விரும்பியம னேச்வரத்தைக்
கொள்ளை யடிக்கவெனக் கசரித்ததொரு வார்த்தைதனைக்
கண்டோ மெனவுரைக்கக் கண்களிலே தீப்பறக்கக்
கொண்டானே கோபம் குடைக்காது தம்பியுமே
தன்னுடனே சேர்ந்த சனங்களவை யைஞ்ஞூறும்
சௌன்னூர் கவண்டங்கோட்டைத் துரைச்சனங்கள் முந்நூறும்
சண்டையென்று சொல்லுஞ் சாடையது தோன்றுமல்
மண்டியம னேசுரத்தில் வந்திரவில் தந்திரமாய்
ஆற்றுக் கரையோரம் அருகான சாவடியும்
பூத்துச் சொரியும் புளியமரந் தோப்புதனில்
வந்திருந்து இரவில் மையிருளி லேயெழுந்து
பந்திபந்தி யாய்நடந்து பாம்பையில்கல் மண்டபத்தில்
ஈட்டியைச் சாத்தி ஏறியே லக்கைகட்டி
தாட்டிகன் மண்டபத்தின் தளத்தின்மேல் நிற்கலுற்றுன்
தவருமு லிவ்வார் தம்பிகுடைக் காதவனும்
கவண்டன் துரையவனும் கலத்தளத்தில் நிற்பளவில் ;

**குடைக்காதுடையாரும் கவண்டன் கோட்டை துரையும் குண்டு பட்டு இறந்தார்கள். பாம்பூர் நாயக்கனும், ஆயிரஞ் செனமும் இறந்தது.**

கொண்டுவைத் தார்கள் கோலமுள்ள சாவடியில்
பண்டு பரிசித்துப் படிந்தவிதந் தானறிந்தே
கண்டு சினமேசன் (மேஜர்) கலங்குகின்ற வாறதுபோல்
அண்டிச் சனமுழுதும் அழுகலுற்று ரம்மானை ;

### விருத்தம்

சேனைக்கா வலர்கள் கூடித் தீரனை யிழந்தோ மென்றே
தானவர் கலங்கி யேங்கித் தயங்கியே மயங்கிப் பாடி
ஆனதோர் வகையை நன்ருய் அடைவுடன் விரித்துக் காட்டி
மரனகர் சிறுவை வாழும் மருதுக்கா ளனுப்ப லானுர். (34)

வந்ததோர் காவலாள் தானும் வாசக மதனை வைத்து
முந்தவே கரங்கள் கூப்பி முடிதனை வணங்கி நின்றே
சிந்தையும் பதறிச் சோம்பித் தேம்பியே தரையில் வீழ்ந்தான்
மைந்தனவ் வாறெழுத் தால்கண்டு மருதுமே அழுது சேர்ந்தார் (35)

### வேறு

சேயனுடை யர்வலினுல் தேறியே மன்னவர்கள்
பாயும் பரிமிசையே பரிந்தேறி வேகமுடன்
காலா ளொருவரின்றிக் கடுமையுடன் தான்நடத்தி
வால்ாவும் வேலும் வளரியொரு கைப்பிடித்துத்
தானிருவர் செல்லும் தடமுந் தெரியாமல்
வானம்பயிர்த் தோட்டமதில் வளரியினுல் பாதைகண்டு
வினையை நினைந்து வெம்பரியைப் போகவிட்டு
முனைவண்டி மார்க்கம் முடுகிவழி தான்நடந்து
பரமக் குடியில்வந்து பதறிமனம் வேருகித்
திரும்பியும் பாதை தெரியாம லேதிகைத்து
நெஞ்சமது புண்ணும் நினைவுதப்பி மெய்ம்மறந்து
மஞ்சள் பதியும் வைகைநதி தான்கடந்து
இந்திரனுர் பூசித் திருக்கும்யம னேசுரத்தில்
வந்து குதிரைவிட்டு மகனை மடியில் வைத்து
சுந்தரமே யழகு துரையே யெனப்பரிந்து
கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டு
முட்டி விழுந்து முகத்தி லறைந்துகொண்டு
எந்தனுடை வீறு எடுத்துச் செலுத்துகினர் ?
மைந்தனே வீணய் மடிந்தாயோ மாற்றுனுல்
வாளில் வலிய மகனேயுன் வல்லபத்தால்
ஆள்லாஞ் சீமை அடங்க வொருகுடைக்கீழ்
என்றெண்ணி நானும் இருந்தேனே யென்மகனே
சென்ருய்ப் பாம்பைச் சிவனடியே தஞ்சமென
ஆறுனு முன்னே அகலவிட்டு வுண்டநஞ்சு
வீணய் மயங்கி மெலிவேனே யென்மகனே
எத்தனை பிள்ளை இருந்தாலு மெங்களுக்கு
உற்றவனு வீரா உனக்குநிக ராகுவரோ
இப்பிறப்பை விட்டு எழுந்தாய் சிவனடிக்கு
எப்பிறப்பில் கண்டு என்கவலை தீருமடா
விசயன் மகன்வாளால் வீமனுமே நீயாகும்
திசையிலிவன் பாம்பூரான் தேசத்தரச னுகுமடா

பரப்பிணி யுகமடா பாம்பையில்கல் மண்டபந்தான்
செப்பமுட னதைநீ திடாரித்தாய் போய்மடிந்தாய்
என்றழுது வாடி இருவருமே வாட்டமுற்ருர்
நின்றவர்கள் கூடி நிருபர்களைத் தானமர்த்தி
அன்ருள் சிவகங்கை அரசுநிலே நாட்டிவைத்து
மன்னவர்க ளிந்த வகைகேட்டு வாம்பரிமேல்
அட்டவணை முத்திருள அபயனுடன் தப்பாமல்
திட்டமுடன் தொண்டிச் சேர்வைக் கணக்கரெனும்
முத்துக் கருப்பனுமே முகவாட்ட மாகவேதான்
நத்தியே ராசப்பன் நாடியிவர் மூவருமாய்
வந்திருவ ரந்த மருதுமன்னர் தங்களைத்தான்
சிந்தை தெளியத் தெளிவுரைப்பா ரம்மானை
தந்திரஞ் சேருத்தி தயங்காத புத்தியதும்
மந்திரா லோசனையும் மறந்ததுநீ ரெந்தவிதம்
விதியை விலக்க மேதினியி லாருமுண்டோ
சதுர்முகனு மோர்சிரசைத் தவறவிடக் கேட்டிலேயோ
அரனுர் விடமெடுத்து அருந்தினதுங் கண்டிலேயோ
திருமால் வனம்போன செய்கையதுந் தோன்றலேயோ
கால பலனுலே கண்டயல னீதவர்கள்
ஞாலமதி லிவற்றை நாமறிவோங் கேள்வியினுல்
பொல்லாத காலம் பொருந்தினு லார்தமக்கும்
எல்லா மறந்துவிடும் இவர்தாமு மப்படியே
ஆரறியச் சென்ருர் அதுநினைந்து பார்க்கலேயே
போரினிலே வொப்பாரி புவிமீதி லெங்குமுண்டோ
இரும்புங் கருமருந்தும் யாரென்றும் பாராதே
துரும்பா யிவர்நினைத்தார் துஞ்சினுர் பாலகனும்
மைந்தன் தனையடக்க வகையே தெனக்கேட்க
அந்த விசனம் அறிந்திருவர் தாந்தெளிந்து
வாடா மலரா மகனைச் சிவிகைதன்னில்
கூடியே தூக்கிவைத்து குவைபல வாத்தியமாய்
மோடியுட னெடுத்து முகில்போ லொலிமுழங்க
கூடியூர் தன்னில் சுருக்காகக் கொண்டுவந்து
அடக்கினுர் பாலனையும் அன்றுமறு நாளதிலே
நடக்குஞ் சடங்குவகை நடத்தினு ரிப்பாலே
விருது துசத்துடனே வெகுமுழக்க மாகவேதான்
மருதேந் திரரிருவர் மற்றுமுள்ள ராணுவமும்
உற்றவர்கள் தம்முடனே ஒருமிக்கத் தாளெழுந்து
முத்தூரில் வந்து முதனு ளதிலிருந்தே
மற்றைநாள் சென்று வந்தார் சிறுவயலூர்
வற்ருப் பவுசுடனே வாழ்ந்தார் மகிழ்ச்சியதாய்
சந்தோச மாகத் தாளுண்டார் பூவுலகம்
இந்த வகையிருக்க இனிமே லுரைக்கின்ருேம்

பெரும்பகையாச் சேதும் பலசாலி யாமருதும்
.....ரும்பால.........குலைவிலக்க கும்பினியார்
விரசா யனுப்பிவைத்த வேந்தனெனும் லண்டனவர்
துரையுந் துரைசானி துஞ்சிறு ரென்றசத்தம்
மாட்டியன் முன்கண்டு வரைந்தனுப்புங் காகிதத்தைக்
கேட்டுமே கும்பினியார் கிலேசமது வுண்டாகி
வசமா யிறுவகைக்கு மதிசயமாய் நில்லுமென
லண்டன் துரைதனையே நல்லகலைக் கட்டரென
அனுப்பக் கவுணர்துரை அந்நேர மேலண்டன்
மனப்பிரியமாக வந்தாரே தொண்டிநகர்
தொண்டிதனில் வந்து துரையு மிறங்கிடவே
கண்டுகொள்ள வென்று காவலவன் தான்மருது
அநேக வரிசையுடன் ஆடுபன்றி கோழியதும்
சிநேகமுள்ளா ரென்று சேனைவெகு கூட்டமுடன்
சந்தோஷ மாயிலண்டன் தயவுபெற வேணுமென்று
வந்தார் வெகுசிறப்பாய் வாத்தியங்கள் தம்முடனே
தொண்டதனில் வந்து துரைமகன்றன் பேட்டிகண்டார்
வண்டத் துரைலண்டன் மனத்தில் குரோதம்வைத்துத்
துட்டனிவ னென்னும் துரைக ளிவன்தனக்குச்
சட்டையில்லை யென்றும் தளத்தி லதிகமென்றும்
இவ்வுலகில் நாமிவனை யிணக்கமாய்க் கூட்டுறவாய்
ஒவ்வுதலாய்த் நானிருந்து ஒடுக்கவே வேணுமென
அடக்க மனத்தில் அங்கவரைப் போகவிட்டு
நடக்க மனத்திலுந்தான் ரகுராம நாதபுரம்
கோட்டை தனில்வந்து கூடாரந் தானடித்து
வாட்டமிலா மன்னன் மனுவேலு மாட்டியனும்
வண்டன் மருதுவகை ௦....ரந் தானெடுத்த
விண்டார் மனுவே......விவரமாய்த் தான்கேட்டு
லண்டனுக்குப் புத்தி நலமா யெடுத்துரைப்பார்
அகண்டிதங்க ளெண்ணுதே ஆறுலுஞ் சொல்லுகிறேன்
மருதேந்திர மன்னவர்கள் மகாநேர்மை யுள்ளவர்கள்
பெரிதான கும்பினிக்குப் பெற்றபிள்ளை யாகுமவர்
ஆதரவாய் நீரும் அவரை யழைத்துவந்தால்
போதவே யிங்குமக்குப் பிழையறவே தானடந்தார்
என்றுரைக்க மாட்டியனு ஈமெனவே தான்லண்டன்
அவரவருக் கேற்க அரைச்சொல்லாய்த் தானுரைத்து
எந்த விதமும் இவர்வலுவைப் போக்கவென்று
வந்ததுரை லண்டன் வர்மம் மனத்தில்வைத்து
அன்றுதுரை மாட்டியனை அங்கனுப்பிக் கொண்டுபின்னே
சென்றான் துரைலண்டன் சிந்துபூந் துறையில்வந்தார்
வந்தா ரிருந்தார் வகையுடனே தென்திசையை
தந்தார் அரசாட்சி கான்பரிங்கா ரம்மானை

**விருத்தம்.**

வந்ததோர் லண்டன் தானும் மனமது மகிழ்ச்சி யாகச்
சிந்துபூந் துறையில் மேவி சிறப்புட னிருந்து மேலாய்
இந்துநன் னகரைக் கண்டு யிதுமிக வசதி யென்றே
அந்தவூர் தன்னில் மாடி அமர்த்தி யங் கிருக் கலானார். (36)

தெம்புடன் லண்ட னிவ்வார் சிந்துபூந் துறையில் வாழ
அம்புவி யடுத்துப் பாஞ்சை அரசுசெய் கட்டபொம்மும்
தம்பியூ மையனு மாகத் தரும்வரி கொடாமல் வீறு
கும்பினி யவர்முன் சென்று குறித்தபோர் விரித்துச் சொல்வேன். (37)

**வேறு.**

.......ராசன் நவாபுதுரை ராச்சியமுன் னாளுகையில்
தேசவரிப் பணமுஞ் செல்லாத வாறறிந்தும்
தப்புத் தவறிவன்மேல் சாருஞ் சமயமது
எப்போவென்று கும்பினியார் எண்ணமது வைத்திருக்கும்
அடமு மவர்வலிவும் அடங்காத சோடிபுருட
தி......வறசூதும் சென்னைநகர் தன்னையெவுன்
சூதா......ங்கினதும் தொல்புவியை மூழுவதும்
சீராகச் சட்டமதும் செய்துவிட்ட திட்டமதும்
எல்லா மறிந்திருந்தும் இவனவர்கள் கும்பினியார்
சொல்லடக்கி மேலாய்த் துரைத்தனங்கள் செய்யவென
சீமைத் துரையவரை திரணமா யுள்நினைந்து
ஊமையனுங் கட்டபொம்மு உலகமதை யாளலுற்றார்
இங்கிவர்க ளிப்படிக்கு இருந்துபுவி யாளுகையில்
அங்கே கவுணர் அவனிதனை யோர்குடைக்குள்
குணமாக வாண்டு குடிகளுடன் ராசரிடம்
பணம்வாங்கி வார பகுந்துகுடி வாழவென்று
சட்டமதில் புத்தி தாவித்து நல்லறிவாய்த்
திட்டமுட னடக்கச் செப்பி யடிக்கடியே
தேசத்தி லுள்ளவர்க்கும் செல்லவிட்டுச் சட்டமதைக்
காசினியை யாண்டு கருத்தாய் வருமளவில்
மேனப்பூர் மன்னன் வெகுபணத்தைப் பாக்கிவைத்துத்
தாமே கும்பினியார் தன்னோ டெதிர்க்கவென்று
மதித்தான் கவுணரதை வாய்மொழியாய்த் தானறிந்து
கதித்த துருப்புடனே கனசேனை சோல்சரையும்
பட்டாளங் கட்டாகப் பாங்குடனே போகவிட்டு
வெட்டி யவன்படையை மேனப்பூர் ராச்சியத்தைக்
கொண்டு கொடிபோட்டுக் கொற்றவனைப் பத்திரமாய்க்
கண்டு பிடித்துக் கடுங்காவ லாக்கிவைத்துச்
சென்னைநகர் வந்து சேர்ந்தார் கெவுணர்வர
தன்னைப் புவியறியத் தான்தூண்டி போடவெனக்
குறித்தா ரதுவிவரம் கொற்றவனுந் தானறிந்து

வறிதது புவியெனக்கு வேண்டாஞ் சகலமுமே
கொள்ளுமென்று பேசிக் குணங்கும் வகையதனை
வள்ளல் கவுணர் மனமாரத் தானறிந்தே
தாங்காம லெப்போதுந் தருவேன் பணமெனவே
வாங்கினார் முச்சலிக்கை முனுக்கொடுத்து ஆதரித்து
விட்டா னவனடந்து மேவினு னூர்புகுந்தான்
வட்டப் புவியிலிவ்வார் வணங்காத ராசரெனும்
இப்படியே கண்டி யினிவரதப் பூர்கொழும்பு
தப்பு மடையவர்கள் தங்களுடன் வெங்குளீரான்
போர்பொருத சிந்தை பொருந்தினவர் தங்களையே
பார்துருப்புச் சோல்சர் வகையாலே தானடக்கி
வாங்கும் வரித்தொகையை மாரும லெப்பொழுதும்
பாங்காய்க் கவுணர்துரை பாராண டதிலோர்நாள்
சாத்திரு ரிந்தத் தரணிதனைக் கண்குளிரப்
பார்த்துவா வென்று பகர்ந்துதுரை வரதுருப்பும்
சோல்சரையும் பட்டாளம் துலங்க வலங்கரித்து
மேசர் துரைகர்னல் மேஸ்தரெனும் பேருடைய
துரைகள் தலைமையணியாய்ச் சொல்லிவிட்டு முன்னவர்க்குத்
தருமோசை வாத்தியங்கள் தமிழ ரதுமுதலாய்
இருந்தாங்கு வாம்பரிக ளிணக்கமுடன் பூட்டுகின்ற
வருஞ்சா ரட்டினிலே மன்னர்மண்ட லீகரெனும்
தங்கத்தால் தொப்பி தரித்துலகை யாளுகின்ற
துங்கன் கெவுணர்துரை துரந்தரீகன் யீந்திநகர்
பார்க்கவென்று யெரிப்பவு. . . . வரும் பாவனையாய்த்
தீர்க்கமுடன் சாரட்டெனச் செப்புமா தானடத்திச்
சஞ்சாலி வாறுவெடி சரகோபி வேட்டுடனே
குஞ்சரமும் முன்னடக்க குதிரைசில பின்னடக்க
வப்பர் குடோரி மதமடக்கும் வல்லவர்கள்
கும்பினியார் கெவுணர் கோட்டைவெளி வாசல்விட்டு
வந்தார் படைபவுஞ்சாய் வானவர்கோ னுமெனவே
சுந்தரஞ் சேர்கெவுணர் துரைபவனி யொப்பெனவே
வட்டக் குடைநிறத்த மாதுதிரு வாழுசென்னப்
பட்டணத்து வீதி பதிவாய் வருமளவில்
ஊரவரும்பா ருலகாள உத்தமனுங் கூடிமெத்த
வார கெவுணர்துரை மதிமுகத்தைத் தான்பார்த்துக்
கெவுணர் துரையெனவே கேட்டிருப்போ மேனுளில்
கெவுண ரெனவிவர்க்கே கிட்டுமே பாருமென்பார்
பதியி லிவன்துரைகாள் பாருமென்பார் தாரணியில்
அறிவு மிவர்தமக்கே அடுத்தவிதங் காணுமென்பார்
பாதாதி கேசம்வரை பார்க்கத் திகட்டாத
நாதன் கவுணர்துரை ரவிவடிவை யொத்தவர்காண்

## க்வர்னர் பவனிவந்து தேசப் பிரதட்சிணம் வந்தது.

பாருவகா....னருள் பலகோடி ராசர்களில்
ஆமிவ ரழகுக் கடுத்தவர்க ளில்லையென்பார்
புவியி லிவர்கவுணர் புந்திதனி லுத்திபண்ணித்
தவரு தனுவளவும் தானடக்க வேசனங்கள்
திட்டமுஞ் சட்டமதைச் செவிகுளிரக் கேட்டக்கால்
எட்டுமோமுன் ராசாதி காரமது யிங்கிவர்க்குத்
துட்டநெட் ரேத் துரைத்தலங்காண் முன்னரசர்
இட்டமுள்ளா ரிங்கிவரும் எல்லார்க்கும் புண்ணியன்காண்
கர்நா டகத்தரசர் காசினியை யாண்டதிலே
என்ன சுகமடைந்தோம் இடுக்கமுடன் துன்பமதே
இன்னு ளிவரரசில் எந்தியே தங்கமுடன்
பொன்னு டையுஞ்சாத்திப் பேரகலாங் காட்டுவழி
மதியா யிவர்முகத்தை மதிக்கலா மாமதிக்கி
அதிலே கலைமழுங்கி அவதிவந்து மூளுமென்பர்
இவர்போல வொருவுருவாய் எப்படியோ கற்பனையாய்த்
தவரு தயனமைத்துத் தாணிதனில் விட்டதென்பர்
கும்பினியார் சீமை குவலயத்தின சுந்தரத்தைத்
தம்பியரே சொல்லத் தகுமோகா ணென்பாரும்
ஈமான் நவாபுதுரை இதுவரைக்கும் இங்கிவர்கள்
பூமி விடாதிருந்து போர்த்திறல் வையகத்தை
அரசு நிலைப்பதில்லை அல்லாமும் வல்லமைசேர்
மருதிடத்தில் ஒப்பிவைத்து வணங்குவார் தப்பாது
......ாக கலந்த கும்பினியார் தங்களுடன்
............லப்பாவம் அகலுமே பாருமென்பார்
பட்டாளம் வாரப் பவுஞ்சதுபோ லிப்புவியில்
அட்ட திசைதனிலும் அறியோமே யென்பாரும்
வாசமிகுங் கும்பினியார் வகைமனித ராகவரும்
சோல்சர் படையடைவுஞ் சொல்லவொணு தென்பாரும்
இங்கேதான் கும்பினியார் இறங்கியதோர் நாள்முதலாய்த்
திங்கள்மும் மாரி செழிக்குதுகா ணென்பாரும்
சீறிட்டுக் கும்பினியார் தேவரிவர் தான்திருப்பி
ஏறிவருஞ் சாரட்டு இலங்குமிதைப் பாருமென்பார்
தவருமல் நான்முகனுஞ் சந்திரனைத் தான்பிடித்து
இவரா யுருவகுத்து இங்குவிட்டா னென்பாரும்
வேடிக்கை பார்த்த மெல்லியர்க ளோடிவந்து
சேரடித்தா ராலத்தி துரைகவுணர் முன்னேவந்து
ஏந்திஞர் சேர்ந்து எல்லோருங் கண்ணுலே
சாந்தமாய்க் கவுணர் தான்பார்த்து ஆதரவாய்
வசனமிக வுரைத்து மன்னவனும் நற்கவுணர்
வசமாய்ப் புவிபுகழ வாழ்ந்திருப்பீ ரென்றுரைத்து

.......வரைப்பார்த்து உண்மையுடன் சொல்லுமென்னத்
தீரர் கவுணர்துரை சீமைசுற்றிப் பார்க்கவெனச்
சென்றுரே தென்முகமாய்ச் சேனையுடன் மானபரன்
நன்றுய் வரும்பவனி நாகரிக மாருரைப்பார்
செஞ்சொல் நிலைநிறுத்துஞ் செகவீரர் கும்பினியார்
தஞ்சாவூர் வந்து சாருமுன்னே மாஞேசி
மன்னவனும் வந்து வணங்கிக் கவுணர்துரை
தன்னுடனே பட்டாளந் தங்களுக்கு மேவிடுதி
அமர்த்திச் சகலருக்கும் ஆனவகைத் தீனியதும்
சமைத்து வமுதளித்துச் சந்தோஷ மாயிருந்து
அன்பாய்க் கவுணர்துரை ஆதரவு மேற்மானம்
தென்பாகப் பெற்றுச் சிறிது வேந்தனுக்கும்
தனக்கும் பகைமிகுந்த சங்கைதனைத் தானுரைத்து
மனக்கவலை தீர்க்க மனம்வேணு முங்களுக்கு
என்று வணங்க இப்பால் கவுணர்துரை
ஒன்றுக்கு மஞ்சாதே உற்றபிள்ளை யெந்தனுக்கு
வெள்ளை மருதிருவர் வீரனுடன் நீபகைத்தால்
சள்ளை வருமுனக்குச் சகியோம் புவியரசை
வாங்குவோம் நாங்கள் மருதுக்குத் தான்கொடுப்போம்
ஆங்கவனைப் பாங்காய் அடுத்துநீ வாழ்ந்தக்கால்
நிலைக்கும் நகருனக்கு நெடுநாளு மப்படியே
மலைக்காய் குடிநிலைய வகையிதுவே யாகுமெனச்
சொல்லிக் கவுணர் துரைதென் முகமெழுந்து
சொல்ல வழிநடந்து திருச்சிராப் பள்ளிவந்து
சேர்ந்தா ரவிடமுள்ள தீனேன் நவாபுவந்து
பாந்தமுடன் கண்டு பணிந்து வழியனுப்ப
கடந்தார் தெ......ச மொக்காடு மோடறுந்தார்
நடந்தார் பலவிருது ராணுவமுங் கூடவர
மேலூர் வழிநடந்து வேந்தர்சிலர் தாம்வணங்க
கோலியே தல்லா குளம்வசதி யென்றதிலே
அடித்தார்கள் கூடாரம் அன்றதிலே வீற்றிருந்து
படித்தார் மதுரைவளம் பார்க்கவென்றுர் மற்றைநாள்
வந்தார் கவுணரென வார்த்தையது கேட்டவுடன்
சிந்தை மிகமகிழ்ந்து சிவகங்கை மாந்தரார்
மானபர நாடுவெள்ளை மருதிருவ ராள்விடுத்து
கானமெனுங் காளையார் கோவில் காடதிலே
காட்டு மிருகம் கரடிபுலி மான்மரைகள்
தேட்டமுள்ள வெல்லாந் தேடியே தான்பிடித்து
கூட்டி லடைத்துக் கொண்டுமுன்னே போகவிட்டு
போட்டார் சிவிகைதன்னைப் பொழுதுவிழுந் தானபின்னே
படையும் விருதும் பருத்தபீ ரங்கியுடன்
விடியவண்டி யூரில்வந்து வேட்டெழுப்பும் நேரமதில்
நாடி லண்டன்துரை நல்லதுரை [1] மாட்டியனும்

---

[1] மார்ட்டின் என்னும் பெயர் மாட்டியனென வந்தது. முன்னர் வருவனவுங் காண்க.

கூடி மருதுடனே கூடவே சேகரமாய
வந்தார் முழக்கமுடன் வாரதுக்கு முன்லேதான்
இந்தத் திசையிலுள்ள இடப்பைம்யெழு பத்திரண்டு
கண்டு[1] கவுணர்தமைக் கைகட்டி வாய்புதைத்து
அண்டியே சற்று அடங்கி வணக்கமுடன்
நிற்குஞ் சபைக்குமுன்னே நேராக வேமருது
தக்க சிவிகைவரும் சங்கைதனைக் கண்ணாலே
பார்த்தார் மனமகிழ்ந்தார் பக்கத்தில் நின்றதொரு
தோத்துஞ்ச மீனர்களைத் தூருசாய் விலகுமென
இருபுறமுந் தான்விலக இந்தநல்ல வேளையிலே
மருதிருவர் தண்டிகையை வாகாக விட்டிறங்கி
லண்டனுடன் மாட்டியனும் நால்வருமாய்க் கைபிடித்து
வசமாய்க் கவுணரெதிர் வாகுடனே தான்வரவே
பொருக்கவே நாற்காலி போடுமென நாலெடுத்து
நெருக்கிவந்து நால்வருமாய் நின்று சலாங்கொடுத்தார்
இருக்கவென்றார் குறிச்சி இருந்தா ரவரருகே
இருக்கும் வகைபார்த்து எல்லா சமீனர்களும்
அஞ்சினர் நெஞ்சமது அந்நேர மேகவுணர்
புன்சிரிப்புக் கொண்டு புளகித்து மேனியதும்
மகனுன மருதேந்திர மைந்தர்களும் உற்றவரும்
சுகமோ வெனக்கேட்டார் துரையேயுன் ஆதரவால்
எல்லாஞ் சுகமென்லே இப்பால் கவுணர்வர
செல்லுவோங் கூடல்[2] சிறப்பறிய வேறுமென
கவுணர் துரைலண்டன் கர்னல்துரை மாட்டியனும்
இவர்மருது ஐவர் எறினார் வாம்பரிமேல் ;

## கவர்னர் கர்னல் மார்ட்டின் லண்ட மருதேந்திரர் மதுராபுரி பவனி வந்தது.

பட்டாள முந்திரசாய்ப் பாங்குடனே தானெடுத்து
மட்டடங்கா மன்னர் வைகைநதி தாள்கடந்து
பேதமில்லா மன்னர் பெரியகடை வீதிவழி
மேதினியோர் சூழ விட்டவாச லூடுசென்று
கச்சுப் பரிநடத்து காவலிகள் மெய்ம்மகிழ்ந்து
அச்சமய மண்டபத்தை அங்கவர்கள் விட்டகன்று
அட்டலச் சுமிவளரும் ஆலயமும் மாதுமையாள்
திட்டமுடன் வளரும் திருப்பணியுங் கண்டுமெச்சி
ஆயிரக்கால் மண்டபமும் அய்யனுடைக கோயிலதும்
போய்ப்பார்த்துக் கோபுரத்தின் புதுமையிறுங் கண்டுகந்து
புதுமண் டபம்பார்த்துப் புளகித்து மேனியெல்லாம்
மதிபோல் முகமிலங்க வந்துநின்று வவ்விடத்தில்
தேசம் புகழ்மதுரை சீமையைமுன் ஆண்டதொரு
ராசன் திருமலேவேள் நாய்க்கரையுங் கண்டுமெச்சி

[1] கவர்னர் [2] மதுரை

மற்றுள் ளரசர் வகையதுவுந் தான்தெரிந்து
சித்தமது மகிழ்ந்து தென்முகமாய்த் தான்திரும்பி
வள்ளல் **திருமலேவேள்** மாலுடனே மாடியதும்
உள்ள வரண்மனேயும் ஒய்யார மேடைகளும்
பதிவளமும் பார்த்துப் பலதெருவுந் தான்கடந்து
நதிகடந்து கூடாரம் நாடியவர் வீற்றிருந்து-
துங்கன் கவுணர் துரையனுப்ப வேமருது
தங்கள் விடுதிதனில் தானிருந்து வந்துகண்டார்
வந்தவரை யூர்போக வழியனுப்பி யேகெவுணர்
இந்தவளம் போலே எங்கு மிருக்குமென்றே
சந்தோச மாகச் சாற்றியே சோழவந்தான்
வந்து அதுவழியாய் வாருமரிசு முட்டுடனே
**திண்டுக்கல்** சென்று சீமைவளந் தான்பார்த்துக்
கொண்டு மனமகிழ்ச்சி கொற்றவனுந் தானெழுந்து
சென்ருர் வடமேற்காய்ச் **சேலத்துப்** பாதைவழி
யன்றிருக்குஞ் **சென்னப் பட்டணம்**போய்ச் சேரலுற்ருர்
சேர்ந்தா ரவரிந்திச் சிறப்பதனே யெப்பொழுதும்
சேர்ந்த துரையவர்பால் செப்பலுற்ரு **ரம்மானே ;**

## விருத்தம்.

பாங்குடன் கவுண ரீந்திப் பதிமுழு தடைவாய் நோக்க
ஆங்கற மகிழ்ச்சி கொண்டு அடைவுடன் சென்னே மேவித்
தாங்கியே செங்கோல் கொண்டு தரணியோர் குடையின் கீழாய்த்
தீங்கிலா தரசு செய்து சிறப்புட னிருப்ப தானுர். (38)

வாஞ்சையாய்க் கவுண ரிவ்வார் வையக மாளும் போதில்
பாஞ்சைநன் னகரா ருமைப் பகுதியுங்கூ டாமல் நாடி
வாஞ்சையாய் வணங்கா தாலும் வர்மமே பெரிதா யெண்ணித்
தாஞ்செய்த கலகந் தன்னேத் தவறிடா துரைசெய் வேனே. (39)

## வேறு.

அங்கிருந்து கும்பினியார் அரசாளு மன்னவர்க்கு
இங்கிருந்த ஊமையன்ருன் இணக்கமில் லாதவனுய்
பகுதி கொடாமலுமே பணிந்து வராமலுந்தான்
அகமே மிகப்பெரிதாய் அரசாண் டிருப்பவன்மேல்
தாளாமல் கோபஞ் சமய மவன்றனக்கு
வேளேயெப்போ வென்று வேந்தவர் காத்திருக்க
அதனே யறியாமல் ஆண்மைதனேத் தான்பெரிதாய்ச்
சித்தமதில் வைத்துத் திகையாம லேயிருந்து
உத்தபுவி வாஞ்சி உலகாளும் போதினிலே
ஒத்து வினேயடுத்த உண்மைதனேச் சொல்லுகிறேன்
துட்டநெட் ரோன் தோககுல வாரசுல்தான்
கட்டபொம்மு வச்சக் காரியமே பார்த்துவரும்

மட்டங்கா சிவசுப்ர மணியனெனு மந்திரியான்
சட்டமுடன் செய்த தவந்தனிலே வந்ததொரு
சொந்த மதலேயெனுந் துய்யதொரு பெண்கொடிக்குச்
சிந்தைதனி லெண்ணித் திருமங் களமுடித்து
அடைவாக வேரவுத்திரி ஆண்டுதனில் ஆனியிலே
கெடுவைத்து அங்கவனுங் கம்பீர மாயெழுந்து
சொன்னனே ஊமை துரைகட்ட பொம்மிடத்தில்
அந்நேர மேயவர்கள் ஆகும்வகை சொல்லுமென
வேண்டும் பதார்த்தமதை வெகுவாகச் சேகரித்தேன்
ஆண்டவனே நெல்லு அதுவேறுஞ் சொல்லுமெனக்
கேட்டபடி கொடுத்தான் கிருபன்சிவ சுப்ரமண்யன்
ஒட்டப் பிடாரமதில் ஒருமித்து ராத்திரியில்
தெம்பாக வந்து சிலுகுபண்ணி பமுவு....ாள்
கும்பினியார் நெல்லைக் கொள்ளைமிகத் தானடித்து
வீட்டி லடக்கமிட்டான் வேந்தன் லண்டனிதைக்
கேட்டு மனத்தில் கிலேசமது வுண்டாகிக்
கமுட்டிக் கெழுதிவிட்டார் காயிதத்தைப் பார்த்தவரும்
அமட்டி யிதுவும்வெகு ஆச்சரிய மாமெனவே
ஆலோ சனைமுடித்து அடங்காத கோபமுண்டாய்
வாலசிவ சுப்பிர மணியன்மேல் குற்றமதாய்;

## பாஞ்சைநகர் மந்திரி சிவசுப்பிரமணியனைத் தூரிடியில் (தூக்கு) போட்டது.

பத்திப் பிடித்தவனைப் பருவிலங்கு தான்பூட்டி
உத்தகயத் தாற்றில் உயிர்த்தூண்டி போடுமெனத்
தெம்பாய் லண்டனுக்குத் திருப்பினு ருத்தரவும்
வம்பன் லண்டனிதை வந்தவுடன் பார்த்தறிந்து
திரட்டினர் கும்பினியைச் சேகரமாய்ப் பின்னைவிட்டு
வரட்டுமென முன்னக வாம்பரிமே லேறிவந்து
செம்புநதி பாஞ்சைத் திருநகரை நாற்புறமும்
கும்பாய் வளைந்து கூடியுள்ளே தானுழைந்து
கலைத்தார் நகரமதைக் கண்டவர்க ளோட்டமிட
மலைத்தான் சிவசுப்பிர மணியனையுந் தான்பிடித்து
பூட்டினர் கால்விலங்கு போவெனவே அங்கவனைக்
காட்டிக் கயத்தாற்றில் கடுந்[1]தூண்டி போட்டுவைத்தார்
மந்திரியு மிவ்வாறு மடிந்ததொரு காரியத்தால்
அந்த நகருடைய அவன்துணைவன் கட்டபொம்மு
கோபங் கொடுமை கொள்ளாத நெஞ்சமதாய்
மாபா தககவுணர் வலிவையுமே கண்டிருந்து
கொள்ளைச் சனத்துடனே கூட்டமிட்டுத் தானடைந்து
தெள்ளிமை யாகச் சிந்துபூந் துறையில் வந்து;

---

[1] தூக்கில் மாட்டினர்

## சிந்துபூந்துறையில் கும்பினியார் பொக்கிஷத்தை ஊமை துரை கொள்ளை யடித்தது.

கும்பினியார் பொக்கிஷத்தைக் கொள்ளைமிகத் தானடித்து
வம்பாய்ச் சிறுகுமிட்டான் வகையறிந்தார் லண்டன்துரை
ராத்திரியே தானடந்து ராமநாத புரத்தில்வந்து
வார்த்தையிதை மாட்டியன்பால் வகுத்துரைத்தார் கேட்டவரும்
கட்டபொம்மு தன்னைக் கைப்பிடியாய்த் தான்பிடிக்கத்
திட்டமுடன் உபாயஞ் செய்தா ரவன்றனக்காய்
தராதரமாய் வார்த்தை சமாசாரம் பேசவென
இராமநாத புரத்தில் இராமலிங்க விலாசமதில்
மேல்மெத்தை மீதில் விநயமாய்த் தானிருந்து
சாலமா யங்கவனைச் சந்திப்புக் கென்றேதான்
உந்தனையே நாமும் உரிமையுடன் பார்ப்பதற்கு
எந்தயவால்......எழுதினோம் வாவெனவே
என்றெழுதி மாட்டியனும் எவினா் காகிதத்தை
அன்றதனைக் கண்டு அடைவறிய வேணுமென்றான்
வெள்ளையையா வாங்கி விரித்தேதா னுத்தரவை
உள்ள வகையாக உரைத்தானே பொம்மிடத்தில்
தெரிந்தான் சிறுகுசெய்தோம் தென்னவனு மீதறிந்து
வரைந்தாரவரு மப்படியே வகையிதுவே யில்லாமல்;

## ஊமைத்துரை கட்டபொம்மன் ஆகியோரை வஞ்சனையாய் அழைத்து மேல் மெத்தையில் பிடிக்கும்போது அவர்கள் தப்பித்தது.

வேறே நமதிடத்தில் விளம்புவது மேதெனவே
வீரம் மனத்தில்வைத்து விரைந்து நடக்கவெனத்
தன்னுடனே கூடச் சாகமனை முள்ளவராய்
முன்னூரு பேரை மூர்க்கமுடன் தானழைத்துக்
கட்டபொம்மு ஊமை காவல்வரத் தாமிருவர்
மட்டந் தனிலேறி மன்னவர்கள் பின்நடக்க
வெள்ளையையா கூட விரசாய்ப் பரிநடத்தத்
தெள்ளிமையா யிவ்வாறு சேற்றுவழி தான்கடந்து
வந்தார்கள் சிங்கள வகைச்சலத்தி லேசிலரை
அந்திடத்தில் வைத்தார் அப்பால் பயணமென
வாந்தை மடத்தில் நலமாய் விடியவந்து
சேர்ந்து பசிதவிர்த்துச் சேகரமாய்க் கண்துயின்று
நன்னயமாய்த் தானடந்து நாலுகையாய் தான்பிரிந்து
முன்னேறி யேநடந்து மொச்சிவயல் தோப்பில்வந்தார்
வெள்ளையையா தன்னுடனே வீரமுள்ளா ரன்பதுபேர்
உள்ளவரை வகுத்து உரசவர்க் குண்டுபண்ணிச்
சூரன்கோட் டைமூலை திறந்தவெளிக் கொத்தளத்தில்
பாரவழி கட்டி பதுக்கடையாய் நில்லுமென்றான்

செம்மையாய் பத்திரமாய் திறத்தவர்க ளன்பதுபேர்
கொம்மந்தான் மடத்தில் குறிப்பா யிருக்கவைத்தார்
நாட்டுப் புகழுமை நலமாய்ச் சிலசனத்தை
மாட்டுமந்தை தன்னில் மறைவாய் நிறுத்திவைத்தான்
காட்ட முடனே கட்டபொம்மு வப்பொழுது
கோட்டை வாசலதில் குறித்தான் சிலசனத்தை
தாட்டிகவான் பின்னுந் தம்பியுட னன்பதுபேர்
கூட்டி நடந்துவந்து குறிப்பாகக் கோட்டைக்குள்
தட்சிணசிம் மாதிபதி சேதுபதி மாளிகையில்
இலட்சுமி அரசராம் நிறையச் சனம்நிறுத்திக்
கோணவா சல்கடந்து கூசாமல் மெத்தையின்மேல்
தானயமாய் ஏறிச் சனம்வைத்தான் கீழ்ப்படியில்
நின்றுன் மலேத்தான் நெடுமூச்சுத் தானெறிந்தான்
நன்ருச்சி யினிமேல் நடப்பதறி வோமென்று
**ராசரா சேஸ்வரியை** நன்ரு விருதயத்தில்
நேசமுட னிருத்தி நீகாப்பா யென்றுரைத்து
**சக்கமா தேவிதனே** நினைந்து உள்ளமதில்
அக்கரை யாக அழகுமெத்தை மேலண்டன்
நிற்கின்ருன் எம்மை நிகழ்பந் தனம்புரியத்
திக்குவே றில்லை திருவுளமே காருமென்று
**எம்பிரான் சோலேமலே ஏழுமலே** யீசரையும்
**தம்பிரான் தன்மலேயும்** தானேறும் பாவனேயாய்
நடந்தார் படிகடந்தார் **ராமலிங்க விலாசமதைக்**
கடந்தார் மேல்மெத்தை கண்டார் **லண்டனேயும்**
இடந்தா னெமக்கு இருக்குமிட மேதெனவே
நடந்தே துரைலண்டன் நலமாக மெத்தையிலே
ஓடிக் குறிச்சிதனே உபசார மாயெடுத்து
நாடியே வந்து நன்ருக வேபோட்டு
வந்திருக்க வென்ருன் வந்துபொம்மு **ஊமையனும்**
எந்தனே நீரழைத்த தேதுரை யென்றளவில்
உரைப்பே னிருப்பீரென உட்கார்ந்தா ரப்போது
குறிப்பாய்ப் பிடிக்கவெனக் குறித்தேதான் சிந்தைதனில்
சீட்டெழுதி விட்டார் தீரன்மனு வேல்துரைக்கு
கேட்டு அவர்மகிழ்ந்து கம்பீர முண்டாகிக்
கோட்டைவாச லடைத்துக் குறிப்பா யிருக்கவென
தாட்டிகமாய்த் தானெழுதி சாரிசந்துக் காளனுப்ப
விட்டதொரு வுத்தரவை வேகமுடன் சாரிசந்து
சட்டமுடன் பார்த்துத் தருகாம லேயெழுந்து
கொத்துக்கு வந்து கூடவென்று கும்பினிக்குச்
சாத்திரு ருத்தரவுந் தம்பூருந் தானடித்தான்
கூட்டத்தம் பூரடிக்கக் கும்பினிக ளுள்ளவெல்லாம்
ஓட்டம் நடையாக ஓடிவந்து கொத்தினிலே

திறசாகிப் பட்டாளஞ் சிக்கெனவே தான்நடந்து
வரவே லயன்வெளியில் மன்னனந்த பொம்முதுரை
துட்டனந்த வெள்ளையய்யா சொலச்சாடை யாலறிந்து
சட்டமுடன் சார்சந்து தான்வருதல் கண்டறிந்து
கத்தி யுரைவிடுத்துக் கைதனிலே தான்பிடித்து
மெத்தைவிட்டுக் கீழே விரசா யிறங்குகையில்
முந்த......தான்லண்டன் முடுகிநின்று கீழ்ப்படியில்
வந்திருகை தான்விரித்து மறித்தவனை நில்லுமென
அப்போது பொம்மு மகன்துணைவ னூமையனும்
செப்பமுடன் சீறிச் சினந்துவா ளோங்கலுற்றார்
ஓடிக் கதவடைத்து ஒளித்தான் லண்டனுமே
கூடிச் சனத்துடனே கூவெனவே கீழிறங்கிக்
கோணவா சல்கடந்து குபீரெனவே தான்நடந்து
பாணவிசை யாகப் பாய்ந்து வருமளவில்
கும்பினியின் பாராவாய்க் கோணவர்சல் நின்றவர்கள்
வம்புநீ செய்யாமல் மன்னவனே நில்லுமெனத்
தடுத்தா ரவர்களைத்தான் தள்ளியே கீழ்விழவே
அடுத்துவந்தோர் தம்மை அப்படியே போகவிட்டு
லெட்சுமி அரசராம் நேராக வந்தவர்கள்
அச்சமில்லா திங்கு அங்குநின்றவ ராசனத்தை
வந்தா லிறந்திடுவீர் வழிவிலகிப் போமெனவே
விந்தையுட னுரைத்து வெளியேறி வாசலிடம்
மீறி வருவதையும் வேந்தன் சனத்திரளும்
சாரிசந்து கண்டு தான்வந்து வாசலிலே
போகாதே யென்று பொம்முதலைத் தான்மறித்தான்
வாகாக ஊமையனும் வலதுகையில் கட்டாரி
வாங்கினான் சிந்தை மயங்காமல் சாரிசந்தை
ஓங்கியே குத்தி ஒதுக்கியே தான்சாய்த்தான்
சாரிசந்து வீழ்ந்தான் தாம்நடந்தா ரங்கவர்கள்
பாரிசத்தில் சாய்ந்து பலீரெனவே சாரிசந்து
சுடுங்களென வுரைக்கத் தோஷத்தானந் தாமறிந்து
கடுங்கோப மாய்த்தொட்டார் கையி லெடுக்குமுன்னே
ஊமையனும் பொம்மும் உரமான காலாளும்
தாமிரியக் கோட்டைவிட்டுச் சார்ந்தார் வெளியில்வந்து
தேட்டமுட னுள்ளவரைச் சேகரித்தார் சேகரமாய்ப்
பாட்டையுந் தண்ணீர்ப் பந்தலது தான்கடந்து
பெரிய கடைவீதி பெருமையுடன் கொள்ளைவைத்துத்
தெரியாமல் செட்டித் தெருவழியே தான்நடந்து
சின்னக் கடைமார்க்கம் சென்றவர்கள் சிக்கெனவே
மன்னவர்........சக்கரக் கோட்டை வழியாகத்
துன்னி நடந்துவண்ணான் கரைதனையுங் கொள்ளைவைத்து
வன்னிக் குடிமார்க்கம் வந்தார்க ளானந்தமடம்

தன்னி லிருந்த சனங்களையுஞ் சேகரித்து
மன்னவனும் பாஞ்சை வழிகூடித் தான்நடந்தான்
குத்துண்ட சாரிசந்து குடல்சரிந்து தான்விழுந்து
சித்தங் கலங்கித் தில்லரியைத் தானழைத்துத்
தாமதமா மேடை தன்னிலொரு பீரங்கியைச்
சீமுதமாய்ப் பற்றித் திருப்பி முகலாடச்
சுடுமென் றவனுரைத்தான் சுடுமுன்னே கட்டபொம்மு
கொடுவேக மாயுத்திர கோசமங்கை தான்கடந்து
சேரத் திரண்டார்கள் சேர்ந்தார்கள் பாஞ்சைநகர்
போருக்குக் கோட்டை போமென்று தானுரைத்தான்.

## விருத்தம்

உரைத்தவ ரப்போ தங்கே உள்ளவ ரெல்லாங் கூடித்
திரத்தமண் கோட்டை யிட்டார் சிதறிமண் ணழியா தாக
மரத்தினுல் கோட்டை செய்தார் மருந்துடன் குண்டு சேர்த்தார்
துரத்திநாம் வெல்வோமு சீமைத் துரைதனை யென்றே சொன்
[னான். (40)

ஈதவ னுரைத்தான் பாஞ்சை வெகுவா யிடபால்
போதவே யிராம நாத புரந்தனி லண்டன் தானும்
[1] ஓதிமாட் டியனைக் கூவி உற்றிவ ரிருவர் கூடி
ஈதைநாம் [2] கவுணர் காண்பாய் எழுதவென் றெழுதலானார். (41)

## வேறு

பாஞ்சை நகருடைய பாளையப்பட் டானவனும்
தாஞ்செய் சமர்த்துந் தைரியமுங் கண்டெழுதிக்
கமுட்டிக் கனுப்பக் கவுணர்துரை பார்த்ததனைச்
சிமிட்டி விழிக்குமுன்னே திரசுசெய்தார் பட்டாளம்
அநேகபட் டாளம் அடைவா யனுப்பிவைத்து
கூறுவார் கட்டபொம்மு கொடுபோர் புரிந்தாலும்
வல்லமை யுள்ள வலுவீரன் தன்னையங்கே
கொல்லாம லிங்கே கும்பினியார் கண்பார்க்க
அனுப்புவீ ரமெனவே அங்கவரைத் தானுரைத்து
நினைப்பா யிவன்மேலே நின்றார் கவர்னர்துரை
மேசர்பட் டாளம் வெகுவாய்ச் சினமிகுந்து
தேசி யெனுந்துருப்பும் சிறந்தறி சிமிட்டுடனே
காராழி பொங்கிக் கரைபுரண்ட் வாரதுபோல்
தாராள மாகத் தாம்நடந்தார் பட்டாளம்
பாஞ்சை நகர்க்கடுத்துப் பாதியாக வந்திறங்கி
வாஞ்சை யுடனே வளைந்தார்கள் கோட்டைதனைக்
கோட்டை தனைவளைந்து குண்டுமெத்தப் போடலுற்றார்
ஓட்ட மெடுத்தவனும் ஓடலுற்றான் கட்டபொம்மு
ஓடி யொளிக்கிறதும் உடனே யிடிந்ததொரு

[2] மார்ட்டின்  [1] கவர்னர்

வாடியுடன் கோட்டை மண்ணு லுயர்த்தாதும்
ராத்திரியே கோட்டை நலமாய் முடிக்கிறதும்
பாத்திபனும் நன்ருய்ப் பகல்சண்டை செய்கிறதும்
இப்படியே மன்னன் இருந்துமண் கோட்டையிலே ;

## கட்டபொம்மு, ஊமைத்துரை ஆகியோருடன் கும்பினியார் நிகழ்த்திய சண்டை

செப்பமுடன் ரவுத்திரி சிறந்தாண்டு சித்திரையில்
ஆசிலொரு பட்டாளம் அவ்வூரி லேமறைத்தான்
சீறியே மேசர் சினந்து அவுட்டுகளால்
கோட்டையைச் சுற்றிக் குண்டுவிட்டுத் தாணிடிக்க
வாட்டமாய்ப் பொம்மு மறைந்தெழுந்து வோடிவந்து
சிவகங்கை மாநகரான் சிறுவா புரியில்வளர்
நவசங்கு முத்துடையான் ராசாதி ராசனெனும்
வெள்ளை மருது வேந்தனிடம் வாந்தகமாய்
பிள்ளையென்று வந்தேன் பொறுத்தென்னை காப்பாயென
அடைக்கல மென்றுவந்தேன் ஆதரிப்பாய் நீயெனவே
கடைக்கண்ணல் சாடைபண்ணிக் கருதுவா ரங்கவனும்
சீமைத் துரையவர்க்குச் சேயனும்நா ளுகையினல்
தீமைசெய்யேன் நானும் சேர்ந்து அவர்களுடன்
அவர்தாமு மொன்ருய் தொடர்ந்துவந்து பாஞ்சைநகர்
புவியாளு முன்னைப் பிடித்து விலங்கிலிட்டு
[1] ஊஞ்சலிலே பூட்டி உயர்வான மேற்றிவைக்க
வாஞ்சையுடன் முன்னெமக்கு வார்த்தை யுண்டு......கண்டாய்
வந்தாய் வலிய மறலியிடம் வந்தஉயிர்
எந்தவிதம் விலகி எங்கேதான் போகுமது
தானே யுனக்கு நமனுடுந் தப்பாது
ஆனல் கதியென்று அடைந்தவனை வஞ்சகமாய்க்
கொல்லுவது பொல்லாக் கொலையாகு மானதனல்
சொல்லுகின்றே னந்த சொல்வழியே போமகனே
நம்புதலாய் வந்தாய் நான்பிடிப்ப தில்லையுனை
மெத்த பெருந்துயரம் பெறுவாயே பொய்யலவே
வம்புசெய்தான் சுப்பிரமணியன் வந்தது வுன்தலைக்கு
வெம்பிணு லாவதென்ன விடுவதுண்டோ கும்பினியார்
துரைத்தனமும் பூமி சுயதம்பி பெண்டுபிள்ளை
திறத்த குடிவாழ்வை சேர்ந்தசன பந்துகிளை
படைத்த படைத்திறமும் பலமான வாயுதமும்
கிடைத்த வுடல்வலுவும் கீழுலகில் மேலுலகும்
மேதினியி லுள்ளவரு மிகுத்த புராணமவை
ஓதநீ கேட்டிலையோ உண்மையும்நீ யில்லையடா
தாரணிமி லந்த தசக்கிரீவ னங்கவர்க்கு

[1] தூக்கு

ஆரும் நேரல்ல அவன்தேவ னுமெனவே
வந்தா னவன்கருவம் அடைந்ததொரு வல்லபத்தால்
சேர்ந்து சமர்பொருது நிலைக்கவகை யில்லாமல்
சாய்ந்தானே வோர்குரங்கு தட்டியகைக் குத்ததினால்
தேய்ந்தா னதுபோல தயவாய்நீ தப்பாமல்
விருப்பமுட னெவரும் மிகுத்தாலும் வல்லபங்கள்
நெருப்போ டெதிர்க்க நினைத்தாய் நிலைப்பர்களோ
அன்னா ளரசு ஆண்டவர்க ளெத்துணையர்
தன்னால் சகலருக்கும் தாழ்வல்லரல் வாழ்வில்லை
என்னாளுந் தன்னுயிராய் எவர்களையு மாதரித்து
வைக்கின்றார் வாழ வளந்தேறி யேயெவரும்
நிற்கின்ற ரெங்கும் நீங்காத செல்வமுடன்
அதனை யறியாமல் அடமெடுத்தாய் நீமனத்தில்
வைத்தபடி முடிக்க வாய்க்காமல் தம்பிதனை
அங்கவர்பா லொப்பித்து அடைவுடனே நீயொருவன்
இங்குவந்தா யுன்னால் என்குலமுங் கும்பினியார்
தன்வகையில் சிக்கித் தாழ்வாக வேண்டுமென
உன்போ லவர்பகைக்கு உடன்பட்டோ மெப்பொழுதும்
அரசு மெம்க்களித்தார் அல்லாம லிப்புவியில்
வரியு மகற்றிவிட்டார் ம......லையென்னும் பேருமிட்டார்
வம்ப......யிங்குவந்த வகையறிந்த போதினுமே
கும்பினியா ரென்மேலே குற்றஞ் சுமத்திடுவார்
தெம்பொன்று வுந்தனுக்குச் செப்புகின்றே னிப்போது
துன்பம் வருமுன்னே தொண்டைமான் தன்னிடத்தில்
போவா யவனுனக்குப் பொருந்தவே யாதரித்து
ஆவதுவைச் சொல்லி அழைப்பாதை வரவிடான்
என்றான் மருது இருந்தவரு மாமெனவே
நன்று யதுபோலே நடக்கின்றே னென்றுரைத்து
உடனே யவிடம்விட்டு ஓடினான் [1] தொண்டமனார்
இடம்போய்ச் சேர்ந்து என்னையும்நீ காருமென
அப்போ தவனிவனை அஞ்சாதே யென்றுரைத்து
இப்போ திவிடமதில் இருமென் றமர்த்திவைத்து
வஞ்சக மாக மன்னன்கட்ட பொம்முதனை
மிஞ்சாமல் காலில் விலங்குதனைத் தான்பூட்டி
வண்டிதனி லேற்றி மன்னவரைக் காவலிட்டு
அண்டாமல் வேற்றாள் ஆயுதங்கள் சூழவிட்டுப்
பட்டணம்போய்க் கவர்னர் பதம்பணிய வாவெனவே
துட்டனெனும் பொம்மு துரையை விரசுடனே
கும்பினியார் தம்மிடத்தில் கூட்டி யனுப்பிவைத்தான்
அம்புவியாள் கும்பினியார் அறிந்தா ரவனையங்கே
நேரே நிறுத்தி நீதானோ கட்டபொம்மு
உன்னூரோ பாஞ்சை ஊமையனுந் தம்பியவன்

---

[1] புதுக்கோட்டையரசன்

எங்கே யவன்தானும் இவ்விடத்தி லுந்தனைப்போல்
அங்கவனைப் பார்க்க ஆசைமெத்த எங்களுக்கு
சொல்லெனவே கவர்னர் துரைகேட்க வேயவனும்
சொல்லுகின்றேன் நீதானே துரைகவர்ன ரென்பதுவும்
இடந்தான் கண்டறிந்தேன் என்னையந்தத் தொண்டமனூர்
தப்பிவந்த தாலே தவறிவிட்டே னென்றவனும்
பொய்சொல்லிக் காலில் பூட்டாம லேதனையும்
மெய்யொருகைக் கத்தி விருப்பமுட னேகொடுத்து
துரையே கவர்னரேநீர் சொன்னபடி ஊமையனும்
அருகே வென்னுடனே ஆதரவாய் நின்றக்கால்
பாசமுட னெங்களையும் பார்ப்பதுவுங் கும்பினியார்
காசினி யாளுவதுங் காணவோ மின்னளவில்
தொண்டமனூர் பூமி துரைத்தனஞ் செய்வதுவும்
கண்டதிவ் வீரனி னிக்க த..றினு லாவதென்ன!
பொல்லா....ப் புலிவலியப் போய்ப்புகுந்த வாறதுபோல்
நானுக வந்து நாடினதா லுங்களிடம்
பார்க்க வென்று என்னைப் பரிகாசம் பண்ணுகிறீர்
மார்க்கமோ ஈதுமக்கு வாய்மூடு மென்றுரைத்தான் ;

## கட்டபொம்மனைக் கயத்தாற்றில் தூக்கினது

அஞ்சாம லிவ்வா றவன்வார்த்தை கேட்டவர்கள்
புஞ்சிரிப்புக் கொண்டு பொல்லாத லண்டனெனப்
பட்டணத்தி லுள்ளவர்கள் பார்க்கும் படிக்கவனைத்
திட்ட முடனே சிறுதூண்டி போடும்வரை
உறங்காமற் காத்து ஊடொருவர் வாராமல்
பறங்கிமலை மேலே பத்திரமாய் வையுமென
வைத்தார் பறங்கி மலைமே லவன்றனையும்
சுற்றி வெகுவாய்ச் சூழ்ந்தார்கள் காவலெனத்
[1] தூண்டி தனிலே தூக்கவென்ற வார்த்தையினால்
மாண்டா னவன்பறங்கி மலைமே லிருந்துருண்டான்
பயத்தால் மடிந்த பாங்கான கட்டபொம்மை
கயத்தாற்றில் தூக்கக் காவலிட்டுக் கொண்டுவந்து
தூக்கினர் கும்பினியார் தொல்புவிகள் தாமறிய
ஆக்கினைச் சக்கரமுண் டாக்கின ரம்மானை ;

### விருத்தம்

இப்படிக் கட்ட பொம்மன் இறந்ததோர் வார்த்தை தானும்
எப்புவி தன்னி லுள்ள இராசர்க ளறிந்தார் பின்னும்
அப்படிக் கவன்றன் சொந்த ஆள்களு மறிந்தா ரீதைச்
செப்பினு ருமை பாலில் திடத்துட னவனுங் கேட்டான் (42)

[1] தூக்குமரம்

வாடியே மயங்கிச் சோர்ந்தான் மனந்தனில் வாட்ட மாகி
ஆடியே தேகம் நொந்து அண்ணன்மே லவுட்ட மாகிச்
சோடது பிரிந்த ரெண்டில் துவண்டதோர் வகைபோ லாகிக்
கூடுந்தன் படையை நோக்கிக் குறிப்புட னுரைசெய் வானே. (43)

### வேறு

இருவரிலே வொருவன் என்தமையன் தானிறந்தான்
மறுபடி நானிருந்து வாரி யெடுப்பதென்ன
அண்ணன் இறந்ததனால் ஆசையென்ன காசினிமேல்
எண்ணமில்லை நம்மாலே இயன்றமட்டும் பார்ப்பதெனக்
கூறினன் ஓசைக் கூவெனவே ராணுவங்கள்
வீறுகள் கூறி வெம்போர் புரியவென்று
**துன்மதி யாண்டு** துலங்குகின்ற [1] மேடமதில்
வரமிகப் பெரிதாய் வந்தா னவன்றனையும்
கும்பினியும் வாரும் குதிரைரிசு முட்டுகளும்
வம்பனென வந்து வளைந்து சமர்புரிந்தார்.

## கும்பினியாருடன் ஊமையன் தனிச்சண்டை

**பாஞ்சை நகரில்** பாங்கான கோட்டைதனைத்
தாஞ்சாயச் செய்த சண்டைதனை யென்சொல்வேன்
சித்திரை மாதமுதல் சிறந்தவா**னி மாதம்** வரை
மெத்தச் சமர்புரிந்தார் வேந்தரிரு வோர்களுந்தாம்
பூமிபுகழ் கும்பினியார் போட்டுவிடுங் குண்டாலே
**ஊமையன்** சேனை உமிழ்ந்தார்க ளாயிரம்பேர்
கோட்டை தனையிடித்தார் குறித்தபடி ராத்திரியில்
போட்டானே கோட்டை புரிந்தவன்செய் சண்டையினால்
வலுவேந்தர் கும்பினியார் மன்னவர்கள் சேனையினால்
சிலவாஞ் சிலபேர்கள் சென்று ரதையறிந்தே
**ஊமையன் சண்டையைப்போல் ஒருபோதும் நாமுமே**
**பூமியில் கண்டதில்லை** போரி லிவன்வலியோன்
சீராட்டி யவனுடனே செய்வதெனச் சண்டையெனப்
போரா டவன்மேலே புகைக்குண்டு போடலுற்றார்
குண்டுவந்து தாக்கிக் கோட்டையெல்லாந் தான்விழுந்து
மண்டபப் பெரும்புகையாய் வழியொன்றுந் தோன்றாமல்
கோட்டைதனை விட்டுக் குபீரென்று ஊமையனும்
ஓட்ட மெடுத்து ஓடலுற்று ரொண்டியதாய்
வம்பனவ னோடி மறைந்தா னவிடமதில்
கும்பினியார் கூடிக் கோட்டைதனைத் தான்பிடித்து
வெற்றிக் கொடிபோட்டார் மேவினர் கோட்டைதனில்
குத்தும்வெட்டு மாய்நடத்திக் கொன்றார் வெகுபேரை
ஒண்டியாய்த் தப்பிவைத்து ஓடிவரும் **ஊமையனை**

---

[1] சித்திரை மாதம்

மண்டி வருங்குதிரை வளைந்துவுருக் காணுமல்
பாலனெனு மங்கவனைப் பங்கப் படவுடலில்
மேலெல்லாம் வெட்டி. வெகுகாய மாக்கிவிட்டார்
ஆருத புண்ணில் அழுந்தியே யங்கவனும்
தோராத நெஞ்சுக்குத் தெய்வந் துணையெனவே
தப்பித் தனிவழியே தனியே யொருவனுமாய்ச்
செப்ப முடனே சிவகங்கை தன்னில்வந்து
தெப்பக் குளத்தில் சென்று குளித்தெழுந்து
அற்புதமா மென்று அள்ளியுண்டான் [1] கங்கைதனைத்
தாகந் தெளிந்து தன்மயக்கந் தான்தீர்ந்து
தேக உபத்ரமாய்ச் சிறுவர் புரியில்வந்தான்

விருத்தம்

தன்னர சும்தனி நகரும் நீங்கியே
வின்ன மாக மேனி வடுப்பட
மன்னன் வாடி மயங்கி மறுகினுன். (44)

வந்த மன்னன் சிறுவயல் மாங்கொண்டான்
அந்த மாநதிக் கானதோர் தென்கரைச்
சிந்தை நொந்து செடிமறை வெய்திட
வந்த பாரம் மறையவன் கண்டனன். (45)

வேறு

கண்டான் மறையவனும் காவலனு மவ்விடத்தில்
விண்டா னவனுமை விசார மதைக்குறிப்பால்
கேட்டனண் ணுவையன் கிலேச மிகப்பெருகி
ஓட்டம் நடையாக ஓடிவந்து முன்னுனில்
சா....தினென காயான் சங்கைதனைச் சூர்ப்பனகை
தானெடுத்து ராவணன்முன் சாற்றி யவன்குடியை
கெடுத்த விதம்போலக் கெடுதிஜய ஞல்மருதை
அடுத்தத ஞலே அய்யனுமே வந்துநின்று
ஊமைத் துரையும் ஒளித்தோடி யிங்குவந்து
தானே வொருவனுமாய்த் தட்டழிந்து நிற்கின்ருன்
கண்டேன் மாங்கொண்டான் கரைதனிலே யிப்போது
விண்டா னவன்வார்த்தை விளம்பத் தெரியுதில்லை
அய்வரவர் தமைத்திருமால் ஆதரித்த வாறதுபோல்
கைவிடா தங்கிவரைக் காக்கக் கடனெனவே
மகோதரன் ராவணன்பால் வகுத்த விதம்போல
வகையுரைத்த மாலியவான் வந்துநின்று ஈதுனக்கு
ஆகாது விராகவனுர் அம்புவந்து வுன்மேலே
வாகாகப் பாயுமென்று வசனித்த வாறதுபோல்
அருகிருந்த வட்டவணை ஆனமுத்திரு ளப்பனுடன்
முருகன்முத் துக்கருப்பன் வாய்திறந்தங் கேதுரைப்பார்

[1] நீர்.

அய்யா [1] மருதுதுரை அய்யனுரை கேட்டனரால்
வையம்புகழ் கும்பினியார் மனவாட்ட மாகுமுன்மேல்
அவர்கள் மனஸ்தாபம் ஆனதற்பின் நீயிருந்து
புவியாள வொண்ணுது பொல்லாத காலமிதோ
ஊமையனு மிங்குவந்தான் உனக்கவனு லென்னபலன்
சீமைத் துரைத்தயவை தியங்காவிட்டால் நல்லதன்று
அரக்கர் குலந்தன்னை [2] அய்யன்முன் வென்றதொப்பாம்
அறுப்பார்கள் கும்பினியார் அடம்நமக்கு ஆகுமதோ
கட்டபொம்மு தன்னைக் கடத்திவிட்ட வாறதுபோல்
விட்டுவிடும் ஊமையனை விரும்பாதே யாதரிக்க
இங்கிவன்தான் வந்து இருக்கின்ரு னென்றசொல்லை
அங்கவர்கள் கேட்டால் ஆகும்வித மெப்படியோ
உன்போல் மருதுதுரை ஒருகோடி வந்தாலும்
தென்பாகக் கும்பினியார் சிறுவெடிக்குப் பத்துமதோ
வேண்டா மவனை விரட்டுமென்ற வேளையிலே
வாண்டா மிவனுரையை மறந்துவிடு மய்யாவே
திசைபுகழு மிராகவனுர் [3] தேவிதனைத் தான்திருடி
அசோக வனச்சிறைறில் அமர்த்திவைத்தார் ராவணனுர்
தம்பியென்றும் பாராமல் சரணமென்ற [4] பூடணனை
நம்பினவ னென்று நாதன்முன் காக்கலையோ
அபயமென்று வந்தவரை ஆதரிக்க வேணுமென
உபசாரஞ் சொல்லுவது உலகில் வழக்கமிது
ஏனே விவர்தாமும் இடைஞ்சலாய்ச் சொல்லிவைத்தார்
தானுமது போல தயங்கவைத்தீர் சிந்தைதனை
என்றண்ணு வையன் ஈதுரைக்க வேதிரும்பி
அன்று கரணிக்கர் ஆகாது வென்றதையும்
மன்னன் மருது மனந்தனிலே தானினைந்து
தன்னுல் கெடுதி தான்தேடு மிராவணன்போல்
குன்னமே கும்பினியார் குறித்தாலுந் தப்பாமல்
தன்னவனுக் காகத் தலைகொடுப்போ மாமெனவே
மயங்கி மதிகலங்கி மகாராசர் கும்பினியார்
தயவைக் கெடுத்துத் தாரணியுந் தானிழந்து
பவுசும் சவுபாக்கியம் பாலனுடன் சுற்றமதைச்
சவுக்கியத்தால் தோன்று.... தானு மயிர்க்கவென்று
வேத னமைத்த விதியின் படியாலே
ஓதுமண்ணு வையன் உரைகேட்டுப் புத்தியது
வேறுபட்டுக் கும்பினியார் மீதி லமர்புரிய
நேரிட்டு ஊமையனை நிலைநிறுத்தி வைப்பனெனக்
கண்டு கரணிக்கர் காவலனைத் தாம்பார்த்து
விண்டுரைப்பார் பின்னும் வேண்டா மறக்ளிப்பீர்
பூமி யரசுனக்குப் பொருந்தவே தாங்கொடுத்தார்.
சீமை வரிப்பணத்தைத் தேவையில்லை யென்றுரைத்தார்

---

[1] மருதபாண்டியன். [2] இராமன். [3] சீதை. [4] விபீஷணன்.

சரிபேட்டி யுந்தனுக்குத் தந்தா ரதுவுமல்லால்
அரசாளப் பூமி அளிக்கின்றே மின்னுமென்று
வாக்குரைத்தா ரிப்பால் வழங்குவா ரப்படியே
போக்காதீர் வாணுளைப் புவியாளக் கிட்டாதே
பேதமன்றி நீகவர்னர் பேட்டிக்குப் போம்பொழுது,
ஏதேது புத்தி இயம்பிஞு ருந்தனுக்காய்
எல்லாமும் வீணுய் இழக்கின்றுய் மன்னவனே
பொல்லாத காலம் பொருந்தி யடுத்ததுவோ
பூமிமுழு தாளும் போர்வேந்தர் கும்பினியார்
சாமியவ ரென்றுலும் தகுமே பணிந்தவர்க்கு
மேலா யரசாட்சி விளங்குமே பாக்கியமும்
வாலாய மாக வளருமே மென்மேலாய்
அங்கவரைக் கோரி அமர்புரியச் சென்றவர்கள்
எங்கா கிலும்பிழைத்து இருப்பவரைக் கண்டதுண்டோ
சுற்றி யனலெழுந்து சூழ்ந்துவரும் வேளையிலே
மத்தியிலே சிக்கினபேர் வாய்க்குமோ தப்பவென்றுல்
புவியில்முன் இந்திரசித்தன் பொல்லாதா னென்றுரைப்பார்
அவனு மொருகணையால் அழிந்தவிதங் கேட்டிலையோ
சுயபுத்தி யுந்தனுக்குந் தோன்றுமல் போனுலும்
சுயமாக நாமுமக்குச் சொல்வழியே கேளுமென
உற்றவர்கள் கிள்ளைக்கு உரைத்ததொரு செய்கையெனக்
கர்த்தர் கரணிக்கர் கருதுமொழி யத்தனையும்
மறுத்தான் மருதுதுரை வாரவிதங் காண்பதென்றே
வெறுத்தார் கரணிக்கர் மேலறிவோ மென்றபின்னே

## ஊமையனை மருது அடைக்கலங் கொண்டது

வைத்திருப்போம் தேக வருத்தமதைத் தான்தீர்த்துச்
சத்ராதி யாணுலுந் தம்பி யழையுமென்றுன்
மருது துரையுரைத்த வார்த்தைகேட் டந்நேரம்
விருதுபுனை வெற்றி வேந்தன் சமாலிதுரை
ஆனை பரியுடனே அநேகம் விருதுகளும்
சேனை பதாதிகளும் செனமும் வெகுதிரளாய்ச்
சங்கீத மேளம் தவில்முரசு தாமுழங்க
எங்கு மிடியெனவே இரணபே ரிகைமுழங்கத்
தங்காம லூமையனைத் தானழைத்துப் பாங்குடனே
சிங்கார மாகச் சிவிகைதனில் தானிருத்தி
மருதேந் திரனுடைய மனத்து வலிவதனுல்
தெருவீதி சுற்றித் தீரன் பவனிவந்து
தங்க மதனுல் சமைத்தசதிர் மண்டபமாம்
ரெங்க விலாச ரத்தினசிம் மாசனத்தில்
வைத்தாரதி பாசுதனில் மருதேந்திரன் முன்பினிலே

வைத்தே சகலர்களும் வந்துநின்று பார்ப்பளவில்
ஊமையன் பட்ட உபத்ரவங்க ளுள்ளவெல்லாம்
வீமன் மருதுதுரை விளம்பக்கேட் டீதுரைப்பார்
கும்பினியா ருக்குக் குளுமையுடன் நான்வணங்கி
நம்பினவ னென்று நலமாகச் சேதிசொல்லிச்
சமாதான மாகத் தானுரைப்பே னங்கவர்கள்
அமராதே போனால் ஆனமட்டும் நாங்களுந்தான்
எதிர்த்துச் சமர்பொருது இயன்றமட்டும் பார்ப்பதுவே
மதித்தே னினிவிலக மாட்டே னென்றுரைத்து
வேறே யினிவார்த்தை வேண்டாங்காண் மன்னவரே
சீராகப் போர்முடிக்கச் செய்யவென்றார் யோசனையும்
மன்னர் சமீனருடன் மகாசேனை காவலர்கள்
தன்னவர்க ளோடுந் தளத்தைத் திரட்டுமென்றார்
ஆனைக் கடகமொன்று அசுவமனு வாயிரமும்
ஆனபடை யெழுபத் தையா யிரஞ்சனமும்
ஒட்டகை பன்னிரண்டு ஒண்டொடிக் காரருடன்
திட்டமுடன் வந்து சேர்ந்ததொகை தான்பார்த்தார்
விருப்பமுடன் பார்த்து வெள்ளைமரு தேந்திரனும்
திருப்பத்தூர்க் கோட்டைத் திறமாகக் காரிசனாய்
இருக்கு மிரசல்தாரை இயமனுலகஞ் சேர்த்துவிட்டு
பெருக்கமுட னப்பால் பிசகாமல் கும்பினியார்
தெண்மேல் படையெடுக்கச் சமயமென வப்போது
உன்பேரில் குற்றம் ஒருபோது மில்லையிது
அரவக் கொடியுடையோன் ஆனதுரி யோதனர்க்குத்
திறமாய்ச் சகுனியுமுன் தென்னிலங்கை மன்னனுக்கு
மகோதரனு மாக வந்தவித முந்தனுடைப்
பகுமானத் தைக்கெடுக்கப் பரிந்தண்ணா வையனிவன்
டம்பமாய்ச் சொல்ல நல்லதென்று வோர்ந்துமனம்
டொம்பனை நம்பி ரோசமதாய்ப் பூவுலகில்
கட்டாயம் படையெடுத்தால் காசினியில் டொம்பர்படை
வெட்டுமோ சேட்டதுண்டோ வீணாவிந் நல்லரசை
தோற்கின்றீ ரென்று சொன்னகா ணிக்கருடை
வாக்கை மதியாமல் மதிமோசம் வந்ததனால்
உடனே சலதாரை ஓடிவந்து போம்படிக்கு
அடைவாகத் தூதோலை அனுப்பவரக் கண்டவனும்
வேதுவந்த சேதி விவர மறியவென்று
மாதுவான் சீனி வைத்துவந்தான் சிறுவயலூர்
வந்தவனை ராத்திரியில் வங்கமோச மாய்ப்பிடித்து
சிந்தை கலங்கச் சிர்மருது போட்டுவிட்டார்
சென்றான் சமாலி திருப்பத்தூர்க் காரிசனாய்
நின்றவொரு கும்பினியை நிந்தனைகண் டுய்யாமல்
எகுவீர் மாட்டியன் முன்னிப்போ தப்பாமல்

வாகா விதையுரைப்பீர் வழிபார்த்துப் போங்களென
அரட்டியது காட்டி அந்நேரங் கும்பினியை
விரட்டியே ஆடானை மீதில் சமாலிவந்து
பொன்னெல்லிக் கோட்டை புகழுடையார் சேருவையும்
மன்னன் சிறுகம்பூர் வாழ்சர்க்க ரைப்புலவன்
அருகே சிலசேனை ஆதரவா யெல்லோரும்
உரிமை யுடனேதான் ஊர்க்கு வடமுகத்தில்
மங்கைநா தன்குளத்து வடகரையும் மேல்கரையும்
இங்கிதமாய்க் கூடாரம் இட்டு இறக்கலுற்றான்
இங்கே சமாலிதுரை இப்படிக்குத் தானிருக்க
அங்கந்தப் பாஞ்சை அவனிவச மானபின்பு
விரட்டிவிட்டு ஊமையனை மேசர்துரை காரிசனும்
அரட்டி....காயச் சேனைசில அங்கேதான் தங்கவைத்து
நெஞ்சுறுதி சொல்லி நீங்கா திருங்களென்று
அஞ்சுத லொன்று ப......ணம் அவ்வூர்......ரு....தி,

## கும்பினியாருடன் மருதுபடை துரைசாமி எதிர்த்தல்

நாலுபட் டாளமுடன் நல்லிராம நாதபுரம்
மேலே நடப்பதென விளம்பியே முந்துவந்தார்
வந்தார்கள் சிக்கல் வழியே வரும்போது
அந்த விதமறிந்து அழகுதுரைச் சாமியவன்
கொக்குத் திரளில் குதித்தரா சாளியெனச்
சிக்கல் வழிமறித்துச் சினந்து பொருதளவில்
நாலிலொன்று பட்டாளம் நமன்பா லடைந்தார்கள்
பாலன்துரைச் சாமி பாளையத்தி லப்பொழுதே
திரண்டுபெருங் கும்பினியார் செங்கைவெடி குண்டாலே
உருண்டார்மூ வாயிரம்பேர் ஒன்றுமே லொன்றாக
வாட்டந் துரைச்சாமி வகையறிந்து மேசர்துரை
கூட்டித் தனதுபடை கொற்றவரைத் தானழைத்து
நாடினார் ராம நாதபுரங் கோட்டைதனைக்
கூடினார் பாளையத்தைக் கொண்டுவந்து தானமர்த்தி
மாட்டினார் தம்மிடம்போல் வகையெல்லாந் தானுரைத்தார்
கேட்டா ரவரும் கிலேசமதை நெஞ்சில்வைத்து
என்ன விதத்தாலே இப்படிக்குச் செய்ததென
மன்னன் மருதுதனை வகைகேட்போ மென்றுரைத்து
ராமநாத புரத்தில் நல்லதுரை மாட்டீயனும்
தாமிருந்து விப்பால் சடுதியிலே சீட்டெழுதி
மலையாளங் [1] காஷனும் வைத்திருந்த பட்டாளம்
நிலையான......யுந்தா நீயழைத்து வரவெனவே
தானனுப்ப வந்த சங்கைதனைப் பார்த்தறிந்து
தானுவாய் வந்தான் கண்டா னுடையானும்

[1] எச்சரிக்கை.

வந்தவரைக் கண்டு வழிமறித்துத் தான்........த
அந்தச் சமயத்தில் அவர்கள்விடுங் குண்டுகளால்
ஆனையொன்று காலாள் அஞ்சுநூ ருறுபரி
தாமே யிதில்மடிந்தார் தயங்காமல் கர்னல்துரை
தட்டுண் டலையாமல் தன்தளத்தைத் தான்திரட்டிப்
பட்டணந் தேவைப் பதிவந்து மாட்டியனைக்
கண்டுபின் மேசரையுங் காரியமெல் லாமுரைத்துக்
கொண்டு அதிலிருந்தார் குறிப்பா யுடையணனும்
பட்டாளம் வந்ததுவும் பாரிவேட் டானதுவும்
திட்டமுள்ள கும்பியினியில் சிதைந்துரெண்டு போனதுவும்
தன்படையி லஞ்சுநூறு தானூறு வெம்பரியும்
மின்வெட்டி யானையொன்று விழுந்ததுவுங் கண்டெழுதிப்
பிடாரனேந்தல் வீற்றிருக்கும் பல........ச.........துரை
அடைவா யறியவென்று அனுப்பிவிடத் தான்பார்த்து
சென்றூர் கமுதிவழி சிறந்த தற்குடியில்
நின்று ரதிலிருந்து நேசமுடன் தானெழுந்து
பள்ளிம..........ந்து பாங்குடனே தம்பியரைத்
தெள்ளிழையாய்க் கண்டு திடஞ்சொல்லித் தான்நிறுத்தி
ஆயிரஞ் சேனை ஆதரவாய்த் தான்கொடுத்து
தாயகமாய்ப் பிடாரி தன்னில்வந்து வீற்றிருந்து
சேனைதனக் காதரவு செப்பியே கூட்டமிட்டுத்
தானிருந்தா னங்கே சமாலிதுரை யம்மானை

விருத்தம்.

இந்நகர் தன்னி லிவ்வார் இவனும்வீற் றிருக்க வப்பால்
மன்னவர் துரைக ளூமை வகையது விளங்கக் கேட்டு
அன்னவன் தன்னைப் பற்றி அடைவுடன் பிடிக்க வென்றே
சொன்னவார் பண்டயுஞ் சோல்சர் துருப்புமே புறப்பட் டாரே. (46)

மகனெனு மருது போர்செய் வகைதனை யறியா தானே
செகம்புகழ் துரைகள் கூடித் தேடிஊமை யன்மேல் நோக்காய்
வெகுகரு மருந்துங் குண்டும் வெடிகள்பீ ரங்கி யோடும்
சுகமுடன் கூட........பானத் துவரிமான் தன்னில் வந்தார். (47)

வேறு

துவரிமா விட்டுத் துரைநீர் மேல்நெருப்பு
சிலமா னூர்வெளியில் சென்றடித்தார் கூடாரம்
ஊமையனைத் தேடி உசாவிப் பிடிக்கவென்று
சீமைத் துரையவர்கள் சிந்தைதனி லேமதித்து
வந்து சிலையுமான் மாநகரி லேயிருக்க
அந்த விதந்தனையே அறியாம லேமருது
மக்களால் கும்பினியார் வகைமனிதர் போனதுவைத்
தக்கபுகழ் கவுணர் தானறிந்து தன்மேலே

படைவிடுத்தா ரென்று பதறியெண்ணிப் பாராமல்
திடமாய்த் தனதுபடை சேர்க்கையுடன் தானெழுந்து
**மணலூரில்** வந்து வாகாக வேயிறங்கிக்
குணம்வேறுய்ப் புத்தி குலைந்துஅபி ராமமதில்
இருந்த சமாலிதனக்கு இயல்பாக நம்மேலே
திருந்த கும்பினியார் சேனைமிக வாரதினுல்
காலையே வந்துவிடைக் **காட்டூர்க்** கெதிராகக்
கோலமுள்ள பீரங்கிக் குண்டு மருந்துடனே
**தென்கரையில்** முத்த னேந்தல் செழும்புவியில்
உங்கைச் சனமும் உரமாக நீதானும்
மறைவாய் முன்வந்து வழிகாட்டி நீமரித்தால்
விரசாகப் பின்பத்தி விரட்டியே நான்வருவேன்
**பூவனத்தைத்** தாண்டிப் புறப்பட்டுக் கும்பினியார்
மாவனமாம் **விருந்தா வனம்**வந்து சேருமுன்னே
.. .. .. ா வீரன் மதுரை வருவதற்குள்
தானே யெதிர்த்துச் சமர்புரிவோந் தம்பியரே
சீக்கிரத்தில் வாவெனவே செல்லவிட்டா ரோலைதனைக்
தாக்குடையான் பார்த்துத் தன்சேனைக் கீதுரைத்து
வேகமுட னெழுந்து வேந்த னிலந்தைமடம்
வாகான பாதை வழியே நடந்துவந்து
வான்ர வீர மதுரைக்குக் கீழ்ப்புறத்தில்
சேனை தளத்துடனே தீரன் சமாலியுமே
விருந்தா வனத்தில் விரைந்தடித்துக் கூடாரம்
இருந்தா ரனைவர்களும் எச்சரிக்கை யாகவுமே
இப்படிக்கு மன்னன் எச்சரிக்கை யாயிருக்கச்
செப்ப முடனே சிலைமான் தன்னைவிட்டு
........ச்சுதென்று நீர ..நருப்பூமைக் கணமக்கி னீசுதுரை
கூச்சடித்துத் **தப்பூரு** கூடாரந் தான்பிடுங்கி
மணலூருக் கருகுவர மருதுவந்து தானெதிர்த்துக்
கணவாய் வெடிசுடவே கருமருந்துங் குண்டுமாட்டு
சரகோபி பெற்ற பெருமாள் தனைப்பார்த்து
ஒருவார்த்தை சொல்வார் உன்னிடத்தி லிப்போது
அய்நூறு சரகோபி அழகுகாக நாம்கொடுத்தோம்
கைமீதும் வேந்தர் காவலர்மேற் செல்லாமல்
வைத்திருந்து என்ன வகையாகு மிப்போது
சுத்தவீ ரத்தனமும் துணிவுந் தெரிந்ததடா
மாற்றுன் பீரங்கி வாய்மூட வேசப்தம்
நாற்றிசையும் கேட்டு நடுங்கிக் கலங்கியதுபார்.
உன்னிடத்தி லுள்ள உற்றசர கோபியது
தன்னிலிட்டுக் குண்டு சாடுமென்று ரப்படியே
நாலணியா கப்பிரித்து நாற்புறமுந் தான்மறித்துக்
காலையே நின்று கனவேட் டெழுப்பலுநதான்

அவ்வேளை தன்னில் அடர்ந்து நெறுநெறெனச்
செவ்வே குலவைவயிட்டுத் திருமருது தானெதிர்த்துத்
திருபுவன முதலாய்ச் சிறந்ததொரு முத்தனேந்தல்
வரைவாயக் காலமட்டும் வகுத்ததொரு சண்டையிலே
மன்னர் துரைபடையில் வாகாக வேபகலில்
முன்னூறு சனமதுவும் முடிந்தார்கள் சோல்சேரில்
நூறுந் துரைமாரில் நொந்தவர்க ளாருடனே
தீரும் பரிதனிலே சிறந்ததுவு மைம்பதுவாம்
திட்டமுடன் மருது சேனையிலே காணரிதாய்
..........ா பரிநூறு மடிந்தவர்மூ வாயிரமாம்
அறிந்தான் மருதுதுரை அந்நேர வேளையிலே
விருந்தா வனத்தைவிட்டு வெகுண்டு சமாலிவந்து
பாராளுங் கும்பினியார் படையதனைத் தான்மறித்துத்
தாராள மாகச் சண்டை தொடுக்கலுற்றார்
முன்னே சமாலி முனைகொண்டு தான்பொருத
பின்னை மருதுநின்று பெருஞ்சண்டை செய்துவர
நரசிங்க மங்கலம் நடுக்கணமாய்த் திட்டதனில்
மோசமெனச் சிக்கு முசல்போல் நடுவாற்றில்
நடக்கும்நீர் நெருப்பு ரானுவங்க ளத்தனையும்
விடுக்கும்பீ ரங்கி வெடிகளுடைச் சண்டையுடன்
ஆறுப் பெருந்துயரை அடக்கி மனத்தில்வைத்து
வேறுபட்டு வானர வீர மதுரைதன்னில்
ஊருக்கு வடக்கே உயர்ந்தஇலுப் பைத்தோப்பில்
ஆலுக்குமேல் வாங்கரையில் அடித்தார்கள் கூடாரம்
இருந்தா ரொருபகல்தா னிரவுவந்து தோன்றியபின்
திருந்த யிதிலிருக்கச் செல்லாது ஆமெனவே
ஓதிப் படைகளுடன் ஒன்றுக்கும் அஞ்சாதீர்
சேது நகரமதில்...............ருமெனப்
பார்த்திபனூர் பாதை பாங்காய் நடக்கவென்று
சாத்திய வயல்வரப்பும் தனிக்குளமு மோடைகளுங்
கருதும் நடவுகளும் கனமாய்த் தொழிஉழவும்
சிறிது விடங்களிலே சேர விளைவாயும்
ஏரிகுள மேந்தல் எல்லாம் பெருக்காயும்
ஆற்றில் முழங்கால் அளவு சலம்வரவும்
வழியறியா மன்னர் மயங்கிவழி யூடறிந்து
தெளிவுந் தைரியமும் திடமாகி நீர்நெருப்பும்
வல்லிரவி லேயெழுந்து வயலூடே தான்வரவே
வெல்லவென்று பொல்லா வேந்தன் மருதுடைய
காட்டுக் கரசான கலங்கா மனமுடையோன்
கோட்டைச் சருதாரங் கொடுமையுள்ள முத்திருளன்
சங்கிலிப் பூபன் தன்னுடைய மன்னவரும்
அங்கே பசளை அணைவான வாய்க்காலில்

பதிவா யிருந்தவர்கள் ப்ட்டாளந் தன்னில்வந்து
கதியாக வேயெதிர்த்துக் கைகலந்த சண்டையிலே
ஓரா யிரம்பேர்கள் 'ஒழிந்தார்கரு' நாடமதில்
நேராகக் கும்பினியில் நிமிர்ந்தசெனம் நாற்பதுவும்
பீப்பாவில் ரெண்டும் பிடிகொடுத்துத் தான்திரும்பித்
தாப்பாக **வேகவதி** தன்னடுவே தானடந்தார்
அன்று அதுமருது அடைவுடனே தானறிந்து
சென்றே **புதுக்கோட்டை** செழித்தபெரும் எரிதனே
வெட்டிவிட்டார் கனமாய் வெகுநீள முள்ளகுளம்
கட்டியநீர் வைகைக் கரைபுரண்டு தான்வரவே
தெள்ளிமை யாய்மருது சினந்துபின்னே தான்துயர
வெள்ளமதில் கும்பினியார் வேகமுடன் போயிறங்கப்
பீரங்கி தோஸ்த்தானம் பெரிய வெடிகளுடன்
ஈரங் கருமருந்து எல்லாம் நனேவாகி
சிப்பாய் பயனீர் திரள்பரியும் சோல்சர்களும்
தப்பா துரையவர்கள் தன்னுடைய தானனேந்து
வல்லமையி ஞலும் மனத்துத் துணிவாலும்
**மல்லப்பை யன்தோப்பில்** வந்து கரையேறிப்
**பரமக் குடி**யில்வந்து பாங்குடனே தானிருக்கக்
குறும்பால் **மருதுமன்னர்** கூத்தங்கா லாறுமட்டும்
வந்து சமர்பொருது மனவேக மாய்த்திரும்பிச்
சொந்தப் படையுடனே **சூடியூர்** வந்திருந்து
வேசடைகள் தீர்ந்து வெகுகூட்ட மாயெழுந்து
வ்ாசமுடன் **மாரு மதுரை**வந்து சேரலுற்ருர்
பரமக் குடியிருந்த பாளேய்த்தைத் தாமெழுப்பி
விரும்பினீர் மேல்நெருப்பு வேகமுடன் **தேவைநகர்**
செல்லுவோ மென்று செப்பிவழி தான்நடந்து
வல்லோர் முதலூரில் வந்திருந்து தாமெழுந்து
தப்பாமல் அப்பாதை தானறிந்து அவ்வழியே
செப்பமுடன் **தேவை** சென்று அதில்வடக்கே
அல்லிக் குளமும் அய்யர்மடம் வீதிதன்னில்;
**(இடையில் மூலப் பிரதியில் இரண்டு ஏடுகள் இல்லே.)**
உருவே றவைதோன்ற ஓடியே யிப்பொழுதே.
நல்லவன் எனமைந்தன் **ராமசாமி நாயக்கனே**
நில்லாம லேயழைத்து நிமிடம் வருகவெனச்
சொல்லுமுன்னே சென்று துரைதா னழைத்ததெனச்
சல்லாபன் ராம சாமியவன் கேட்டவுடன்
ஏறிப் பரிமிசையே இயல்பாகத் தான்கடந்து
கோரியே மாட்டியன்முன் குணமாக வந்துநின்ருர்
நின்றவரைக் கண்டு நேரே முகம்பார்த்து
இன்று வொருவசனம் இயம்பக்கே ளய்யாவே
வெள்ளே மருது வேந்தன் தனேமுதலாய்ப்

பிள்ளையென்ற வார்த்தை பிசகாமல் நீயறிவாய்
எந்நாளு மிப்படியே இருக்கவென்று நாமிருக்கத்
தன்னு லவன்செய்த சதிமோசங் கேட்டிலேயோ
திருப்பத்தூர் தன்னில் சிறந்தீ சலதாரை
விருப்பமுடன் கொன்று வெகுவாய்க் கலகமிட்டான்
பாஞ்சை நகரூமைப் பகைவன் தனக்குறவாய்
வாஞ்சை யுடனே மருந்துகுண்டு போகவிட்டான்
தப்பிவந்த ஊமையனைத் தாபரித்து ஆதரவாய்
ஒப்பிவைக்கே னெ........உரசுமிகப் பாராட்டி
மக்களுடன் சேனை மன்னவரைப் போகவிட்டு
சிக்கலிலும் மதுரைத் தெருவழியே வந்ததொரு
கும்பினியார் தம்மைக் கொலைசெய்ய வேநினைத்தான்
அம்பத் தாறுதேசம் அரசாளும் நம்மையவன்
என்னமா யெண்ணி இருப்பானோ நாமறியோம்
இனிமேல் நம்மால் ஏதாவ தாவதில்லை
கொடும்பகை தான்செய்து கொண்டார்கள் கும்பினியார்
குடும்பத் துடனே கொலைசெய்வார் குற்றமில்லை
என்றுரைக்கக் கர்னல் இத்தனையும் புத்தியுடன்
நன்றாகக் கேட்டு ராமசாமி நாய்க்கனுந்தான்
துரையே யடியேன் சொல்லுகின்றே னோர்வசனம்
திறமா யதுபோலே செய்யவே வேணுமய்யா
ஈதுனக்கு வாகாது இப்போதே தப்பாமல்
கோதுசெய்த ஊமையனைக் கூட்டிநீ யொப்பிவைத்தால்
இதுவரையில் நீதான் எண்ணாமல் செய்ததெல்லாம்
விதமாய்ப் பொறுத்துனக்கு மேன்மான முண்டாக்கி
ஆத்து........ம் போற்றுதலும் ஆதரவாய் நாமெழுதிக்
காத்து அரவணைத்துக் காப்போ முனையெனவே
திருமுகத்தி லப்புத்தி தெளிவா யுரைத்துவிட்டால்
வருமவர்க்கு நல்லறிவு வாரா திருந்ததென்றால்
அப்பால் கமுட்டிக் கறிவித்து மன்னவரை
ஒப்புடனே தான்பிடித்து உயிர்த்தூண்டி போடுமென
ராமசாமி நாயக்கர் நவின்று ரதுபோல
தாமறிவோ மென்று சாத்தினு ருத்தரவில்
கர்னல் துரைகொடுத்த காகிதத்தைக் கைதனிலே
மன்னன்வேங்க டாசலமும் வாங்கியே பாங்குடனே
முத்......தாமா டசியிடம் மொழிந்ததனைத் தான்கொடுக்க
வித்தகனும் வாங்கி விரைந்துவரு முன்னேதான்
மாறு மதுரைவிட்டு மருதுதுரை தானெழுந்து
தானும் படையவரும் சங்கையுடன் பாதைவழி
சென்றூர் சிறுவயலூர் சிறந்திருக்கும் வேளையிலே
நின்றுமுத்துக் காமாட்சி நிருபந் தனைக்கொடுத்தான்
என்னடா வென்று இரும்ருதுங் கேட்பளவில்

மன்னவனே மாட்டியனுர் வரவிடுத்தா ரென்றுரைக்க
வாசிக்கக் கேட்டார் மருதிருவ ரந்நேரம்
தேசத் தரசர்விட்ட திருமுகமா மென்றுரைத்து
குஞ்சிரிப்புக் கொண்டு கூறுவா னப்போது
தஞ்சமென்று வந்தவனைத் தாபரித்தோ மிப்போது
வஞ்சகமாய்க் கர்னல் வரவிடுத்த காயிதத்தில்
நெஞ்சாரப் பொய்யை நினைத்து எழுதினதால்
இந்த எழுத்ததனை எப்படிநான் நம்பியடா
எந்தவிதம் ஊமையனை ஈவே னவர்களிடம்
ஆதலால் கும்பினியார் ஆனமட்டும் பாருமெனப்
பேதகமே எண்ணிப் பின்னேலை தான்வரைந்தான்.

### செய்யுள்.

வம்பர்க ளூமையனும் வெம்போர் விளைத்தவனும்
வாளா லுருகி வடுவாய்
நம்பா மலாரொருவ ரென்பா லடைந்தவனை
நான்காவா தார்காப் பவர்
அம்பரக வேயெனது தெம்பாக வந்ததினு
லுன்பாத வாதர விஞல்
வெம்பாதே யென்றுறுதி தெம்பாகத் தானருளி
வேற்றோர் வசம்விடுவ தோ. (48)

ஊமையனைக் காப்பதில்லை உங்களைநான் காப்பனென
உரைத்தா யாகில்
சீமையிழந் தெனதுதுணை யுறவுள்ளோர் சுற்றமுதல்
செத்தா லும்
நம்மினையே தகப்பனென்ற மொழிதவறி யுன்னைமுன்னே
நாள்கொண் டப்பால்
போமெனது உயிர்பிரிந்து கும்பினியா ருடன்பொரவே
புத்தி வைத்தேன். (49)

### வேறு

தோன்றவே யீதுனக்குச் சொன்னேனு னய்யாவே
வீணுவில் நீயெனக்கு விரைந்தெழுத வேண்டாங்காண்
என்னாலே நீதான் இரக்கமிக வுண்டாகி
மன்னு சகித்து மனம்பொறுக்கக் காரியமேன்
கமுட்டிக் கெழுதிவிடுங் கைதரவே வேண்டாங்காண்
அமட்டாதே யென்று அன்றெழுதிப் போகவிட்டார்
வந்தோலை தன்னை மாட்டியனுந் தான்பார்த்துச்
சிந்தை கலங்கித் தே........ா யெனவெறுத்து
ராமசாமி நாய்க்கர் நல்ல .[1] துபாசிதனைத்
தாமழைத்து வுன்சொல் தவருமல் நானெழுதி

[1] இருமொழி யறிந்தவன்; மொழி பெயர்ப்பாளன்.

அனுப்ப வவனவரைந்த அடைவுதனைப் பாரெனவே
மனம்பதறி வோலைதன்னை மாட்டியனுந் தான்கொடுக்கப்
பார்த்தாரே நாய்க்கரும்தான் பதறிமனம் வேருகி
மாற்ருனய் வந்தான் மகராச ராசதுரை
[1] மாட்டியனே இனிமேல் மனத்தயவு வேண்டாமே
காட்டும் இதுவிவரம் கமுட்டித்துரை மாரறிய
விண்டெழுது மென்ருர் வேந்தனிந்த மாட்டியனும்
கண்டெழுதி விட்டார் கமுட்டிக்குக் காகிதத்தைக்
காகிதத்தைப் பார்த்தார்கள் கவர்னர்துரை தான்முதலாய்
வேகமுடன் தேகம் வேர்த்து விறுவிறுத்துக்
கோபமுடன் துரைகள் கொடுமைகளாய்த் தாஞ்சீறி
சோப மிகவாகித் துரைகள் தனித்தனியே
ஆலோசனைகள் அவரவரா யுத்திபண்ணிப்
பாலகனுக் கும்பினிக்குப் பந்தமா யிருந்தமன்னன்
பாதக னுனதொரு [2] பாஞ்சைநக ரூமையனைப்
பேதகமாய்ச் சேர்த்துப் பிள்ளையிவ னிப்போது
என்ன நினைவெடுத்தான் ஏழைமதி யேன்படைத்தான்
இன்னுஞ் சிலகாலம் இருந்தரசு போற்ருமல்
தென்னிலங்கை வேந்தன் செல்வ மிழந்ததுபோல்
சின்ன நினைவெடுத்தான் தீய்ந்தது தவருசை
ஆனுலு மிந்த அ(வ)திசயமு மெய்தானே
மேனுளில் கர்னல் விரோதமுண்டு ஈததுவால்
கண்டெழுதி விட்டதுவோ கர்னலு மப்படிக்கே
விண்டெழுத மாட்டார் வீணென்று சொல்லுவரோ
வங்காள மீழம் மலையாளங் கொங்குமுதல்
எங்கு மொருகுடைக்கீழ் இருந்தரசு கும்பினியார்
ஆளும் வகையறிந்து அறிவழிந்து விட்டானே
பாழான புத்தி படைத்தான் மருதிவன்ருன்
மாநிலத்தில் வானம் வளைந்து பொழிந்ததெனச்
சேனை பெருத்தமன்னர் தேசத்தா ரென்றறிந்தும்
பட்சமுடன் சந்திரன் பாரித் தெழும்போதில்
நட்சத் திரமெதிரே நகைத்து மறித்ததுபோல்
அஞ்சாமல் சற்றும் அறியா மதிபடைத்துக்
கொஞ்ச நினைவெடுத்துக் குறைந்தா னுயிரிழந்தான்
முன்னுலே லண்டன் முடித்தெழுதுங் காகிதத்தை
என்னுளும் பொய்யென்று அறிந்துவிட்டோம் நம்பாமல்
அந்நாள் முதல்சினுகு ஆரம்பம் தானிசமே
இந்நாள் மறவேல் எழுத்து நிசமாகும்
ஆகினு மின்னும் ஆலோசனையில்வைத்து
வாகுடனே பின்னும் வருங்கா ரியமறிந்து
மன்னன் மருதுசெய்த வரும்ம் நிசமானல்
நன்னயமா யப்பால் நடத்துவோ மாக்கினைகள்

[1] மார்ட்டின். [2] பாஞ்சாலங் குறிச்சி

என்னவே சொல்லி எல்லோரு மோர்மனமாய்
மன்னரா லோசனையில் வைத்தா ரொருமாதம்
கூட்டம் பெரிதாய்க் கேட்டுமிகக் கூடியவர்
காட்டுப் புலிமருது கலக்கமதை யுள்ளறிந்தார்
ஊமைய ஞலே ஒண்டிப் புலிமருது
சீமையுடன் வாழ்வும் சிரசிழந்து போக வென்று
**மதுரை** முதல்கிழக்கே **மல்லப்பையன் தோப்புவரை**
எதிராடி நம்மோடு எதிர்த்துப் பொருதுநின்றுன்
வல்லமைகள் செய்த **மருதேந் திரன்**றனையே
கொல்லவென்று கும்பினியார் கூறிச் சபதம்வைத்தார்
வைத்தார் மனம்வெறுத்தார் **மருதுமன்னர்** தன்பேரை
இத்தலத்தி லில்லாமல் எடுக்கவே வேணுமென்று
வீரக் **கெடிப்புலியான்** வெகுதேசங் கைவசமாய்ச்
சீறிச் சமர்பொருது செயங்கொண்ட ராசசிங்கம்
[1] **மேசத்தரக்கி னீசு**தனை விரையவே தானழைத்துப்
பாத்தியாக் **கர்னல்** பரிந்தெழுதி யேவிவிட்ட
காகிதத்தைப் பாரென்று கமுட்டியார் தாங்கொடுக்க
வாகுடனே **வக்கினீசும்** வாங்கியே காகிதத்தைப்
பார்த்துக் **கெடிப்புலியான்** பார்வேந்தன் **அக்கினீசும்** ;

**(இடையில் எட்டு ஏடுகள் மூலப் பிரதியில் இல்லை.)**

மாய்க்கவே கூடி வந்தவயிற் தன்னிலேதான்
நூற்றும் பதுவயிற்கள் நொடியிலே மடிந்தார்கள்
பார்த்தாரே **வக்கினீசும்** பதறியே கோபமுற்று
முதல்நாளி லிப்படிக்கு முடிந்தானே சண்டையிது
இதமாய் மறுநாள் எதிர்த்தக்கா லெப்படியோ
எம்மாத் திரமெனவே எண்ணினேன் நான்**மருதை**
சும்மா யிருந்ததனுல் துண்டித்தான் சேனைதனைப்
புத்தியினுல் யோசனையைப் பொருந்தியே நான்மிதமாய்ப்
பித்தனைப்போ லேயிருந்தேன் பேர்வாங்கி ஞன்**மருது**
வெய்யோனைக் கண்டபனி வெருண்டதொரு பாவனையாய்ச்
செய்யுவேன் பாரெனவே சினந்தெழுந்தா **ரக்கினீசும்**
பட்டாளந் தன்னைப் பயிலச்சொல்லிப் பின்னிருத்தித்
திட்டமுடன் காப்பிரிகள் சேனைப் பரங்கிகளை
முட்டவிட்டு முன்னே முனையாய்ப் பொருமளவில்
விட்டபனி ரெண்டு பீரங்கியும் வேட்டெழுப்ப
குண்டும் புகையும் குபீரென்று தானெழுந்து
வண்டன் தளத்தில் வந்து விழுந்ததுவே
முண்டன் தலையுருள மூளை சிதறிடவே
மண்டிக் குடல்சரிந்து மடிந்தாரே நூறுசனம்
**கண்டுவா ராப்பூரான்** காவலவன் தான்முதலாய்
வண்டன் சுவர்ன மன்னவனு மீதறிந்து

[1] மேஜர்

மீறும லக்கினீசு மேதினிக்குள் வாராமல்
போராட வென்று போய்வனைந்தா ரந்நேரம்
பொருதார் மனவலிவாய்ப் போய்க்குதித்து வீம்புடனே
பெரும்போ ரதுபுரிந்து பேசுவா ரக்கினீசும்
தாரணிக்குள் வந்துவிட்டால் சமர்புரிந்து வீணுமே
போரினிமேல் செய்யப் போருக்கு நம்மாலே
நாடும் வணங்கிவிடும் ராச்சியமும் போய்விடுமே
வீடு மிழந்து மெலிந்திடுவோம் நாமுமே
திருப்பத்தூர்க் குள்ளே செல்லாம லக்கினீசை
நெருப்பா யெதிர்த்து நேருவோம் வாருமெனக்
காளிலிங்கா வெங்களுக்குக் கைவெற்றி தாருமென
வாளாலே வெட்டி வைத்தா ரடிக்கடியே
கண்டக்கி னீசும் கலங்கிமனம் வேருகி
வண்டப் பரங்கியையும் வம்பரந்த சோல்சரையும்
பீரங்கிப் பன்னிரண்டைப் பெரும்போர் புரியுமென்ன
கூறவே யக்கினீசு கூறு மொழிப்படியே
அஞ்சுநூறு வேட்டு அரைநொடியி லேமுழக்க
வெஞ்சமரி லக்கினீசு விட்டபெரும் வேட்டதனுல்
வாராப்பூர் நன்னி மன்னன் தளந்தனிலே
சீராக வன்று சிதைந்தாரை நூறுசனம்
சிக்கனவே நன்னித் திரும்பப் பொருகையிலே
அக்கினீசு பாளையத்தில் அடைவாக வப்போது
வாறு சனத்தில் வகைநூறு மாண்டார்கள்
சீறிச் சினந்து திகைத்துவக்கி னீசுதுரை
ஒருமித்துச் சேனைதனை உல்லாச மாயெழுப்பித்
துருமத்தி ஊதித் துரையுங் கவுரியுடன்
தேருந் திருக்குளமும் சிவாலயமுந் தான்சிறப்பாய்
ஊரும் பெரிதான ஊடையமும் கோட்டைகளும்
வாடி புருட்டிகளும் மதிலுமதில் கட்டரிப்பும்
தேடியே வக்கினீசு திருப்பத்தூர் வந்துசென்றான்
வாடாம லக்கினீசும் வந்துவிட்டா ஞூர்தனிலே
காடியிலி யதுபோல் கலங்கினன் நன்னியுந்தான்
மீறியே யக்கினீசும் விரைந்துவந்தா னுகையினுல்
தேடியே யின்னும் சினந்து பொருவமென
வாராப்பூர் மன்னன் வாசனச் சுவர்னனுடன்
கூறுகின்ற வார்த்தை குன்றக் குடிதனிலே
தானைய மாகச் சதிரா யிருந்ததொரு
வேனை படையுடனே வேல்முருகு தான்கேட்டு
வந்தான் திருப்பத்தூர் மாநகரி லக்கினீசின்
தந்தளத்தைப் பார்த்துச் சகிக்கா மனமுடையான்
வந்துவிட்டா னக்கினீசும் மருதுதுரை யின்னவர்க்குச்
சொந்தமில்லை யின்னித் துலையரச் சுவர்னலிவர்க்கு

அப்பா லினிமேல் ஆரரசு ஆண்டுமென்ன
மெப்பாகு மோநமக்கு மேவாத ரிப........சா
திருப்பத்தூர்க் கிப்பால் தெற்கே விடாதபடி
நெருப்பா யெரித்து நிலேக்காம லேயெழுப்பி
வெல்லுவோம்நாம் நம்முடைய வீரமது வுள்ளளவும்
கொல்லுவோ மென்று கூறியே கோபமுடன்
வேல்முருகன் சீறி வேகமுட னந்நேரம்
கால்தளமோ ராயிரமும் கடுகவே தானதிரண்டு
வீமன் திருமாலே மேளுள் துதித்ததுபோல் ;

## திருப்பத்தூரில் கும்பினியாருடன் வேல் முருகு முதலானவர் பத்துநாள் சண்டையிட்டது

தாமும் வயிரவனேத் தாராள மாய்த்துதித்து
வேலெடுத்துக் கட்டாரி வீரன் மனத்திறமாய்க்
கால னெனக்குதித்துக் கால்தளத்தைக் குத்தலுற்றுன்
சோல்சர் பரங்கித் துடியான காப்பிரிகள்
மாசேனே யுள்ள வயிற்கள் சகலோரும்
ஏகக் குரலெழுப்பி இரைச்சல் வெகுவாகிச்
சாகின்றேம் வீணுய்ச் சண்டாளன் ஊமையனுல்
வெள்ளே மருது வீரன் படைவிடுத்துக்
கொள்ளேத் தளத்தைக் கொல்லுகிரு னன்பிதுக்கோ
வந்தோந் திருப்பத்தூர் மண்ணில் சகலோரும்
வித்தையுடன் மாள விதித்தா னயனெனவே
என்று தளம்வெருள இத்தனேயும் அக்கினீசு
அன்று விழியால் அறிந்துங் கலங்காமல்
சீட்டிங் கெழுதித் திரட்டித் தளந்தனேயும்
கூட்டமிட்டு நன்றுய்க் கோட்டைபோ லேவளேத்துக்
காப்பிரிகள் சோல்சர் காலாள் பரங்கிகளும்
ஆப்புச்சேர் தில்லரியும் அடர்ந்து சமர்பொருதார்
சோல்சர் பரங்கி துஞ்சிஞ ரம்பதுபேர்
வாசமுடன் வேல்முருகு மன்னவனு மப்பொழுது
ஆதித்த னேடி அத்தகிரி சேரளவும்
............த்துச் சண்டை வளமாய் நடத்துகின்றுன்
அப்பா லிருளெனவே அகற்றுன்தன் சேனேயுடன்
அப்படியே யக்கினீசும் அமர்ந்தார் படைவிலகி ;

### விருத்தம்

இரவு முப்பது மவரவர் தானேய மெய்தி
வரவு செங்கதி ருதயம தானபின் மன்னர்
துரவு கண்டெதி ரக்கினி சேனேயைத் துரிசாய்க்
கரைவு செய்வதென் றவரவ ருரமது கருத ; (50)

வேறு

கருதிக்கதி ரோனைக் கண்டும்......த வேல்முருகு
உறுதியுடன் சேனையதன் உடனே யுரத......ந்து
வசதிமிகப் பார்த்து மன்னனக்கி னீசுடைய
அசதிகண்டு கோட்டை அணைவாக வேநடந்து
கீழ்த்திசையி லோர்வகுப்புங் கெட்டியாய்ச் சேனைசிலர்
வாள்வீரர் மேற்கே வகுப்புமொரு சேகரமாய்
வந்து வளைந்திடவே மன்னனவ னக்கினீசு
தந்தா யிவர்கள்வரும் சமர்த்தை யறிந்துதுரை
நான்கு திசைக்கும் நாலணியாய்ச் சேனைதமை ;

(இடையில் ஆறு ஏடுகள்வரை மூலப் பிரதியில் காணப்பெற்றில.)

## ஒக்கூர்க் காட்டில் நன்னிப் படை சண்டை

பார்த்தே அவன்வலிவும் பகருவேன் நானையது
காணுவீர் நெஞ்சங் கலங்காமல் நானுமக்குத்
தோன்ற வுரைப்பதற்குச் சொல்லும்நிற் மா......மொழி
சிறுவர் புரிக்குச் செல்லவென்றல் சீக்கிரத்தில்
வருமிவ் வனத்தால் வடிவேறு கண்டிருந்தால்
செல்லெனவே யக்கினீசு துரையீ தெடுத்துரைக்கச்
செல்லலாஞ் சோழபுரம் சென்றக்கால் நம்மைவந்து
பொருமென்று சேனை வகையெல்லாந் தான்குறித்து
கோட்டை யெனத்தளத்தைக் கொற்றவனுஞ் சுற்றுவிட்டு
வேட்டெழுப்பி ஒக்கூர் வெளிகடந்து கானகத்தில்
ஓட்டமென நடக்க ஓடிவந்து நன்னிபடை
காட்டில் வழிமறித்துக் கடிந்து பொரலுற்றார்
பொரும்போது நன்னி புகலுவான்........னருக்குப்
பெரும்போர் நடத்துமெனப் பேசினர் ரோசம்வரத்
திடமாய்ச் சமர்புரியச் [1] சேர்னல்க்கி னீசுபடை
அடைவாக வாயிரம்பேர் அழிந்தா ரறிந்துதுரை
பனீ......னைவே சொன்ன படியே மருந்துகுண்டு
பலமாகப் பன்னிரண்டு பீரங்கி தள்ளிவிட்டுத்
தொடர்ந்தார் சுடுகவெனச் சுட்டகுண்டு பட்டவுடன்
படிந்தார்கள் வேல்முருகு பாளையமிரண் டாயிரமும்
பின்னு மதுபோலப் பீரங்கி வேட்டெழுப்ப
நன்னிச் சுவர்ணதுரை ராணுவத்தி லப்படியே
ரெண்டா யிரம்பேர்கள் நிமிசத்தில் பட்டுவிட்டார்
கண்டா ரவரவர்கள் கலங்கினா ரக்கினீசும்
கொண்டார் கடுங்கோபம் கொளுத்தும்பீ ரங்கியெனப்
பண்டுபோல் குண்டும் பருமருந்தும் போட்டிடித்து

---

[1] ஜெனரல்

விட்டா ரதனுலே வேல்முருகு சேனையிலே
பட்டார்கள் நானூறு படைமன்னர் போனதுவே
ஈதறிந்து நன்னி இராணுவஞ்செய் சண்டையினுல்
வேதனையா யக்கினீசு வேந்தனுடைத் தன்படையில்
அந்தக் கணமே அழிந்தார்க ளறுவ்துபேர்;

**சோழபுரத்தில் பாளையம் வந்திறங்கிக் கவுரிவல்ல ராசா ஆனைமேல் பவனிவந்து கொலுவிருக்கையில் நாடுகள் வணங்கினமை.**

சிந்தி விழுந்த சேனைதனை யேதுரையும்
வண்டியின் மேல்வைத்து வாகாய் நடக்கலுற்ருர்
அண்டினுர் சோழபுரம் அடைந்தார்கா **ணம்மானை.**

**விருத்தம்**

சோழநன் னகரில் வந்து துரையுடன் **கவுரி** தானும்
நீளவே கொடியும் போட்டு நிறைந்தகாப் பிரியுஞ் சோல்சர்
பாளையத் துருப்புஞ் சுற்றிப் பதிவுட னிருத்தி நன்ருய்
ஆளல்லாம் நகர மென்றே அங்குவீற் றிருந்தார் மன்னர். (51)

**வேறு**

கோவிலுக்குத் தெற்கே குளத்துக்குக் கீழ்ப்புறமாய்க்
காவு மிளந்தோப்புங் கந்தவனப் பொய்கைகளும்
தேருந் திருமதிலுஞ் சிறப்புந் தெருவுகளும்
ஊரும் வசமாய் உயர்ந்த கிராயிமேட்டில்
மங்கோட்டை போட்டு மரக்கோட்டை சுற்றிவிட்டுப்
பொங்கோட்டை யாய்க்கவுரி புடைசூழ வேயிருந்தான்.
**ஆக்கினீ சுங்கவுரி** அரசன்றனைக் கம்பாரி
மிக்கவே மீதேற்றி வீதிசுற்றித் தான்பவனி
விந்தையுடன் வாருமென வேந்த னுரைப்படியே
சந்தோஷ மாகத் தானே பவனிவந்தார்
பவனி வலம்வந்து பாங்காய்க் கொலுவிருக்க
அவனிபுகழ் நாட்டார் அணியணியாய் வந்துகண்டார்
நாடு **கவுரி**தனை நலமாய் வணங்கினதால்
வாடியே **வேல்முருகு** மன்னன் **நெடுவயலான்**
கூடியே **வாராப்பூர்** கொற்றவனும் நன்னியுந்தான்
ஆடியே தேகமது அறவே மதிகலங்கி
நம்மாலே யானமட்டும் நடத்தினேம் போரதுவும்
சிம்மமென **யக்கினீசு** திடாரித்து வந்துவிட்டான்
நாடும் வணங்கினதால் நாடுகைக் கொண்டுவிட்டான்
வாடியே நாமும் வனவாசம் போவதென்ருன்

இப்படிக்குச் சொல்லி இருந்தவர்கள் தாந்தெளிந்து
எப்படியோ காளை ஈச னருளாதுகாண்
பாண்டியநந் தனனுயுசும் பவுசுநதி சாபலனும்
ஏண்டா லிதுவரையும் இந்தமட்டு மக்கினீசு
தாண்டித் தலைபிழைத்துத் தப்பி வருவதுண்டோ
வேண்டாத காலம் விதியு முடிவாகி
ஆளலா மென்று அதிகாசை தன்னுடனே
**சோழபுரங்** கவுரி துரைவந்து சேர்ந்துவிட்டான்
என்று மதிகலங்கி ஏங்கிய மன்னவர்கள்
சென்றுதான் சோழ புரத்துக்குத் தென்கிழக்காய்
இறங்கினார் பாளையமும் எண்ணவொண்ணுச் சேனைதளமு
உறங்கி யிரவுதனில் ஒன்றொன்றாய்த் தானழுவிச்
சென்றார் கவுரி மகாராச தீரனிடம்
நின்றார் வணங்கி ரட்சிக்க வேணுமென்றார்
பத்துநாளுக் குள்ளாகப் பாதித் தளங்குறைந்து
வித்தக னக்கினீசு வேந்தனிடஞ் சென்றார்கள்
கண்டார்கா ணக்கினீசுங் காவா னஞ்சதுவைக்
கொண்டார் தரித்துக் கொடுத்தே படியவர்க்கு
உண்டு சுகமாக உதவிசெய்வீ ரெந்தனுக்கு
**வண்டன் மருதினிமேல் வாழ்வதில்லை யிவ்வுலகில்**
**ஆள்வான் கவுரி** ஆதரவா லுங்களுக்குத்
தாழ்வின்று வாழ்ந்து தயங்கா திருப்பீரென
அங்கவர்க ளக்கினீசு ஆதரவா லேயிருக்க
இங்கிருந்த **நன்னி** இனம்பிரிந்த மானுகிக்
கண்டா னருகிருந்த காவலாள் குறைந்ததையும்
விண்டு **நெடுவயலான் வேந்தன்**முத லுள்ளுடைந்து
போனவர்கள் போகப் .... தியுடன் அங்கிருக்க
ஆனவரைக் கூட்டி அமர்புரிந்தார் ராப்பகலாய்
முப்பது நாளாய் முதிர்ந்துவரும் சண்டையிலே
தப்பினார் நன்னி தளத்திலிரு நூறுசனம்
மிஞ்சினவர் போ .... வந்தனக்கி னீசுகுண்டால்
துஞ்சினார் பஞ்சாய்த் தொலைந்தவராய் யாயிரமாம்
திக்கோர் புகழ்கின்ற **சேர்னலக்கி னீசுதுரை**
தக்க தொருபடையில் சிதைந்தவரைத் தள்ளிவிட்டு
ஒருமாதஞ் சோழபுரம் ஊடையத்தை விட்டெழுப்பி
... மாயச் சிறுவை நகர்க்கோங்கி நடக்கலுற்றார்

**விருத்தம்**

மழைக்கா லிருட்டு முகில்போல் கவிந்து
மழைமாறி பெய்ய வழியில்
தலைகாலி லிட்ட வகைபோ லுலைகள்
தளந்தன்னி லுற்று சலமாய்

வழியோ திகைத்து மனமே விடைந்து
வருபாதை யொன்று மறியா
துளைமீ தெழுந்து வளமே குறைந்து
உடையோ வுடைந்து நடவே. (52)

**வேறு**

சிறுவர் புரிநோக்கிச் சொர்னல்தளந் தாம்நடக்கப்
பெருமை யுடனே பிறகே தொடர்ந்தவர்கள்
நன்னியுடன் வேல்முருகும் ராணுவத்தா ருள்ளவரும்
இன்றளவில் நம்மால் இயன்றமட் டும்பொருவோம்
என்ன வெழும்பி எதிர்த்து மரிக்கலுற்றுர்
தம்மையே **வக்கினீசு** தளம்போய்க் கவிந்தார்கள்
இருவருடைப் படையும் இகலிப் பொருகையிலே
வருவீரென வக்கினீசு வேட்டுமிகப் போட்டிடவே
பீரங்கிக் குண்டும் பெரும்புகையுங் கண்டவுடன்
வீரங்கள் விட்டு விலகினுர் நன்னிபடை
கதிரோ னவன்கிழக்கே கடுவேக மாயெழவே
சதிராக வக்கினீசு தாய்முகத்தைக் கண்டவர்போல்
முக்கியமாய்த் தேறி விடிந்த தெனத்தெளிந்து
ஒத்திட்டுச் சேனைகளை ஒருகும்பாயத் தான்திரட்டி
அன்னம் புசிக்காமல் யாதொன்றுந் தேடாமல்
வெந்நீ ரருந்தாமல் வெகுவா யிளைப்புடனே
இந்நாள் **மருது** இருக்குஞ் **சிறுவைநகர்**
தன்னைப் பிடித்துத் தாகந் தெளிவதற்காய்ப்
பசிக்கு வமுது பதினைந்து நாழிகைக்குப்
புசிக்கி றேனடிப்பன் புசிப்பு மவிடமென
இப்படியே சொல்லி எகுமென்று பாளையத்தைச்
செப்பமுடன் அமட்டிச் சிரங்காட்டை விட்டகன்றுர்
வழியும் வெளியும் வ .............. ப் புகழும்
தெளிவாகக் கண்டு சேனையவை முன்நடக்கக்
காட்டையுமே தான்கடந்து காவலவ னக்கினீசு
ஓட்டம் நடையாக ஓடிவரும் வேளையிலே
கண்டாரே கோபுரமும் காசினியுந் தோப்புக்களும்
விண்டால் தெரியுமென வேந்தனைப்பார்த் தீதுரைக்க
இதுவே சிறுவைநகர் என்னவே மன்னவனும்
அதிக மகிழ்ச்சிகொண்டு அப்படியா வென்றுரைத்து
இறந்த தளங்களையும் எறிட்டுப் பாராமல்
விரைந்து வண்ணுர்கள் வீதிவழி வந்ததுவே
வந்தார் **சிறுவைநகர் வண்ணுன் குளந்தனிலே**
கந்தவனங் கடந்து காடுவெளி விட்டகன்று
வந்திடவே **யக்கினீசு** வண்ணுன் குளந்தனிலே
சிந்தை கலங்கிச் சிறுமருது **பாண்டியனும்**

ஆங்கார மாக அக்கினீசு வந்ததைத்தான்
மாங்கொண்டான் பொய்கை வடகரையில் மாந்தோப்பில்
வாலே விசுவை மருதேந்தி ரன்கொலுவில்
மேலே வடமுகமாய் வீற்றிருந்தா னந்நேரம்
மாற்றான் வருவதையும் மறித்துப் பொருவதையும்
பார்த்துமரு தேந்திரப் பாண்டியனுந் தான்மயங்கி
இன்றோடொழிந்ததுகாண் இந்தச் சிறுவைநகர்
நன்றாய் நமக்கு நமன்றானும் வந்துவிட்டான்
எத்தனை கட்டா விருந்தும் வெகுதளத்தை
வைத்திருந்தும் வீணாய் மாற்றானை வெல்லாமல்
வீணாய்ப் பலதிசையில் வீற்றிருக்கச் சொல்லிவிட்டு
வீணாவில் நாமிருக்கும் வீட்டைக் கொடுத்துவிட்டோம்
இனிமே லெண்ணம்.... ரு ...... னையி ...... யை
மன்னன் கவுரி வல்லவனுங் கைவசமாய்
ஆள்வான் சிவகங்கை அரசு மவனாக
மாள்வோம் நமது வமிசங்க ளுள்ளளவும்
பட்டணத்தி லுள்ள பரிசனங்க ளெல்லோரும்
திட்டமுடன் காட்டில் செல்லுமென விப்போது
பாரி யறையுமென்றார் பட்டணத்தோர் தாமறிய
ஊரில் சகலோரும் ஓடிப் பிழையுமென்னச்
சிறுவயல் நாகலிங்கம் சிறுமருது சொற்படியே
வெருவித் தமுக்கறைய வேந்தனுடை யுத்தரவால்
ராக்கன் லோடிக்கு நவின்றா ரவனுமங்கே
சீக்கிரமாய்ச் சென்று திறமாய்த் தமுக்கறைந்தான்
சுற்றி யிருந்த சூழ்நகந்திப் பொய்கைதன்னில்
குத்திலே நாய்கழுதை கொடுபோய்ப் போடுமென
விருப்பமுட னக்கினீசு வீற்றிங் கிருக்காமல்
நெருப்பைக் கொளுத்து நிமிஷத்தி லென்றுரைத்தார்
தன்னுடைய பாளையமும் தானுஞ் சிவிகையின்மேல்
அந்நேர மேயெழுந்து ஆரணிய மானதொரு
சித்திர வனமான தண்டகா ரணியமெனும்
வெத்தியூர்க் காட்டில் வேகமுடன் போகவென்று
சிறுமருது பாண்டியதுரை சேனைபரி வாரமுடன்
அருமையுள்ள பாலர் அந்தப்புர மாதருடன்
மக்கள் மருமக்கள் மார்கள் மனைவியுடன்
சக்கந்தி வெங்கணப் பெரியுடையார் தம்முடனே
அடங்கலுங் காட்டிலே அடைந்தார்க ளந்நேரம்
திடங்கொண்டு வக்கினீசு சேனை தளத்துடனே
மன்னன் சிறுவைநகர் வந்திறங்கிப் பாளையமும்
சின்னப்பூங் குடிவெளியில் சென்றடித்தார் கூடாரம் ;

## அக்கினீசு துரையும் கவுரிவல்லவ ராசாவும் சிறுவயல் பாளையம் வந்திறங்கியது.

பூங்குடிக்கண் மாயப் பெரிய வழிதனிலே
பாங்காகக் கூடாரம் பதறாமல் தானடித்துச்
சந்தோஷ வேட்டுத் தருகாமல் தான்தீர்த்து
பந்தயமுஞ் சொன்னபடி பாவட்டா வும்நிறுத்திப்
பாரிபடு களமும் பத்திரமாய்க் காவலிட்டுப்
பூரித்து லக்கினீசு பொசித்தானே டிப்பனுந்தான்
வாராப்பூர் வேந்தன் மன்னன் நெடுவயலான்
சீரான வேல்முருகும் சிறுவயல் நன்னிமுதல்
சினிக்கண மாய்ரெண்டு சிறந்திருக்கும் பூங்குடிக்கும்
தானவர்கள் தெற்கே தானையமாய்த் தானிருந்தார்
இறங்கினர் மன்னர் சிலேசயிக வுண்டாகி
இரங்கினார் சண்டை எதிர்த்துப் பொரதுற்றார்
பொருஞ்சமரி லன்று பூபால னக்கினீசு
வரும்படையில் நானூறு மடிந்தார் மடிந்ததுலே
அக்கினீசு பார்த்து ஆங்காரங் கொண்டெழுந்து
பக்கத்தில் நின்ற பனிரெண்டு பீரங்கியும்
எழுப்புமென்றார் வேட்டு எல்லோரு மோர்முகமாய்
எழுப்பவருங் குண்டால் இங்கிருந்த நன்னிபடை
மடிந்தவரு மோடி மறைந்தவரு மாகவுமே
முடிந்தார் சரிவரவே முடிவேந்த ரீதறிந்து
இனிநா மார்போரால் என்னபல னுருமென்று
மன்னன் மருதிடத்தில் வந்துரைத்தா ரெல்லோரும்
வந்துரைத்தார் தம்மை மருதுமன்னன் தான்பார்த்துச்
சிந்தை கலங்கிச் செப்புவா ரப்போது
இங்கே யினிநம்மால் எதும் நடப்பதில்லை
உங்கள் மனத்துக்கு உகந்தபடி செய்யுமினி
நாட்டை யெதிரிவசம் நலமாகக் கொடுத்துவிட்டோம்
காட்டையினி யாறுலுங் காயந்து செய்திடுவோம்
வாடி யுருட்டி வழிக்குவழி குத்துமுள்ளும்
தேடிப் பறம்புமுள்ளும் சிறுவழியுந் தானடைத்துக்
கட்டாப்பு மூடையமுங் கனத்ததொரு மெட்டுகளும்
திட்டமுடன் பீரங்கி சிறந்ததொரு மேடைகளும்
மோரிசா போட்டு முடிந்தமட்டும் பாருமென
வீர னிவற்றை விளம்பியபின் ஆள்விடுத்து
அத்தலத்தில் காட்டில் அடைவா யிருந்ததொரு
புத்திரன் சமாலிதனைப் போயழைத்து வாவெனவே;

**சின்ன மருது, மனைவி, மக்கள், மறுமக்கள் பந்துசனங்கள் ஆகியோர் படையுடன் வெத்தியூர்க் காட்டுக்குள்ளே சென்றமை.**

வந்த சமாலிதன்னை மருதுதுரை தாம் பார்த்துச்
சிந்தை கலங்கிச் செப்புவா ரம்மானை.

விருத்தம்

மலங்கி மத்தினி தருந்ததி ஞலென்ன வலிவோ
விலங்கி நல்வனம் வீற்றிருப் பதுவென்ன மெலிவோ
அலங்க மாடிக ளழகுள்ள சிறுவையின் றழிவோ
சிலங்கள் சூழிலங் காபுரி யிலும்நாமென்ன தெளிவோ. (53)

வேறு

தம்பி சமாலி தளத்துக் கதிபதியே
நம்பினேங் காளை நாதன் திருவடியைத்
தம்பிரான் சோதனைதான் தயவா யெரித்தமய்யா
வெம்பி யினியிடைந்தால் விடுமோ விதிவசந்தான்
சமரெதிரி யில்லாமல் தரணியாண் டோமிதுநாள்
எமலோகங் கிட்டே இருக்குதுகா ணிப்போது
ஆளியெழு கடலை ஆண்மை யுடன்பறந்து
கோழி கடக்கக் கூடுமோ தம்பியரே
அமர்த்த முடியா தலைகடலை வற்றவென்று
சமர்த்தா லிறைக்கத் தகுமோசொல் தம்பியரே
ஆரால் முடியும் அலைகடலை நகர்த்துதற்கு
வீரால் மதியழிந்தோம் மெலிந்தோ மரசிழந்தோம்
இனிமே [1] லெண்ணம் எத்தனைதான் செய்தாலும்
மன்னு விடுவதில்லை வந்ததுரை யக்கினீசும்
குன்னமது சொல்லக் குத்தமில்லை கொற்றவர்மேல்
இந்நாளில் நம்மால் இழந்தோமே யெல்லாமும்
தந்தார் பெருமரசும் தாழ்வில்லாச் செல்வமதும்
நொந்தோ மதுவுமல்லால் நொம்பலமு மாச்சுதிப்போ
பெரிய மருதேந்திரர் பூபால ரெங்களண்ணர்
சரீர சுகமாகத் தாமிருப்ப ராமாகில்
இந்த [2] அனலனைப்போல் எண்ணவொண்ணு வக்கினீசு
வந்தாலு மன்னன் வளரி .... ப .... துமதோ
நற்கால முண்டாகி நமனுக்குத் தப்பிவைத்து
வெல்வதுவும் உண்டானல் வெள்ளைமரு தேந்திரர்க்கு
வருமோதான் பச்சை வாதமிது வேளையிலே
[3] விரும லிவியும் விதியு முடிவதினல்
எள்ளவும் வீர மில்லையே நம்மிடத்தில்
கள்ளமான தாய்விசய லட்சுமியுங் காணுமல்

---

[1] ஆலோசனை [2] அக்கினீசு [3] பிரம்மலிபி

சொல்லாம லோடிவிட்டாள் துன்பநமக் குண்டாச்சு
எல்லா மறிவாய் இப்போது மப்போதும்
சொன்னமொழி கேட்டால் துன்பம்வரத் தக்கதில்லே
இனிமேல் எடுத்துரைத்தால் என்மீதி லுந்தனுக்கு
கோபம்வரும் போலக் குணங்கண்டேன் தம்பியரே
ஆவலுடன் **அக்கினீசை** அஞ்சாமல் வெல்லுமென்ருர்
இந்தவித முரைத்து இருந்தமன்னர் தங்களுக்கும்
வந்தவரை வெல்ல மன்னவரே போமெனவே
சத்திய வாண்மை தவரு மருதுதுரை
**வெத்தியூர்** தன்னில் வீற்றிருந்தா **ரம்மானே.**

**விருத்தம்**

மன்னவன் வெத்தி யூரில் லூரினி வடக்கு நெட்டில்
........மும் வருத்து செங்கை அரசின்கீழ் கமுகுங் கட்டித்
தன்னுடன் விதியை நொந்து சந்ததி யாலே வந்த
வின்னமு மனத்தி லெண்ணி விசனமா யிருக்கின் ருரே. **(54)**

**வேறு.**

தங்கமுடி தரித்த சக்கநதி வாழ்வேந்தன்
**வெங்கணப் பெரியுடையார்** வேந்தன் பரிவாரம்
[1] **வேளே யெரித்த விமலா** தஞ்சமென்று
**காளேயார் கோவில்** கற்கோட்டை பொருவென்ருர்
இப்படிக்கு மன்னர் இருக்குந் தறுவாயில்
கப்பித்தான் மேசர்..........அசிட்டனுடன்
[2] சென்னல**க்கி னீசுவை**யும் திறமாக **வேகவுரி**
மன்ன னழைத்து........க வுரைப்பா ரங்கவர்க்கு
மன்னவனே யின்ன மகாசேனே தன்னுடனே
செந்நெல் புரியும் சிறுவர் புரிவெளியில்
பத்து வருடம் பகைப்போர் முடித்தாலும்
தத்தாண வீரன் துரைமருது வேந்தனேயும்
வித்தகனே காட்டில் வெல்லுவது தானரிது
உற்ற வசனம் உரைக்கின்றேன் கேளுமிப்போ
கேளுங்கா ணிப்போ கிருபையுட னக்கினீசே
வாழுங் கெடிமருது வனத்தி னதிசயத்தை
[3] **வேதா**வும் மாலும் விளேயாடுஞ் சோதிவனம்
**காளியுடன் காளீசர்** கருணே புரிநடனம்
வாளி படர்ந்து விளேயாடுங் **காளிவனம்**
உருத்தா **யரனுர் உமை**யவட்கு வுண்மைசொல்லக்
கருத்தாகக் கேட்டிருந்த **கந்தனுடைக் கந்தவனம்**
உருத்திரர் கோடி உருவெடுத்து மச்சமென
மருத்தும் உருத்திரராய் வரம்பெற்ற **சோதிவனம்**
அந்தணன் மைந்தன் அரவால் மரணமெனக்

[1] மன்மதன் [2] ஜெனரல் [3] பிரமன்

கந்தன் வரங்கொடுத்துக் காத்தருளுங் கந்தவனம்
அழையா விராதன் அழகான செட்டியினுல்
பழையநல்லூர் நீலி பழிசுமத்திக் காராளர்
அறுபத் தொருபேர்கள் அநியாய மாய்வழக்கு
நிருபர் பழிகொடுத்து நின்றகொடும் நீலிவனம்
[1] அயிரா வதத்தனுடை ஆனை யருந்தவத்தால்
அயிரா வனமெனவும் ஆனைமடு வுண்டாக்கிப்
பாதாள கங்கை யெனப் பரிந்தழைத்து விந்திரனும்
ஏதாக வோசிவனை இந்திரனும் பூசை பண்ணி
வந்த விபத்து மாயையாய்த் தீர்ந்ததொரு
இந்திர வனமென்னும் இயல்புள்ள சோதிவனம்
கண்ணப்ப ஞர்குலத்தில் கந்தவன வேடனென்போன்
அண்ண லடிபணியும் அழகான சோதிவனம்
முன்ஞு ளரவிந்தன் முதலழிந்து நின்றதற்காய்
அந்நாள் சிவநிதியும் அருள்பெற்ற சோதிவனம்
நந்தனுடைக் கால்முடத்தை நலமாக்கி வைத்ததொரு
கந்தவன் மாண்கருணை கருணையுள்ள சோதிவனம்
செங்கடல் வாழுஞ் செயசேக ரன்றனக்குத்
தங்கமதால் செய்து தாலாட்டும் பாலகனைப்
பொய்ப்பிள்ளை தன்னைப் போற்றி யரவணைத்து
மெய்ப்பிள்ளை யாக்கியே விடரகற்றும் சோதிவனம்
எந்த வனமு மிவ்வனத்துக் கீடலகாண்
இந்த வனமகிமை எடுத்துரைக்கக் கூடுமதோ
பையிநிரும் சோல்சர்களும் பட்டாள முந்துருப்பும்
கைபிரித்துத் தானணியாய்க் காட்டையே வெட்டுமென்முர்
காளைப் பதியுங் காளீசர் சந்நிதியும்
ஆனை மடுவும் ஆலயமுந் தான்தெரியச்
சீரான கோபுரமும் சிறுவர் புரிக்கெதிராய்
நேராகக் காட்டை நிமிடமதில் வெட்டுமெனச்
சொன்னவுரை கேட்டு துரைமன்ன னக்கினீசும்
அந்நேரம் பைநீரை அழைத்து மிகவுரைப்பார்
கூந்தாளம் வெட்டரிவாள் கோடாலிப் பாதைமுதல்
சாய்ந்த வெரியல் சதிரிக்கு வரய்ச்சாத்தும்
மண்வெட்டிக் கூடை வகைவகையாய்த் தானெடுத்து
அப்படியே நல்லதென்று அக்கினீசந் தானெழுந்து
செப்பமுடன் காட்டைச் செடிகள்தமை வெட்டலுற்ருர்
சிறுவர் புரியுந் திருக்காளை கோபுரமும்
இருவகைக்கும் நேராய் எற்றுநூ லிட்டதுபோல்
வெட்டினர் காட்டை வெளியாக்க வேணுமென்று
திட்டமுடன் வெட்டச் சேனைத் திரள்படைத்த
மருதேந் திரனெதிர்த்து வந்த பொழுதனுத்தான்
இருவர் தளமும் எதிர்த்துப் பொரும்போது

[1] இந்திரன்

வெருவி யெமனுலகை மெய்நடுங்கித் தத்தளிக்க
ஒருவருக் கொருவர் ஓயாச் சமர்புரிந்தார்
காடெல்லாஞ் சுற்றிக் கட்டாப்பு மூடையமும்
மேடைமேல் பீரங்கி வெகுவாய் முழங்கிடவே
சண்டையுஞ் சண்டை தருகாமல் தான்பொருத
செண்டகா ராவியச் செடிகளையும் வெட்டலுற்றார்
வெட்டுக்காட் டில்சண்டை வேந்த னமர்புரிந்து
கட்டாப்பில் நின்று கடும்போர் புரிந்ததிலே
அம்பது சோல்சர்களும் அறுபது பையிநீரும்
ஒன்பது ஆப்புச்சேர் ஒருகும் பினியுடனே
மாண்டா ரறிந்துதுரை மயங்கித் தவியாமல்
காண்டவ வனத்தைக் காப்பிரியும் பையிநீரும்
வெட்டுமென்று ரக்கினீசு வேந்த னுரைப்படியே
கட்டாக நின்று காடதனை வெட்டிடவே
சூரிரும்பி னுலழிக்கக் கொடுத்ததனு லுத்தரவு
தாணடைவாய்ப் பையிநீரும் தளமுமிக வந்துநின்று
ஒருநாள் முழுதும் ஒரு மரமு மேசெடியும்
பெருமரத்தை வெட்டப் பொழுதுஞ் சரியாச்சு
உள்ளியே பைநீர் ஒருமரத்தை வெட்டுமுன்னே
தன்னில் மருதுதுரை தான்விடுத்த குண்டதனால்
பையிநீரில் நூறு சென்மடிந்தா ரவிடமதில்
மெய்பதரா தக்கினீசு வேகமதாய் வெட்டினதால்
வாராப்பூர் வேந்தன் மன்னன் நெடுவயலான்
சீரான நன்னி சிறந்த சுவர்ணனுடன்
மிக்கபுக ழிடையாத்தூர் வேந்த னுனைதொரு
சக்கப்பன் சேர்வை தளங்களுட னப்போது
சின்னசி னிக்கமமாய் செடிக்காட்டி லேயிருந்து
பின்னாலே யக்கினீசு பிறகே கவிந்துவந்து
வன்னவே லீட்டி வளரி மரத்தாலும்
கொன்றார்கள் சோல்சரைக் குத்திப் புரட்டிவிட்டார்
காப்பிரி சோல்சர் கலங்க வயிறுகளும்
கெப்ப னெழுந்து கம்பீர மாய்த்துணிந்து
வீரர்க ளாக வெகுதிரளாய்த் தான்திரட்டிப்
பாரடங்காச் சேனைப் படைகளையே பின்னவிட்டுப்
பீரங்கி நாலு பெருவேட் டெழுப்பலுற்றார்
சீறிவரும் குண்டு சின்னதுவிழும் வேகமதால்
அண்டங் கிடுகிடென ஆகாச மூடுருவ
மண்டலங்க ளெல்லாம் வளைத்துக் கரும்புகையால்
மருதுடைய சேனைதனில் வாகாக வன்பதுபேர்
விருதாவி லேமடிந்து விழுந்தா ரதுசமயம்
வனத்தைவிட்டு அக்கினீசு வந்துதன தூடையத்தில்
சனத்தை நிறுத்திமிகத் தரணிபுகழ் மால்கவுரி

தன்னிடத்தில் வந்து தார்வேந்த னக்கினிசும்
சொன்னான் வனத்தின் துயரமெல்லாந் தான்விரித்து
மன்னன் கவுரிதுரை வல்லவனே யிப்போது
என்னவென்று சொல்வேன் இந்தவனப் பெருமை
காடென்று லெங்குமுள்ள காடென்று வெண்ணிவந்தேன்
சாடென்றேன் பைநீரை சாத்தினார் கூனிரும்பால்
வெட்டினார் காட்டை வெளியாகக் கண்டதில்லை
காட்டினான் முன்னாகக் கட்டாப்பு மால்மருது
காட்டில் மிகுதிரளாய்க் கட்டாப்பில் மோருசாவும்
மேட்டில் பீரங்கி வெகுமுழக்க மாக்கிவிட்டான்
ரேக்கில்லாச் சஞ்சாலி நெருக்கிச்சர கோபிதனைத்
தாக்கினான் பைநீரு தட்டழியச் சோல்சர்களும்
காப்பிரிகள் சேனை கலங்கிப் பரங்கிதளம்
கூப்பிட்ட லாகக் கோட்டாலை பண்ணிவிட்டான்
சேனை வெகுவாய்ச் சிதைந்ததல்லாற் காடதனைக்
கூனிரும்பால் வெட்டக் கூடாமற் செய்துவிட்டான்
விரிவாகப் பைநீரு மிகுதிரளாய்த் தாங்கூடி
ஒருநாள் முழுதும் ஒருமரமே வெட்டலுற்றார்
பாலை மரமொன்றும் பருஞ்செடிதா னொன்றதையும்
மாலைப் பொழுதுவரை வரைந்தார்கள் பைநீரும்
இந்த விதமானால் எத்தனைநாள் செல்லுமிது
சிந்தை கலங்குதுகாண் செப்புவீ ரிப்புதுமை
எந்த விதமாய் எதிர்த்துப் பொருவதினிச்
சுந்தரஞ்சேர் வெள்ளை மருது துரைகளைத்தாம்
பிடிக்க விவரமது புகலுமென்று ரப்போது
கடுக்கென்று பல்லைக் கடித்துக் கவுரிதுரை
சொல்லுவார் கேளும் துரையே நினைவாக
நல்லரசும் நாடும் நகரமது அங்கவர்க்கு
ஆசையில்லை மன்னா அடர்ந்ததொரு காலாளும்
ரோசமுள்ள வேந்தரையும் நோக்கா ரொருநாளும்
சனமுந் தளமும் சதமெனவே யெண்ணாதான்
வனமே சதமெனவே வாழ்வான் மனஞ்சலியான்
போட்டியுடன் பத்து வருடம் பொருதாலும்
வாட்டப் படமருதை வதைக்கநம்மா லாகுமதோ
எத்தனைநா ளானாலும் எத்தளங்கள் மாண்டாலும்
மெத்த மயங்காமல் வேந்தேநாங் காத்திருந்து
காடுவெட்டச் சற்றுங் கலங்காதீர் மன்னவனே
நாடுவந்து இப்போது நம்மைக் கவிந்ததனால்
வேதுவிட்டு அந்த வேந்தன் தளமுழுதும்
சாதுவா யிப்போ தானழைத்துக் கொண்டபின்பு
கள்ள வழியாகக் காளையார் கோவில்தனை

வில்போல் வளைத்து விநோதமாய்த் தானிருக்கும்
கற்கோட்டை தன்னைக் கைவசமே செய்திடலாம்
திங்கள்பத் தானாலுஞ் செழித்த வனந்தனையே
தங்காமல் நித்தந் தறிப்பீர்கள் கூனிரும்பால் ;

**விருத்தம்.**

என்னவே கவுரி சொல்லி ஈதுரை முழுதுங் காதில்
மன்னவ னக்கி னீசு வகையுடன் விரித்தே கேட்டு
தன்னுடைச் சேனைக் கோதித் தயக்கம தகற்றிக் காட்டை
சொன்னதோர் படிக்கே வெட்டத் தொடங்கினார் துரைகள்
[தாமும் (55)

**வேறு.**

காடுவெட்டிப் போர்பொருத கருத்தி லுறுதியதாய்
வாடிவிட்டுப் பூங்கொடியின் மாநகரை விட்டெழுந்தார்
வாரங்கே முன்னே.....வ வரிக்குதிரை பின்வர
பீரங்கி யாரும் பின்னுமுன்னுந் தான்வரவே

**(இடையே மூலப் பிரதியில் ஒரு ஏடு காணப்படவில்லை.**

காப்பிரிகள் நூறும் கனத்த பரங்கிகளில்
சாப்பா யிருவதும் தண்டித்த சோல்சரிலே
அம்பதுபேர் தாமும் ஆப்புச்சோ ரொன்பதுபேர்
வமபாய் மடிந்தார்கள் மன்னனக்கி னீசுகண்டு
மாண்டேரோ வீந்தி வையமதில் கன்னடத்தால்
வேண்டி யெனக்காக வீடுவிட்டு யிங்குவந்து
கைவெடிக்குப் பற்றாத கன்னடத்தார் தம்மாலே
மெய்பதறிச் செத்தீர் விதிமுடிவு முங்களுக்கே
என்னாலே யான இசைகேடு யீதனைத்தும்
என்னமா யாரிடத்தில் இயம்புவே னெனமெலி...
சேனைகளே நீங்கள் செத்திறந்து வொற்றையிலே
போனேந் தனிவழி போரேமே யென்றேங்கித்
தவிக்கா திருங்கள் தனக்குத் துணையெனவே
சவுக்கியமா யிப்போது சமர்பொருது மால்மருதை
அனுப்புகின்றே னுங்களுக்கு ஆதரவாய் நாளையென்று
மனக்கவலை தன்னுடனே மன்னக்கி னீசுதுரை
பீரங்கி பாரும் பிறகே விருந்ததுவை
நேராய்த் திருப்பி நெருப்பாய்ப் பொழியலுற்றார்
குண்டும் மருந்துங் கூடப் புகையெழுந்து
அண்ட மடுக்கும் ஆகாசம் மூடிடவே
மருது தளங்கல் வனத்தி லிருந்தெழுந்து
துரிதாய் [1] அனலன்துரை தளத்தில் வந்துபுக்குக்
குத்தும்வெட்டும் பீரங்கி கொளுத்தி யடிக்கடியே
சுற்றி வளைந்து தொடுத்துச் சமர்பொருத

---

[1] அக்கினீசு துரை

இப்படிக்குச் சோதி வனத்தி லிருவருமாய்
மெப்பாய்ப் பொருமளவில் வேவு கவுரிவிட்டார்
வெள்ளை மருதிருவர் வேந்தர் பொசித்துவரும்
பள்ளையச்......ா பகலத்தைத் தான்வாங்கிக்
கருத்தாய்ப் பொசித்துவருங் கருத்தானைக் கண்டுடனே
உருத்தா யழையுமென உத்தாளை விட்டழைத்துச்
சவுரியமாய் வேண சவுபாக் கியமுனைக்குத்
தவறாமல் சேனையதுந் தருவோ மிதுவெனவே
கருத்தானை முன்னால் காவலவர் தம்மிடத்தில்
உருத்தா யிருந்ததுபோல் உரிமையதா யென்னிடமும்
காத்திருந்து நம்மைக் காப்பாற்ற வேகடன்காண்
வேற்றுரைக ளன்றி விளம்புகின்றே னின்னமுங்கேள்
ஆயிரம்பொன் னிந்தா அடைவாக வாங்கெனவே
தாயகமாய்த் தந்து சாற்றுவா ரீதுமல்லால்
நல்லாக வேநீயும் நாமும் பொசித்திருக்க
புல்லாக் கரையை பிள்ளைபிள்ளை யுள்ளளவும்
கல்லுப்போட்டுத் தாரேன் கருத்தானே யிப்போது
வல்லமையாய்க் கள்ள வழியூடே நீநுழைந்து
குன்றாம லிந்த கும்பினியுஞ் சோல்சருடன்
கன்னடமுங் கூடக் கண்டழைத்துக் கொண்டேகிக்
கோட்டையுங் கைவசமாய்க் கொற்றவனைத் தான்பிடித்துக்
காட்டில் விடாதபடி கைப்பிடியாய்க் கொண்டுவந்தால்
கன்றுக் குளக்கன்றாய் கணமலிபோ லுந்தனையும்
என்றைக்கும் வைத்து இருப்பேன்நான் பாரெனவே
நன்றாகா ணிப்போது நான்போ யரைநொடியில்
சென்று திருக்காளைச் செடிக்காட்டை யூடறுத்துக்
கண்டு மருதேந்திரக் காவலனைத் தான்பிடித்துக்
கொண்டு வருகிறேன்காண் கொற்றவனே பாருமென்று
கூறிச் சபதம் குடிகேடன் மாபாவி
வீரியங்கள் பேசி விளங்கவே கும்பினியும்
தொங்கு வெடியாகத் தூக்கியே காலோட்டம்
தயங்கிப் பதுங்கித் தலைகுனிந்து தான்தவழ்ந்து
ஊடுசெழுங் காட்டில் உட்கார்ந்து மேநடந்து
காடுஞ் செடியுங் கள்ளவழி யாய்க்கருத்தான்
வாரில்ரெண்டு கும்பினியும் வகையுடனே கன்னடத்தில்
வீரியங்க ளுள்ள வேந்தரிலே முன்னூறும்
ஆகவைந் நூறுசனம் அருவிகட்டி வல்லையமும்
வாகுடனே கூட்டி வழியறிந்து வுள்நுழைந்து
வேட்டைக்குப் போர விதம்போல யாவர்களும்
காட்டு வழியாகக் கடந்துவெகு பாதைவழி
நாடி நடந்து நல்லுருளிக் கோட்டைவழி
ஓடி வருவதுதான் ஒருவருக்குந் தோன்றாமல்

கூடிச் சகலருமாய்க் குறிப்பு மருதவன்மேல
வாடிக் கிழக்குநல்ல வாசல்வந்தா ரம்மானை
விருதரசர் போற்றும் வெள்ளைமரு தேந்த்ரனுடை
மருத வனப்பொய்கை வாகன மேல்கரையில் ,
ஊடையமுங் கட்டாப்பும் உருட............மும்
வாடிநல்ல வாசல் வழிமேலே தானையமும்
பீரங்கி ரேக்கிலாப் பெரியசர கோபியுடன்
வீரங்கள் பேசி வீற்றிருந்த மன்னரெல்லாம்
தூக்கமும் நித்திரையும் தொலையாத சதிகளும்
ஆர்க்குமுண் டானபடி அசந்துவிட்டா ரப்பொழுதில்
உன்னிக் கருவிருளில் ஒளித்துவந்த கும்பினியும்
கோழிக் குரலில் கோட்டைவெளி வாசல்தனில்
அசதி மயக்கமது அரித்துவந்த கும்பினியும்
வசதி யெனப்பலித்தா மழைமாரி யாய்ப்பொழிந்தார்
அந்தந்தத் தருவாயில் அவ்விடத்தில் தானையமாய்
விந்தையுட னிருந்த வேந்தர்நா லணிகளும்
தட்டழிந்து நித்திரையில் தானைவெருண்டு கட்டாப்பை
விட்டோடிப் போனார்கள் வேறுபட்ட மானதுபோல்
வெங்கணைப் பெரியுடையார் வேந்தன் பரிவாரம்
அங்குள்ள பேர்கள்தமை அரவணைத்து வாதரித்துச்
சேர்த்துத் திரட்டிச் செழுங்காட்டில் போயிருந்தார்
பாரப் பெரும்படையும் பதியைவிட்டுத் தட்டழியக்
கோட்டை கலைந்து கூக்குரலுங் கொள்ளையுமாய்
வேட்டெழுப்பிச் சந்தோஷ விருதுத் துசம்நாட்டி
மாபுரத்தை வென்ற வனம்போலே கும்பினியார்
கோபுரத்தின் மீதில் கொடிபோட்டார் கும்பினியார்
இந்த வசனம் இயல்பாக முத்திரந்தான்
அந்த மருதுடனே அடைவாகக் கூட்டமிட்டு
ஆதி வனமாய் அழகாய் வளர்ந்ததொரு
சோதி........த்தியே கட்டாப்பும்
ஊடையமும் வைத்து ஒளிந்திருந்தார் தரங்கேட்டுக்
காடைச் சதமெனவே காவலவர் ஓடிவிட்டார்
வெள்ளை மருதேந்திர வீராதி வீரருடைப்
பிள்ளைகளுஞ் சொந்தப் பெண்டிர் முதலாக
மாமன் மருமகனும் மைத்துனன்மார் சுற்றிலுள்ள
தாமவர்கள் கூடத் தனகர்த்த ருள்ளவரும்
சேருவைக் காரர் தேவன்மார் ராணுவத்தார்
சீருடைய மன்னர் சீவிதங்க ளாண்டவரும்
அமரங்க ளாண்ட அநேக முள்ளவரும்
சமர்விலகிக் காட்டில் தாமொளிந்தா ரீதுமல்லால்
எழுபத்தை யாயிரம்பேர் எண்ணவொண்ணு ராணுவமும்
நழுவியே மெள்ளமெள்ள ராவும் பகலாக;

[இங்கிருந்து 7 ஏடுகள் மூலப்பிரதியில் காணப்பெறுததால்
தொடர்ச்சி விடுபட்டுள்ளது]

அந்த வனந்தனிலே அன்றிரவு வந்திருந்து
விந்தை யுடனே விடிந்தெழுந்து வேகமுடன்
குந்தி யிருந்துமன்னன் கூறுவா னம்மானை

விருத்தம்

தென்னகர் தேவை வாழும் சேதுவுக் கரசன் மீதில்
முன்னநாஞ் சமர்வி ளைத்து மூண்டதோர் சமரி லஞ்சா
என்னுடை யண்ணர் கையில் எடுத்திடும் வளரி யாலே
மன்னரைச் செயிக்க வீரம் வல்லபங் குறைந்த தேதோ. (56)

காசினி யரசர் தம்மைக் கலங்கவே செய்து வென்று
போசனு விருந்து வாழ்ந்தோம் புவியெலா மொருகு டைக்கீழ்
வாசமா யாண்டு செய்பொன் மணிநகர்க் குடையோ னுதி
மோசம்போய் விதியி னுலும் முடிமன்னன் றன்னைக்கா.... (57)

தேவர்கள் புகழுஞ் சேரன் தென்னவன் புகழுஞ் சேர்ந்த
மூவருங் கூடி வொன்ருய் முடிபுனைந் தெழுந்த திவ்வூர்
ஆதலால் நாமும் செங்கோல் அரசிருந் தாண்டு விப்பால்
போவதோர் காலம் வந்து புத்தியு மலைக்க லானேம். (58)

நாடெல்லாஞ் செழிக்க வாழ்ந்தோம் லட்சுமி யருளுண் டாகி
வீடெல்லாஞ் சொர்ண மாக விளங்கினேஞ் சிறிது காலம்
பாடெல்லாந் தொலைக்க வேண்டிப் பட்டணஞ் சிறுவை விட்டுக்
காடெல்லா மலைய வென்று கடவுளர் விதித்திட் டாரே. (59)

தேவர்க ளுலகம் போலாய்ச் சிறுவயல் சிறப்பும் வீதி
நாவினு லழகைக் கூற நான்முக னுலு மில்லை
ஆவதோர் காலம் வந்து அழகெனத் துலங்கு மிவ்வூர்
போவதோர் காலம் வந்து போச்சுதோ நாடு காடாய். (60)

சுற்றிலும் வாடி வாசல் துலங்கவே நான்கு வாசல்
பத்தியாய் நிரையாய் மாடிப் பளிங்குமண் டபங்கள் சித்ரம்
மத்தியி லிலங்கு மீசர் வளர்சிவா லயமுந் தேரும்
முற்றிலு மழிவ தென்று முடிவுநாள் மொழிந்த வாறே. (61)

வேறு

என்றுரைத்து மன்னன் எழுந்து சிறுவனுடன்
சென்றூர் சிறுவயலூர் சென்றுகிட்டிப் பார்த்துரைப்பார்
சிறுவர் புரியுந் தெருவீதி யுஞ்சிறப்பும்
விருதாவில் நம்முடைய வீம்பா லழிந்ததென்று
பெருக்க விசாரமுற்றுப் பெருவயல் தன்னில்வர
எண்ணி மனத்தில் இருத்தி வருத்தமதைச்

சிந்தைதனில் வைத்து தெளிந்து சிறுமருது
அந்த வனங்கடந்து ஆரணியந் தன்னில்வந்தார்
வண்ணமுள்ள சின்ன மருதுதுரை பாண்டியனும்
அண்ணன் தனைநினைத்து அநேக விசாரமுற்றார்.

### விருத்தம்

வேந்தரே யண்ணே முன்னாள் விசயமா நகரந் தன்னில்
சாந்தமா யுரைத்த வார்த்தை தப்பிதம் வந்த தேது
திகாந்தமே சென்று ஹுந்தான் சிறந்ததோர் தாயார் தம்பி
பேர்ந்து நாம் பிரியோ மென்றீர் பிரிந்துநீர் மறந்திட் டீரே. (62)

மருந்துநீ யருந்தி னாலும் மறந்திடா தண்ணே யென்னே
பிரிந்துநீ யிறந்தா லெந்தன் பிராணனும் பிரிந்தி டாதோ
வருந்தியே நடந்து சோதி வனமெலா மலைந்துங் காணேன்
இருந்திடு மிடமு முந்தன் இயல்பையுங் காட்டொ ணாதோ. (63)

என்னவே மருது [1]சின்ன இறைவனிவ் வாறு வாடி
தன்னிலே துயருண் டாகித் தளைவனத் திருந்தே நொந்து
பின்னையுந் துணைவர் மற்ற பேர்களை மனத்தி லெண்ணி
மன்னவவ் வனத்தை விட்டு மறுவனம் நடக்க லானார். (64)

### வேறு

மழையால் நனைந்து வெயிலா லுலர்ந்து
மனமே கலங்கி யிளையோன்
தழைவான சோதி வனமே கடந்து
தடுமாறி சத்தி வனமீ
திளையாத நெஞ்சம் பசியா லுடைந்து
மினிதான பாத மதிலே
துளையாக முள்ளு முளைபோ லிறங்குந்
துயரால் மெலிந்து மயாா. (65)

மானுளன் மைந்தர் மனையாளை யண்ணன்
மனையாளு மைந்தன் வேறு
கானுள சோதி வனமீ தெழுந்தால்
கடவன்றி யெந்த வனமோ
தானு லலைந்து தடுமாறி நின்று
தனதான பந்து முழுவோர்
தேனுண வீகள் தனதில்ல மன்றிச்
செடிதோ றலைவ தெனவே. (66)

முன்னாளில் வேதன் முடிவின்ன தென்று
முடிவான தொன்று மறியேன்
இந்நாள் வரைக்கு மாசே புரிந்தேன்
ஏதொன்று கோது மறியேன்

[1] இளையமருத பாண்டியன்

பின்னுலே யிந்த விதமாக வேதன்
　　பிரிவான துண்மை யறிவாய்
உன்னு லறிந்த விதமென்ன வென்று
　　உரையாத தேது பரனே. (67)

அயிரா வதமு முன்தாள் பணிந்து
　　அதுமுத்தி யாக விலேயோ
முயிராள ருத்ரர் திரைமச்ச மாகி
　　முழுவோரு முத்தி யிலேயோ
உயிரான தாலேதன் அயிரா வதத்தி
　　னுடன்முத்தி யாக விலேயோ
வைராக்கிய மென்ன அடியேன்க ளுன்லை
　　வணங்கா திருக்க லாமோ. (68)

**வேறு.**

இளையவ ரிடைஞ்ச லெல்லாம் ஈசன்மே லிருத்தா யன்பாய்
குழைவனந் தன்னை விட்டு கொடியதோர் நீலி வாழும்
தழைவிலாச் சாலி கன்னி தன்னிழ லருந்த லான
கழையென வளர்ந்த கள்ளிக் காடெனுங் கானில் வந்தார். (69)

மங்கலங் கணமாய் நீலி வாழ்ந்திடும் வனம தாகும்
அங்கவ ரெழுந்து வந்து அருநிழல் சாரல் முள்ளில்
தங்கியோர் நாளங் கெய்தித் தனித்தவ ரிருக்கும் வேளை
செங்கையின் வெடியைத் தாங்கிச் சிறுவனங் கொருவன்
　　　　　　　　　　　　　　　　வந்தான். (70)

சிறுமரு தேந்திர ராசன் சிந்தைதான் கலங்கு வார்தாம்
அறிந்துதா னரனு ருள்ளம் அனுப்பின சிறுவன் போல
வருவதோர் சிறுவன்........ன மன்னவன் திரும்பிப் பார்த்து
வெருவியே தெளிந்து பாலன் தன்னிடம் விளம்பும் பாரே. (71)

எந்தவூர் மகனே வுன்னை யானிருப் பதுகண் பார்த்து
வந்துசொல் லெனவே மாற்ருன் வருந்தியே யனுப்பி னுரே
எந்தன்றன் துயரங் காலை ஈச்வர னறிந்தே வுன்னை
விந்தையா யனுப்பி னுரோ விளம்புவாய் விரைவி லென்ருர். (72)

சிறுமரு துரைக்க வந்த சிறுவனுந் திகைத்தி டாமல்
வருந்தலை யனுப்புஞ் சொந்த வகைமனி தரையுஞ் சொன்னுன்
அறுசுவை யுடனே யன்னம் அளித்திடச் சிறுவ னங்கே
இருகரத் தாலே வாங்கி இளம்பசிக் கருந்தி னுர. (73)

பத்துநாள் வனத்தில் சுத்தப் பட்டினி யிருந்த வேந்தன்
மெத்தவே கையா லன்னம் விரைந்தவர் புசிக்கும் போது
குத்திரு மனுமே காதுக் குறுமிவந் தடைக்க விக்கல்
தத்துவ வுடலும் வேர்த்துத் தரையினில் மயங்கிச் சாய்ந்தார். (74)

மன்னவன் மயங்கிச் சாய்ந்தார் வந்ததோர் சிறுவர் தாமும்
தன்னிழல் முகத்தில் சாயத் தடவியே முகத்தில் வீசி
அன்னத்தின் களையை மாற்றி அறிவுவந் திளையோ னுன்னி
மின்னியிவ் வனமா காதென் றெழுந்துமேல் திசையி லுற்றார். (75)

**வேறு.**

குடஞ்சாடி வனந்தனிலே சிறுவ னோடும்
கொற்றவனுங் கோட்டடிப்பட் டலைந்து வாடி
அடஞ்சாதித் திவ்வனத்தி லஞ்சு நாளாய்
அரும்பசிக்குக் காய்கிழங்கு யாதொன் றில்லா ;
இடஞ்சேர்ந்தோம் வீணுயிவ் வனத்தை விட்டு
எடுத்தப்பால் **கந்தவனம்** போக வென்று
தடஞ்சேர்ந்த வழிகூடிச் சிறுவன் கையில்
தன்னுடைக்கை யிருந்தவெடி தனைத்தான் தந்தார். (76)

**வேறு.**

கைவெடி சுமந்து மன்னன் கரமது சிவந்து காண
மெய்யெலாம் வெளிறச் சிந்த விழிகளில் தணல்கள் பொங்க
[1] **அய்வரில் முதல்வோன்** கானில் அலைந்தவா றலைந்து வாடித்
தெய்வமே யென்று **கந்த வனந்**தனில் வந்து சேர்ந்தார். (77)

சிறுவனும் வெடியே தூக்கிச் சென்றிடப் பின்னால் வேந்தன்
வரும்வினை யதனை யெண்ணி வந்துதான் வனத்தி லன்று
மருவளர் நதியைக் கண்டு வகையுடன் தாகந் தீர்ந்து
**திருமரு தேந்திரன்** சற்றே திருநய னங்கள் சேர்ந்தார். (78)

தரித்திடுந் துயிலி லொற்றைத் தலவதை விரித்துக் கீழே
உருத்துடன் சிறுவன் தன்னை உயர்பதம் வருடச் சொல்லி
வெறுத்துமே பூமி யாசை விட்டவர் வீரை யின்கீழ்
தரித்துமே விரவு தங்கிச் சயனமுற் றிருக்கின் றாரே, (79)

**வேறு.**

இருந்து துயின்றெழுந்து இப்பால் **மருதுதுரை**
வருந்தியே வீரைச்சிறு வனந்தனையே விட்டெழுந்து
வேறு வனந்தனிலே வீற்றிருப்போம் வாவெனவே
பாருலகாள் மன்னன் பையனையே தான்நடத்தி
வாட்டம் பெரிதாகி வழியறிந்து வூடுவழி
காட்டில் நுழைந்து கடும்பசியி னலிளைத்து
வம்பாம லிவ்விடத்தில் வீற்றிருக்க வென்றாலும்
கும்பினியார் வீம்பு குறையாக வேமுடிப்பார்
தருமகுண சீலர் தரணிபுகழ்க் கும்பினியார்
துரைமீதில் குற்றமது சொல்லவுந்தா னுகுமதோ
ஆதரித்தார் நம்மை அரசாள வேபுவியைச்

[1] தருமன்

சீராய் நமக்களித்துச் செய்தவுப காரமதைச்
சிந்தைதனி லெண்ணாமல் தீங்குநாம் செய்ததனால்
வந்ததிந்தக் கோலமது வாடினதா லென்னபலன்
என்னவே மன்னன் ஏங்கி யிடைந்துருகித்
தன்னிலே வாடித் தாபரிப்பா ரில்லாமல்
வளமுள்ள **காளைவனந்** தன்னிலே வந்திருந்து
அண்ணன்தமைக் காணாது ஆவ லதிகமுற்று
**மானேறு மீசர் மகாதேவர்** தஞ்சமென்று
[1] **காளை** வனந்தனிலே காவலவன் வீற்றிருந்து
அன்னம் புசித்தறியார் அடைக்காய் மிகவறியார்
தன்னி லடங்காத தாபமது மெத்தவுண்டாய்க்
கால்சந்து மேசந்து கண்ணுமுகந் தான்கறுத்துப்
பாலருடன் தமையன் பந்துக்களைக் காணாமல்
ஏங்கி யிடைந்து எண்ணமது வேறுபட்டு
பாங்கியுடன் பாரி பைங்கிளியைக் காணாமல்
மாங்குயிலாள் மக்களுடன் மால்**பெரிய பாண்டியனும்**
தாங்காம லித்துயரம் தனியே யிறந்தனரோ
எந்தவனம் போனாரோ என்று மிகக்கலங்கி
அந்திடத்தில் நின்று அடங்காத் துயரமுற்றார்
**காளீசர்** காரும் கருணைவைத்து யென்மேலே
பாழி லலையாமல் **பரமபதஞ்** சேருமெனச்
சுந்தரஞ்சேர் மார்பன் துரையும் பிரான்செடியில்
வந்திருந்து சற்றே மயக்கந் தெளிந்தவரும்
தந்தம் விதியைத் தானே நினைந்துருகிச்
சிந்தை கலங்கிச் செப்புவா ரண்ணனையும்
**வீராதி வீரனென்றும் வெள்ளைமரு தேந்திர**னென்றும்
**மாராடர் தேசம்** வளரியினால் வாங்குவித்து
சேரலரை வென்ற திறமுந் தைரியமும்
சீரான **வண்டியூர்** தெப்பக் குளந்தாண்டிக்
குளங்கீழ்க் கரையாலின் கொப்புகளைக் கத்தரித்து
முழங்கி வளரி முனைகொண்டு வேகமுடன்
வித்தார மான வெளிகடந்து தான்வளரி
முத்தீ சுரபுரத்து மேட்டில் விழுந்திலையோ
அண்டருடன் ருத்திரரும் அநேகந் தவம்புரிந்த
**கண்டதேவி** ஊருணியைக் கடக்க வெறிந்ததுவும்
**திருமருதூர் நாகலிங்கர்** தேருஞ் சமைத்ததற்கு
விருதுடனே நீங்கள் வெள்ளோட்டம் பார்க்கவென்று
போனீர் வழியிற் பெரிதாகத் தான்வளர்ந்து
**ஏனாதிக் கோவில்** இருந்த பனைமரத்தை
இரும்பு வளரியினால் எறிந்தீர் கழுத்தறவே
விரும்பி யெறிய வீழ்கலையோ காய்பழமும்
இரும்பு மிகப்பெருத்த இளையாங் குடிநகரை

---

[1] காளையார் கோவில் [2] தாம்பூலம்.

அடம்பேசு மன்னரையும் அடக்கினீ ரண்ணுவே
காட்டை வளைந்து கடிநாயை யூசலிட்டு
நாட்டை யடக்கிவைத்தீர் நாடெல்லாந் தானறியும்
பரம குடியில்முன்னுள் பாரியகல் மண்டபத்தில்
இருந்த படைகளையும் எண்ணுமலேவலுற்றீர்
சேதுபதி யுடன்முன் சிறந்தானந் தூர்தனிலே
வாதுசொல்லிப் பாசுபதம் வாங்கினீ ரண்ணுவே
வேங்கைகள் முன்குத்தி வெகுபடையைத் தான்கூட்டி
வாங்கவென்று சீமை வரும்போது வவ்வழியில்
விளாம்ப்டிக்குத் தெற்கே வேகவதி யாற்றருகே
தளும்பாமல் சற்றும் தைரியமாய் வந்ததொரு
வல்லமைக் காரன் மல்லரா யன்றலையை
வெல்லு மளவலிவும் வீரமு மொளித்ததென்ன
குணவர னவர்க்கிளைய கொற்றவனுஞ் சித்திரமாய்
மணலூர் தனிலிருந்த மல்லாரா தம்பியெனும்
இரங்கரா யன்றலையை இரும்பு வளரியினுல்
பங்கப் படவலுத்துப் பாகைதனில் தூக்கிவைத்தீர்
சூரன் நவாபு துரைதன் படைத்தலைவன்
பூரிவெள்ளக் காரனையும் போரட்டுக் கேகவிட்டீர்
பாளையப் பட்டார் படைத்தலைவர் பார்மன்னர்
வேலையெப் போவென்று வேந்தரெல்லாங் காத்திருக்க
இப்படிக்குக் கீர்த்தி இருந்து செலுத்தினதும்
எப்படியோ காலம் இளைத்துவிட்ட ரண்ணுவே
உந்தன் வலிவும் உரமுஞ் சவுரியமும்
எந்தவித மண்ணுவே எங்கே யொளித்துவிட்டீர்
பண்டுசெய்த பாவம் பலித்தனு லிப்போது
சுண்டைக்காய் தின்று துயரப் படலாச்சே
மக்கள்பெண்டிர் சுற்றம் மருமக்கள் மார்கள்முதல்
நிற்க நிழலற்று நெடிய வனந்தனிலே
திக்குவே றுகித் திசைகெட்டுச் சீர்தப்பி
நிற்கின்றே மென்று நினைத்துப் புலம்பிடுவார் ;

## விருத்தம்.

வலிவுளோன் திருமால கானில் வந்தபின் புவிதான் வாடும்
மெலிவினு ரய்வர் வந்து விரைந்துஆ தரித்தா ரன்று
பலமிழந் தவதி யாகிப் பெண்டுடன் பிள்ளை தம்மை
நலமுட னஞ்சாதே யென்று நம்மையா தரிப்பா ரரோ. (80)

ஒருத்தரு முதவி யற்ற ஊமையை யறிந்து மீசன்
வருத்தமாய் மனைவி மக்கள் மெலிந்துதா னலைந்தி டாமல்
கருத்தினி லுறுதி கொண்டு காளைநா யகர்தாங் காப்பார்
மறுத்தெவ ரையுங் காணேன் என்னவே [1] மன்னன் சொல்வான். (81)

---

[1] இளையமருது.

வேறு.

எம்பிரான் காளி ஈச்வரனே வுன்செயலே
தம்பி சமாலி சமர்த்தனையுங் காணேனே
தீரன் சிவஞானம் சிறுவன் எனைப்பிரிந்து
போகும்வழி காணேன் பின்னும் யாரெனக்கு
மறக்க முடியாதே மதிபோல் மலர்முகத்தோன்
துரைசாமி யென்குழந்தை துரைபோன தெவ்விடமோ
குழந்தை துரைதளவாய் குமாரனையும் நான்பிரிந்து
இழந்து மினிக்காட்டில் இருக்கவோ வீச்வரனே
கருநெல்லி நாவல் கனிகறுத்த தம்பியரே
பருநல்ல வீச்சம் பழமே வுடையணனே
பத்தரை மாற்றுப் பசும்பொன்னே பாலகனே
முத்துச்சா மித்துரையே முகத்தில் விழிக்கலேயே
சங்கிலிப் பூபா சுவர்ணு தம்பியரே
எங்கே மறைந்தீர் எவ்வனமோ எவ்விடமோ
பொன்னெல்லிக் கோட்டை புகழுடையார் சேருவையே
என்னைப் பிரிந்துமிப்போ எகும்வழி நானறியேன்
பாங்கான வீரம் படைத்ததொரு அண்ணுவே
வாங்காத் தொனியுடனே வருவதையுங் காண்பதெப்போ
முத்திருளப் பேந்திரர் முடிமன்னு வென்மருகா
வெத்தியூர் தன்னில் விட்டுப் பிரிந்தனையே
இட்டமுட னென்னை இணைபிரியா தேவிருந்த
சொட்டாவா ளைப்பிரிந்த துயரம் பெரிதாச்சே
சேருவைக் காரர் திறம்படைத்த மன்னவர்கள்
போரில் வரக்கண் டன் பிரிந்த விடங்காணேன்
இருளா விருக்குதய்யோ இப்போது யிவ்வனத்தில்
திரளைச்சேர் நான்கொடுத்து திறமாய் வளர்த்தெடுத்த
உருத்தாக வேயிருந்த உத்ததுணை யானதொரு
கருத்தானைக் காணுமல் கலங்குதே யென்மனந்தான்
ஆரைத் தழுவி அரவணைத்து மாதரித்தும்
தூரம்தா ராசை துணையாமே யெந்தனுக்கு
என்னைப் பிரியா திருந்ததொரு தென்மருகா
கன்னி தளவாயைக் காணுமல் காடுதனில்
நின்று புலம்புகின்றேன் நீரில்லாத் தாமரைபோல்
இன்றென் றுயருரைக்க எவருமில்லை யானதனுல்
கந்தவனஞ் சோதிவனங் காளிவனம் நீலிவனம்
விந்தையுடன் சுற்றி மெலிந்தும் பசியினைப்பாய்
உற்றவர்கள் வாழும் ஊருணிக் கோட்டைமுதல்
சுற்றி யலைந்துந் துலங்கும் பனைக்கரைபூர்
அத்தனையுஞ் சுற்றி அலைந்ததினு மாரொருவர்
பத்தியுட னென்னைப் பசியாற்ற மன்னரில்லை

பாலையும் வீரை பருத்ததொரு சாலியுடை
நீலி வனத்தில்வந்தேன் நிற்சிய ஞகிவிட்டேன்
பாலன் சிறுவன் பசிக்கன்னங் கொண்டுவந்தான்
சாலவே நானுண்டு தயக்கந் தெளிந்தொருநாள்
உறங்கி விழித்தெழுந்தேன் உண்பதற்குப் பின்புவிதில்
பருங்கனியுங் காய்கிழங்கும் பார்க்கவுந்தான் கிட்டிலையே
[1]ஆயன் செயலிதுவோ அரனயனூர் கற்பனையோ
பேயடர்ந்த காட்டில் பித்தனு னிற்பளவில்
காற்று மழையுங் கடிய விருளிடியும்
தூற்றலும் வானத் துளியுஞ் சுழிவாடை
வெள்ளமுங் காட்டில் மிகுத்த படியதனுல்
உள்ளங் கலங்கி உட்கார வேறிடங்கள்
இல்லாம லெங்கும் இடையில் துயில்நனைந்தும்
அல்லலுடன் சிறுவன் அடுத்ததனு லென்னுடனே
சாரலுடன் தூற்றல் தலைமேல் சலமுதிர
ஈரமுந் தண்ணீர் இருக்கவிட மில்லாமல்
தரையில் சலம்புரளத் தடமுந் தெரியாமல்
விரைய நடக்கையிலே மெல்லடியில் முள்ளுறுத்த
அரையில் துயிலதனை ஆவிச் செடியிழுக்க
மறைவாய்த் திசைதெரியா வனத்தி லொருசெடியை
நாலாறதி ரம்வளைந்து நடந்தசுற்றித் தானலைந்தும்
காலாடி முள்ளுக் கடிய வனந்தனிலே
தைத்திடவே யிவ்வாறு தட்டழிந்து நானலைந்து
வைத்தா னயனெனக்கு வகுத்ததுவா யீதெனவே
வஞ்சமில்லா மன்னன் வருகின்ற சிறுவனுடன்
அஞ்சுநாள் சுற்றி அலைந்துமே காளவனம்
தன்னைக் கடந்து சாரல்வெளி யானதற்பின்
குன்றி நடந்து குடஞ்சாடி விட்டெழுந்து
வைகுண்டம் நோக்கி வாகான பஞ்சவர்கள்
அயிவர் நடக்க அதில்நால்வர் [2]தோகையுடன்
முன்னே விறந்துவிட முடிபொறுத்த தருமருமே
பின்னு லொருவனுமாய்ப் பெருமாளே தஞ்சமென்று
ஒந்தி நடந்து [3]கேதாரஞ் சேர்ந்ததுபோல்
கந்த வனத்தில் கடுகிமரு தேந்திரனும்
தந்தன் துயரைத் தானே மனத்திலுற்று
வந்து தவிப்பாயி மருகியே வீரையின்கீழ்[4]
தரித்திருந்த கட்டுவர்க்கம் தன்னி லொருதலைவை
விரித்துத் தரையில் வெகுமயக்க மாய்ச்சாய்ந்து
ஆயாச மாக அலுத்து மருதுமன்னன்
சாயரட்சை வேளை சமனமுற்று ரம்மானே
சின்னஞ் சிறுவன் சிறுபயலுந் தான்மயங்கி
அன்ன மருந்தாமல் அஞ்சாறு நாளலைந்து

[1] திருமால். [2] துரோபதை. [3] சுவர்க்கம். [4] தலைப்பு.

வாடித் தவித்து மருகிப் பசியிளைப்பால்
கூடவே தான்திரிந்து கொண்டுவந்த கைவெடியை
பாண்டியன் தன்னிடத்தில் பக்கமதில் வைக்கலுற்றுன்
காண்டீப ருமருது காவலவன் கண்ணுலே
பார்த்துச் சிறுவன்முகம் பகருவா னம்மானை
சோற்று மயக்கந் தொலையாப் பெருமயக்கம்
ஏக்கம் பெரிதாய் இடைந்தாயோ பாலகனே
தீர்க்க வரமருள்வாய்த் திருக்காளை யீசுவரர்
எங்கூட வந்து இடைந்தோமென் றெண்ணுதே
மங்கா துனக்கு வாழ்வும் வரங்கொடுப்பார்
எனக்கா தரவாக என்னிடத்தில் வைத்தாய்நீ
உனக்காக ஈசன் உதவிசெய்வா ருந்தனுக்கு
அஞ்சாதே யென்று அரவணைத்து வாதரவாய்
நெஞ்சுத் திடமுரைத்து நெடிய வனந்தனிலே
கட்டுவர்க்க மீதில் கண்துயின்று ரங்கவரும்
இட்டமுடன் பாலன் இணையடியைத் தான்வருடி
காத்திருந்தான் சற்றே கண்துயின்றூர் த்தான்விழித்து
வேற்று விசாரமுடன் விட்டெழுந்தா ரவ்வனத்தைக்
கந்த வனத்தைவிட்டுக் கடுவேக மாயெழுந்து
வந்தார் சிறுவை வனத்தி லிரவுதனில்
சோழபுரங் கிழக்கே துயர்ந்த வனந்தனிலே
வேளை யெரித்த விமலனே ! தஞ்சமென்று
வந்தா ரிருந்தார் மைந்தன் சிறுவனுடன் ;

[இடையில் ஒரு ஏடு மூலப் பிரிதியில் இல்லை]

இருக்கவிட மில்லாமல் எழுந்தார் வனந்தனிலே
சீராக வேயெழுந்து சிறுவயல் தன்னைவிட்டுப்
பேரான வாரணியம் புலிகுத்திக் காடுசென்றுர்
பட்டணமும் நல்ல பதியும்புலி குத்திவனம்
தட்டழிந்து வந்து தடுமாறிப் பாலனுடன்
பசியிளைப்பால் வந்து பரதவித்துக் கானகத்தில்
ருசியுடைய காய்கிழங்கு துன்னிமையாய்த் தான்பார்த்துப்
பறித்துக் கொடுவாடா பாலகனே போவெனவே
குறித்த கனிபிடுங்கிக் கொடுவாரே னென்றவனும்
தேடி வனமுழுதுந் திரிந்தலைந்துங் கிட்டாமல்
வாடிவந்து சொல்ல மன்னவனுந் தான்கேட்டு
மறுகி யெழுந்திருந்து வனங்கடந்து போகவென்று
சிறுக வளர்ந்த செங்காட்டில் செல்லலுற்றுர்
பெருகளா நாவல் பலாக்கனிக ளில்லாத
சிறுகளாப் பத்திச் செடிமிகுந்த காட்டூடே
வந்தார் மருதுமன்னன் வரவே தனக்கெதிரே
இந்தக் களாச்சிறிது இருக்கவே கண்ணுலே
கண்டா ரிதுவேது கனியெனவே தானினைந்து

விண்டா ரிருவர் விளம்புமிது வென்னகனி
என்னவே மன்னன் ஈதுரைக்க வேசிறுவன்
அந்நேர மன்னர்க்கு அதுவிவரந் தானுரைப்பான்
ஆண்டவனே யிக்கனிதான் தின்றால் ருசித்திருக்கும்
தருகின்றேன் நான்பறித்துத் தான்புசிப்பீ ராமெனவே
சிறுவ னெழுந்துநின்று செடியருகே வந்துநின்று
திருகிக் கனிபறித்துச் சிக்கெனவே தான்கொடுத்துத்
தானும் பசிக்குத் தான்பிடுங்கி யேபுசித்தான்
தேனுண் டதுபோலத் திகட்டி யிருவருந்தான்
மலையா மனக்கருத்தார் மணிமுத்தா மாநதியில்
சிலைபிடித்த மன்னன் சிறுவனுடன் நீரருந்திக்
காடெல்லாஞ் சுற்றிக் கலங்கி மறுபடியும்
வாடியே யந்த வனந்தனிலே வந்திருந்து
காளீசர் தம்மைக் கனமாக வேநினைத்துத்
தானே துதித்தெழுந்தார் சங்கரப் பொய்கைவனம்.

விருத்தம்

வந்துசங் கரனார் பொய்கை வனத்ததி சயத்தைக் கண்டு
இந்தநல் வனத்தி லாதொன் றில்லைகாய் கனியென் றெண்ணி
சிந்தையில் சிவனார் பாதம் சேரவே திரமாய் மன்னன்
தந்திமா முகனார் வாழும் தழைவனம் தன்னில் வந்தார். (82)

வந்தனர் மருது பிள்ளை யார்வன மகிமை தன்னை
விந்தையா யறிந்து கொண்டு விநாயகன் றனைப்பூ சித்து
எந்தனை யுன்து தந்தை இணையடி சேர்ப்பா யென்ன
மைந்தனுந் தானும் வந்து மணிமுத்தா நதியி லுற்றார். (83)

திருத்தணி நாதர் வாழும் திருப்பத்தூர்க் கருகு தெற்கே
வருத்தமாய்ப் பசியி னோடு வந்துதான் மயங்கி நின்று
ஒருத்தரு முதவி யில்லை உடையவ ரல்லா திங்கே
வெறுத்திவர் கயிலை கிட்டி னோமென வன........ன்றார். (84)

வேறு

நின்று மருதுமன்னன் நெஞ்சமது புண்ணாகி
இன்று இதைவிட்டு எவ்விடத்தில் போவதெனச்
சங்கரப் பொய்கைவனம் தன்னைவிட்டுத் தானெழுந்து
சிங்கார மானதொரு சீவலக் கோட்டைவனம்
மணிமுத்தா மாநதியும் வளர்ந்ததொரு வாரணியம்
அளவுமெத்த வென்று அந்தவனந் தன்னில்வந்து
அன்னக் களையும் அதிகப் பசியிளைப்பும்
குன்றப் பிடித்துடனுங் குறுகிக் குலாவிடவே
பார்த்தவிட மெல்லாம் பசிக்கொன்றுங் காணாமல்
ஆற்றாமல் மெத்த அவதிப் பசியிணைப்பாய்
விரத மிருபதுநாள் வேந்தன் வெகுமயக்கம்

மருதுபிள்ளை] யார்கோவில் வனத்திலே வந்துபுக்கார்
கூடவே கைவெடியைக் கொண்டுவந்த சிற்றுளும்
தேடிச் சலம்வேண்டிச் சிற்றுற்றி லோடிவந்து
கையால் சலமெடுத்துக் கால்முகஞ் சுத்திபண்ணி
மெய்யெல்லாந் தான்குளித்து விடாய்தீர அள்ளியுண்டான்
உண்டான் விடாய்தீர்ந்தான் ஓடிவந்தான் வேந்தனிடம்
கண்டேன் சலமெனவே காவலவ னுவனுடன்
சிற்றடிப் பாதைச் செடிநுழைந்து தானடந்து
மெத்தத் தகையோடும் வேந்தன் நதிக்கரையில்
அசந்து நடந்து ஆயாசந் தன்னுடனே
கசந்த கனிபுசித்துக் காதடைப்பு மெத்தவுமாய்ச்
சென்று நதிக்கரையில் செங்கையால் தண்ணீரை
அன்றள்ளி மன்னன் அடைவாக வேகுடித்தான்
தாக மிளைப்புந் தண்ணீர் விடாய்தீர்ந்து
தேகங் குளிர்ந்து திருக்காளை யீச்வரனைத்
தோத்திரமுஞ் செய்து சூரியனைத் தான்வணங்கி
வேர்த்துக் கிறுகிறுத்து வெகுமயக்க முண்டாகி
வந்து திரும்பி மன்னன் சிறுவனிடம்
சந்தோஷ மின்றித் தானிருந்து வப்போது
எங்கு மலைந்ததற்கு இதுவசதி யாமெனவே
தங்கையால் மன்னன் தரையதனைத் தான்தூத்து
பொன்னுடை தன்னைப் போற்றி யொருதலைவை
தன்னுலே தான்மறித்துச் சாய்ந்தார் கலுழனைப்போல்
தங்கத் தழுவணையில் சாய்ந்ததொரு பாவனையாய்த்
துங்கமரு தேந்திர துரையுஞ் சயனமுற்றுர்
பையல் சிறுவன் [1] பாண்டியனுர் கைவெடியை
கையி லெடுத்துக் கால்மாட்டில் வீற்றிருந்தான்
இப்படிக்கு இங்கே இருக்கவே யிவ்விடத்தில்
அப்பால் நடந்தவிதம் யானுரைப்பே னம்மானை
கைத்திரளை வாங்கிக் கண்ணுல் புசித்துமிக
நெய்த்திரளை யுண்ட [2] நீலன்நீ லன்கருத்தான்
அக்கினி சுங்கவுரி அரசன் வெளியாற்றூர்
தக்கதொரு வெளியில் தானிருக்கு மப்போது
அவ்விடத்தி லேகருத்தான் அக்கினீசு பக்கம்பார்த்து
செவ்வே யொருவசனஞ் செப்புவா னங்கவனும்
சின்னமரு தேந்திர தீர னிருக்குமிடம்
மன்னவர் கண்டு மகிழ்ந்தோடி வந்தேநான்
இந்நேர மென்கூட எழுந்திரே யாமாகில்
மன்னு பிடித்துக் கொடுப்பேன் மருதுதனை
நன்றுகக் கண்டுவந்தேன் நான்தான் அவர்தமையும்
இன்றுநாம் போகாது இருந்தக்கா லெவ்விடமோ
போனு லினிமேல் பிடிப்ப தரிதெனவே

---

[1] மருதபாண்டியன். [2] திருமால்.

கருத்தா னுரைத்தமொழி காவலனுந் தான்கேட்டு
வருத்தந் தெளிந்து மனமகிழ்ச்சி யாயெழுந்து
பட்டாள மொன்று பயன மெனக்கூச்சு
திட்டமுட னுரைத்துச் சென்னலக்கி னீசுதுரை
கருநா டகச்சனமும் கருத்தானை முன்னேவிட்டு
திருமால் வனந்தனிலே செய்தவசில் முன்னுளில்
மான்வேட்டை யாட வனவேடன் வந்திடவே
தான்வேட்டை மான்போலத் தன்கருத்தில் தோன்றினதால்
மானென்று மாலை வனவேடன் எய்ததுபோல்
கானில் மருதேந்திரர் காவலனைத் தான்கருத்தால்
அக்கினீசு பட்டாளம் ஆன துருப்புகளைக்
கைக்கு வலப்பக்கம் காவலனைத் தானிருத்திக்
கல்லு வெடியெடுத்துக் கருத்தானு மந்நேரம்
வெல்லுவே னென்றுரெண்டு குண்டுதனைத் தான்போட்டு
வல்லமைசேர் மன்னன் மருதுமேல் நோக்கமதாய்
மேட்டில் வளர்ந்த விளாஞ்செடியைந் தான்......வ....ய
காட்டில் பதிவாகக் கருத்தானுந் தானிருந்தான்
ஊன்றிக் கருத்தான் ஒளியினுக் கந்நேரம்
காணவே மால்மருது காவலனுங் கும்பினியைப்
பட்டாளஞ் சோல்சர் பாண்டியங்கரு ளுடமுடன்
திட்டமுடன் காட்டில் செடிமறைவில் நிற்கிறதைக்
கண்டான் மருதேந்திர காவலனும் பையனுடன்
விண்டா ரருகில் விரைந்துவா வென்றுரைப்பார்
வாடாச் சிறுவர் வனத்தில்மனு வேந்தர்களாய்க்
காடெல்லா மெந்தனுடைக் கண்ணனுக்குக் காணுதடா
பாரடாநீ தானும் பார்த்தும் பதறுமல்
கூறடா விப்போது கோடிப்படை வந்தாலும்
வெட்டுவேன் சும்மா விடுவேனோ நான்மருது
சுட்டு வெளியாக்கித் துரத்துகின்றே னிப்போது
கைவெடியைக் கொண்டா கடுகவே நானுமிப்போ
மெய்யுருவைச் சுட்டு வேந்தரெல்லாங் கொன்றுமழக்கி
வெற்றிகொண்டு நானும் வீரம் விடாதபடி
குத்தி யெதிரிதளம் கொள்ளையெனக் கூக்குரலாய்
அப்பா லெனதுயிரும் அடைவேன் சிவன்பாதம்
மெய்ப்பாக வீணில் மெலிவனோ நான்மருது
என்று சினந்து எதிரிமேல் கோபமதாய்த்
தின்றுவிடு வார்போலச் சிறுவனையே தானழைத்து
ஈரல் பிடுங்கி எலும்பொடிக்குங் கைவெடியை
வீர முடனே விரைந்துகொடு வாவெனவே
துண்டமும் ரெண்டாய்த் துணிக்க வெதிரிதனைக்
குண்டு மருந்துங் கூடவே தான்செலுத்திக்
கொண்டா வெனவே கோபமாய்த் தானுரைக்க

(இங்கு எட்டு ஏடுகள் மூலப்பிரதியில் இல்லை)

வாடிநான் சோர்ந்து மருகுகின்ற காலமிது
உனக்குச் செயகாலம் உண்டாகி யிப்போது
எனக்கு வபசெயமும் இப்போது வந்ததனால்
அச்சமில்லா வேந்தன் அண்ணனுக்கு மிப்போது
பச்சவர்த மெழுப்பி படைமுகத்தில் வாராமல்
வருத்தத் துடனிருக்க மற்றுமுள்ள மன்னரெல்லாம்
ஒருத்த ரெனக்கு உதவியின்றி யோடிவிடச்
சூதினால் காட்டைத் துரவறிந்து கள்ளவழி
வேதினால் வந்து வீட்டையுமே கைவசமாய்ப்
பாளையமும் நீயும் படையு முயிர்பிழைத்தாய்
மன்னன் கவுரிதுரை வாராம லுன்னுடனே
என்னுடைய மக்கள் இயல்வேந்த ரெங்களண்ணர்
தன்னுடனே கூட்டந் தலைகெட்டுப் போகாமல்
பின்னுங் கரிபரியும் பெருஞ்சேனை நாட்டவரும்
கூட்டங் கலையாமல் கொம்பிழந்த மந்தையைப்போல்
வீட்டை விடாமல் வீற்றிருப்போ மாமாகில்
அக்கினிசே வுன்போல் அநேகம்பேர் வந்தாலும்
கைக்குள் வளைதடியின் கம்புக் கிரையிடுவேன்
கவுரி பணிமார்க் கட்டியங்கள் கூறிவர
உங்களுக்கு மிப்போது உலகஞ் செயமடையும்
எங்களுக்குக் காலம் இவ்வள வென்பதுதான்
முன்னே தெரிந்தக்கால் முனைசெய்யே னுன்னுடனே
பின்னே தயவும் பிரியமுடன் வஞ்சகமும்
உள்வினயம் வைத்து உங்களுடன் சேர்ந்து
கொன்றதுவு மல்லாமல் கொல்வதுவும் நானறிவேன்
இவ்வுலகில்....ப........த்தா....ப்பையெழு பத்திரண்டும்
ஒவ்வுதலாய் வந்து உதவிசெய்வோ மென்றதினும்
மனவலிவி னாலும் மாற்றானை வெல்வமென்று
துணைவலிவி னாலும் துரையே துளைந்திளைத்தேன்
ஆனதினா லக்கினிசு அறிவிள்ளோ னைகையினால்
நானுனக்குச் சொன்னேன் நலமோ விடரென்னவே
என்னவித மாக எண்ணுகின்றாய் மன்னவ நீ
சொன்ன மொழியதனால் துரையே மனத்தாபம்
வேண்டாங்கா ணிப்போது விதிநமக்கு மின்றளவு
ஆண்டா ரறிய அறிவித்தே னுந்தனுக்கு
மன்னவன் கவுரி வல்லவனுக் கிப்போது
என்னையும் அண்ணனையும் என்னுடைய வமிசத்தார்
தன்னை யொருவரையுந் தாரணியில் வைக்காமல்
சின்னபின்ன மாகச் சிதைத்திடலே வுற்றமொழி
உன்னிடத்தி லேயுறுதி உண்டுபண்ணிக் கொண்டதனால்
[1] தென்னவனே யப்படியே செய்யே னென்னவேதான்

---

[1] மருதபாண்டியன்.

நீயும் வரக்கருதி நிர்ணயமுஞ் சொன்னதனுல்
பாயு முனிவீடம் பாங்காக வேபடைத்த
எங்களுக்குக் காலம் இவ்வளவேயிதமாய்த்
திங்களணி யீசன் சிருட்டித்தா ளுகையினுல்
சொன்னபடி நீயும் துரையே முடித்துவிட்டாய்
இன்னுமொரு வார்த்தை இயம்பக்கேள் மன்னவனே
கண்ணுக்குள் கண்மணியாய்க் கைக்குருவி போலாக
எண்ணிவரத் தேவையே என்மதலே....யெனே....வன
விமல....லண்டன் வேந்தன் துரைசாணி
சதிரில் துரைமார்கள் தானிறைந்த தவ்விடத்தில்
அதிபிரிய மாக அவன்போ யவன்தனக்குச்
சுந்தரஞ்சேர் மார்பன் துரைசாமி யென்றருள
அந்தமுடன் துரைகள் அனைவோரு மப்படியே
விந்தையுட னழைத்தார் விளங்க வுலகமெங்கும்
மூந்தவும் நாமுரைத்த முத்தவடு கென்பதுபோ்
மறைந்ததுரை சாமியென்று வழங்குதுகா ணிவ்வுலகில்
சிறந்த விதுவசனஞ் செப்பினே மன்னவனே
மைந்த னெனவே வளர்த்தான் துரைசாமி
அந்தக் குழந்தை ஆரணியந் தன்னிலேதான்
எந்த விடத்தில் இருப............தானே
கந்தவனஞ் சோதிவனங் காட்டில் திரிவான்காண்
எந்த விதமும் எவரை வதைத்தாலும்
மைந்தன் துரைசாமி மதலையுயிர் போகாமல்
கொல்லாமல் சும்மா கொடுங்காவல் வைப்பதென்று
சொல்லுங்கா ணக்கினீசே துரையேவுன் வாய்திறந்து
என்று மருதேந்திரர் எடுத்துரைத்தார் வேந்தனிடம்
நன்றுகா ணப்படியே நலமாய் நடத்திவைப்போம்
துரையே மருதேந்திரர் துட்டத் தனங்களின்றித்
தரையி லிருப்பானேன் தண்டிகைமீ தேறுமென்றார்
அப்படியே நல்லதென்று அரசன் மருதேந்திரன்
செப்ப முடனே சிவிகையின்மேல் தாமெழுந்தார்
தத்தித் துருப்புஞ் சூழவே கும்பினியும்
வெற்றிகொண்டு அக்கினீசும் வெளியாற்றூ ருடையத்தில்
கூடாரம் வந்து கொற்றவனைக் காவல்வைத்தார்
வாடா மதிமுகத்தான் மருதேந்திர மன்னவனும்
வந்தா ரிருந்தார் மனமும் விசனமுடன்
சந்தோஷ மின்றிச் சலிப்புந்தன் கால்[1] விதனம்
மெத்த விதனமென விதனம் பொறுக்காமல்
சத்தியவான் தானம் தனக்கு அடங்காமல்
போசனமு மன்றிப் புளித்த தயிரதனை
ராசன் வரவழைத்து நலமாய்ப் புசித்தனராம்
வாசவ னுனதுரை மால்மருது பாண்டியர்க்குத்

---

[1] விசனம், வருத்தம்

தோடம் புரிந்து துஞ்சினர்கா ணம்மானை
திருக்காளை யீசர் திருவடியே தஞ்சமென்று
இருக்க நினைவெடுத்து ஏகினார் மன்னவனும்
காளீசர் பாதங் கனமுடனே தான்மறவான்
[1] வேளை யெரித்த விமலர்பதந் தான்சேர்ந்தார்
உடனே அக்கினீசு ஓடிவந்து தான்பார்த்து
படமாத்தூர் வேந்தன் பாராளு மால்கவரி
ராசனுக்கு அக்கினீசு நலமாய் அறிக்கையிட்டார்
வாசவனுங் கேட்டு மன்னன் இடமதனை
பத்திரம் பண்ணுமென்ன பாங்கான அக்கினீசும்
சித்திரம்போல் பெட்டி செய்து அதிலடக்கி
மூத்திலுமே காவல் முன்பின்னு மாய்நிறுத்தி
வைத்திருந்தா னப்பால் மருது பெரியதுரை
இப்புவியை யாண்டு இணைபிரிந்து போனவிதம்
செப்புகிறேன் நன்றாய் செவிகொடுத்துக் கேளுமினி
பெரிய மருதேந்திரன் பேருலகை யாண்டிருந்து
வறுமை சிறுமையதாய் வனத்தில் படுமவதி
ஆதி திருக்காளை அரனுமையாள் வீற்றிருக்கும்
சோதி வனத்தைவிட்டு சோடிழந்த வன்றிலென
மன்னன் பிரிந்து மயங்கித் திசைமாறித்
தன்னந் தனியே தம்பி தனைநினைந்து
மக்கள் மனைவிசுற்றம் மறந்துமனம் வேருகிக்
கைக்குள் வளைதடியின் கம்பே துணையெனவே
தங்கப்பொன் மேனியது அங்கம் மிகக்கறுத்து
மங்கலத்துக் காட்டில் வந்திருந்து சந்திரிகை
வந்தபின்பு ராசன் வழிதப்பித் தானெழுந்து
புந்தி கலங்கிப் போனார் உளக்குடிக்கு
உளக்குடிக்குத் தெற்கே உயர்ந்த செடிக்காட்டில்
பிழைக்கலா மென்று பின்னுசை வைத்தெழுந்து
அஞ்சுநாள் பஞ்ச ராத்திரி அங்கிருந்து
அஞ்சாதே என்று அழைப்பார் ஒருவரின்றி
போசனமு மில்லாமல் பொறிகலங்கி ே......றரி....
வாசமின்றிக் குன்றி மன்னவனு மிவ்வனத்தில்
தாகம் பசியிளைப்புஞ் சஞ்சலங்கள் மெத்தவுண்டாய்
இருபத்து நாலாண்டு இருந்தரசு செய்துவந்தோம்
ஒருவர் தருணமதில் உதவுகின்ற பேர்காணேன்
வருந்த நடந்த மலர்ப்பாதம் நோகாமல்
இருந்து தவிப்பாறி எழுந்துபோ மென்றுசொல்ல
வேறே மனிசர் விளம்புவதைக் காணோமே
ஆரைநான் நம்பி ஆதரிப்பா ரென்றுசொல்லிக்
கூறுதற்கு விந்தக் குவலயத்தில் ஆருமில்லை
வேறொருவர் மேலே விசனித்தால் ஆவதென்ன

[1] மன்மதன்

மன்னுயிருந் தன்னுயிராய் வளர்த்தோம் சகலரையும்
உற்றவர்கள் பெற்றார் உலகம் பகையாச்சே
மற்றவர்கள் யாரு மயங்காதே என்றுரைப்பார்
எல்லாம் திருக்காளை ஈச்வரனார் தஞ்செயல்தான்
வல்லமையால் வாழ்ந்தோம் மனிதர் தேவையில்லை
வண்ணமுள்ள மேனியது வாடி நோகாமல்
எள்ளி இடையாமல் ஈச்வரனே தஞ்சமென்று
வனமே கதியெனவே மாயோனே தஞ்சமென்று
கணமே நினைக்காமல் கவலைநெஞ்சில் வைக்காமல்
மனம்போன போக்காய் வனத்தில் திரிந்தக்கால்
கனந்தான் நமக்குக் [1] காளையார் காத்தருள்வார்
என்று மருதேந்திரன் எண்ணாது எண்ணிமனம்
சென்றார் வடமேற்காய்ச் செடிங்காடே ஆதரவாய்
பில்லாக் கரைவழியாய்ப் பேரிருளி லேயெழுந்து
அல்லி நகரம் அடுத்த செடிங்காட்டில்
ஏங்கி யிடைந்து எழுநாள் பட்டினியாய்த்
தூங்கி நடந்துவந்தார் சூரியனார் தாமுதித்தார்
ஓங்கி வழிநடந்து ஒருவர்கண்ணில் கிட்டாமல்
[2] நாங்கூர் வனத்தில் நடையசந்து வந்தெழுந்து
ராங்கியன் தன்னில்வர நல்லிடையர் கண்டுமனம்
ஏங்கி யிரங்கி இவர்மயக்கம் தானறிந்து
வாட்டமுஞ் சோப மயக்கமதைத் தீர்க்கவென
ஆட்டினுடைப் பால்கறந்து அரவணைத்துத் தாங்கொடுத்தார்
வாங்கிப் புசித்து மன்னவனும் அப்போது
ஓங்கி நடந்துவைகை ஓடைநதி தான்கடந்து
வடகரையுந் தாண்டி மடைப்புறத்துப் பாதைவழி
அடைவாக வேநடந்து அன்பாய் வட்கிழக்கே
இடம்பார்த்து நன்றாய் இருக்குமிடம் போகவென்று
படமாத்தூர்க் காட்டில் பார்த்திபனும் வந்திருந்து
மறுநா ளதிலிருக்க மாற்றானை வனமிதென்று
ஒருநா ளிருந்துமன்னன் உடன்காட்டை விட்டகன்று
வாட்டமுடன் நடந்து மக்கள்பெண்டி ராசையினால்
..........வெகுவாய்ச் சிந்தையது வாட்டமுற்று
வம்பில்லாத் தருமன் மருதுதுரை மன்னவனும்
தம்பிமேல் சிந்தை தானே மிகுந்தவனும்
வாடி மனமுருகி மக்கள்பெண்டிர் தம்பியரை
தேடிப் படமாத்தூர் செடிங்காட்டி னூடுவழி
தெம்பாய் நடக்கையிலே தென்னவற்கு மப்போது
தம்பியர் மேலாசை தனிமை மிகவாகி
வெம்பி வனத்தலைந்து விதிதனையே தானினைந்து
கொம்பிக் கொதித்துக் கூறுவார் மன்னவனும்;

[1] காளையார் கோவிலில் வீற்றிருக்குஞ் சிவபெருமான். [2] திருநாங்கூர்.

**கொச்சகம்**

*சோதிவன மீதுவளர் தோகைமயி லின்மேல்*
*சாதிவகை கிளிகாளென் தம்பியுடன் சந்ததியும்*
*மரதுடனே யிந்தவழி வந்தா லுரைத்திடுவீர்*
*வேதனையே வுங்களுக்கு விள்ளுவதுந் தான்தரமோ.* (85)

*பாரே பருவரையே பண்புடைய செண்பகமே*
*ஆரை யினிக்கேட்பேன் ஆறுலு முமையல்லால்*
*தாரணியை ஆண்டிருந்து தாழ்வுவந்து வாழ்விழந்து*
*போனாரே யெந்தன் புதல்வரையுங் காணீரோ.* (86)

*ஆலே திருவரசே ஆத்திதிரு வாத்திகளே*
*பாலனுட னேயெனது பரிவாரங் காணீரோ*
*வால யெனக்கிளைய மால்மருது பாண்டியனும்*
*பாலருமே இந்தவழிப் பாதைவந்தால் சொல்வீரோ.* (87)

*வாக்காக வேகொக்கின் வன்னமுள்ள அன்னமதே*
*மக்களுடன் தம்பியிந்த வனத்தில்வரக் காணீரோ*
*அக்குமில்லை வேறெனக்கு ஆதரவு ஆருமில்லை*
*பக்கத் துணையுமில்லை பட்சிகளே தஞ்சமென்றேன்.* (88)

*ஆனைகளே ஆளிகளே அண்டரண்டப் பட்சிகளே*
*கானமெனுஞ் சோதிவனக் காட்டிலுள்ள சாதிகளே*
*சேனைதளம் பெருத்த நீரன்மரு தேந்திரனை*
*கானவனத் திவ்வழியில் கண்டீரோ காணலையோ.* (89)

**விருத்தம்**

*தகைப்புடன் தயங்கி மன்னன் தம்பியுந் தனது பாலர்*
*திகைப்பூட்டில் மிதித்தாப் போல திசைதப்பிப் பிரிந்த தாலும்*
*நகைப்பரென் றுலகில் நாணம் நடுக்கமு மடக்க முற்றுத்*
*துகைப்பெரு வனமாஞ் சோழ புரத்துருக் காட்டில் சென்று;* (90)

*நாடதை யிழந்த வேந்தன் நற்றுணை யொருவ ரின்றி*
*வீடது மிழந்த சொந்த வேந்தரைப் பிரிந்து கானில்*
*காடதி லலைந்து கந்த வனத்தினில் கவலை யோடும்*
*ஓடியே வந்து நின்று உருகினு ருடைந்து சிந்தை.* (91)

*சிந்தையுங் கருகி வாடி தெளிவின்றித் திகைத்து மன்னன்*
*கந்தமா வனத்தின் பொய்கைக் கரைதனி லிருந்து தாகம்*
*விந்தையாய்த் தீர்த்தந் தண்ணீர் வேந்தனும் புசித்துப் பின்னும்*
*அந்தநல் வனத்தை விட்டு அடவியில் நடக்கின் றாரே.* (92)

## வேறு

மெச்சும் புகழ்மருது வேந்தன் அறிவழிந்து
அச்சமது வுண்டாகி அவ்வனத்தை விட்டெழும்பி
வினைக்கே பயந்து மெலிந்துருகி வேந்தனுமே
பனைக்குடிக் காட்டின் பாதை தடுமாறி
எவரு மறுகா திருட்டி விளைப்புடனே
கவனத் துடன்நடந்து காடெல்லாந் தான்கடந்து
எத்தனை நாளைக்கு இப்படியே யிவ்வனத்தில்
சித்தங் கலங்கித் திரிவேன் சிவனாரே
என்றே திருக்காளை ஈச்வரனே யுன்பதத்தில்
சென்று வணங்கிச் சிவகணங்க ளாயிருப்போம்
வம்புக்குள் சிக்கி மறுகாமல் நாமிருவர்
தம்பியும் நானுஞ் சரணடைவ தெக்காலம்
என்று புலம்பி ஏங்கி மருதுமன்னன்
நின்று தவித்து நினையாவெல் லாம்நினைந்து
காட்டி லிருந்து கலங்கிப் பரதவித்து
வாட்டம் பசியிளைப்பும் மைந்தர் மனைவியர்மேல்
தேட்ட மிகவாகத் திறமும் வலுக்குறைந்து
நாட்டை நினைக்காமல் நல்லரசுந் தோற்றுமல்
மைந்தருடன் தம்பி மறுமன்ன ரைமறந்து
சிந்தை சிவன்பாதம் சேரவென்று வோர்மனத்தாய்
உற்ற வனங்கடந்து ஒக்கூர் ஊருணியும்
வித்தார மான விநாயகனு ராலயமும்
கண்டு மகிழ்ந்து கனபிரிய முண்டாகி
மண்டலத்தை யாண்ட மருதுதுரை தானும்
பொய்கை நதியாடி பூசைதவந் தான்முடித்து
அய்யன் விநாயகனார் அடியிணையைத் தான்போற்றி
தொழுது விநாயகனைத் துன்பமெல்லாந் தான்தீரப்
பழுதில்லாத் தம்பியுடன் பாங்காக வெந்தனையும்
இருவரையுங் காளீசர் இன்பமுட னுன்பதத்தில்
திருவடியில் சேர்த்துத் திடமு மதுகதியாய்
இருவ ரிருந்து என்றைக்கு முத்திபெற்று
திருவின் மலர்ப்பாதம் சென்றார்க ளென்றுலகில்
பேரும் புகழும் பெருமையுமே வுண்டாகிச்
சீருந் தவமுஞ் சிறப்பாக நீகொடுத்துச்
சாரும் வினைதவிர்த்துத் தம்பியுட னெந்தனையும்
காப்பீர் சதாசிவனே கடைபோக வெப்படியும்
என்று துதித்து ஏக்கந் தனைமறந்து
நின்றுதான் சூரியனை நிட்டை யுடன்வணங்கி
நன்றாய் வழியறிந்து நாம்போக வேணுமென்று
சென்றார் வடக்கே சிறந்த மதகுபட்டி

கானி லிவர்வரவே காலதனில் முள்ளழுத்த
மானபரன் பெரிய மருதுதுரை தான்பார்த்துக்
கல்லழுத்தி யெந்தன் காலில்முள் தைத்திடவே
மெல்லடியைக் கிந்தி மிதிக்கவோ நான்மருது
ஈட்டி யெறிந்தாலும் என்மீதில் செல்லாதே
காட்டிலுள்ள முள்ளு ஆனமட்டும் பார்க்கினுமே
நெஞ்சுங் கலங்குவதோ நினைவுதப்பிப் போகுமதோ
படைக்கஞ்சா மன்னனெனப் பாருலகில் பேராகிச்
செடிக்குப் பயந்தால் சிரியாதோ பூமியென
விண்டு தனியாக விளம்பியே யவ்வனத்தில்
மண்டலத்தை யாண்டோன் வலிமை தனைமறந்து
உற்றவரைத் தானினைந்து உருகிமனம் வேறுகிப்
பித்தாய மானவராய்ப் பேர்ந்தா ரவிடம்விட்டு ;

### விருத்தம்

மன்னவன் மதகு பட்டி வனந்தனை விட்டு நீங்கித்
தன்னிலே துயருண் டாகிச் சாரலில் நனைந்து வாடி
இன்னிமே லெவிடம் போவ தென்னவே மனமும் நொந்து
மின்னிய முகம்வே றுகி வெள்ளைக்கல் வெளியில் வந்தார். (93)

காலினில் தைத்த முள்ளைக் கையினில் வளரி யாலே
ஆலினில் நின்று மன்னன் ஆணிவைத் தறைந்தாப் போலே
சாலவே விழியால் பார்த்துத் தானடித் திறக்கித் தேய்த்து
மாலையில் மதகு பட்டி வனத்தினில்[1] மருது வந்தார். (94)

மன்னனு மதகு பட்டி மலைக்கண வாயி னேரம்
தன்னவன் தனிய னுகித் தம்பிமே லேக்க முண்டாய்
அன்னியர் ஏவரு மின்றி ஆதரிப் பாரு மல்லால்
உன்னியே நடைய சந்து உருகினுர் சாலி யின்கீழ். (95)

### வேறு

ஆனை வெறும்புலியே ஆரணியந் தன்னில்வளர்
மானே மயிலினமே மக்கள்வரக் காணியரோ
தந்தார் தர்ரந் தரையில் மிதித்தறியாள்
மந்தார் குழலணங்கு மனைவியெந்தக் காடுறைந்தாள்
ராவண்டக் கரடிகளே மரமே சிறுசெடியே
கண்டீரோ எந்தன் கண்ணுன தம்பிதனை
மந்திரி யூகி மதிவதனன் மால்மருது
தந்திரி பூலோக தருமனென்னுந் தம்பியரைக்
காணுமல் நெஞ்சங் கலங்குதே கானகத்தில்
வீணுய் நானுக வினைதனக்கு வுள்ளானேன்
கானமெல்லாஞ் சுற்றிவந்து காணேனே தம்பிதனை
மாற்றுன் கவுரி வல்லவனுங் கும்பினியும்

---

[1]. முத்தமருத பாண்டியன்.

பார்த்தெய்து கொன்றுரோ பாலரையுந் தம்பியையும்
காடுசெடி முழுதுங் களைக்கின்றுர் கும்பினியார்
ஓடி யொளிந்து ஒதுங்கும்வழி காணேனே
தம்பி சமத்துந் தாரணியை யாண்டதுவும்
வம்புடைய பாலர் வலிவுஞ் சவுரியமும்
வங்காளர் சினர் வந்துகண்டு நின்றதுவும்
எங்கை வளரி எளிமையாயப் போனதுவும்
ஆலமுண்ட கண்டர் அரனுர் நமக்களித்த
காலஞ் சரியாய் முடிந்ததனுல் காசினியும்
வீர மிடிந்தும் மேன்மையது தானிழந்தும்
பாரை யிழந்தும் பரதவிக்க லாச்சுதிப்போ
எம்பிரான் செய்கை யினிநடப்ப தேதெனவே
சாம்பி முகம்வாடித் தயங்குவா ரந்நேரம் ;

விருத்தம்

சமரினில் வலியோன் யிருமரு தெனவும்
 தரணியி லவர்களல் லாது
அமர்புரி வலிமை ஆண்மைவல் லபங்கள்
 அவன்றி யுலகிலா ரெனவும்
தமருடன் சொந்தக் கிளைகளுந் தளங்கள்
 சகலதன் சவுரிய மிருக்கக்
கமரிருள் வனத்தில் தம்பியும் புதல்வர்
 கலங்கிட நம்முயிர் கரைந்தோம். (96)

ஆதவ னெழுந்து சமர்பொர வெனவே
 அடர்ந்துஎன் னுேடெதிர் வரினும்
மாதெனும் வாள்மேல் நடந்தவ ளருளால்.
 வளரியால் தடுப்பனே மயங்கேன்
சோதினைக் காளை அரனடி சேரத்
 தொடுத்தநா ளடுத்தது பச....ன
வாதமு மிதுநாள் வரவும்வல் லபங்கள்
 வலிமையுங் குறைந்தது வலுவாய். (97)

வேறு

மனம்வாடி மன்னன் வலிமை யிப்படிக்குத்
தனிமைதாய் எண்ணித் தயங்குவார் பின்னுமவர்
சமருக் கொரு காதால் தரணிதனில் மால்மருது
அமரி லவர்களைத்தான் அடக்கவல்லோர் யாருமில்லை
எனறு புவிபுகழ இருந்தோ மிதுநாளாய்
வென்றுனே அக்கினிசு விதிநமக்குக் கிட்டினதால்
தம்பியுடன் தமருங் கிளைகள்தங் காவலரும்
அம்புலியும் கைவசமாய் அரசு மிருக்கையிலே

ஒன்றுமில்லே வேதனைகள் உல்லாச மாயிருந்தோம்
இன்று சகலமுமே இழந்துநாம் வாடுகையில்
காளே அரன்பாதங் கருத்துடனே சேரவென்று
மானைக் கரத்திலணி மகாதேவர் தானளித்த
வரமுஞ் சரியாகி வல்லபமுந் தான்குறைந்து
கரும வினைகவிந்து கண்ணெடுக்க வொட்டாமல்
வேதனைய தாகி மிகுத்தருள் கைகள்பச்சை
வாதமது வந்து மாத்தாறு லெந்தனுக்கு
வளரி யெடுக்க வலிமையொன்று மில்லாமல்
வெளிறி உடம்பசந்து மெலிந்தேனே வீம்பதனுல்
அம்புவியாள் மன்னன் அரசன்மரு தேந்திரதுரை
தம்பியருந் தானுந் தட்டழிந்தா ரென்றுலகோர்
உரைக்கும் படியாக ஊமையனுல் பேரெடுத்தேன்
இரக்க விதுகாலம் இனிவேறு வொன்றுமில்லே
என்று மனமும் இளகிப் பசியிளேப்பால்
இன்று வசதியென இருந்தாரே சாலியின்கீழ் ;

## விருத்தம்

நேருடை விளாவுஞ் சாலி நிழலினி லிருந்து மன்னன்
வீறினுல் பசியைத் தீர்க்க விளாங்கனி யதனைக் கண்டு
தீரனுஞ் சாலி நீங்கிச் சிக்கென வெழுந்தே சென்று
பாரினில் குனிந்தே விளவின் பழந்தனை யெடுக்க லானுர். (98)

விளாங்கனி தனையெ டுத்து வேந்தனும் புசிப்போ மென்றே
பழங்களே மடியில் கட்டிப் பருத்ததோர் சாலி தன்னில்
களங்கமற் றிருந்து மன்னன் கனிதனை யுடைக்கும் போது
விளங்கவே வடமேற்காக விளம்பவோர் நிமித்தங் கண்டார். (99)

சொல்லிய நிமித்தந் தன்னைத் துரைமகன் விரைந்து பார்த்துக்
கல்லலுண் டாகு மென்றே கருதிய வசனங் கண்டே
எல்லேயை விட்டுப் பேர்ந்து எழுந்தப்பால் போவோ மென்னச்
சொல்லியே பழத்தைத் தின்று தொடர்ந்திடும் பலனைச்
[சொல்வார். (100)

## வேறு

நிமித்தமது சொன்ன நேர்மை தனைமனத்தில்
சமத்தன் வரும்பலனைத் தானறிந்தங் கீதுரைப்பார்
தனித்தொருவ னுகத் தயங்குகின்றே மொற்றையிலே
சனித்துயற்சி தீர்ந்து தன்பதியில் செல்வதற்கு
எட்டுநா ளோர்வாரம் இருக்குதென்று சாதகத்தைத்
திட்டமுடன் எண்ணித் திருமருது பாண்டியனும்
இந்நாள் முதலாக எட்டுநா ளாம்வரையும்
வின்னபே தங்கள் வேறென்று மில்லாமல்
தப்பித் தலேபிழைத்தால் தாரணியை யாளவென்று

செப்பும் நிமித்தமதைத் தீர னறிந்துகொண்டு
திருக்காளை காளீசர் செயல்நமக்கு வுண்டானால்
இருக்கலாம் நாமும் இயல்பான தம்பியுடன்
என்றுமே தானும் எண்ணியே மன்னவனும்
நின்று உலாவி நிழலில் விளாங்கனியை
உண்டா ரதுசமயம் ஒளித்திருந்து வோர்வலையன்
கண்டோடி வந்து காவலனைக் கண்டவிதம்
கவுரியுட னுரைக்கக் கேட்டவுட னங்கவரும்
சவுரியவா னக்கினீசு தன்னிடத்தில் போயுரைக்கக்
கேட்டா ரிதுசேதி கேட்டவுட னக்கினீசு
வாட்டந் தனைமறந்து வந்துரைத்த பையனவன்
தன்னையே முன்னைவிட்டுத் தானவர்க்கு வுண்மைசொல்லி
செர்னல்துரை அக்கினீசு திரண்டுரெண்டு கும்பினியும் ;

## மதகுபட்டிக் காட்டில் பெரிய மருது துரையை அக்கினீசு வளைந்து பிடித்தது.

சோல்சர் துருப்புந் துரைமா ரணியணியாய்ப்
பாசமுடன் மருது பாண்டியனைத் தான்பிடிக்க
வந்தார் வெளியாற்றூர் வாடிவிட்டுக் கோட்டிநகர்
சந்தோச மாய்க்கடந்து தானதிக வேகமுடன்
குரளித் தனம்வலையன் கூறினவன் தன்னுடனே
அரளிக்கோட் டைவெளியில் அடித்தேதான் கூடாரம்
நாட்டவரைக் கூட்டமிட்டு நயவார்த்தை யாயுரைத்து
வாட்டப் படும்பெரிய மருது தனைப்பிடித்து
கொண்டுவர வேணுங் கூட்டமா யெல்லோரும்
திண்டாம வனத்தில் செடியைக் கலையுமென
வந்தே மதகுபட்டி வனந்தனிலே யாராய்ந்து
அந்த வலையன் அவன்காட்ட வக்கினீசும்
சுற்றி வளைத்துச் சூழவிட்டுச் சேனைகளை
மத்தியிலே வக்கினீசும் வாம்பரியை விட்டிறங்கி
கையில் வெடியெடுத்துக் கால்நடையா யங்கவரும்
ஐயச் செடிமறைவில் பதுங்கிப் பதுங்கிவந்து
செங்கை வெடியதனைத் திறமாகத் தானூன்றித்
தங்கி மரத்தடியில் தானிருந்து அக்கினீசும்
மறைந்து மருதினுடை வளரிக்குத் தான்பயந்து
கரைந்து மதிமயங்கிக் காவலனை யெப்படிக்குப்
பிடிப்போ மிவன்மிகுந்த பலசாலி யாமெனவே
துடியாய்க் கவுரிமுன்னாள் சொன்ன ரதனாலே
துப்பாக்கி யாலே சுட்டிடுவோ மென்றக்கால்
தப்பினால் துப்பாக்கிச் சனியனதில் நம்முயிரும்
செப்பமுள்ள சோல்சரையும் சேனைபடை யாளரையும்
வைப்பதில்லை நன்றாய் வளரியினால் கொன்றிடுவான்

தாக்குடைய மால்மருது தம்பியுட னண்ணனையும்
தூக்குவே னென்று துரைகவுரி ராசனிடம்
எடுப்பாக முன்னாள் இயம்பியதோர் வார்த்தைதனை
முடிப்பதில்லை நிச்சயமாய் மோசமது நேருமதால்
எப்படிக்கு நாமிவனை எங்கும் விடாதபடி
கைப்பிடியாய்ப் பிடிக்கும் காரியங்க ளேதெனவே
தேசத்து மன்னன் செர்னலக்கி னீசுதுரை
யோசிக்கும் போது உண்டுபச்சை வா......மென
அறிந்த பழையநினைவு அப்போது வந்ததனால்
சிறந்தடிக ளக்கினீசு தீரனிவன் கைவளரி
ஏலாது நம்மேலே எப்படியுங் கைப்பிடியாய்
வாலாய மாய்ப்பிடிக்க வாகுமென்று தாக்குடனே
சேனைக்குச் சாறுபண்ணி சொனலக்கி னீசுதுரை
மானபரா னுனதொரு மருதுதுரை முன்வரவே
அன்றே திருமருது அறிந்துநமன் வந்ததென
என்றே வளரிதனை எடுத்தார் வலதுகையில்
இரும்பு வளரிதனை எடுத்தவன்மே லேவவென
விரும்பியே கையோங்க மெய்நடுங்கிக் கையசந்து
இச்சை வேருகி இளைத்துமனம் வேறுபட்டுப்
பச்சைவா தங்கள் படர்ந்துவலக் கைசோர்ந்து
நீட்டினனு கத்திரும்ப நிமைக்குள் முடக்கறியார்
வாட்டமுடன் பச்சை வாதங்குறுக் கிட்டதனால்
அசந்தா ரறிவழிந்தார் ஆருமின்றிக் கானகத்தில்
வசந்தா னினிமேல்நாம் வந்ததொரு அக்கினீசு
இடந்தான் வேறெண்ணம் எள்ளளவு மில்லையெனத்
திடந்தான் மனத்திலெண்ணிச் செப்புவா ரந்நேரம்
தளமுந் துணை யிழந்தார் தார்வேந்த னுமருது
வளரிதனைப் பார்த்து வழுத்துவா ரம்மானை.

## விருத்தம்

எடுத்தகை வளரி தானும் எதிரிமேற் செல்லுங் காலை
விடத்தகா துரையே யெமன்றான் விட்டினும் விடாது யெந்தன்
படைத்தவா யுதங்க ளெல்லாம் பகைவன்வந் தெதிர்த்த போதில்
விடத்தடை யானு லெந்தன் விதிமுடி வான நானே. (101)

ஓங்கின கைதான் சோர்ந்தால் ஒருவரைச் சொல்வ தேது
தாங்கிய வறுமை வந்தால் சஞ்சலப் படவு மாமோ
ஏங்கியே யிடைந்து மன்னன் எங்கையில் வளரி தானும்
வாங்கப்பின் வாங்கிற் றன்றே வருமவி தாதங் காதே. (102)

அம்பறுப் பொதியைக் கட்டி அரசர்கள் புயத்தில் சேர்ப்பர்
நம்பியே மரமி ரும்பே நான்சுமந் தனுத்தே னுங்கள்
வம்புதா னெனக்கு முன்னே வந்தது மாற்று னல்லோ
வெம்பிடா திரும்பே வந்த வேந்தன்மேற் செல்லா தேதோ. (103)

வல்லவன் நவாபு சேனை வந்துதா முன்னு ளென்னைக்
கொல்லவே வளைந்தார் கொல்லங் குடியிலூ ருணியில் நானும்
செல்லவே நதியில் முங்கித் தெளிந்தெழுந் திலையோ நாங்கள்
கொல்லவே குதிரை ரானு குணங்கியே கலைந்த தென்றே. (104)

வேறு

அன்றுஎன் னிருகைநீங்கள் ஆதரவா னீரப்போ
என்னைப் பிடிக்கவிதுக்கு இருபதாம் நாள்தனிலே
வந்தால் பெரிய மருதினுடைக் கைவளரி
எந்த விதமென்றும் எவ்விதமே செய்வதென்றும்
சிந்தைதனில் நன்ருய்த் தெளிவாகு முந்தனுக்கு
இந்த வளரியுன்மேல் எற்றக்கால் தேசமதை
ஆள்வான் கவுரிதுரை அப்போ துளக்குடியில்
மாள்வான் செடிக்காட்டில் மைந்தன் குடைக்காது
தம்பி கயத்துவெட்டி தலைகொண்டு போய்வதைத்தான்
நம்பிக்கை சொல்லி நான்விலக்கா தேயிருந்தால்
தம்பி கவுரி தலைகொண்டு மிப்போது
தெம்பாக விங்குவந்து தேச முழுதாள்வான்
வருவா னிவன்பிறகே மன்னவன்நீ யிங்குவந்து
சிறுவயலில் சென்று தீனி புசித்திடுவாய்
கண்ணெதிரே யிப்போவெடி கைப்பிடித்து வந்தவனீ
எண்ணி யிதற்கு இருபதாம் நாள்தனிலே
மன்னுநீ யிப்படிக்கு வருவதுவே யுண்டானல்
என்னநா னுன்னிடத்தில் இயம்புவே னக்கினீசே
எங்கை வளரி எதிர்த்துன் சிரமறுத்து
அங்கே கழுட்டி அறிந்துவரப் போய்விடுமே
சத்தியந் தப்பாதார் தாரணியில் கும்பினியார்
உத்தம ரென்றும் ஒழுங்குமுதல் சட்டதிட்டம்
நீதி மிகுந்த நிருபரென்றுஞ் சொல்வதல்லால்
பேதக முங்களிடம் பிறந்த திதுவேகாண்
ஏதினு லென்று இயம்பக்கே ளக்கினீசே
சூதினல் சொன்ன சொல்லெனவே யெண்ணுதே
வையகத்தில் நீங்கள் வஞ்சகமில் லாதிருந்தால்
பைய விதுவரையும் பாராளத் தக்கதில்லை
பொய்யும் புரட்டும் புலையுங் கொலைகளவும்
மெய்யாகச் சூதும் வினயமுடன் மேதினியைக்
கன்னு டகத்தார் கபடத்தா ராகையினுல்
மன்னு விந்நாடு வாங்கினீர் வஞ்சகமாய்
உங்களைப்போ லெங்களுக்கு உண்டானல் சூதுகள்தாம்
எங்களையும் வெல்ல எமனுலு மாகாது
வஞ்சக மில்லாத மனுவேந்தர் தம்மையெல்லாம்
அஞ்சவே வென்று அரசாள வேதுணிந்தீர்

ஆறுனு முங்களுக்கு ஆகும்நா ளானதனுல்
தானுக வெங்களுக்கு தாழ்ந்தநா ளாச்சுதுகாண்
ஆகும்நா ளுள்ளவரை அரசாண்டோம் மேதினியைச்
சாகும்நாள் வந்ததனுல் தப்புதற்குண் டோவிதங்கள்
நான்புலம்பல் வீணிதுவே நவிலக்கே ளக்கினீசே
கான்புகுந்த வெந்தனுடைக் கண்ணுன தம்பியரே
விட்டுப் பிரிந்த விசாரமன்றி வேறிலேகாண்
தட்டுப் படவிலேயோ தம்பி யிதுவரையும்
என்று பெரிய மருதேந்திர னெடுத்துரைக்க ;
**(இடையில் இரு ஏடுகள் மூலப்பிரதியில் இல்லே)**
அழைத்தார்க ளென்னே அனுப்பிவிட்டா ருன்மீதில்
என்னே யனுப்பிவைத்தார் என்கூட வந்ததளம்
தன்னிலுமே நான்குபட் டாளமத னேவனைத்தீர்
திருப்பத்தூர்க் கோட்டைமுதல் சிறுவர் புரிவரையில்
திருப்புவன முதலாகச் சிறந்தபுதுக் கோட்டைவரை
விருப்பமுடன் நீர்மேல் நெருப்பின் வெகுதளத்தை
நெருப்பா யெரித்துவிட்டீர் நிமைத்து விழிக்குமுன்னே
ஆற்றில் குளத்தைவெட்டி அதனுலுஞ் சேனேகளே
நேர்த்தியுடன் கொன்றீர் நேரமிது வல்லாமல்
போசனமு மில்லாமல் புலம்பவைத்தீ ரெந்தனேயும்
காசினியெல் லாம்பிடித்தோம் கண்டதில்லே யுங்களேப்போல்
பூமண்ட லங்களெல்லாம் பிடித்தார்கள் கும்பினியார்
பார்மன்ன ருங்களேப்போல் படைபொருவா ராருமில்லே
இப்படிக்குச் சண்டையது எவர்செய்வா ருங்களுடன்
செப்பமுட னெங்கள் சேனேகளு மாண்டதில்லே
வானர வீரன் மதுரை முதல்துறந்து
கானுறு வைகைக் கரையோர மாய்விரட்டி
வண்ணமுள்ள மல்லப்பையன்•வளர்த்த விளந் தோப்புவரைக்
கொன்றீ ரஞ்சு பட்டாளம் கொற்றவனே
வரி யுடைத்தீர் இறக்கடித்தீர் வேணபடை
வீறுடனே கொன்றீர் வெகுபேரான பேர்களேயும்
பீரங்கி யாலே பிடித்தீர்கூ டாரமுதல்
நேரங்க ளிவ்விதத்தில் நேர்ந்ததுகா ணுன்மீதில்
அப்படியுங் கும்பினியார் ஆதரவே யுன்மீதில்
செப்பமுடன் தயவாய்ச் சிறுவனவ னூமையனேக்
கைப்பிடியாய்க் கொடுத்துக் காவலனே யொப்புவித்தால்
எப்போதும் போல இருப்பீ ருலகாள்வீர்
என்றுதான் கர்னல் இயல்பாக வுந்தனக்கு
அன்று வரவிட்ட ஆளோலே தன்னேயேநீ
பின்னுசை வைத்துப் பேணுமல் விட்டுவிட்டீர்
இன்னிமே லெண்ணம் எவ்வளவு மேற்காது
வாட்டுமுதல் கமுட்டி நல்ல கவர்னருடன்

போட்டியுட னாற்றிப் போட்டுக் கடந்துவந்தேன்
வந்ததொரு கவுரி வல்லவ ராசனுக்கும்
சந்தேகங் கள்தீரச் சத்தியங்கள் செய்துதந்தேன்
வந்தே னேகதள மாளக் கொடுத்துவிட்டேன்
அந்த விசனம் ஆராலு மாறுவதில்லை
இந்த நகரிலுங்கள் இருவருடன் தான்சேர்த்து
மைந்தன் மறுமகனுர் மைத்துனர்மார் வாள்வீரர்
இந்த வகையில் எழுபத்து ரெண்டுநபர்
சுந்தர மாள்மருதே தூக்குவே னென்றுசொல்லி
பழிவாங்க வென்றுவந்த பாங்குடைமால் கவுரிக்கு
எழுதிக் கொடுத்துவிட்டேன் இன்னியென் னுலாமோ
திருமயமுந் திருப்பத்தூர் திருக்கோட்டி யூர்நகரும்
அருமையுள்ள சோழபுரம் அங்கங்குந் தங்கல்தங்கிப்
பெருவயலில் வந்து பேரணியாய்ப் படுங்குடியில்
ஒருமாசம் நாமிருந்தோம் ஒருவன்நீ யென்னிடத்தில்
உட்புகுந்து கண்டு உடன்பட்ட ராமாகில்
அப்பவே தான்கமுட்டிக் கறிவித்து நானெழுதிச்
செப்பமுட னுத்தரவு தீரமும் வலுப்படுத்தி
எப்போதும் போல இருக்கும் படிமுடிப்பேன்
இப்போது விசனம் இருந்தினிமே லாவதென்ன
தப்பிவனம் போனவுன் தம்பியும் நம்மிடத்தில்
வந்து அகப்பட்டான் வெஞ்சிறையில் வைத்துவந்தோம்
உந்தனையுங் கூட உடன்சிறையில் வைப்பதற்கு
வாரீர் சிவிகைதனில் வந்திருப்பீ ரென்றுரைத்துப்
பாரீரும் தம்பி பாகற்பந் தான்பார்க்க
வாருமென அக்கினீசு மருதுதுரை யுன்னுலே
நேரம்வெகு வாகுதிப்போ நீர்செய்த நேரமல்லால்
சேரும் வெளியாற்றூர் செல்லுவோம் வாருமென்னக்
கூறுமொழி கேட்டுக் கொற்றவனு மால்மருது
தம்பி யகப்பட்டான் என்றுதுரை சாற்றினதால்
அம்புவியாள் மன்னன் அநேக அவதியுடன்
தெம்புடனே வந்து சிவிகைமேற் கொண்டனராம்
கும்பினியுந் துருப்புங் குதிரைரிசு முட்டுகளும்
வம்புசெய்வா ரென்று வளைந்து தளம்நடக்கச்
செம்பொன் நகர்மருது சிவிகைதனில் தானிருந்து
சீக்கிரம தாகச் சென்றுர் வெளியாற்றூர்
பாக்கியவான் தானிளைய பாண்டியனுர் தாமிருக்கும்
கூடாரந் தன்னில் கொண்டுசென்றுர் மன்னவனைத்
தேடியே தம்பியுடைத் திருமுகத்தைப் பார்க்கவென்று
ஓடினுர் கிட்டே உட்கார்ந்தார் தம்பியிடம்
வாடினுர் கையால் மலர்முகத்தி லேயறைந்தார்

## சின்ன மருதேந்திரனைப் பெரிய மருதேந்திரன் வந்து கண்டு விசனப்பட்டது.

### விருத்தம்

அண்ணனும் வந்து நின்று அருமையாந் தம்பி தன்னைக்
கண்ணினால் பார்த்து நல்ல கமலக்கை யுதிரம் பாய
மண்ணினில் முகமு மோதி வலுத்தவுன் விதனத் தாலும்
புண்ணினால் மடிவா யென்று புரிந்தனோ திருந்த வேதன் (105)

தந்தைதாய் தரணி விட்டுத் தாரமும் பாலர் வேறாய்
வந்துநா மாரண் யத்தில் மதிமுகங் காணுத் தம்பி
உந்தனைப் பிரிந்து நானும் உலகினில் இருக்க லாமோ
எந்தனைப் பிரிந்து முந்தி யிகம்பர யெ........மபி (106)

உந்தனைப் பிரிந்தே னிந்த உலகிலா ருரிமை காணேன்
சிந்தையும் உருகி வாடி செடிவன மெல்லாந் தேடி
வந்துநா னருகில் கிட்டி மலர்விழி விழித்து வார்த்தை
விந்தையென் விதனஞ் சொல்லி விளம்பவுங் கிடைத்தி லேனே.
(107)

சோதிமா வனத்தை விட்டுத் தொலைதனில் பிரிந்து தம்பி
ஆதியோ டந்த மட்டும் அரணிய முழுதுஞ் சுத்தி
வாதனை மிகவுண் டாகி மாசமும் ரெண்ட தாகி
வேதனை யுடனே வந்தும் விழித்திலேன் முகத்தில் நானே. (108)

அந்தநாள் தருமர் தாமும் அலைந்துமே வனத்தை நீங்கி
வந்துவை குண்டந் தன்னில் மால்பத மிமை பெற்று
சிந்தையி லுறுதி யாகச் செய்தவ முடித்த வண்ணம்
விந்தையுன் மேனி கண்டேன் தவஞ் செய்ய விரும்பு வேனே.
(109)

### வேறு

தம்பியரு மேனி தான்கண்டு பாண்டியனும்
வெம்பி மனமிடைந்து விதிவசமோ வென்றுரைத்து
முகத்தி லுயிருடனே விழிக்கவென்று ஆவலுடன்
பகைத்த மனிதனுடன் பாவனம் விட்டுவந்தேன்
ஆசை பெரிதாக ஆவலுடன் ஓடிவந்தேன்
காசினியில் முன்னோர் செய்கர்மம் பலித்ததய்யோ
இப்பிறப்பி லேயிறந்து எழுந்தாய் சிவன்பாதம்
எப்பிறப்பில் கண்டு என்கவலை தீருமடா
ஆரா ரிருந்துமென்ன ஆனைகட்டி வாழ்ந்துமென்ன
பாராளுந் தம்பியுன்மேல் பாருலகில் கிட்டாதே

மக்கள் பெண்டிர்சுத்தம் மறுமகளை யாவரையுமுதலா
அக்கமுடன் பக்கம் அனைவரையும் நான்மறந்தேன்
திக்கெல்லாம் போற்றித் திசைகளெட்டும் நான்வழங்கு
தக்க புகழுடைய தம்பியரே யுன்னை..........
மறக்கவென்றால் சற்றும் மனமும்வரக் கூடலையே
இறக்கவென்று லிப்போது எனக்காசை யுன்னுடனே
கூட மடியக் கொழுகுதே யென்மனந்தான்
தேடிச் சிவன்பதம் சேருவது நிச்சயமே
இதுநாள் வரையிருந்தோம் இயல்பெல்லாம் நாஞ்சுகித்தோம்
விதிநாகன் வந்துவிட்டால் வீண்புலம்ப லேதோதான்
ஆதி திருக்காளை ஆளும் பராபரனே
சோதியே வாலை சுடரொளியே சொற்கலைக்கு
வல்லவனே வாள்மேல் நடந்தமா காளிபதம்
சொல்லுவே னென்னுமனந் திரமாச்சு தம்பியரே
சோதிவனக் காளீசர் சொர்ணவல்லி தன்பாதம்
வேதனை வேறின்றி வீற்றிருப்போம் தம்பியரே
திக்கெல்லாம் போற்றும் திருப்பத்தூர்க் கோட்டையிலே
அக்கினீசு தான்நமக்கு அதுவே யருந்தவசாய்
முன்னை ளரவக் கொடியோன் முடிகுலத்து
மன்னன் விசயனுமுன் வருந்தித் தவசிருந்து
அன்னை ளவர்களையும் அரு......தானே ஆனதனால்
பின்னால்நா மப்படியே மகாதவசில் சென்றேகி
இப்பிறப்பை நீக்கி இன்னுமொரு பிறப்பில்
செப்பமுட னிருவர் திறமாக வேபிறந்து
வைப்புலகில் வேந்தர் மாற்றான் நமக்காகும்
இப்போது நாமும் இருக்குந் தவவலிவால்
அப்போ திவரை அறுத்து அரசாள்வோம்
எப்போ துயிர்சிறந்து என்முகத்தைப் பார்ப்பையடா
என்று மொழிந்து ஏங்கி மனமிடைந்து
நின்று தவிக்கிறதை நிருபனெனும் வேந்தரசன்
கண்டு கவுரிதுரை காவலன் தூதுவிட்டு
விண்டுரைப்பார் மன்னன் விசனமது ஆறுதற்காய்த்
தன்னிமைசேர் தென்விசுவை தாணிமரு தேந்திரர்துரை
மன்னவரே யும்மாலே வாகாக வென்னுயிரும்
தப்பித் தலைபிழைத்துத் தாரணியை யாளவென்று
இப்போது வந்து இருக்கின்றே னுன்தயவால்
ஆனதனா லுன்னுடைய அழகு சகோதரவான்
மானபரன் சின்ன மருதுதுரை போனாலும் ;

## கவுரிவல்வராசா பெரிய மருதேந்திர துரையுடன் சமாதானம் பேசினது

மக்கள் மனைவிசுத்தம் மறுத்தாசை வேண்டாங்காண்
நிற்க நிலைநிறுத்தி நின்னையுமே யென்னுடனே
திக்கோர் கவிந்து தெண்டனிட்டுக் காத்திருக்க
வைக்கின்றேன் சும்மா மயங்காதீர் மன்னவனே
என்று கவுரிதுரை ஏவலாள் தன்னிடமாய்
அன்றுரைத்த வார்த்தை அருள்கேட் டந்நேரம்
கண்கள் நெருப்பெனவே கடுங்கோப மாய்ச்சினந்து
செங்கண் பொறிபறக்கச் செப்புவார் மால்மருது ;

### விருத்தம்

முந்தவே துவாப ரத்தின் முடிவினி லய்வர் தாமும்
செந்திரு மாலின் பாதஞ் சேருவோ மென்று கோரி
வந்திடவை குண்டம் நோக்கி வருவழி தனிலா ரண்யம்
அந்தர வனத்தில் நால்வர் அறிவையு மிழந்தார் தருமர். (110)

ஒண்டியாய் வருமப் போது உயர்வன மதனில் மாதர்
அண்டமே னுலகம் விட்டு அருவியில் தீர்த்த மாடிக்
கொண்டுநற் றவமே செய்த கோதையர் தருமர் தம்மைக்
கண்டுதா னேழு சத்த கன்னிய ரேது சொல்வார். (111)

தருமரே வொண்டி யாகத் தனித்துநீர் வருவ தேனோ
கருமமோ தேசம் விட்டுக் காரிகை மனைவி மக்கள்
வறுமையால் தம்பி மாரை விட்டுநீர் மேவொண் ணுறு
வறுமைவிட் டெங்கள் பூமி வந்துநீர் உலகை யாள்வீர். (112)

என்னவே மாதர் சொன்ன இயல்பெனக் கவுரி சொன்னன்
மன்னவன் மதத்தால் கூறும் வார்த்தையை யறிந்தோ மிப்போ
வின்னபே தகங்க ளாக விளம்பின விசனத் தாலே
தன்னைத்தா னொந்து மன்னன் சாற்றுவான் தூதன் பாலில். (113)

தூதனே விளம்பக் கேளாய் துரைமகன் கவுரி சொன்ன
சேதிதா னுனக்கு நன்றுய்ச் செவிதனக் கின்ப மாச்சோ
நீதமோ வுரைத்த வார்த்தை நீணிலத் தடுக்கு மோதான்
காதினில் கேட்க நன்றோ கதையினுங் காண்கி லோமே. (114)

தம்பியுந் தாரஞ் சேயும் தயவுள்ள சுற்ற மெல்லாம்
வம்பின லிழந்து மன்னன் மனமுமே நொந்த வேளை
கம்பீர மாக மன்னன் கவுரிவல் லாசத் தோடு
கொம்பிடை யெனது நெஞ்சங் கூறினன் குணஞ்சற் றில்லான். (115)

**வேறு**

கேளடா தூதுவனே கவுரி யுரைத்தமொழி
ஆளலாஞ் சீமை அரசு நிலைத்ததென்றும்
வாழலா மென்று மனங்கிளர்ச்சி யாயுரைத்தான்
வேளை விதிப்பயனை விரைந்தெண்ணிப் பாராமல்
மன்மதனு மீசரிடம் மாண்ட தறியாமல்
தன்மதத்தி னாலே சகல ருயிரிழந்தோம்
அக்கினீசை மெத்த அலட்சியமா யெண்ணினதால்
சிக்கினோம் நாங்கள் தீரமும் வலுக்குறைந்தோம்
கும்பினியா ரரசை கொடுப்பார் கொடுப்பரென்று
தம்பி சமாலி சற்றும் நினைக்காமல்
மெத்த மகிழ்ச்சிகொண்டு மெலிந்தோ மதுபோல
சற்றுங் கவுரி தளரா திருக்கவென்றேன்
அக்கினீசு ஆதரவு அநேகநா ளுண்டெனவே
தக்கபுகழ்க் கவுரி சாற்றியதோர் வார்த்தையது
முன்னாளத் துவாபரத்தின் முடிவிலிவர் பாண்டவர்கள்
தன்னால்வை குண்டபதி தனைநோக்கி யேநடக்க
அப்போது வீமன் அர்ச்சுனனும் பார்நகுலன்
வைப்பில் சகாதேவன் மாது துரோபதையும்
அவனி யிழந்ததல்லால் ஐவரிவர் தாமிறக்கத்
தவமுனிவர் போல தருமருமே வொன்றியதாய்
வெகுதூரந் தானடைந்து மெத்தத் தகையாகி
வந்து வனந்தனிலே மரத்தின் நிழலருகே
சிந்தை தனிலே திருமாலே தஞ்சமென்று
ஆல மரத்தின் அடிநிழலில் தானிருக்க
வாலைகளாய் மேலுலகம் வாழுகின்ற மாதர்கள்தாம்
காரணமாய்ச் சத்த கன்னியர்கள் நீராட
ஆரணியந் தன்னில் அழகு நதிதனிலே
கதறிக் குதித்தெழுந்து கருத்துக் குகந்தபடி
கதலித்து மாதர் கிருபை களிகூர்ந்து
தன்னுலகம் நோக்கித் தானடப்போ மென்பதிலே
மன்னவனைக் கண்டார்கள் மாதர்திருக் கண்ணாலே
தருமர்....குந் தனிமைதனைக் கண்டவர்கள்
கருமமோ நீருங் கலங்குவதேன் காவலனே
ஒன்றியாய்ச் சென்று உம்மால்வை குண்டபதி
கண்டு கரையேறக் காவலனே கிட்டாது
எங்களுடன் கூட இவ்வுலகம் விட்டுவந்தால்
பொங்கு தவலோகம் பொன்னுலகம் நீராள்வீர்
தங்கமுடி சூட்டிச் சத்தியலோ கந்தனிலே
மங்கையர்கள் கூட்டி வைக்கின்றே னென்றதுபோல்
மெய்க்க கவுரி வீணன வார்த்தைதனைத்
தைக்க வுரைக்கலுற்றான் சரியாமோ தூதுவனே

என்னுடைய தம்பி ஏற்ற மனைவிமைந்தர்
தம்மையெல்லாம் கொன்று தாரணியை யாளுமென
என்னைப் புவியி லிருத்துவே னென்றதுபோல்
முன்னூரா ளக்குடியில் முறிந்தோமே வேளையிலே
என்னுடைய மைந்தன் ஏற்றகுடைக் காதுடையார்
மன்னனுடை வராவலையில் வந்துசிக்கிக் கொண்டிவரும்
கல்லு வெடித்தலையைக் கத்தரிக்கும் வேளையிலே
சொல்லி நயவார்த்தை துரோகமென நானிவரை
சன்னை வராதபடித் தானகலச் சொல்லுமென
வெள்ளை மருதன் விலக்கா திருந்தக்கால்
சொல்லுவான் தம்பி துரையாவா னிந்நகர்க்கு
வெல்லுவா னிப்போ விசயன்காண மால்கவுரி
அரசளிக்க லாகாதென் றஞ்சி விலகிவிட்டு
துருசாகச் செல்லுமெனத் துரத்தினேங் காட்டைவிட்டு
தானந்தக் காட்டில் தப்பிப் பிழைத்தவரும்
ஆனந்த ஆண்டில் அரசு செலுத்தவென
சேது படையைச் சேர்த்துச் சமர்புரிந்தார்
வாதுசொல்லி என்மகனும் வாங்கினான் பாசுபதம்
பாசுபத மிழந்து பாளையமும் டையமும்
மோசம்போய்ச் சேது முகத்தில் விழிக்காமல்
வெளிப்பட்ட ணத்தில் வெகுநாள் அவதியுடன்
ஒளித்து அறந்தாங்கிக் கோடினதைத் தான்மறந்து
இப்போது என்குலத்தை எல்லா ரையுமடித்து
செப்பமா யென்னுயிரைச் சிந்தாமல் காக்கவென்று
என்ன நினைவாய் எடுத்துரைத்தான் மன்னவனும்
சின்ன மொழியாகச் செப்பினா னிப்படிப்போல்
எப்போதும் இனிஎன் னிடத்தில் இங்கவனும்
செப்பிடவே வேண்டாம் திருப்பிடவே என்தலையை
வைப்பில் உலகாள வைத்திடவும் வேண்டாங்காண
இப்புவியில் கவுரி இடைஞ்சலது தான்தீர்ந்து
நப்பா னுலகாண்டு நாள்போக வாழ்வதுவே
மெய்ப்பாச்சு யெந்தனுக்கு விளம்படா தூதுவனே
அகத்தா னுரைத்தக்கால் அவர்களுக்கும் நாளையிந்த
வகைதான் வருமெனவே மனத்திலெண்ணிப் பாராமல்
நாளைவரும் நமக்கு நடமிடரென் றெண்ணாமல்
வேளை யறியாமல் விளம்பினான் முன்னிவனை
காளையார் கோவில் கடவுளார் ஆலயத்தில்
தாழ்வாகக் காவலில் தளைபூட்டி வைத்திருந்தோம்
கடுங்காவல் வைத்திருந்த காவலரை நான்விலக்கி
விடுங்களெனச் சொல்லி விடுவித்த பாவமிது
தம்பிச மாலிசெய்த சமர்த்தின் படியாக
வெம்பியே நாமும் வெகுண்டுநின் றேமாகில்

அன்றே கவுரிவல்ல அரசனென்ற பேர்போமே
இன்றுவந்து நம்மை எவர்செயிப்பா ரிவ்வுலகில்
தம்பி மனைவிமக்கள் சகலரையும் நானிழந்து
வெம்பி உலகாள விரும்புமோ சொல்லுமடா
வாழும் சிவகங்கை மாநகரி லேயிருந்து
ஆளுஞ்சு காயுனது ஆதரவு வேண்டேன்காண்
எத்து வகையாக எங்களையுந் தானெடுக்கி
வைத்ததொரு கும்பினியார் மன்னனையு மப்படியே
ஒடுக்க வகைபார்ப்பார் உள்ளவிதம் நாமுரைத்தோம்
எடுப்பாய் நடவாதபடி இருக்கவே வேணுமென
சொன்னே மெனவேதான் சொல்லடா தூதுவனே
தன்னவனே யின்னொருசொல் சாற்றுவாய் மன்னனிடம்
மலங்கு மனைவியுடன் மைந்தர்வெகு பந்துசனம்
கலங்காமல் பத்திரமாய்க் காக்கவே சொல்லுமடா
என்று **பெரியமரு தேந்திரன்** எடுத்துரைக்க
நன்றெனவே கேட்டு நடந்துவந்து சொல்லலுற்றான்
கூறினான் வந்தவனும் கொண்டறிந்து மேகவுரி
வீறினான் மன்னன் விளம்பினா ரென்றுரைப்பார்
அல்லடா தூதுவனே அவர்கள்முன் செய்தவெல்லாம்
நல்லதோ வுந்தனுக்கு ஞாயமோ சொல்லுமடா
பிள்ளைகளாய்ச் செய்த பிழைகளே வல்லாது
எள்ளளவு மன்னவர்மேல் இடருரைக்கக் கூடாது
என்னைப் படுத்திவைத்த இடைஞ்சல் பொறுக்காமல்
மன்னனக்கி னீசிடத்தில் வருமங்கள் கூறிவிட்டேன்
அவரு மெனக்காக ஆதரிப்பார் தப்பாமல்
தவறு நடக்காமல் சத்தியமும் பண்ணிவிட்டார்
அல்லாமல் அக்கினீசை அவஸ்தைக் கிடமாக்கி
கொல்லாமல் மெத்தக் கோட்டிபண்ணி விட்டார்கள்
ஆதலா லினிமேல் ஆராலே என்செயலாம்
வேதன் விதித்த விதியின் படியாச்சு
நெஞ்சு துணிந்துவிட்டேன் நிச்சயமாய்த் தூதுவனே
குஞ்சு குழந்தைகளை காப்பாற்ற வேணுமென
வஞ்சமின்றி அக்கினீசு மன்னனிடம் நாமுரைத்து
அஞ்சாம லிப்போது ஆதரிப்பார் தப்பாது
என்று கவுரி இதமாக வேயுரைத்தார்
அன்று நடந்தகதை அடைவுதனைக் கேளுமினி
சென்னலக்கி னீசுதுரை செய்த விதங்கள்தமை
இன்ன விதமெனவே இயம்பக்கே **ளம்மானை.**

## முடிவுரை.

நேசத்துடன் படித்தோர் நீடூழி வாழ்வார்கள்
மன்னர் செகவீரர் மகாராசர் கும்பினியார்
தன்னயஞ்சேர் செங்கோல் நாள்தோறும் வாழியரோ
வீரமுள்ள மன்னர் வேந்தரந்தக் கும்பினியார்
தீரன் மருதுதனைச் செயித்துலகந் தானறிய
எழுதினு ருத்தரவு எங்குமுள்ள ராசருக்குப்
பழுது மனத்திலுற்ற பார்வேந்தர் தங்களுக்கு
மருதிருவர் தங்களுக்கு வாய்த்தபலம் இட்டுமன்றி
அரிதுபுவி யாளுவது அரிததுவோ யீதுமல்லால்
கருப்பு மனிதர்படை கடல்போ லெழுகினுந்தான்
ெ......பபோமே யென்னைப் பொறித்ததொரு பாவனையாய்
இப்புவியி லேமருது எழுபத்தை யாயிரம்பேர்
தப்பாமல் சேனை தளமதிக மாய்ப்படைத்தும்
என்ன பலமறிந்தான் எல்லாருந் தோற்றழிந்து
மன்னவனும் வீணாய் மறலியிடம் சேர்ந்தார்கள்
ஆதலா லுள்ள அரசரவ ரெல்லோரும்
மேதினியைப் புத்தியுடன் வீற்றிருந்து ஆளுமென
வெற்றிபுரி கும்பினியார் வேந்தர்மறு வேந்தருக்கு
உத்தரவி லிப்படிக்கு உற்றெழுதி புத்திசொல்லி
அனுப்பினார் வாசகத்தை யாவர்களுந் தான்பார்த்து
மனக்குறிப்பு வேறாகி மருதுவதைத் தாமறிந்து
இருது மனவலிவும் இழைதான் போட்டுவிட்டு
வருதிப் படிநடந்தார் மகிழ்ந்தார்கள் கும்பினியார்
சட்டமதில் நீதி சமைத்தெழுதி யப்படியே
அட்டதிக்காள் கும்பினியார் அரசுமிக்கு மெண்மேலாய்
வளரவே வாழவென வழுத்தவே பூமியெங்கும்
வளமாய்ச் சிறந்தோங்க மகாராசர் கும்பினியார்
அல்லலொடுக்கி அறத்தில் மிகுந்தவராய்
வல்லமைசேர் மருது மன்னவரை வென்றகாதை
பாரோர் புகழ்ந்தேத்த பதிதனிலே மேலோங்கச்
சீராய்அம் மானையெனச் செப்பினேன் அற்புதமாய்
அரசர்பணி கும்பினியார் அம்மானை யானுரைத்தேன்
கரிசனமாய் ஈதுதனைக் கற்றோர் பொறுத்தருள்வீர்
சீர்பொருவுங் கும்பினியார் திருக்கதையை நானடைவாய்
பார்மீதி லேவிளங்கப் பகர்ந்தேன் சரதமென
எதிரிதனை வெற்றிகொண்டு என்றைக்குங் கீர்த்திபெற்று
பதியாளுங் கும்பினியார் பாண்மையர்க ளம்மானை
முத்தும் பவளமும் முடிந்து சரந்தொடுத்தால்
எத்தனையோ வின்பம் எனவே வகுத்துரைத்தேன்
இந்தக் கதையெனவே விளம்பிப் பிழைபொறுப்பீர் ;

விருத்தம்

வரதுபுரி மன்னவரைச் செயித்துலகாள்
கும்பினியார் வாழி வாழி
சேதுசிவ கங்கைநகர் ஆலயமுஞ்
சத்திரமுஞ் செழிக்க வாழி
பூதலத்தை யாளுமிவர் நியமித்த
சட்டமதன் புகழே வாழி
கோதில்லாக் கும்பினியார் குலமுவர்
இனவழியுங் குலமும் வாழி. (116)

நீதியுடன் பதினாலு லோகம் வாழி
நீள்கடலும் புவிமிசைவாழ் நதியும் வாழி
மாதவனத்தி லுள்ளவனக் காவும் வாழி
மதியுடனே கதிரவனும் மறையும் வாழி
ஆதிமகா மேருமுதல் வரைகள் வாழி
அம்புவியி லுதித்தவுயி ரதுவும் வாழி
மேதினியாள் கும்பினியா ரரசும் வாழி
மேன்மேலு மவராசு விளங்க வாழி (117)

வேறு

வீரர்பணி கும்பினியார் வேந்தருடை யம்மானை
சாருவரி வருடம்தா [1] னிடப மாதம்
செப்பமுட னீதுதான் சித்திரம்போ லுற்றதமிழ்
முப்பதாந் தேதி முகிந்ததுவே யம்மானை. (118)

வேறு

வீறுபுகழ் சாருவரி வருடந் தன்னில்
விளங்கியதோர் வைகாசி மாதந் தன்னில்
சீருடைய [2] வாறஞ்சாந் தேதி திங்கள்
தினஞ்சோம வாரமதில் சிறந்த வாத்யம்
மாறைவளர் செல்முரு குரைத்தே னிந்த
மகராசர் கும்பினியார் கதையைத் தானே
கூறுமென்று வின்பமுற்றுக் கேட்போர் கள்சேர்
குலமுடனே கும்பினியார் குலமும் வாழி. (119)

சீர்சிறந்த சித்திரபானு வருடம் சிறந்த
[3] சிங்கமாச மாறஞ்சோ ரந்தேதி
பேர்புகழுங் [4] குருவார மத்தநட் சத்திரம்
துதியைதிதி தனுசுலக் கினத்தில்
பார்புகழும் பாஞ்சைநகர் முத்துவீ ரப்பன்மகன்
முத்துச் சாமி பண்புடைய
போர்புகழுங் கும்பினியார் அம்மா னைக்குப்
பிரதியொன் றெழுதி முகிந்ததுவே. (120)

முற்றும்.

---

[1] வைகாசி [2] 30-ஆம் தேதி. [3] ஆவணி. [4] வியாழக்கிழமை.

## பிற்சேர்க்கை—I

[இப்பகுதி 260-ஆம் பக்கத்துக்குப் பிறகு 261-ஆம் பக்கம் "முடிவுரை" என்ற தலைப்பின்கீழ் தொடங்கும் பகுதிவரை தொடர்புளது எனத் தெரிகின்றது.]

மாலோன் விசுவை மருது துரையிருவர்
பால னுடனவர்கள் பார வனந்தனிலே
செப்பமுடன் சண்டைசெய்து திகைத்துச் செடிங்காட்டில்
தப்பினு ரிந்நாள் தனிக்காட்டு ராசர்களாய்
கோட்டை பிடித்தேன் கொடிபோட்டேன் மன்னனுக்குத்
தாட்டீக மாகத் தரித்தேன் முடிதனையும்
மன்னன் மருதிருவர் மக்களுடன் வனத்தில்
இன்னவிட மென்று இருக்குமிடம் நானறியேன்
அகப்பட்டா லந்நேரம் அறிவிப்பே நானெனவே
மகிழ்ந்து விவரமுடன் வரைந்து வகைவகையாய்
எட்டி லெழுதிமுன்னுல் எவினதா லக்கினீசும்
தாட்டீக வான்கமுட்டித் தன்னிலுள்ள மன்னரெல்லாம்
கோட்டைப்பக்கங் கூடிக் குறித்தார்கள் யோசனையில்
வாட்டப் படுத்தாமல் மருதுமன்னர் தங்களையும்
கைப்பிடியா கப்பிடித்துக். கலக்கிமிகச் செய்யாமல்
மெய்ப்பா யிருவரையும் வெங்காவல் வைத்துடனே
கமுட்டிக் கெழுதிவிட்டால் கருத்தினிலே வுற்றவிதம்
சிமிட்டி விழிக்குமுன்னே சிறக்கவே நாமெழுதி
அனுப்புவோ முத்தரவும் அதுவரையில் நீரவர்மேல்
வினையம் நினையாமல் மேற்காவ லிட்டுவைப்பீர்
வீராதி வீரன் வெள்ளைமரு தேந்த்ரனுடன்
சூராதி சூரன் துணைவ ரிருவரையும்
கமுட்டியுள்ளோர் நாங்கள் கண்பார்க்க வேண்டுவதாய்
அமட்டாம லேயவரை அனுப்புவீ ராமெனவே
முந்தியொரு வுத்தரவு முடுக்கி யனுப்பிவிட்டுப்
பிந்தி வரவிடுத்த பலமான உத்தரவில்
மானபர னுமருது மன்ன ரிருவருந்தான்
தானமக்கு முன்னுள் சந்ததியாய் வந்ததனுல்
நடுங்க அவரை நமனிடத்தில் சேர்க்காமல்
கடுங்காவல் வைப்பதுவே காரியங்கா ணிதுவன்றி
வண்ணமணி மார்பன் மருதேந்திரர் தங்களையும்
கொள்ளல்நீ கும்பினிக்குக் குற்ற முடையோனும்
தாங்கோனே பிறங்கோடு இச்சியோம் நிமிடமதில்
வாங்குவோங் கத்திதனை மாற்றுவோ முந்தனையும்
ஈந்திதனி லுனைவைப்ப தில்லைகா ணெப்போதும்
சேர்ந்திடுவீர் நம்முடைய சீமைபோய்ப் பார்ப்பீரென
இந்தவித மாக இரண்டுவகை உத்தரவை
அந்தமுடன் கமுட்டி யாரனுப்ப விப்படிக்கு

வந்ததொரு காயிதத்தை மன்னனக்கி னீசுதுரை
சந்தோஷ மாயவிழ்த்துச் சாற்றுகின்ற வாசகத்தைக்
கண்டு மனம்பதறி கண்கள் நெருப்பெழவே
விண்டு மறுவார்த்தை விளம்பாம லக்கினீசும்
வெப்பம் வெதுப்பம் வெகுகோப முண்டாகித்
தொப்பி கழற்றித் துரைமகனுந் தானிலத்தில்
அதட்டி யடித்து ஆங்காரங் கொண்டெழுந்து
உதட்டைக் கடித்து உருக்கியே வேகமுடன்
கூடாரம் விட்டுக் குதித்து வெளியில்வந்து
காடாறு மாசம் கலங்கச் சமர்பொருதான்
தீராப் பெருவிசனஞ் செய்தமரு தேந்திரர்கள்
வீணுக வெம்போர் விளைத்தாலுங் குற்றமில்லை
வில்லோர் மருதிருவர் மன்னவரைத் தான்பிடித்தால்
கொல்லவொண்ணு தென்று கூடிக் கமுட்டியுள்ளோர்
மன்னவரைப் பத்திரமாய் வைத்திருநீ யொற்றுமையாய்
என்ன நமக்கு எழுதினுர் கும்பினியார்
என்பேரில் குற்றம் எவ்வளவு நேர்ந்தாலும்
வம்பரிவ ரிருவர் மருதுமன்னர் தங்களைநான்
பாளையமுஞ் சேனை படைப்பெருக்கந் தன்னுடனே
வேளை யிதுசமயம் மேதினியோர் தாமறியத்
திருப்பத்தூர்க் கோட்டை தென்மூலைக் கொத்தளத்தில்
விருப்பமுடன் தூக்கி விடுவேனே யல்லாது
விட்டா லெனக்கீனம் மேதினியை யாள்கவுரி
பட்டந் தரித்துமென்ன பலனுச்சு நானிவர்க்கு
உற்றிருந்து வார்த்தை உரைத்துப் பலவிதமாய்ச்
சத்தியமுஞ் சொல்லிவைத்தேன் தனக்குநான் பேதகமாய்
நடந்தாலப் புவிமுழுதும் நகைக்குமே யெந்தனைத்தான்
தொடர்ந்தபடி முடித்தால் தோஷமில்லை யாமெனவே
மட்டுப்ப டாமருது மன்னனைநான் தூக்குவதைப்
பட்டணத்தோர் கண்ணுலே பார்க்கவர வேணுமெனத்
தமுக்கடிக்க வென்று சாற்றினு ருத்தரவு
தமுக்கினுடைச் சத்தமது தான்கேட்டு ஊரவர்கள்
சேர்ந்தார் வெருதிரளாய்ச் சென்னலக்கி னீசுதுரை
வாந்தகமாய்ச சொன்ன வர்த்தை நிசமறிய
வந்தா ரணியணியாய் மருதுதனைப் பார்க்கவென்று
அந்தத் தருவாயில் அக்கினீசும் வேகமுடன்
இப்போ திருப்பத்தூர்க் கேகவே வேணுமெனச்
செப்பமுடன் பாளையத்தைச் சேரப் பயணமென்றுர்
சீராய்த் திருப்பத்தூர் செல்லுமென வப்போது
போரோ மெனச்சேனை புறப்பட்டா **ரம்மானை**
பொட்டகத்தில் வைத்துப பூட்டுகின்ற மன்னனையும்
திட்டமுடன் பெரிய தீரன்மரு தேந்திரனுர்

இருவர் தமைச்சிவிகை ஏத்தியே அக்கினீசு
அருவிகட்டி வல்லயத்தை அருகே வொருவகுப்பும்
சாரங்க வாம்புரவி தளங்க ளொருவகுப்பும்
சோல்சர் பட்டாளம் துரைமா ரொருவகுப்பும்
வாச முடனணியாய் வகுப்பித்துத் தானடந்தார்
பட்டாளஞ் சுற்றிப் பயிறுவா பண்ணிவரத்
திட்ட முடனே திருப்பத்தூர் வந்திறங்கிச்
சட்டமுட னக்கினீசுந் தளத்தின்நடு மத்தியிலே
இட்ட முடனே இருந்தரர்கூ டாரமதில் ;

விருத்தம்.

தேவர்கள் புகழ்ந்து போற்றும் திருப்பத்தூர் தன்னில் வந்து
கோவமா யக்கி னீசுங் கொடுந்தவ சூட வென்று
பாவமே நினைத்து மன்னன் பழிதனக் கஞ்சி டாமல்
பூவரைத் தவசி லேற்றப் பொருந்தியே வுரைக்க லுற்றார்
திருப்பத்தூர்க் கோட்டை தன்னில் தென்மூலைக் கொத்தளத்தில்
சிறப்புடன் தவசு ரெண்டு தெங்கிளநீர் மரத்தை நன்றாய்
விருப்பமாய் நாட்டி மேலே விட்டமும் போட்டு ஊஞ்சல்
பொருப்புநால் கயறு ரெண்டு போதவே பூட்டி னாரே.

## மருதேந்திர ரிருவரும் திருப்பத்தூர்த் தென்மூலைக் கொத்தளத்தில் தவசிலேறியமை

வந்துதிருப் பத்தூர் மன்னன்மரு தேந்திரதுரை
விந்தையுடன் தவஞ்செய் விவர முரைக்கின்றேன்
அக்கினீசு மன்னவனும் அதிசீக் கிரமாகத்
திக்கோ ரறியரெண்டு தென்னை மரத்தைவெட்டிக்
கோட்டையிலே தென்கிழக்குக் கொத்தளத்தின் மீதேற்றித்
தாட்டீகன் ரெண்டுமரம் சமதையாய்த் தானட்டி
ஊஞ்சலென நூல்கயிறு உருவுஞ் சுருக்கேற்றிப்
பாஞ்சை நகர்க்கட்ட பொம்மு பழங்கதைபோல்
பெரியமரு தேந்திரர் பூபா லனையழைத்துத்
துருசாய்த் தவசுசெய்யத் துரையே நடவுமென்றார்
விரசாய் மருதேந்திர வீரன் நடந்துவந்து
அரசன் தவம்புரிந்தார் அன்பா யிளையவரைப்
பழிக்கஞ்சா மன்னன் பாங்காக வேயிரும்பால்
கிளிக்கூடு செய்து கெட்டியாய்த் தான்பூட்டி
ஊஞ்சலெனத் தவசில் உறங்கினார் மன்னவரும்
பாஞ்சைநக ருமையனால் பலித்த தருந்தவசு
பூமன்ன ரிருவரும் பொழிந்தார்கள் புஷ்பமது
சாமிதிருக் காளீசர் தன்னடியே தஞ்சமென்று
திருப்பத்தூர் தன்னில் திருத்தளி நாதரருள்
சிறப்புடைய கால வயிரவ ரவர்பாதம்

சேவை புரிந்திருவர் செய்தா ரருந்தவசு
ஏர்வையுடன் முடித்து இறங்கித் தவஸைவிட்டுச்
சோதிவனக் காளை துய்யமலர்ப் பாதமதில்
வேதனைக வின்றி வேற்று விசாரமற்றுக்
காளி வனத்தீசர் கமலத் திருவடியில்
வாளின்மேல் நடந்த மங்கை யருள்பெறவே
மருதவனப் பொய்கை வாகான மேல்கரையில்
துருசாய்ச் சிவாலயத்தில் தூண்டா மணிவிளக்கு
எதிரே யிருவருக்கும் எண்ணுந் துலங்கிடவே
சதிராய்த் துதித்துத் தாம்வீற் றிருக்கலுற்றார்
எண்ணுஞ் சிவன்பாதம் எப்போது மற்புதமாய்
வண்ண மருதிருவர் மகாதவசு தாம்புரிந்தார்
திருமால் திருக்காளை சிவன்பாதம் பூசைசெய்தார்
அருமையுட னிவ்வூர் அநேகர்தவஞ் செய்தவிடம்
சந்திரனுஞ் சூரியனுந் தவஞ்செய் தலமிதுவே
இந்திரனும் நற்றவசு இருந்தவிட மவ்விடமே
ஐந்து சிரசில அரனு லொருசிரம்போய்
வந்து மலரோன் மகிழ்ந்துதவஞ் செய்தவிடம்
கந்தவனக் காளை காளீசர் காணுமைக்குச்
சொந்தமென மந்திரமாய்ச் சொல்லவே தாரகத்தை
அந்தரங்க மாயுரைத்தார்..............வேணுமென்று
கந்தன் பொலிவுண்டாகிக் கருத்தினிலே தானறிய
அறிந்துதிருக் காளீசர் ஆறுமுகமா மவையென்று
புரிந்தார் கடுஞ்சாபம் போகவென்று கந்தனுமே
ஆறு முகத்தால் அநீதமுள்ள வேந்தனெனும்
சூரனையே வெல்லவென்று துணிந்தா ரருந்தவசு
தெள்ளிமை யாகத் தேவேந் திரனுடைய
வெள்ளானை வந்து வெகுநாள் தவம்புரிந்து
ஆதாளி செய்து அடியில் மடுகுத்துப்
பாதாள கங்கை பரிந்தழைத் ததில்விட்டும்
மங்கையுமை யாளளித்த மகாசாபந் தீரவென்று
அங்கே.............ஏன் கோடி ருத்ராதிகள் தவம்புரிந்தார்
பாப மகலவென்று பாங்கான தேவுலகு
தேவர்தவம் புரிந்த தில்லாம லற்புதஞ்சேர்
நந்த னருந்தவசு நலமாகச் செய்தவிடம்
உறையூர் கரித்தாள் சோழனுமே வோராண்டு
பரிவா யிருந்துதவம் பண்ணுமிட மவ்விடமாம்
கந்தவன வேடன் கண்கொடுத்து ஈசனுக்குச்
சந்தோஷ மாகத் தவம்புரிந்த திவ்விடமே
மதுரா புரிநகரில் வாழுஞ்சய சேகரன்றன்
அதிகாசை யாய்மதனைக் காகத் தவம்புரிந்தார்
பழையனூர் நீலியினால் பாங்கான நல்வணிகன்

அழையா விருந்தனக்கு அறுபத்தோர் காராளர்
கூடி வுயிர்கொடுத்து குறியாய்த் தவம்புரிந்தார்
வாடியே பன்றி மதுரைவனம் விட்டெழுந்து
ஓடித் திருக்காளை உற்றகா ளீசர்பதம்
தேடித் தவம்புரிந்த திருக்காளை யீசரெனும்
காளியுட னுடிக் கருணைபுரி காளீசர்
வேளினுடைப் பாதம் வெள்ளைமரு தேந்திரதுரை
வள்ள லிளையோன் மன்ன ரிருவருந்தான்
தெள்ளிமை யாகச் சிந்தை மகிழ்ச்சியுடன்
தேடி அயன்மால் காணுத திருவடியில்
ஓடி யலையாமல் உடன்பதவி சேர்ந்தார்கள்
காலஞ் சரியாகிக் காரளமுந் தான்முடித்து
ஆலமுண்டோன் பாதம் அடைந்தார் மருதுதுரை
மருதிருவ ரிவ்வார் மகாதவசில் சென்றபின்னே
துரைகவுரி தன்னைத் துரைராச னக்கினீசு
அருகே விருத்திவைத்து யாவர்களுந் தாமறியத்
துருசா யொருவசனஞ் சொல்லுவா ரப்போது
கவுரி துரையரசே கேளுங்கா ணோர்வசனம்
சவுரியவான் மருது சார்ந்தான் தவந்தனிலே
அறிந்திரு மருதுடைய ஆயாசந் தீர்ந்ததல்லோ
திருந்த மருதிடத்தில் தினந்தோறுந் தப்பாமல்
நெய்பாலுஞ் சோறும் நேருகூ றுய்க்கலந்து
உயிதமுடன் தவருது உண்டு சுகித்துவந்து
கருத்தா னிவன்றனக்குக் காவலரே யங்கவரால்
வருத்தமது வேதுமுண்டோ வாழும்நா ளுள்ளவரை
தெரிந்தா லதுவுமக்குச் செப்புவீ ராமெனவே
நிறைந்த பெருஞ்சபைமுன் நிகழ்த்தவே யக்கினீசு
சொன்னமொழி கேட்டு துரைகவுரி வேந்தனுமே
அந்நேர மக்கினீசுக் கறிவிப்ப ருள்ளவிதம்
துரையே மருதிருவர் தொல்புவியை யாளுகையில்
பாரரச லாலவர்க்குப் பயந்தெரியும் வாரதுக்காய்
நம்பாம லார்தமையும் நலமிட்டுத் தாமறிந்து
தெம்பா யுரைக்கவென்று தென்னவர்க ளிங்கவரை
ஆதரித்து நித்தம் அகலாமல் பக்கமதில்
காதலுடன் வைத்துக் கனக்கவே பூஷணமும்
தந்து பரிகலமும் தவருமல் தந்திவர்க்கு
மைந்தர்க் கதிகமென வளந்தார் புவியறிய
அப்படிக் கொத்த அழகுமரு தேந்திரர்க்குத்
துப்புரைத்துச் சுட்டான் துரையே யெனப்பகர
அந்நேர மக்கினீசு அத்தனையுந் தான்கேட்டு
அன்னமுஞ் சொர்ணம் அநேக வரிசைகளும்
தந்தா தரித்துத் தார்வேந்தர் தங்களுக்கு

இந்தவிதந் தீது இடைஞ்சலுமே தானினைத்தான்
நிறுத்தி வலைபோட்டு நீள்சுருக்கு நூல்சாத்திக்
கருத்தானைக் கூவிக் கண்ணாலே பாருமெனத்
தூக்கினா ரக்கினீசு துரையு மனமகிழ்ந்தார்
பார்க்கவந்தா ரீது பண்ணியது வுண்மையென்றார்
உருத்தாய் மருதிருவர் உற்றதவந் தாம்புரிந்தார்
கருத்தா னவராலே காலனிடஞ் சேரலுற்றார்
மால்மருது மன்னர் மகாபதவி சேர்ந்தபின்னே
பாலருடன் சொந்த பந்துசன மப்போது
போன விடமும் பொறிகலங்கி நின்றதுவும்
சேனையுட னக்கினீசு சென்று பிடித்ததுகேள்
வள்ளல் சமாலி யுடையார் மனுவிழந்து
பள்ளத்தூர்க் காட்டில் பத்துநாள் பட்டினியாம்
கன்னன்சிவ......ககானமங் காவலவை ரோர்திசையில்
மன்னன் துரைசாமி வனத்தி லொருதிசையில்
கருத்த உடையார் கலங்கா துடையணனும்
வருத்தமுடன் வனத்தில் வடதிசையில் தான்பிரிந்தார்
சாலமுள்ள முத்துச் சாமி வரோதையனும்
பாலைய நாட்டில் பார வனத்திருந்தார்
சங்கீத லோலன் சுவர்ண வேந்தனுடன்
வெங்கணப் பெரியுடையார் வேந்த னொருவனத்தில்
இப்படிக்கு வேந்தர் இனம்பிரிந்த மான்போல
தப்பின பேர்களெல்லாந் தனித்தனியே வந்தனராம்
திருமால் வைகுண்டம் சேர்ந்ததற்பி னுள்ளவர்கள்
அருமை கெட்டுமெத்த அறிந்ததொரு பாவனையாய்ச்
சேரப் பிரிந்து திசைகெட்டுச் சீர்குலைந்து
வேறே நினைவு விதமொன்றுந் தோற்றாமல்
வலிய நமனிடத்தில் வந்துசிக்கிக் கொண்டதுபோல்
நலியாமல் வந்தவரை நமன்பிடித்துக் கொண்டதென
வந்ததொரு வேந்தன் மக்கள்மறு மக்களுடன்
சொந்தமுள்ள பேர்கள் துரைகவுரி தன்னிடத்தில்
சென்றவரைத் தான்பிடித்துச் சென்னலக்கி னீசிடத்தில்
கொண்டுவிடச் சொல்லிக் கூட்டி யனுப்பிவைத்தார்
அந்தக் கணமே அவரவர்க்கு வேற்றிடத்தில்
சந்தோஷ மாகத் தான்போ யிருங்களென
ஆக்கினைகள் நேமித் தவரவரை யவ்விடத்தில்
தூக்கி விடுமென்று துரைகொடுத்தா ருத்தரவு
அந்தப் படியே அவரவர்க்கு ஆக்கினையும்
மைந்தன் துரைச்சாமி வங்கோல் பயணமென்றார்
வெங்கணப் பெரியுடையார் வேந்தன்துரைச் சாமிதனை
வங்கோல் பயணமென்று மன்ன னனுப்பிவிட்டார்
பாஞ்சைநக ராண்ட பார்வேந்தன் ஊமையனும்

சாய்ஞ்சு நகரிழந்து தன்பதியும் விட்டெழுந்து
அஞ்சாதே யென்று அரவணைத்தோர் தன்பதியும்
மஞ்ச னிழந்து மறுதேசம் பாஞ்சைநகர்
அங்கிருக்கக் கேட்டு அடிபற்றித் தான்பிடித்துப்
பங்கப் படவே பெருங்கயிற்றில் தூக்கிவிட்டார்
கூடிழந்த நற்குளவி கொட்டாத வாறதுபோல்
சோடிழந்த அன்றில் துவண்ட வகைபோலும்
........ன னரசாண்டு மகாபதவி பெற்றதுவும்
பின்னு மருதேந்திரர் பிரபலமாய் வாழ்ந்ததுவும்
பூலோக மெங்கும் புகழே பெரிதான
வாலே மருதிருவர் வகையிதுவே தானுரைத்தேன்
சத்தியந் தப்பாத தரணிமரு தேந்திரரை
வெற்றிகொண்ட வக்கினீசு வேந்தன் துரையவனும்
மன்னன் மருதை வனந்தனிலே நான்பிடித்தேன்
தன்னுடனே சேர்ந்த தலைவ ரவர்களுடன்
கும்பினியார் நமக்குக் குற்றமெத்தச் செய்தநொரு
வம்பர் குடோரி மதமான வல்வீரர்
இருபத் தொருபேரை எச்சரித்து உச்சிதமாய்த்
திருப்பத்தூர்க் கோட்டையிலே சேகரமாய்த் தூக்கிவிட்டேன்
ஊமையனைத் தேடி உத்தமனைப் போகவிட்டு
தா....பிடித் தங்கவனைத் தவறாமல் தூக்கிவிட்டேன்
துங்கன் மருதுமகன் துரைசாமி யானவனை
வங்கோ லறியவென்று வடக்கே யனுப்பிவைத்தேன்
மன்னன் கவுரிதனை வையமதை யாளுமென்று
தென்னவனை நன்றாய்ச் சிம்மா சனத்தில்வைத்தேன்
இத்தனையு முந்தி இயல்பாய் நடத்தியபின்
வித்தகரா மந்த வெள்ளைமரு தேந்திரர்கள்
வல்லவனும் பிள்ளைகளும் வந்துஅகப் பட்டக்கால்
கொல்லாமல் சும்மா கொடுங்காவல் வைத்தெழுத
வந்ததுவே வுத்தரவும் வாசித்து நானறிந்தேன்
முந்தியபின் பிந்தி முடிப்பதென்ன காரியந்தான்
என்று கமுட்டிக் கெழுதினா ரக்கினீசும்
அன்று இதைக்கமுட்டி யாரவர்கள் பார்த்தறிந்து
சீறினார் கோபஞ் சிவந்துகண்கள் தீப்பறக்க
மாரிநம் முத்தரவை மறைத்துவைத்து வக்கினீசும்
நன்றாய்க் கவுரி ராசன் மனப்படியே
கொன்றான் மருதுதனைக் குத்தமிவர்க் குற்றதென
வழுவாமல் பாளையத்தை வாங்கிப்பின் நீதுருசாய்
எழுவாக் கமுட்டிக் கனவெழுதிக் காகிதத்தைத்
தேடியே வுள்ளறிந்து செர்னலக்கி னீசுதுரை
வாருமென்று பாளையத்தை வகைவகையாய் முன்னைவிட்டு
தீரன் கவுரிதனைச் சிவகங்கை சேருமென்று

னுப்பிவிட்டுப் போகவிட்டு அப்பால் தளத்துடனே
மணப்பிரிய மாக வடதிசையைத் தானேக்கித்
தங்குமிட மறிந்து தங்கிநின் றிரவுபகல்
சிங்கார மாகச் சேனைதனைத் தான் நடத்தித்
திருச்சிராப் பள்ளிதன்னில் தி.மாக வீரிரவு
தரிச்செழுந்து வக்கினீசு தஞ்சைநகர் மீதில்வந்து
அஞ்சாறு நாளிருந்து அப்பால் தளமெழுப்பித்
தஞ்சைநகர் கடந்து தளஞ்சூழ வெக்களிப்பாய்
நடந்து பலவழியும் நாடுகா டாறுமுதல்
கடந்துசென்னை மாநகரைக் கண்டார் மனமகிழ்ந்தார்
அடைந்தார் சகலருமாய் அக்கினீசு முன்னெழுந்து
ந........ா கமுட்டியார்முன் நாடிவந்து நின்றுமுன்னே
தந்தார் சலாமதுவுந் தான்கொடுத்த நேரமதில்
அந்த மருதைநமன் அண்டையில்நீ தேத்ததென்ன
என்றார் கவர்னரவர் இப்பாலே வக்கினீசும்
நின்று மருதிருவர் நேர்ந்து பொருததுவும்
பட்டாளஞ் சோல்சர் பரிக ளிறந்தவையும்
துட்டர் மருதவரால் துரைகள் படிந்ததுவும்
தீனி புசிக்காமல் திசைகளொன்றுந் தோன்றமல்
தானும் படைகளுடன் தட்டழிந்து பட்டதொரு
சஞ்சலத்தி னாலும் தங்களுடை வுத்தரவும்
இஞ்சிவரு முன்னே வெள்ளைமரு தேந்திரரைத்
தூக்கினே னென்று துரையுரைத்த வார்த்தைதனை
எக்கங் கவர்னரவர் இருசெவியில் தான்கேட்டு
நடப்போமுன் வார்த்தையென நவின்றுதுரை யாங்கவர்னர்
தெம்பாக வேநடந்து சொன்னலக்கி னீசுதனை
வேங்கைபோல் சீறி வெகுகோப மாய்ச்சினந்து
வாங்குவோங் கத்தி மனந்திரும்பி வுன்னையிங்கே
இன்ன........வைப்பதில்லை ஈந்திநக ராசையதை
மன்னநீ வைக்காதே வையென்றார் கத்திதனை
அச்சம் வெகுவாகி அக்கினீசு மப்பொழுது
வைத்தாரே கத்திதனை வாங்கினார் கும்பினியார்
ஈந்திதனில் நீயிருக்க வற்கநீ யிப்போதே
சேர்ந்திடுவாய் சீமை செல்லுநீ நில்லாதே
என்று கவர்னரவர் இயம்பவே வக்கினீசு
அன்றுபோய்ச் சீமை அடைந்தா ரதன்பிறகு
இங்கே கவுரி இருந்துபுவி யாளுகின்றார்
அங்கே கவர்னர்வர ஆதரவி லேயிருந்து
வங்கர் களிங்கர் மராடர் கப்பமிட
தங்குஞ் சிவகங்கை தரணி தனையாண்ட
புத்ரர் களத்ராதி பூபால ரோடிருந்து
சத்ராதி யாகத் தானினைத்துக் கும்பினியார்

தன்னைப் பகைத்துத் தானினைத்து ஊமையனல்
மன்னர்மண்ட லீகர் மகாராச ராசமன்னர்
தேசத்து மன்னர் திக்கடங்கா கீர்த்திகொண்ட
ராசசே கரராசர் நாற்றிசையு மோர்குடைக்குள்
செங்கோல் செலுத்தும் சீமைத் துரையவரைப்
பங்கயமா யெண்ணிப் படைபொருதிப் பாரிழந்து
சித்தம்வே றுகிச் சென்று ரருந்தவசில்
வெற்றிகொண்டார் கும்பினியார் மேதினியெல் லாம்புகழ
......ரச்சுத கும்பினியார் மன்னருடை யம்மானை.

---

## பிற்சேர்க்கை — 2

[இது, 163-ஆம் பக்கம் "அறிந்தானே அயிதர்தனே ஆனதிண்டுக் கல்லிலேபோய்" என்ற வரிக்குப் பின்பு "சோத்து மயக்கமது" என்று தொடங்கும் வரி வரை தொடர்புடையது.]

வாண்டபின் மேலாய் மருதுமன்னர் தங்களையும்
தாண்டி நடப்பார்கள் தங்களையு முங்களுடை
எண்ணப் படிநடத்தி எனக்குதவி யாயிருந்து
மண்ணுலகை யாள வைப்பீர்கா ணிங்கவென்ன
உரைத்தார் நவாபுதுரை உற்றிருந்து கும்பிணியார்
திறத்துடனே வதனைச் செவிகொடுத்துத் தான்கேட்டு
நல்லதய்யா நாங்கள் நடக்கும்வகை யும்மிடத்தில்
சொல்லும் படிபோல துரையோனே வாயதனால்
சொனனுலத் திசையடங்கச் சூழ்ந்தபுவி ராசர்களே
மன்னவனே வுந்தன் வருதியதுக் குள்ளாக்கி
வைப்போம் நிதமும் வணங்கவே வீதுமல்லால்
எப்படியு மந்த இருமருது தம்மையுமே
வெல்லுவோம் பாரும் விடுவதில்லை யுற்றவிதம்
சொல்லுவீ ரென்னத் துரைகள்வரக் கேட்பளவில்
ராச்சியத்தை யாளும் நவாபுதுரை யுங்களுடைப்
பேச்சதுவு மென்ன பின்புநான் சொல்வதெனச்
சொன்னூர் நவாபுதுரை துரைக்கூட்ட மெல்லோரும்
அந்நேரம் பார்த்து அங்கவரு மீதுரைப்பார்
உங்கள் வசமிருக்கும் உலகினர் சாட்சிதமை
எங்கள் வசமீந்து இனியரசு செய்யவைத்தால்
ஈந்தி நகரில் இருக்குமுந்தன் பாக்கியது
சேர்ந்துவரு மொத்தம் செலுத்தாத பேரவரும்
நிறுத்தா ரினிமேலாய் நில்லாது கேளுமய்யா
இருத்துங் கருத்ததனை ஏவலான் நாமுமக்கு
ஊரதிலே நீரறியாது உள்ளநக ரெத்தனையோ
காரியமாய்க் கண்டு கைவசமே செய்துவரி
வாங்குவோம் ஜாஸ்தி வரும்படியே யாகுமதில்
தாங்கலுமே வன்றி தளராம லெள்ளளவும்
பகர்ந்த மொழிப்படியே பதியரசு தந்தீராய்த்
தகுந்த பணச்செலவு தமக்கெடுத்துக் கொண்டுபிச்சம்
கொடுக்குந் தொகையதுவுங் கொற்றவனே போதெமக்கு
நடக்கும் புகழ்க்கீர்த்தி நகரமதி லுந்தனுக்கு
ஈடாமோ முன்னால் எழுகடலுஞ் சூழ்ந்தபுவி
நாடா ளிரணியனும் ராவணனு மாவலுள்ள
துரியோ தனன்பசுவும் திரட்டிரட்டி யாயினுமே
சரியாக மாட்டாது சமானமுனக் காருமில்லை

[இடையில் தொடர்ச்சி விடுபட்டுளது.]

படித்தார் துரைகள்வெகு பார்த்துமன மாச்சரியம்
எடுத்தே மனமகிழ்ந்து இந்தியுடை நேர்த்திதனை
நடத்து மாசாட்சி நாவேநாம் காணவென்று
படைத்தார் கடவுளென பராபரனைத் தான்துதித்துக்
குறிப்புடைய மன்னவராய் கூட்டம்வெகு வாகவுந்தான்
புறப்பட்டார் சோங்கில்........தேறி வந்திறங்கிச்
சென்னைநகர்க் கோட்டை சிறந்திருந்து கும்பினியார்
தன்னுடனே கூடித் தானிருந்தா ரம்மானை
முந்திவந்து மிந்தி முடிபோர்த்த மன்னவரும்
பிந்திவந்து சேர்ந்து பெருமைகொண்ட மன்னவரும்
சேர்ந்து பொசித்துச் செழிப்புடனே வீற்றிருந்து
ஈந்திதனைப் பெற்ற இயல்புதனைப் பேசியபின்
அனைவர்களுங் கூடி அளப்பிட்டு நாமுமே
கனமாந் துரைத்தனத்தைக் கைக்கொண்டோ மாகையினால்
காசினியை யாளுங் காரியங்க ளின்னவென
யோசனைகள் செய்து உரையுமென்றார் யாவருமே
ஆமென் றனைவர்களும் அப்படியே வொப்பிமனம்
தாமொன்றாய்க் கூடிச் சதுரமிட்டு வீற்றிருந்து
தனித்தனியே வுத்தி சகலர்களுந் தாமுடித்து
மனத்தைவிட்டுக் காகிதத்தில் வரைந்தெழுதி யுத்தமர்கள்
பார்த்தா ரொருமுகமாய்ப் பார்வையிட்டு யோசனையும்
நேர்த்தியெனப் புகழ்ந்தார் நீதியிது தானெனவே
எண்ணமுடை னரசர் இருந்தசபை கூட்டமிட்டு
பண்ணி முடித்த பாங்குதனை யென்னசொல்வேன்
கவுனர்........கற்பித்தே கச்சேரியும்
கவுன ரொருவரது காரியமே பார்ப்பதன்றித்
தவராத வாதுக்கீழ்ச் சார்ந்தவதி காரமென
ரிவினியூப் போர்ட்டு நியமித்தா ரீதுமல்லால்
சதிரக் கோர்ட்டதுவுஞ் சன்மித்தா ரதுக்கதுவாய்
உதவும் படிதுரையை உடனேற் படுத்திவைத்தார்
மூலிதமா யிவ்வார் முடித்தா ரிதுதனக்குள்
மேவலுவாங் கவுனர் மேண்டிடென் றதையுரைத்தார்
கவுனருடை வருதிக் கீழே ரிவினியுவும்
தவராச் சதிரவருந் தானடக்க லாகுமென்றார்
திட்டமுட னிப்படிக்குச் செய்தாரிது வுஞ்சென்ன
பட்டாளங் கோரென்று பகர்ந்தாரே நாமமது ;

[இடையில் தொடர்ச்சி விடுபட்டுளது.]

## பாஞ்சாலங்குறிச்சி ஊமைத்துரை கும்பினியார் நிருபத்தை நீராகரித்தது

சொன்னனே யனன....த் துரைமாட் டியன்கேட்டு
இந்நாடு முன்னாள் இருந்தரசாள் வேந்தனெனும்
மன்னன் நவாபெனவே மதித்தானே ஊமையனும்
பின்னே யிவனிணங்கப் பிரியமில்லா னுமாகில்
முன்னே நிகும்பலையை முடித்ததொரு இந்திரசித்து
எந்தவிதம் விழுந்து இறந்தானோ வப்படியே
ஆவா னிவன்றனும் அறிவார்க ளெல்லோரும்
மாவீரர் கும்பினியார் வலிவறியா தேயுரைத்தான்
என்று துரையுரைத்து இங்கிருந்தா ரீதிருக்க
அன்றுரைத்துப் போன் அழகுமரு தேந்திரர்கள்
போர்டுக்கு ஏகிப் புகழ்கவுணர் பேட்டியதைச்
சீரிட் டறிந்து திரும்பிவர வேணுமென்று
தம்பியுந் தானுந் தானிணைந்து அங்கொருநாள்
நம்புந் தனதுசில ராணுவத்தைக் கூட்டமிட்டுக்
காளையார் கோவில் காட்டினிலே வந்துபுக்கு
வாளையொத்த கண்ணூர் வாருவலை கட்டிவைத்துக்
காட்டைக் கலைத்துக் கடிநாயை ஊசலிட்டு
வேட்டைக் குகந்த வெடிவேட்டுச் சத்தமிட்டு
வேங்கை வரிப்புலியும் வெளிமா னுடும்பு முயலும்
காங்கும் கரடிபன்றி கலைமான் மயிலினமும்
பச்சைப் பசுங்கிளியும் பங்கமில்லாச் செங்கிளியும்
மெச்சும்வெள் ளைக்கிளியும் விளங்குங் குயில்களவை
காண மனமகிழுங் கவரிமான் தன்னினமும்
வேணமட் டும்பிடித்து வெகுபோனி விட்டடைத்து
வந்து நகர்சேர்ந்து மங்களமாய் வீற்றிருந்து
இந்த வகைதவிர எலிப்புலியா மென்பதற்காய்ப்
பூனை வெருகு போதுமென்னும் வாறதுவாய்
ஆனமட் டும்பிடித்து அடைத்தார்கள் கூட்டினிலே
கொற்றவனும் நலத்தினத்தைக் கோரினு னூரறிய
மெத்த விருதுகளை வெகுதுலக்கஞ் செய்யுமென
அசுவமதைத் துலக்கி அலங்காரஞ் செய்யுமென்றூர்
பிசகாம லவனடியில் பீரங்கி பனிரண்டு
சேருமென்று ரேகசிவாச் சேர்ந்துவர வேணுமென்றூர்
வாருங் கயத்துவெடி வகைவகையாய் நூல்வெடியும்
அண்டமும் பூமி அதிரவே வாத்தியங்கள்
கொண்டா ரருகில்வரக் கூறினூர் தேறிமனம்.

## கவுணர் போட்டிக்கு மருதேந்திரர் புறப்படுதல்

கதியும் வலிவுமுள்ள காவலவ ராகவுமே
பதினு யிரம்பேரைப் பார்த்தெடுத்தா ரம்மானே
சேகரித்தா ரிப்படிக்குச் சேகரமே வானபின்னே
வாகு வடமுகமாய் வடக்கே நடக்கலுற்ருர்
கொண்ட புலிகரடி கொடுவேங்கை மான்மரையை
வண்டிதனி லேற்றி வகைவகையாய் முன்னேவிட்டார்
நாடுநகர் கடந்தார் நல்லபெரும் பாதைவழி
காடுமலே கடந்தார் கவலேமனத் தேதுமின்றி
காவேரித் தீர்த்தங் கண்டா ரதுகடந்தார்
பூவுந்தி பூத்தோன் புகழ்விளங்கு மாநகரம்
சிரங்கம் வந்தார் திருமாலேப் போற்றிசெய்தார்
காரெங்கள் நாயகமே கர்த்தனே வித்தருணம்
சீமைத் துரைகள் திரண்டுவந்து யீந்தியிலே
பூமி யரசாளப் பொருந்தினு ரென்றமொழி
கேட்டோ மதனுலே கவுணர்துரை ராசனேயே
பேட்டிபண்ண வேணுமென்று புறப்பட்டோ முன்வலிவால்
போருேந் திருமாலே பூமானே யெங்களுடன்
வாருந் துணையிருந்து வடுவுவரா தாதரித்துக்
காட்டம் மனமுள்ள கவுணர்துரை முன்னெமக்கு
பேட்டியுந் தந்து பிரியமது வாம்படிக்கு
உதவிநீ செய்யுமய்யா உத்தமனே வித்தகனே
ததியிதுவே வாதரிக்கச் சமயமெனத் தாளடிவில்
தாழ்ந்து வணங்கித் தலேகுனிந்து பூமியிலே
வீழ்ந்து நமஸ்கரித்து வேணவபி டேகமதும்
செய்து பிற்கெழுந்தார் திருமருது சேனேயுடன்
உயிதமுடன் நடந்து ஊரருகே போய்வடக்கில்
வீற்றிருந்தா ரிரவில் விடிந்தபின்பு தாநடந்தார்
பார்த்திபனுஞ் சேனே பலவிருதும் வாரதொரு
வரத்தையதைத் தஞ்சாவூர் மானுேசி தான்கேட்டுச்
சித்தமது குன்றிச் சீமைதனே விட்டெழுந்து
மறைந்தா னுடனிரவில் வடகிழக்கே யங்கவனும்
சிறந்த் மருதுதுரை சேர்ந்தானே தஞ்சாவூர்.

### விருத்தம்.

உத்தமன் மருது தஞ்சா வூரதி லிறங்கிப் பூமி
சுத்தியே சிறப்பைக் கண்டு தொல்புவி யிதைப்பின் னுலே
பத்தியே யரசு செய்யும் படிநினே வதுதா னுண்டே
அத்திசை கவுணர் பேட்டி ஆனபி னுரைப்ப தாமோ.

ஈதல்லா லிவன்தான் முன்னுள் எழுந்துத......ணகையாலே
சேதுவின் னகரைக் கொண்டான் திகைத்தனன் சேது ராசன்
ஆதலா லிவனே யோட்டி அழகுள தஞ்சை யூரின்
மேதினி யாள்வே னென்ன விரித்துநா னுரைத்தே னென்பான்.

என்று மருது இருந்துதஞ்சை மாநகரில்
அன்று மறுநாள் அதுகழித்து மூன்றுநாள்
தம்பியுடன் தானும் தளமும் விருதுடனே
கம்பீர மாகக் கிட்டினூர் பட்டணம்போய்ச்
சென்னே நகரமதின் தென்புறமே போகையிலே
மன்னன் மருதுதுரை வழங்குமென்றூர் வாத்தியத்தை
வாரவிதங் கவுணர்துரை மனமறிய வேணுமதால்
பீரங்கி ரேக்கிலாப் பெரும்வேட் டெழுப்புமென
மருதி னுரைப்படியே வந்தபெரும் பீரங்கியில்
வெடிமருந்து போட்டு வேட்டங் கெழுப்புகையில்
பீரங்கிச் சத்தம் பெருஞ்சத்த மானதனுல்
பாருங் கடலும் பலமாய்க் கிடுகிடெனக்
கவுணரிது முழக்கங் காதினிலே கேட்டறிந்து
இவனூர் வரவெனவே இயம்பியபோ தாடுதலில்
பவம்போம்......வி விலகும் பதிசேய்க் குள்ளடங்கும்
சிவகங்கை மாந்தர்மதி திருமருது ராசதுரை
பேட்டிசெய்ய வென்று பிரியமுட னிப்படிக்கு
வேட்டெழுப்பி வார விதமென் றவனுரைத்தான்
காவலவர் கவுணர் காதிலிதைக் கேட்டவனே
போவாய் ரிவினியூப் போர்டார் தம்முடனே
சதிரக்கோர்ட் டாரவரைச் சனுதியிலே தானழைத்துக்
கதியாய் வருகவெனக் கவுணர்துரை சொல்வழியே
ஆடுதலி சென்றான் அங்கவர்பா லீதுரைத்துக்
கூடுமென்றான் கூட்டம் கொற்றவர்க ளாத்தருணம்
கவுணரிடம் வந்து காரியங்கள் ஏதுவென்றூர்
புவியாள் மருதுவரும் புதுமைதனைப் பாருமென்றூர்
அறிவோ மதுபோல அப்படியே நாமுமே
புரிவோம் பலீனெனவே பூரித்தா னந்தமுடன்
பட்டாள சோல்சர் படையை யணிவகுத்து
விட்டார் வகைவகையாய் வெடிகளுடன் பீரங்கியைக்
கருமருந்து போட்டுக் கனக்கவே கெட்டிபண்ணிப்
பெரும்வேட் டெழுப்பப் பிசகாம லப்பொழுது;

# LIST OF AGENTS FOR THE MADRAS GOVERNMENT PUBLICATIONS.

## IN CITY.

ACCOUNT TEST INSTITUTE, Egmore, Madras.
CITY BOOK COMPANY, POST BOX NO. 605, Madras-4.
HIGGINBOTHAMS, Madras.
P. VARADACHARI & Co., Madras.
THE SOUTH INDIA SAIVA SIDDHANTHA WORKS PUBLISHING SOCIETY, LIMITED, Madras
VENKATARAMA & Co., Madras.
V. PERUMAL CHETTY AND SONS, Madras.
V. RAMASAWMY SASTRULU & SONS, Madras.
OTTRUMAI OFFICE, Madras-17.
M. DORAISWAMY MUDALIAR & Co., Madras.
FREE INDIA CO-OPERATORS' AGENCY, Madras-4.
SOUTH INDIA TRADERS, Royapetta, Madras.

## IN MUFASSAL.

M. C. KRISHNIAH CHETTY, Madanapalle, Chittoor district.
THE EDUCATIONAL SUPPLIES COMPANY, R.S. Puram, Coimbatore district.
D. SREEKRISHNAMURTHY, ONGOLE, Guntur district.
M. SESHACHALAM & Co., Masulipatnam, Krishna district.
TRIVENI PUBLISHERS, Masulipatnam, Krishna district.
HINDUSTAN DIARY PUBLISHERS, Vijayavada, Krishna district.
THE COMMERCIAL LINKS, Governorpet, Vijayavada, Krishna district.
THE MANAGER, Gramodharana, Buckinghampet, Vijayavada, Krishna district.
E. M. GOPALAKRISHNA KONE, Madurai, Madurai district.
K. P. AHMED KUNHI & BROS., Cannanore, Malabar district.
KERALA POLYTECHNIC CO-OPERATIVE SOCIETY, LTD., Kozhikode-5 (South Malabar).
P. K. BROTHERS, Kozhikode (South Malabar).
V. D. MOORTHY, Nellore, Nellore district.
A. VENKATASUBBAN, Vellore, North Arcot district.
TIMES MODERN MART, Salem, Salem district.
K. BHOJA RAO & Co., Mangalore, South Kanara district.
U. R. SHENOY & SONS, Mangalore, South Kanara district.
SRINIVAS & Co., Kumbakonam, Tanjore district.
P. N. SWAMINATHA SIVAN & Co., Pudukkottai, Tiruchirappalli district.
S. KRISHNASWAMI & Co., Tiruchirappalli, Tiruchirappalli district.
PALANIAPPA BROTHERS, Teppakulam, Tiruchirappalli, Tiruchirappalli district.
V. S. VASAN & Co., Tirunelveli, Tirunelveli district.
S. R. SUBRAMANIA PILLAI, Tirunelveli, Tirunelveli district.
ARIVU NOOLAGAM, Market Street, Ootacamund.

## IN OTHER STATES.

BHANWARILAL JAIN, Motikatra, Agra.
SREE ABHIRAVA VAIDYA SHARADA BOOK DEPOT, Bangalore-2.
THE BANGALORE BOOK CENTRE, Bangalore-2.
THE STANDARD BOOK DEPOT, Bangalore-2.
HARI GOVIND BOOK STALL, Baroda.
NEW BOOK COMPANY, Bombay
THE POPULAR BOOK DEPOT, Lamington Road, Bombay-7.
THE BOOK COMPANY, Calcutta.
THACKER SPINK & Co., Calcutta.
BHARAT STORES, Ernakulam.
CHAROTAR BOOK STALL, Anand (Gujerat).
OSMANIA UNIVERSITY STUDENTS' CO-OPERATIVE BOOK DEPOT, Lallaguda P.O., Hyderabad (Deccan).
S. M. JAGANATHAN, Nagercoil.
S. V. KAMAT, Kumta (North Kanara).
JAIN BOOK AGENCY, New Delhi.
INTERNATIONAL BOOK SERVICE, Poona.
INTERNATIONAL BOOK HOUSE, Trivandrum.